# சோழநாட்டுப் புலவர்களின் இலக்கியக் கொள்கை

# (சங்க காலம்)

அழகப்பா பல்கலைக்கழக முனைவர் பட்டத்திற்கு (Ph.D)
ஆய்வின் ஒரு பகுதியாகச் சமர்ப்பிக்கப்பெற்ற ஆய்வேடு

ஆய்வாளர்

திரு. **சி. சிதம்பரம்**

(பதிவு எண் : 621)

நெறியாளர்

முனைவர். **தே. சொக்கலிங்கம்**

தமிழ்த்துறைத் தலைவர் (ஓய்வு)

தமிழ்த்துறை

அழகப்பா பல்கலைக்கழகம்

காரைக்குடி - 3.













## தமிழ்த்துறை

## அழகப்பா பல்கலைக் கழகம்

(தேசியத் தர மதிப்பீட்டுக்குழுவின் 'ஏ' மதிப்புப் பெற்றது)

காரைக்குடி - 3.

**நவம்பர் - 2008.**

முனைவர். தே. சொக்கலிங்கம்., எம்.ஏ., பி. ஒ. எல் ., பி. எச். டி.,
தமிழ்த்துறைத் தலைவர் (ஓய்வு),
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி – 630003.

நாள் : 31.12.2008

# நெறியாளர் சான்றிதழ்

"சோழநாட்டுப் புலவர்களின் இலக்கியக் கொள்கை (சங்க காலம்)" என்னும் தலைப்பில் திரு.சி. சிதம்பரம் அவர்கள் முனைவர் பட்டத்திற்காகச் செய்த இந்த ஆய்வு, அழகப்பா பல்கலைக் கழகத் தமிழ்த்துறையில் அவர் ஆய்வு செய்த காலத்தில் தன்னியலாகச் செய்யப்பெற்றது என்றும் இந்த ஆய்விற்காக வேறு எந்தப் பட்டமும் ஆய்வாளருக்கு அளிக்கப்பெறவில்லை என்றும் உறுதி கூறுகிறேன்.

(முனைவர்.தே. சொக்கலிங்கம்)
நெறியாளர்

PROFESSOR AND HEAD, (Rtd)
DEPARTMENT OF TAMIL,
ALAGAPPA UNIVERSITY,
KARAIKUDI - 630 003.

31/12/08

துறைத்தலைவர்
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்
காரைக்குடி-630 003

**சி. சிதம்பரம், எம்.ஏ., எம்ஃபில்.,**
முனைவர் பட்ட ஆய்வாளர்,
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி – 630003.

நாள் : 31.12.2008

# ஆய்வாளர் உறுதிமொழி

**“சோழநாட்டுப் புலவர்களின் இலக்கியக் கொள்கை (சங்க காலம்)”** என்னும் தலைப்பில் முனைவர் பட்டத்திற்காக எழுதப் பெற்ற இவ்வாய்வேடு, இதற்கு முன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் அளிக்கப்பெறவில்லை என்றும் உறுதியளிக்கிறேன்.

சி. சிதம்பரம்
(சி. சிதம்பரம்)
ஆய்வாளர்

**உறுதிக் கையொப்பம்**

தே. சொக்கலிங்கம்

**முனைவர். தே. சொக்கலிங்கம்.,** எம்.ஏ., பி. ஓ. எல் ., பி. எச். டி.,
தமிழ்த்துறைத் தலைவர் (ஓய்வு),
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி – 630003.

# நன்றியுரை

"சோழநாட்டுப் புலவர்களின் இலக்கியக் கொள்கை (சங்க காலம்)" என்னும் தலைப்பில் ஆய்வு மேற்கொள்ள எனக்கு அனுமதி வழங்கிய அழகப்பா பல்கலைக்கழகத் துணைவேந்தர், பதிவாளர் ஆகியோருக்கும் என் உளம் கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வாளராக என்னை ஏற்று இந்த ஆய்வு செம்மையாக நிகழ்ந்தேற எனக்கு இன்முகத்துடனும், இனிய சொற்களுடனும் நன்னெறி காட்டிப் பல்லாற்றானும் உதவிகள் புரிந்த தமிழ்த்துறைத் தலைவரும் (ஓய்வு), எனது ஆய்வு நெறியாளருமான **முனைவர். தே.சொக்கலிங்கம்** அவர்களுக்கு நான் என்றென்றும் நன்றி பாராட்டக் கடமைப்பட்டுள்ளேன்.

என்னை வளர்த்து ஆளாக்கிப் படிக்க வைத்த என் மதிப்பிற்கும், வணக்கத்திற்கும் உரிய பெற்றோர் திருவடிகளைப் பணிந்து இவ்வாய்வேட்டு மலரைக் காணிக்கையாக்குகிறேன்.

அணுகிய போதெல்லாம் இன்முகத்துடன் ஆய்வு குறித்த சிந்தனைகள் வழங்கிய முனைவர். வீ. அரசு, முனைவர். மு.பாண்டி, முனைவர். கா.காந்தி, முனைவர். சு.சங்கரதாஸ் அவர்களுக்கும், ஆய்வு முன்னேற்றம் குறித்து அவ்வப்போது வினவி என்பால் பாராட்டி வருகின்ற நண்பர்கள், திரு. க. மணிமொழியன், திரு. வ. ஷேக்மீரான், தம்பி. பெ. சரவணன், ஆகியோர்க்கும் நன்றியுடையேன்.

இவ்வாய்வேட்டைச் செம்மையாகவும், நேர்த்தியாகவும் கணினியில் அச்சாக்கம் செய்த 'ஸ்டார் கம்ப்யூட்டர்ஸ்' நிறுவனத்தாருக்கும், கட்டமைப்பு செய்த பூராடம் கட்டமைப்புக் கூடத்தாருக்கும் நெஞ்சார்ந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

**சி. சிதம்பரம்**

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | | |
|---|---|---|---|
| 1. | அகம் | - | அகநானூறு |
| 2. | உ. ஆ | - | உரை ஆசிரியர் |
| 3. | க. ஆ | - | கட்டுரை ஆசிரியர் |
| 4. | குறுந் | - | குறுந்தொகை |
| 5. | சிலம்பு | - | சிலப்பதிகாரம் |
| 6. | சிறுபாண் | - | சிறுபாணாற்றுப்படை |
| 7. | சூ | - | சூத்திரம் |
| 8. | தொல் | - | தொல்காப்பியம் |
| 9. | நற் | - | நற்றிணை |
| 10. | நூ | - | நூற்பா |
| 11. | ப | - | பக்கம் |
| 12. | பக் | - | பக்கங்கள் |
| 13. | ப. ஆ | - | பதிப்பு ஆசிரியர் |
| 14. | ப. ஆ. இ | - | பதிப்பு ஆசிரியர் இல்லை |
| 15. | ப. ஆ. கு | - | பதிப்பு ஆசிரியர் குழு |
| 16. | பட்டி. பா | - | பட்டினப்பாலை |
| 17. | பரி. திரட்டு | - | பரிபாடல் திரட்டு |
| 18. | பா | - | பாடல் |
| 19. | பி. நா | - | பின்னத்தூர் நாராயணசாமி ஐயர் |
| 20. | புறப். வெ. மா | - | புறப்பொருள்வெண்பா மாலை |
| 21. | புறம் | - | புறநானூறு |
| 22. | பொ. ப. ஆ | - | பொதுப் பதிப்பு ஆசிரியர் |
| 23. | மு. ப. ஆ | - | முதன்மைப் பதிப்பு ஆசிரியர் |
| 24. | மேலது | - | மேற்படி |

# பொருளடக்கம்

# முன்னுரை

சங்க காலத்தில் சோழநாட்டைச் சோழநாடு என்றும், தொண்டைநாடு என்றும், நடுநாடு என்னும் மூவகையாகப் பகுதித்திருந்தனர். சோழ நாட்டை ஆண்ட மன்னர்கள் சென்னி, கிள்ளி என்ற இரண்டு மரபு வழியினர். சங்க இலக்கியமும், அதற்குப்பின் எழுந்த சிலப்பதிகாரமும், சங்ககாலச் சோழ நாட்டில் சோழர் குடியினரிடையே போரும், குழப்பமும் இருந்த வரலாற்றைக் காட்டுகின்றன. எனினும் இங்குத் தமிழ் தழைத்து வளர்ந்தது; தமிழ்ப்புலவர்களும் தழைத்தோங்கி வளர்த்தனர் என்று அறியமுடிகிறது. எனவே சோழநாட்டின் தமிழ் வளர்ச்சியை, தமிழ் போற்றப்பட்ட நிலையை அறிய வேண்டிய தேவை உள்ளது. ஒவ்வொரு நாட்டுக்கும், தனி இலக்கியப் போக்கும் தனி இலக்கியப் புலப்பாட்டு நெறியும், தனி மரபுகளும் அமைந்திருக்கும். இந்த வட்டாரச் சாயல் (Provincialism) சோழ நாட்டு இலக்கியங்களில் தென்படுகின்றனவா ? என்றும், சோழநாட்டு இலக்கியங்களின் போக்கு, இலக்கியக்கொள்கை, பாடுபொருள் என்ன ? என்று காண்பது அவசியமாகிறது. சங்க இலக்கியங்களை நாடு அடிப்படையில் பிரித்துப் பார்க்கின்ற இலக்கிய ஆராய்ச்சி முறை, ஒருலக்காட்சிக் கோட்பாட்டிற்கு (Golobilisation) மாறுபட்டதாகும் என்ற சிந்தனை தற்காலத்தில் வலுப்பெற்றிருந்த போதிலும், சங்க காலத்தில் நாடுகளுக்கு இடையே தொடர்புகளும், தொடர்பு சாதனங்களும் குறைவாக இருந்த நிலையில் ஒவ்வொரு நாட்டின் இலக்கியத் தன்மையும், புலமையும், தனித்தன்மை உடையனவாகப் பேணப்பட்டனவாதல் வேண்டும். இதனால் சோழநாட்டு இலக்கியங்கள் தனியே பிரித்து ஆராயப்படுகின்றன.

## ஆய்வுத் தலைப்பு

"சோழநாட்டுப் புலவர்களின் இலக்கியக்கொள்கை" (**Literary Theories of Chola Poet's in Sangam Age**). என்பதாகும்.

## ஆய்வின் நோக்கம்

சோழநாட்டில் எட்டுத்தொகை நூல்கள் எவையும் தொகுக்கப்படவில்லை; பத்துப்பாட்டில் பட்டினப்பாலையும், பெரும் பாணாற்றுப்படையும் மட்டுமே நீண்ட நெடும்பாடல்கள். உறந்தை சோழரின் தலைநகராக இருந்தபோதும், மதுரைக்காஞ்சி போலப் பட்டிணப்பாலை போலத் தனிப் பெரும் பாட்டாக உறந்தை பாடப் பெறவில்லை. இத்தகைய இலக்கியயின்மை சோழநாட்டின் தமிழ்த் தன்மையை மதிப்பிடத் தூண்டுதலாகிறது. இந்த ஆய்வின் முழுமையான நோக்கம் சோழ நாட்டுப் புலவர் யாவர்? அவர்கள் பாடியன யாவை? அவற்றால் புலனாம் இலக்கியக் கொள்கை யாது? அவர்கள் சங்கத் தமிழுக்கு வழங்கிய கொடை என்ன? என்பன போன்றவற்றை இவ்வாய்வு மதிப்பீடு செய்கிறது. சோழநாட்டின் தமிழ் வளர்ச்சியை, தமிழ் போற்றப்பட்ட நிலையை ஆய்வதே இந்த ஆய்வின் நோக்கமாகும்.

## கருதுகோள்

சோழநாட்டுப் புலவர்கள் என்று குறிப்பிட்டாலும் இவர்கள் சோழநாட்டிலிருந்து வேற்று நாட்டிற்கும் சென்ற புலவர்களாகத் தோன்றுகின்றனர். எனினும் எவ்வாறேனும் இப்புலவர்களுக்குச்

சோழநாட்டுடன் தொடர்பு இருந்திருக்க வேண்டும். அதனாலேயே இவர்கள் சோழநாட்டில் உள்ள ஊர்களை அடைகளாகப் பெற்று விளங்கினர். சங்கம் வளர்த்த பாண்டிய நாட்டைப்போலச் சோழநாட்டிலும் தமிழ் வளர்ந்ததா? தமிழ்ச் சங்கம் இருந்ததா? என்பதைக் காணும் முகமாகச் சோழநாட்டுப் புலவர்கள் தமிழ்க் கொடையை மதிப்பிடுவதாக இந்த ஆய்வின் கருதுகோள் அமைகிறது.

## ஆய்வு மூலங்கள்

சங்க இலக்கியங்களான எட்டுத்தொகை, பத்துப்பாட்டில் உள்ள சோழநாட்டுப் புலவர்களின் பாடல்கள் மட்டுமே ஆய்வுக்குரிய முதன்மை மூலங்களாகும். இப்பாடல்களுக்கான உரை நூல்களும், ஆய்வு நூல்களும், கருத்தரங்கக் கட்டுரைகளும், திறனாய்வு நூல்களும் துணைச் சான்றுகளாக அமைகின்றன. பல்வேறு உரைகளும், பதிப்புகளும் இவ்வாய்வில் பயன்படுத்தப்படுகின்றன.

## ஆய்வு அணுகுமுறையும், நெறிமுறையும்

சங்க இலக்கியங்களைப் பல்வேறு வகையாக அறிஞர்கள் ஆராய்ந்திருக்கின்றனர். எனினும் மானிட உடலில் உள்ள திசுவைத் தனிமைப்படுத்தி ஆய்வது போல் இவ்வாய்வு சங்க காலச் சோழநாட்டுப் புலவர்களின் பாடல்களைத் தனிமைப்படுத்தி ஆராய்கின்றது. எந்த ஆய்விற்கும் அடிப்படை மூலத்தை விரிவாகவும் அழுத்தமாகவும் நோக்கிக் கொள்வதேயாகும். இதனை விளக்கவியல் அணுகுமுறை (Descriptive Approach) என்பர். இந்நோக்கில் ஆய்வு மூலத்தை ஆராய்ந்தால்தான் ஆய்வின் அடித்தளம் சிறப்புற அமையும். எனவே இவ்வாய்வு முற்றிலும் விளக்கமுறை ஆய்வாகிறது.

## முன்னைய ஆய்வுகள்

சங்க இலக்கியங்களை அடிப்படையாகக் கொண்டு பல்வேறு ஆய்வுகள் இதுகாறும் நடந்துள்ளன. சங்க இலக்கியங்களை ஊர் அடிப்படையில் பிரித்து, மதுரைப் புலவர்கள், உறையூர்ப் புலவர்கள், காவிரிப்பூம்பட்டினத்துப் புலவர்கள் எனப் பல்கலைக்கழக அளவில் இள முனைவர் பட்ட அளவில் ஆய்வுகள் நிகழ்ந்துள்ளன. சங்க இலக்கியங்களை நாடு வாரியாகப் பகுத்து நோக்கும் வகையில் முனைவர் சி. பாலசுப்பிரமணியன் அவர்கள் 'சேரநாட்டுச் செந்தமிழ் இலக்கியங்கள்' எனும் தலைப்பில் ஆய்வினை மேற்கொண்டு நூலாக வெளியிட்டுள்ளார்.

## ஆய்வுப் பகுப்பு

'சோழநாட்டுப் புலவர்களின் இலக்கியக் கொள்கை' எனும் இவ்வாய்வானது முன்னுரை, முடிவுரை நீங்கலாக ஐந்து இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளது.

அவை,

1. இலக்கியக்கொள்கை - வரையறை
2. சோழநாட்டுப் புலவர்கள் வாழ்வும் வரலாறும்.
3. அகப்பாடல் திறன்
4. புறப்பாடல் திறன்
5. சோழநாட்டுப் புலவர்களின் இலக்கியக் கொள்கை.

என்பனவாகும்.

## இயல் விளக்கங்கள்

'இலக்கியக் கொள்கைகள் - வரையறை' என்னும் முதலாமியலில், இலக்கியக் கொள்கைகள் குறித்த சொற்பொருள் விளக்கம், அறிஞர்களின் சிந்தனைகள், இலக்கியக்கொள்கை ஆக்கம், வகைமை, இலக்கியக் கொள்கை, திறனாய்வு, வரலாறு இவற்றிற்கிடையே உள்ள தொடர்பு, தொல்காப்பியர் குறிப்பிடும் இலக்கியக் கொள்கை பற்றிய சிந்தனைகள் போன்றவை, தலைப்பைப் புரிதல் எனும் நிலையில் ஆய்வின் தொடக்க நிலையாக இடம்பெறுகின்றன.

'சோழநாட்டுப் புலவர்களின் வாழ்வும் வரலாறும்' என்னும் இரண்டாமியல், சோழ நாட்டைச் சேர்ந்த 50 புலவர்களின் வரலாற்றையும், அவர்களின் பாடல்களையும் வரையறை செய்கிறது. இவ்வியலில் சோழநாட்டில் பிறந்து வாழ்ந்த புலவர்களை அடையாளம் கண்டு அவர்களைப் பற்றிய வாழ்வியல் செய்திகளை எடுத்துக் கூறுகிறது.

'அகப்பாடல் திறன்' என்னும் மூன்றாமியல், சோழநாட்டுப் புலவர்கள் தம் அகப்பாடல்களின் திணை, துறைப் பொருத்தத்தை ஆராய்கிறது. அகப்பாடல்கள் முதல், கரு, உரிப்பொருள்களின் அடிப்படையில் திணையும், கூற்று, கேட்போர் ஆகியவற்றின் அடிப்படையில் துறையும் ஆராயப்பட்டுள்ளன. சில அகப்பாடல்கள் இரண்டு துறைகளைக் கொண்டு திகழ்கின்றன. கூற்று நிகழ்த்துவோராய்த் தலைவன், தலைவி, தோழி, கண்டோர், செவிலித்தாய் ஆகியோர் அமைந்துள்ளனர். கேட்போராகத் தலைவன், தலைவி, தோழி, தேர்ப்பாகன் பாங்காயினோர் ஆகியோர் இடம்பெற்றுள்ளனர், சோழநாட்டுப் புலவர்கள் பாடிய அகப்பாடல்கள் களவு, கற்பு என்ற இரண்டு கைகோளிலும்

புனையப்பட்டுள்ளன. களவு பற்றிய பாடல்களே மிகுதியாக இடம்பெற்றுள்ளன.

'புறப்பாடல் திறன்' என்னும் நான்காமியலில், சோழநாட்டுப் புலவர்கள் பாடிய புறப்பாடல்களின் திணை, துறைப்பொருத்தம் தொல்காப்பிய அடிப்படையிலும், புறப்பொருள் வெண்பாமாலையின் அடிப்படையிலும் ஆராயப்பெறுகின்றன. சோழநாட்டுப் புலவர்கள் அகப்பாடல்களை விடப் புறப்பாடல்களைக் குறைவாகப் பாடியுள்ளனர். எனினும் சோழநாட்டின் தலைநகரான உறையூரில் வாழ்ந்த புலவர்களின் புறப்பாடல்கள் அகப்பாடல்களை விட மிகுதி. இதற்கு அங்கு நிலவிய போரும், குழப்பமுமே காரணம். சோழநாட்டுப் புலவர்கள் பாடிய புறப்பாடல்களின் வழி, சோழ மன்னர்களின் வரலாற்றை முழுமையாக தொடர்ச்சியாக அறியமுடியவில்லை. உறையூர் ஏணிச்சேரி பாடிய பதின்மூன்று புறநானூற்றுப்பாடல்களில் பன்னிரண்டு பாடல்கள் ஆய் அண்டிரன் பற்றியன. அரிசில்கிழார் பதிற்றுப்பத்தின் எட்டாம் பத்தில் தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறையைச் சிறப்பித்துப் பாடியுள்ளார். சோழநாட்டுப் புலவர்கள் பாடிய சில புறநானூற்றுப் பாடல்கள் சிதைந்து காணப்படுகின்றன.

'சோழநாட்டுப் புலவர்களின் இலக்கியக் கொள்கை' என்னும் ஐந்தாமியல், சோழநாட்டுப் புலவர்கள் கருத்துக்களை வெளிப்படுத்தும் முறையினையும், பாங்கினையும் ஆராய்கிறது.

ஆய்வின் முடிவுரையில் ஒவ்வொரு இயலின் முடிவான கருத்துக்கள் சுட்டப்பெறுகின்றன. ஆய்வின் இறுதியில் ஆய்விற்குப் பயன்பட்ட நூல்களின் துணைநூற்பட்டியலும், பின்னிணைப்பும் இடம்பெற்றுள்ளன.

# இயல் - 1

## இலக்கியக் கொள்கை – வரையறை

இலக்கியக் கொள்கை தமிழாய்வுலகில் ஒரு புதிய துறையாகத் தோன்றி, வளர்ந்து வருகிறது. 'Literary theory' என்ற ஆங்கிலத் தொடருக்கு இணையாக 'இலக்கியக் கொள்கை' என்ற கலைச் சொல் வழங்குகிறது. இது ஆங்கிலத் திறனாய்வின் வழி தமிழ் பெற்ற புதிய செல்வமாகும். எனினும் தமிழில் இலக்கியக் கொள்கை பற்றிய சிந்தனை தொல்காப்பிய காலந்தொட்டே இருந்து வந்திருக்கிறது. இலக்கியக் கொள்கையின்றி இலக்கியங்கள் தோன்றியிருக்க இயலாது. தமிழில் இலக்கண நூல்களே இலக்கியக் கொள்கைகளை விளக்குவன. தமிழர்கள் தமது திறனாய்வுத் திறனையும், இலக்கியக் கொள்கைகள், கோட்பாடுகளையும் படைப்பு நோக்கில் பயன்படுத்தி இருக்கின்றனர். அந்த அடிப்படையில் இலக்கிய வளர்ச்சியில் ஆர்வம் காட்டினர். எனவே இலக்கியக் கொள்கைகள் இன்னது என்று அறியாது படைப்பில் ஆர்வம் காட்டினர். மேலைநாட்டு இலக்கியத் திறனாய்வின் தொடர்பால் இலக்கியக் கொள்கை ஒரு தனித் துறையாக வளரும் சூழல் ஏற்பட்டுள்ளது. இலக்கியங்களைக் கால முறையிலும், வகை அடிப்படையிலும் அவை உணர்த்தும் இலக்கியக் கொள்கைகளையும், கோட்பாடுகளையும் தொகுத்து இலக்கியக் கொள்கை பற்றிய வரையறைகளை இக்கட்டுரை விளக்குகிறது.

## இலக்கியம் - விளக்கம்

இலக்கியம் என்ற சொல், இலக்கு + இயம் என்ற சொற்களின் கூட்டு ஆகும். "இலக்கு என்னும் சொல்லுக்கு எண்ணம், எதிர், ஓட்டம், ஒப்பு, குறிப்பு, சமயம், நேர், குறிப்பொருள், அம்பு எறியும். அடையாளம், இடம் நாடிய பொருள், எதிரி, அளவு, இலங்குதல், விளக்கம், இலக்கம"(1) என்னும் இருபது பொருள்களை மதுரைத் தமிழ்ப் பேரகராதி தருகிறது. பிழையில்லாமல் இலக்கண வழுவில்லாமல் எழுதப்பட்டிருப்பது இலக்கியம் என்பது இலக்கண நூலார் கருத்து. உள்ளத்திற்கு இன்பம் கூட்டும், கற்பனை நிறைந்த நூற்களைப் பொதுவாக இலக்கியம் என்பர்.

தமிழில் முதன் முதலாக இலக்கியம் எனும் சொல்லைத் தோலாமொழித் தேவர்,

'காமநூலினுக்கு இலக்கியம் காட்டிய வளத்தால்'

(சூடாமணி. 459)

என்று கையாள்கிறார். இவர் இச்சொல்லை எடுத்துக்காட்டு, உதாரணம் என்ற பொருளிலேயே எடுத்துரைக்கிறார்.

அகத்தியர் பெயரால் வழங்கப்பட்டுவரும் ஒரு பழம்பாடல் ஒன்று, யாப்பருங்கல விருததியாசிரியரால் மேற்கோள் காட்டப்பட்டுள்ளது.

"இலக்கியம் இன்றி இலக்கணம் இன்றே
எள் இன்று ஆகில் எண்ணையும் இன்றே
எள்ளினின்று எண்ணெய் எடுப்பது போல
இலக்கியத்தினின்று எடுபடும் இலக்கணம்"(2).

என்ற பழம்பாடலில் தான் முதன்முதலாகக் கற்பனை வளமும் கலையழகும் வாய்ந்ததொரு படைப்பு 'இலக்கியம்' எனும் பெயரால் சுட்டப்பட்டுள்ளதாகத் தெரிகிறது.

இலக்கியம் என்றால் குறிக்கோள் உடையது என்று பொருள். இலக்கு = குறிக்கோள். குறிக்கோள், நோக்கம் இவற்றைக் கொண்டதே இலக்கியம் : வாழ்க்கைக்கு வழிகாட்டுவதே இலக்கியம். இலக்கியம் மக்கள் வாழ்க்கையில் கண்ட உண்மைகள், அனுபவங்களை வெளியிடுவது; இனிய சொற்களால் இவற்றை எடுத்துரைப்பதாகும்.

மொழி வாழும் வளம் பெற்ற நிலையில் மனித சிந்தனையின்றும் முகிழ்ந்ததே இலக்கியம். மனித சிந்தனையின் வடிவமாக - எல்லையாக- அளவுகோலாக நின்று விளங்குவது இலக்கியம்.

## இலக்கியக் கொள்கை - விளக்கம்

கொள்கை என்பது 'Theory' என்னும் ஆங்கிலச் சொல்லின் தமிழாக்கம் ஆகும். 'Theory' என்னும் ஆங்கிலச் சொல்லிற்குத் தமிழில் "ஊகக்கருத்து, கருத்தாய்வுத்தொகுதி, தற்காலிகமாக ஏற்றுக்கொள்ளப்பட்ட கொள்கை"[3] என்றெல்லாம் பொருள் தருகிறது சென்னைப் பல்கலைக் கழக அகராதி. மதுரைத் தமிழ்ப் பேரகராதி, கொள்கை என்ற சொல்லிற்கு "அறிவு, குணம், கோட்பாடு, சினேகம், செய்கை, விரதம், ஒழுக்கம், கற்பு, கோள் கொள்ளுதல்"[4] ஆகிய பொருள்களைத் தருகின்றது. செந்தமிழ் அகராதி, "பெறுகை, கோட்பாடு, ஒழுக்கம், இயல்பு, செருக்கு"[5] ஆகிய பொருள் விளக்கங்களைத் தருகின்றது. கொள்கை என்ற சொல்லிற்கு

க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி, மூன்று விளக்கங்களைகத் தருகின்றது. "அரசு, கட்சி முதலியவை கொண்டிருக்கும் செயல்பாட்டுத்திட்டம் (அ) நடைமுறை (Policy). 2. தனிமனிதன் கட்சி, மதம் முதலியவை கடைபிடிக்க வேண்டும் என வைத்திருக்கும் நெறிமுறை (Principle, Terent, doctrine). 3.அறிவியல் பூர்வமாக ஆராய்ந்து ஆதாரங்களுடன் முன் வைக்கப்படும் கோட்பாடு, கொள்கை"(6) என அகராதிகள் விளக்க முற்படுபவை அனைத்தும் காலங்காலமாகப் பின்பற்றப்படும் ஒழுக்க நெறியே கொள்கை என வரையறை செய்கின்றன. ஒழுக்கம் என்பது காலந்தோறும் பின்பற்றப்பெறும் மரபையே ஈண்டு உணர்த்துகிறது.

## இலக்கியக் கொள்கை வரையறை

இலக்கியக் கொள்கை என்னும் புதிய துறை தமிழில் வளர்ந்து வரும் சூழலில், இலக்கியக் கொள்கை பற்றிய வரையறையை அறிஞர்கள் பலர் வரையறுத்துள்ளனர். "இலக்கியம் தோன்றிய காலமுதலற்கொண்டு இலக்கியக் கொள்கைகளும் இருந்து வருகின்றன"(7) என்ற க.கைலாசபதியின் கருத்து இலக்கியக் கொள்கையின் பழமையை எடுத்துக்காட்டுகிறது. "இலக்கியத்தைப் படைப்போன், பயன்படுத்துவோர் ஆகிய இரு சாராருக்கும் படைக்கும் செயற்பாங்கு (Creative Process), படைக்கப்பட்ட பொருள் என்பன குறித்துப் பொதுவாக விளங்கும் கருத்துக் கூறுகளே இலக்கியக் கொள்கையாகும்; இக்கருத்துக் கூறுகள் பற்றிய விளக்கம் எப்பொழுதும் இருசாராருக்கும் சம அளவினதாய் இருக்கும் என்பதற்கில்லை. ஒரு சாராரின் ஏற்புடைமை அதிகம் வேறுபடுமாகில் இலக்கியக் கொள்கையில் மாற்றம் ஏற்படுகிறது. என்னும் இரு



சாராருக்கும் பொதுவாக அமையும் இலக்கியக் கொள்கையே குறிப்பிட்ட ஒரு காலப் பகுதியில் குறிப்பிட்ட வகை இலக்கியம் குறிப்பிட்ட தன்மைகளுடன் தோன்றுவதற்கு ஏதுவாயுள்ளது. ஒரு காலத்திலேயே ஒன்றுக்கும் மேற்பட்ட இலக்கியக் கொள்கைகளும் நிலவக் கூடுமாயினும் பெரும்பாலும் ஒரு கொள்கையே மேலோங்கி நிற்கக் காணலாம். இக்கொள்கைகள் ஒவ்வொரு காலத்திலுள்ள பொருளாதார - சமூக - அரசியற் சூழ்நிலைகளால் பெருமளவில் உருவாக்கப்படுகின்றன"[8] என்று இலக்கியக் கொள்கையின் இயல்பினை எடுத்துக்காட்டுகிறார் அறிஞர் கா.கைலாசபதி. "எந்த இலக்கியக் காலத்திலும் ஓர் இலக்கியக் கொள்கை செயல்பட்டு நிற்கிறது. ஓர் இலக்கிய காலத்தில் மூன்று அல்லது அதற்கு மேற்பட்ட இலக்கியக் கொள்கை நிலவும். இதனால் ஓர் இலக்கியக் கொள்கைக்குத் திட்டவட்டமான கால வரையறை இருக்கும்; இல்லாமலுமிருக்கும். சமுதாய காலநிலையில் கருத்துப்படிமம் மாறும்பொழுது அதற்கேற்ற இலக்கியக் கொள்கை உருவாகிறது"[9] என இலக்கியக் கொள்கைகள் பற்றிய பொது அடிப்படை நியதிகளைச் சுட்டிச் சொல்கிறார் சி.கனகசபாபதி. மேலும் அவர், "படைப்போன், படிப்போன் ஆகிய இருவருக்குமாகப் படைப்பு நெறி, பாடுபொருள் ஆகியன பற்றி வழங்கும் கருத்து அமைப்புகளே பொதுவாக இலக்கியக் கொள்கை"[10] என்று குறிப்பிடுகிறார். இவர் இலக்கியக் கொள்கையை கவிஞன், கவிதை, கேட்போன், பாடுபொருள் என்ற நான்கு கூறுகளின் அடிப்படைகளுடன் அறிமுகம் செய்ய வேண்டும் என்று குறிப்பிடுகிறார். இந்த நான்கில் ஒன்றோ, சிலவோ அமையாத எந்த இலக்கியக் கொள்கையுமில்லை. இவர் குறிப்பிடும் நான்கும் அடிப்படையானவை. இவற்றை அடிப்படையாக் கொண்டே இலக்கியக் கொள்கையை உணரமுடியும். இக்கருத்து அறிஞர் க.கைலாசபதியின் கருத்தோடு ஒத்தது. அறிஞர் கைலாசபதி தன் கட்டுரையை இலக்கியங்களை வகைப்படுத்தியும் சில இலக்கியக்

கொள்கைகளையும், அக்கொள்கைகள் மேலோங்கிய காலங்களையும் அக்காலத்திற்குப் பொருத்தமான இலக்கியக் கொள்கைகளையும் எடுத்துரைக்கிறார்.

## கா.சிவத்தம்பி

ஈழத்தமிழ் அறிஞர் கார்த்திகேசு சிவத்தம்பி, "கொள்கை என்ற தமிழ்ச் சொல்லுக்கு இலக்கண நிலைநின்று கூறவதனாலும் இது ஒரு தொழிற்பெயர். இதில் வரும் 'கை' என்னும் இறுதி எழுத்து செய்கை' என்னும் சொல்லில் வருவது போன்றது. அதாவது, இது ஒரு தொழிற்பெயர் விகுதி. செய்யப்படும் பொருளையும் செய்யப்படுதலாகிய தொழிலையும் இந்த சொல் குறிக்கும். அது போன்றே கொள்கை என்பதும் கொள்ளப்படும் பொருளையும், கொள்ளப்படுதலாகிய தொழிலையும் குறித்தல் வேண்டும். ஆனால் 'கொள்கை' என்பது தமிழில் அவ்வாறு பயில்வதில்லை. அது பிரமாணமான அறிவு நிலையைக் குறிக்கும். ஆனால் அடிப்படையில் அது ஒரு தொழிலினடியாகத் தான் வருகிறது. அதாவது 'கொள்ளப்படுவது' அல்லது கொள்ளப்படுதல் என்னும் பொழுது கொள்ளுதல் அங்கு முக்கியமாகின்றது. கருத்தியல் நிலைநின்று கூறுவதானால் ஒருவரால் ஏற்றுக் கொள்ளப்படும் அபிப்பிராயங்கள், எண்ணக் கருத்துக்கள் ஆகியவற்றைக் கொள்கை"[(11)] எனக் குறிப்பிடுகிறார். அறிவு நிலையில் கருத்தாக வைத்திருக்கும் எந்த ஒரு கோவையும் கொள்கையாக அமையும் என்பது புலனாகிறது.

படைப்பாளன் தன் நூலில் பல்வேறு விளக்கங்களின் வாயிலாக வலியுறுத்திக்கூறும் உட்பொருளின் கருத்துப் பிழிவே அவனின் இலக்கியக் கொள்கையாக அமையும். "தாம் பெற்ற அனுபவத்தாலும் நூலறிவாலும்

சிந்தனைச் செழிப்பாலும் ஒரு பொருளைப் பற்றித் தாம் கருதுகின்ற கருத்துக்கள் சிலவற்றை ஒருவர் தொகுத்துக் கூறுவது – ஓரளவிற்கு காரணகாரியத் தொடர்புபடுத்திக் காட்டுவது கொள்கை; இது தனிமனிதனுடையதாகவும் இருக்கலாம்; ஒரு குழுவின் (அ) ஒரு சமுதாயத்தின் ஒட்டுமொத்தக் கருத்துக் கோவையாகவும் இருக்கலாம். இதனை ஏற்றுக் கொள்ள வேண்டும் என்றும் நியதி இல்லை. சில நேரங்களில் கொள்கை மாறலாம். பொய்த்தும் போகலாம்"[12] என்ற கருத்து இலக்கியக் கொள்கையின் இயல்பை எடுத்துணர்த்துவதாகவே அமைகிறது.

படைப்போன், வாசகன் ஆகிய இருசாராரிடையே படைப்பு முறை, படைக்கப்பட்ட பொருள் என்பன குறித்துக் பொதுவாகத் தோன்றும் கருத்துக் கூறுகளே இலக்கியக் கொள்கை ஆகும். வேறுபாடுகள் இருந்தாலும் பொதுவாக நிலவும் கருத்துக்களே முக்கியமானவை. தோற்றம், இயல்பு, பண்பு, பயன், வகை, மதிப்பீடு பற்றிய அனைத்துச் செய்திகளையும் தொகுத்து உணர்த்துவதே இலக்கியக் கொள்கைக்கு ஆதாரம்.

## உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் இலக்கியக் கொள்கை பற்றிய பல கருத்தரங்குகளை நடத்தி, தமிழ் இலக்கியக் கொள்கை (தொகுதி 1 முதல் 13 வரை) என்ற பெயரில் நூல்களை வெளியிட்டுள்ளது. இந்நூல்களில் இலக்கியக் கொள்கைகள் பற்றிய வரையறைகள் இடம் பெற்றுள்ளன. "கொள்கை படைப்போனுக்கு உரியது; படிப்போன் காண்பது. சில அடிப்படைக் கொள்கைகள் பொதுமையுடையன. எல்லா

இலக்கியங்களிலும் காணப்படுவன. இன்னும் சில தனித்தன்மை உடையன வாகையால் ஒரு சிலவற்றில் மட்டும் காணக்கூடியன. எனவே கொள்கை படைப்போனுக்கு ஏற்ப வேறுபடும். படைப்பிற்கேற்ப வேறுபடும். இவ்விவ்வாறு அமைய வேண்டும் எனும் கொள்கை விதிகளாகவும் வரையறைகளாகவும் (Rules and Regulation) மட்டுமின்றி எதிர்ப்பார்ப்புகளாகவும் அமைகின்றது. இவ்விவ்வாறு இருக்கிறது (Descriptive), இவ்விவ்வாறு இருத்தல் தேவை (Prescriptive) இவ்விவ்வாறு எல்லாம் இருத்தல் கூடும் (Generative) எனக் கொள்கை நிலைகள் பல அமையலாம் எனத் தோன்றுகிறது"[13] என்பார் ச.வே. சுப்பிரமணியன்.

இலக்கியத்துக்குரிய பொருள் (Content) அதன் புறநிலை அமைப்பு (External Structure), வெளியீட்டு முறை (Expression) ஆகிய மூன்றும் எல்லா வகையான இலக்கியங்களுக்கும் அடித்தளங்களாக அமைகின்றன. இக்கூற்றின்படி இலக்கியக் கொள்கை என்பது 'ஓர் இலக்கியத்தில் எடுத்துக் கொண்ட பொருளை வகை தொகைப்படுத்தி விளங்க வெளிப்படுத்துவதே கொள்கை என்பது புலனாகிறது. "எப்படிப் படைப்பாகிறது என்று கோட்பாடு வகுத்துத் தருவது இலக்கியக் கொள்கை"[14] என்ற கருத்தை முன்வைக்கிறார் க. ப அறவாணன்.

இலக்கியப் படைப்பாளியின் எண்ணங்களை அவன் படைத்த இலக்கியத்தின் மூலம் நாம் உணர்ந்து கொள்ள இலக்கியக் கொள்கைகள் வழிவகுக்கின்றன. இலக்கியத்தில் பொருண்மை முதன்மையுடையது என்ற அடிப்படையில் அதனை மையமாகக் கொண்டு மேற்செல்லுதல் கொள்கை ஆய்வின் இயல்பாகிறது. இலக்கியங்களிலிருந்து இலக்கணம் வகுத்துக் கொள்ளுதல் இலக்கியக் கொள்கை. இவ்வாறு அறிஞர்கள் தங்கள்

கட்டுரைகளில் இலக்கியக் கொள்கையை விளக்குகின்றனர். எனினும் "இலக்கியக் கொள்கையை ஓரிரு ஆண்டுகளில் கண்டுவிட முடியாது"[15] என்பர் ச.வே.சுப்பிரமணியன் இந்த விளக்கங்களால் ஒரு நூல் இலக்கியமாக விளங்க என்னென்ன கொள்கைகள் தன்பால் கொண்டிருக்கிறதோ, அவையனைத்தும் 'இலக்கியக்கொள்கை' எனப்படும். அவற்றை ஓர் இலக்கியம், தாம் முழுமையுறும் தன்மையில் வெளிப்படுத்தும் போது கோட்பாடுகள் என்றும், இலக்கியத்தை உருவாக்கப் படைப்பாளிகள் பயன்படுத்தும் கொள்கைகள் என்றும் கூறவேண்டும்.

## இலக்கணம் வழி இலக்கியக் கொள்கை பற்றிய விளக்கம்

இலக்கியக் கொள்கை என்ற தொடர் இலக்கு, இயம் என்ற இரு சொற்களால் இயன்றது; இது பெயரினாகிய தொகை. நுண்கலைகளுள் ஒன்றென இலக்கிய வடிவினை இலக்கியம் என்ற சொல் உணர்த்துகிறது. இச்சொல் இன்றைய வழக்கில் எழுதப்பெற்ற அனைத்தையும் சுட்டுகிறது. கொள்கை என்ற சொல் 'கொள்' என்ற அடிச்சொல்லோடு 'கை' என்ற தொழிற்பெயர் விகுதிபெற்று அமைந்தது. இச்சொல் வழங்குவது போலவே 'கோட்பாடு' என்ற சொல்லும் பயில்கிறது. 'கொளல்' என்பதன் முதனிலை திரிந்த வடிவமே 'கோள்' என்பது. கோள் என்பதோடு பாடு என்ற தொழிற்பெயர் விகுதிசேர்ந்து 'கோட்பாடு' உருவாயிற்று. இயல்பு தன்மை எனப்பொருள் கொள்ள முடியும். எனவே இலக்கியம் கொள்வதை உணர்த்துவது இலக்கியக் கொள்கையாகும்.

இலக்கியக் கொள்கையை இலக்கியத்தின் அமைந்த கொள்கை என்றும், இலக்கியத்தால் பெற்ற கொள்கை என மூன்றாம் வேற்றுமையாகவும், பிரிக்க, அதனினியறல், அதனிற்கோடல் என இருவகையாக அமையும். நான்காம் வேற்றுமையாக்கி இலக்கியத்திற்குக் கொள்கை என விரிக்க வேண்டும். இதனால் இலக்கியத்திற்குரிய கொள்கைகள், இலக்கியத்தின் கொள்கை என ஐந்தாம் வேற்றுமைத் தொராக்கியும் இலக்கியத்தினுடைய கொள்கை என ஆறாம் வேற்றுமைத் தொடராக்கியும் பொருள் விரிக்க முடியும். ஆனால் இத்தொடரை முதல் வேற்றுமைத் தொடராகவோ, இரண்டாம் வேற்றுமையாகவோ எட்டாம் வேற்றுமையாகவோ விரிக்க இயலாது. இலக்கியததின் கண் கொள்கை என்ற ஏழாம் வேற்றுமைத் தொடர் அவ்விலக்கியத்திடம் பெறும் கொள்கைகளைக் குறிக்கிறது. அஃது இங்கு கருதப்படவில்லை. அது நூலில் அமையும் கருத்துத் தொடர்பானதாகிவிடம். எனவே ஓர் இலக்கியம் தன்னை இலக்கியமாக நிலைநாட்டி வெளிப்படுத்திக் கொள்ள என்ன என்ன கூறுகளைக் கொண்டுள்ளது என்பதை முறைப்படுத்தி எடுத்துக் காட்டுவதே இலக்கியக் கொள்கையாகும். இவ்வாறு இலக்கியக் கொள்கை என்னும் தொடர் தன்னளவிலேயே பொருள் உணர்த்துவதாக அமைந்திருக்கும் சிறப்பினைப் பெற்றுள்ளது.

## இலக்கியக் கொள்கை ஆக்கம்

பழங்களிலிருந்து சாற்றைத் திரட்டுவதுபோல, இலக்கியங்களிலிருந்து இலக்கியக் கொள்கைகள் ஆக்கம் பெறுகின்றன. இலக்கியங்கள் தம்முடைய இலக்கியத் தன்மையை எங்ஙனம் வெளிப்படுத்துகின்றன என்பதைக் கொண்டு கொள்கைகள் அடையாளம் காட்டப்பெறுகின்றன. ஒரு நூலைப்படிக்கும்போது அதன் இலக்கியத் தன்மை தெளிவாகிவிடும்.

அந்நூல் இலக்கியமாகத் தன்னை இனங்காட்ட எவற்றைப் பயன்படுத்துகிறது என்பதைக் கண்டு அக்கூறுகளைத் தனிமைப்படுத்த வேண்டும். பின்பு இவ்விலக்கிய வகை முழுமையும் கால அடிப்படையில் ஆராய்ந்து உத்திகளையும் தன்மைகளையும் தொகுக்கவேண்டும். இலக்கியக் கொள்கைகள் கற்பனையானவையல்ல. அவை படைப்பாளி உருவாக்கிய இலக்கியங்களிலிருந்து உருவாக்கப்பட்டவை. 'எள்ளிலிருந்து எண்ணெய் எடுப்பதுபோல' இலக்கியக் கொள்கைகள் சேகரிக்கப்பெற்று உருவாக்கப்படுகின்றன.

## இலக்கியக் கொள்கையா ? கோட்பாடா ?

கொள்கை என்னும் சொல்லிற்கும், கோட்பாடு என்னும் சொல்லிற்கும் இடையே உள்ள வேறுபாட்டினைத் தெளிவாக அறிந்துகொள்ளுதல் வேண்டும். இவை இரண்டும் ஒன்றுபோலத் தோன்றினாலும் அவற்றிற்கிடையே நுண்ணிய வேறுபாடு உண்டு. "கோட்பாடு என்பது அளவை நூல் அடிப்படையில் நிலைநாட்டப்பெற்ற உண்மைகள். தனிமனிதர் பலரோ, குழுக்கள் சிலவோ தெளிவுறுத்தும் உண்மைகள். ஒரே இயல்புடையனவாக அமைந்தது. அதனை அவர்கள் எல்லோரும் ஏற்றுப் போற்றும் நிலையை நிலைநாட்டப்பட்ட உண்மைகள் எனும் தகுதியை அவை பெறுமானால் கோட்பாடு என உலகம் போற்றும்"(16) என்கிறார் க. த. திருநாவுக்கரசு.

அறிவு நிலையில் கருத்தாக வைத்திருப்பது கொள்கை. அந்தக் கொள்கையை வரன் முறையான, சிந்தனை நெறியமைய வகுத்துக் கொள்ளும் முறைமையே கோட்பாடு' என்பது புலனாகும். கொள்கையை 'Theory' எனவும், கோட்பாட்டை 'Doctrine' எனவும் ஆங்கிலத்தில்

குறிப்பிடுவர். இலக்கியக் கொள்கையிலிருந்து கோட்பாட்டை வேறுபடுத்தும் கா.சிவத்தம்பி "குறிப்பிட்ட ஓர் இலக்கியக் கொள்கை காரணமாக இலக்கியத்தின் உருவிலும் பொருளிலும் ஏற்படும் அமைவு நெறி அல்லது ஒரே சார்பான அமைவு நெறிகளின் தொகுதியே கோட்பாடு"(17) என வரைவிலக்கணம் செய்கிறார். இலக்கியக் கோட்பாடு வெறுமனே கருத்துநிலைப்பட்ட ஒரு பிரகடனமாக மாத்திரம் நில்லாது அது சமூகத்தில் மனிதன் இயங்குகிற முறைமையைத் தெளிவுபடுத்துவதோடு மனித வாழ்க்கை பற்றிய ஒரு கண்ணோட்டத்தைத் தருவதாகவும் அமைதல் வேண்டும். அது மனித அனுபவங்கள் என்னும் தீயில் புடமிடப்பட்ட கருத்தாக அமைய வேண்டும் என்பது புலனாகிறது. கொள்கை தற்சார்பு (Subjective) உடையது. மனப்பதிவு (Impressionistic) முறையில் வெளிப்படுத்துவது கோட்பாடு: தற்சார்பு (Objective) அற்றது. பொது நிலையில் உண்மையாக நின்று நிலவக் கூடியது. க. த. திருநாவுக்கரசு, "தமிழரின் கலைக் கொள்கையைத் தான் என்னால் உருவாக்கித் தர இயலுமேயொழிய, கலைக் கோட்பாட்டை நிலை நிறுத்த இயலாது என்பதைப் புலப்படுத்தவே இந்தப் பீடிகையை முதலிலேயே அமைந்துக் கொள்ள வேண்டியவனாக நான் இருக்கிறேன். காலப்போக்கில் என்னுடைய கொள்கை வேறுபட்ட நோக்குடையவர்களால் ஏற்றுப் போற்றப்படுமேயானால் அந்நிலையில் ஒரு கால் அவை கோட்பாடாக மாறும் நிலை வரலாம்"(18) என்று குறிப்பிடுகிறார்.

இலக்கியக் கோட்பாட்டின் தெளிவு, தெரிவின்மையை அடிப்படையாகக் கொண்டே இலக்கியவாதியின் தரம் நிர்ணயிக்கப்படுகிறது என்பதை இதன் மூலம் அறியமுடிகிறது. ஓர் இலக்கியத்தின் கொள்கை காலத்தால் ஏற்றுக் கொள்ளப்படும்போது கோட்பாடாக மாறுகிறது என்பது தெளிவாகிறது.

"ஓர் இலக்கியப் படைப்பின் உட்பொருள், உத்தி, வடிவம், பயன், நோக்கு முதலியவற்றின் வழியே ஆய்ந்து அறியலாகும் உண்மைகளின் பிழிவே (The essence of the essentials of a literary work) இலக்கியக் கொள்கை"[(19)] என விளக்கம் தருகிறார் கா.பிரபாகரி. ஓரிலக்கியம் படைக்கப்பட்ட போது நிலவிய காலச் சூழல் அவ்வியலக்கியத்தின் பொருண்மை, இலக்கியப் படைப்பாளன் கூறி வந்த கருத்து, அக்கருத்திணை உணர்த்திய முறை ஆகியவற்றை ஆராய்ந்து அதன் வழியே கண்டவற்றை வகை, தொகைப்படுத்திக் கூறிவதையே அவ்விலக்கியத்தின் கொள்கையாக இருக்க முடியும்.

"ஒரு நூலின் இலக்கியக் கொள்கையை, படைப்பாளன் நூலின் கொள்கைகைகளாக நூலில் நுவன்றதையே அவ்விலக்கியதின கொள்கையாகக் கொள்ளுதல், திறனாய்வாளர் ஒருவர் படைப்பாளர் ஒருவரின் (அ) நூலின் பாடுபொருள் வழிச் சென்று படைப்பாளனின் கொள்கை (அ) நூலாசிரியரின் கொள்கை இதுவெனக் கண்டுசெல்லுதல்"[(20)] என இரண்டு முறைகளில் காணமுடியும் என்கிறார் க. பிரபாகரி.

## இலக்கியக் கொள்கை - இலக்கிய வரலாறு - இலக்கியத் திறனாய்வு

இலக்கியக் கொள்கைக்கும், இலக்கியத் திறனாய்விற்கும், இலக்கிய வரலாற்றிற்கும் இடையே உள்ள வேறுபாடுகளை அறிந்திருப்பது இன்றியமையாதது. ஓர் இலக்கியப் படைப்பு, நூலாசிரியன் ஒரு குறிப்பிட்ட கால இலக்கியம் அல்லது தேச இலக்கியத்திற்குரிய தனித்தோர் பண்பை எடுத்துக்காட்ட இலக்கியத் திறனாய்வும், இலக்கிய வரலாறும் முயன்று

வருகின்றன. இவ்வாறு இலக்கியத்திற்குரிய தனிப்பண்பை ஓர் இலக்கியக் கொள்கையின் அடிப்படையிலே விளக்க முடியும். இன்றைய இலக்கியப் புலமைக்கு இலக்கியக் கொள்கை மிகத் தேவை. பல திறனாய்வு முறைகளின் இணைவே இலக்கியக் கொள்கை என்ற கருத்து நோக்கத்தக்கது.

ரெனிவெல்லாக்கும், ஆஸ்டின் வாரனும் எழுதிய இலக்கியக் கொள்கை என்ற நூலின் நான்காவது இயல் இலக்கியக் கொள்கை இலக்கியத் திறனாய்வு, இலக்கிய வரலாறு ஆகிய மூன்று துறைகளையும் ஒப்பிட்டு, அவற்றிற்கு இடையே உள்ள தொடர்புகளையும் விளக்கிச் செல்கின்றனர். “இலக்கியக் கோட்பாட்டை உருவாக்கும் பொழுது இலக்கியத் திறனாய்வின் துணையை நாடவேண்டும். இலக்கிய வரலாற்றிலிருந்தும் கொள்ள வேண்டியதைக் கொள்ள வேண்டும். இம் மூன்று அறிவுத் துறைகளும் தனித்தன்மை உடையன என்பதை மறுக்க முடியாது. வரலாறு கோட்பாட்டைத் தள்ளிவிட முடியாது; கோட்பாடு வரலாற்றை முழுவதுமாகத் தன்னுள் கொண்டுவிடவும் முடியாது”[21] என்று குறிப்பிடுகிறார். குறிப்பிட்ட ஓர் இலக்கியத்தைப் பல்வேறு கோணங்களில் ஆராய்ந்து அதன் நிறை குறைகளைக் கண்டறிந்து மதிப்பீடு செய்யும் முயற்சி திறனாய்வு ஆகும். இலக்கியத் திறனாய்வு, இலக்கியக் கொள்கை என்ற இரண்டையும் தனித்தனித்துறையாகக் கொள்ளலாது ஒன்றின் ஒன்றாகவே கருத இடமுள்ளது.

இலக்கியம் தோன்றிய அன்றே, இலக்கிய வரலாறும் உடன் தோன்றுகிறது. வரிவடிவம் தோன்றுமுன் வாய்வழியாக இருந்த காலத்திலும் அதற்கு வரலாறு உண்டு. அவ்வாறு உய்த்துணரப் பெறுவது, பின்னர் படிப்படியாகத் தோன்றிய இலக்கிய வரலாறுகளின் வரலாறு பல்வேறு கால நிலைகளின்(ல்) பல்வேறு வகைகளாகச் சிந்தனை

வளர்ச்சியைக் காட்டுகிறது. புலவர் பிறப்பு, வாழ்க்கை வரலாறு போன்றவையெல்லாம் அடங்கிய இலக்கிய வரலாறு இலக்கியத்தைப் படைத்தளித்த புலவர்களின் வரலாறு ஆகுமேயன்றி இலக்கியத்தின் வரலாறு ஆகுமா ? என்ற கருத்து சிந்தனைக்குரியது.

இலக்கியத்தைப் படைத்தளித்த ஆசிரியனும் அவன் காலச் சூழலும் இலக்கிய உருவாக்கத்திற்கு அடிப்படையான காரணிகளாக அமைகின்றன. ஆனால் இலக்கிய வளர்ச்சி வரலாற்றிற்கு ஏது காட்டத்தக்க சான்று மூலங்களாக அமைவனவேயன்றி அவை இலக்கிய வரலாறாக அமையாது. அவற்றைப் பற்றியவை தெளிவுறப் பெற்றுக்கொண்டு அவற்றின் அடிப்படையில் இலக்கிய வரலாற்றை எழுதவேண்டும். சில இலக்கிய வரலாறுகள் ஒரு தேசத்தின் நாகரிகப் பண்பாட்டு வரலாறுகளாக அமைந்து விடுகின்றன. அவை ஒரு நாட்டின் சமூக, சமய அறிவு வளர்ச்சியில் அழுத்தம் வைத்து எடுத்துரைக்கின்றன. இலக்கிய வரலாற்றின் சாரமான பகுதியை முனைந்து நோக்கினால் ஒரு நாட்டின் கல்வி வளர்ச்சி வரலாறு தெளிவாக விளங்கும். அது ஒரு தேசத்தின் வரலாறு ஆகும். இலக்கியங்களின் உள்ளார்ந்த வளர்ச்சியைக் கண்டு எழுதுவதும் இலக்கியத் தோற்றத்தின் வளர்ச்சியைக் கண்டு கணிப்பதும் தான் இலக்கியத்திற்கென்று உரிய சொந்த வரலாறு ஆகும். இதனைப் பின்பற்றி இலக்கிய வரலாற்றினை எழுதுவது அரிதினும் அரிது. எனவே இலக்கிய வரலாறு இலக்கியத்தின் வளர்ச்சியை - பண்புச் சிறப்பு வடிவ நலத்தை, உயரிப்பண்பை எடுத்துரைக்கும் வல்லமை உடையது.

இலக்கியக் கொள்கைக்கும், இலக்கியத் திறனாய்விற்கும் ஒரு நெருங்கிய உறவு இருப்பதுபோல் இலக்கியவரலாற்றிற்கு அத்தகை உள்ளார்ந்த உறவு இல்லை. ஓர் இலக்கியத்தைக் கற்கையில் அதன் காலத்தைப் பற்றியோ ஆசிரியரைப் பற்றியோ அக்கறை காட்டாமல் படிக்க

முடியும். நூல் தோன்றிய காலத்தை உணர்வில்லாமல் அதன் இலக்கியத் தன்மைகளை மட்டும் ஆராய்ந்து பார்க்க முடியும். இலக்கிய வரலாறு என்பது ஏனைய இரண்டிலிருந்தும் விலகி வேறுபட்டு நிற்கிறது. இலக்கியத் திறனாய்வு செய்வதன் மூலம் இலக்கியக் கொள்கையை இனங்கொண்டு கொள்ள முடியும். ஆகவே திறனாய்வு கொள்கையை உணர வழிகாட்டுகின்றன.

இலக்கிய நெறிகள், வகைகள் அடிப்படை நிலைகள் ஆகியவை பற்றிய கல்வி இலக்கியக் கொள்கையின் கீழ் அடங்கும். இஃது இலக்கியப் படைப்பை இலக்கியத் திறனாய்வு நோக்கிலும் இலக்கிய வரலாறு நோக்கிலும் கற்பதினின்று வேறுபட்டது. இலக்கியத் திறனாய்வுக் காலம் பற்றிய கருத்தினின்று கொள்ளப்பெறும். அஃது எல்லா இலக்கியக் கொள்கைகளையும் உள்ளடக்குமாறு கொள்ளப் பெறுவது மரபு. இலக்கியக் கொள்கை என்ற சொற்றொடர் ரெனிவெல்லாக் கருத்துப்படி இலக்கியத் திறனாய்வின் கொள்கையையும் தன்னுள் கொண்டது. இம்மூன்றிற்கும் இடையே உள்ள வேறுபாடுகள் மிகத் தெளிவானவை. அவை ஒன்றிலிருந்து மற்றொன்றைப் பிரித்துப் பயன்படுத்தாத நிலையில் அவற்றின் உறவு அமைந்துள்ளது. இவ்வுண்மையை ஒரு சிலரே உணர்ந்துள்ளனர். இலக்கியத் திறனாய்வு, கொள்கை, வரலாறு என்ற துறைகள் ஒன்றை ஒன்று தழுவி அமைந்துள்ளன. இம்மூன்றில் ஒன்றினை மற்றை இரண்டின் துணையின்றி அறிய இயலாது. இலக்கியங்கள் பற்றிய கல்வியின் அடிப்படையிலேயே இலக்கியக் கொள்கையை உணர்ந்து கொள்ள முடியும்.

## இலக்கியக்கொள்கை – வகைமை

இலக்கியக் கொள்கை படைப்புகளைப் பற்றியும் படைப்பாளிகளைப் பற்றியும் தெள்ளதின் விளக்குகிறது. படைப்புகளைப் பற்றிப் பேசும்போது இலக்கியத்தின் வடிவம், யாப்பு, வெளியீட்டுமுறை, பாடுபொருள் ஆகிய பல திறன்களையும் இலக்கியத் திறனாய்வாளர்கள் விளக்குகின்றனர். இலக்கியக் கொள்கையை அகநிலை இலக்கியக் கொள்கை, புறநிலை இலக்கியக் கொள்கை என்று இரண்டாகக் காண்பது சிறப்புடையது.

அக நிலை இலக்கியக் கொள்கை என்பது இலக்கியத்தின் உள்ளடக்கம், உத்தி முதலியவற்றை ஆசிரியன் யாங்ஙனம் பயன்படுத்தித் தன் நூலை இலக்கியமாக்கியுள்ளான் என்பதை எடுத்துரைக்கும் பகுதியாகும். நூலுள் அமையும் கருத்துகளை வெளிப்படுத்தக் கையாண்ட வடிவம், வடிவத்தில் அடங்கும் யாப்பு, ஆகிய வெளிப்பகுதிகளைப் பற்றியும் சுட்டிக் காட்டுவது புறநிலை இலக்கியக் கொள்கை என்றும், இலக்கிய வரலாறு, இலக்கியத் திறனாய்வு ஆகியவற்றின் கொள்கையைக் கொண்டது இலக்கியக் கொள்கை என்றும் குறிப்பிடுகின்றனர். இலக்கியத் திறனாய்வு என்பது, இலக்கியத்தை ஆராய்கின்ற ஆராய்ச்சியாகும். இலக்கியத்தைப் பற்றிய எந்த வகை விமர்சனமும் திறனாய்விற்குள் அடங்கி விடும். ஓர் இலக்கியத்தைப் பற்றி நன்று எனவோ, தீது எனவோ இரண்டு தன்மைகள் உள்ளன. அவற்றை ஆரா்ய்நது எழுதப்படும் முடிவுகள் திறனாய்வு எனப்படும். ஓர் இலக்கியத்தை எந்த வகையில் நோக்கினும் எந்த அடிப்படையிலும் மதிப்பிடுகின்ற முயற்சி இலக்கியத் திறனாய்வு ஆகும். இலக்கியப் படைப்புகளை வரையறுத்தல், வகைப்படுத்தல் விளக்கம் செய்தல், எடை இடல் ஆகிய பணிகளை உள்ளடக்கிய துறையினைத் திறனாய்வு என்று குறிப்பிடப்படுகிறது.

திறனாய்வின் நோக்கமாக, “இலக்கியம் படைக்க வழிசெய்யும் விதிகளைக் கூறுவது, இலக்கியப் படைப்புகள் கையாண்டுள்ள நெறிமுறைகளைத் தொகுத்தளிப்பது, அரிய இலக்கிய படைப்புகளுக்கு விளக்கம் தருவது, அவற்றின் நயம் உரைப்பது, அவற்றின் நிறைகுறைகளை எடையிடுவது, இலக்கிய ஆர்வலர்களின் சுவையை நெறிப்படுத்துவது, கவிஞர்களின் பெருமைகளையும் சிறுமைகளையும் சீர் தூக்கிப் பார்த்துத் தரப்பட்டியல் தயாரிப்பது, நூலை வாசித்தபோது தனக்கேற்பட்ட உணர்வுகளை திறனாய்வாளர் அவ்வாறே கூறுவது, நூலோடு ஒன்றித் துய்த்தபோது ஏற்பட்ட அனுபவத்தைப் பிறரோடு பகிர்ந்து கொள்வது, நூல் தோன்றியத்தற்கான சமூக சூழலை ஆராய்ந்து தருவது, நூலாசிரியன் அந்நூலைத் தோற்றுவித்ததற்கான காரணங்களை உளநூல் அடிப்படையில் அவனது வாழ்க்கை நிகழ்ச்சிகள் மூலம் விளக்குவது, நூலில் மறைந்து நின்றோ, வெளிப்படையாகவோ அதற்கு உயிர் கொடுக்கும் தொன்மம் எதுவெனச் சுட்டிக்காட்டுவது, நூலாசிரியரின் நூலின் காலம், சமுதாய பின்னணி ஆகியவற்றைப் புறக்கணித்து, அது பயன்படுத்தும் சொற்றொடர்கள், யாப்புக் கூறுகள் அணிகள் ஆகியவற்றை ஆராய்ந்து அவை நூலின் முழுமைக்குத் துணை செய்யுமாற்றை வெளிப்படுத்துவது, நூலின் கட்டுக்கோப்பை விளக்குவது, அதனையே அழித்து மீட்டுருவாக்கம் செய்வது”[22] என்றெல்லாம் பட்டியலிடுகிறார் ப. மருதநாயகம்.

நார்த்ராப்ஃபிரை (Northropfrye), கவிஞன் விட்ட இடத்திலிருந்து திறனாய்வாளனின் பணி தொடர்கிறது என்பதை, கவிஞன் பெற்ற குழந்தைக்குத் திறனாய்வாளன் தாதியாக அமைய வேண்டும் என்பதை “கவிதை குழந்தையாவும், கவிஞன் தாயாகவும், திறனாய்வாளன் தாதியாகவும் செயல்படும் நிகழ்ச்சியில் திறனாய்வாளனே குழந்தையைத்

தாயினின்றும் பிரித்தெடுத்து, அது ஆணா, பெண்ணாவென்று தாய்க்குச் சொல்லி அதனைக் குளிப்பாட்டி, உலகிற்குக் காட்டத் தகுதியாக்க வேண்டும்[23] என்று உவமையின் வாயிலாக விளக்குகிறார் பமருதநாயகம். மக்கள் உடம்பில் என்பும், தசையும் இணைந்திருப்பதுபோல இலக்கியங்களிலும் இவ்விரு பகுதிகளும் அமைந்திருக்கின்றனவேயன்றி இவை ஒன்றன் இரண்டு பக்க அடிப்படையே ஆகும். இப்பகுப்பு நூலுள் அமையும் தன்மையால் அமைக்கப்பெற்றது. எல்லா இலக்கியங்களிலும் இவ்விரு நிலை இலக்கியக் கொள்கைகளைக் காணமுடியும்.

## தொல்காப்பிய இலக்கியக் கொள்கை

தொல்காப்பியம் எழுத்து, சொல், பொருள், ஆகிய மூன்று இயல்களைக் கொண்டது. தொல்காப்பியர் பொருளதிகாரத்தில் குறிப்பிடும் அனைத்துச் செய்திகளும் படைப்பிலக்கியம் தொடர்பான இலக்கியக் கொள்கைகளாக அமைந்துள்ளன. பொருளதிகாரம் பழந்தமிழர் கண்ட இலக்கியக் கொள்கைகளைத் தொகுத்து வைத்த கருவூலமாகும். எவ்வாறு மேலை நாட்டினர், அரிஸ்டாட்டிலின் கவிதை இயலைத் தொன்மைமிக்க இலக்கியக் கொள்கை நூலெனப் போற்றுகின்றனரோ, எவ்வாறு வடமொழியியலார் பரத முனிவரின் பரத சாத்திரத்தைத் தமது தொன்மையான இலக்கியக் கொள்கை நூலென்று போற்றுகின்றனரோ, அதுபோலத் தமிழர்கள் தொல்காப்பியப் பொருளதிகாரத்தைத் தமிழில் தோன்றியுள்ள தொன்மைமிக்க இலக்கியக் கொள்கை நூலெனப் போற்றுகின்றனர் என்ற கருத்து இவண் நோக்கத்தக்கது. பழந்தமிழ் இலக்கியங்கள் பெரும்பாலும் செய்யுள் வடிவிலேயே அமைந்து விட்டதால், தொல்காப்பியரும் செய்யுள் உறுப்புக்கள் அடிப்படையிலேயே இலக்கணம் செய்துள்ளார். தொல்காப்பியர் செய்யுளிலில் குறிப்பிடும் செய்யுள் உறுப்புகள்

அனைத்தும் (34) அடிப்படையான இலக்கியக் கொள்கையாக அமைந்துள்ளன.

'மாத்திரை எழுத்தியல் அசைவகை எனாஅ
யாத்தசீரே, அடி, யாப்பு எனாஅ
மரபே, தூக்கே, தொடைவகை எனாஅ
நோக்கே, பாவே, அளவியல் எனாஅத்
திணையே, கைகோள், கூற்று வகை எனாஅக்
கேட்போர், களனே, காலவகை எனா அப்
பயனே, மெய்பாடு, எச்சவகை எனாஅ
முன்னம், பொருளே, துறை வகை எனாஅ
மாட்டே, வண்ணமொடு யாப்பியல் வகையின்
ஆறுதலையிட்ட அந்நூல் ஐந்தும்
அம்மை அழகு தொன்மை தோலே
விருந்தே இயைபே புலனே இழைப எனாஅப்
பொருந்தக் கூறிய எட்டொடும் தொகைஇ
நல்லிசைப் புலவர் செய்யுள் உறுப்பென
வல்லிதிற் கூறி வகுத்துரைத் தனரே'

(தொல். 1259)

இவ்வாறு "தொல்காப்பியர் கூறும் முப்பத்து நான்கு செய்யுள் உறுப்புகளையும் வகை தொகைப்படுத்தி விளங்கிக் கொள்வோமாயின் அவையே தொல்காப்பிய இலக்கியக் கொள்கை என்பது தெற்றெனப் புலனாகும்"(24) என்பார் க. காளிமுத்து. இவர் இலக்கியக் கொள்கைகள் எனும் இச்சொல் நோக்கிற்கேற்ப, யாப்புறுப்புகள், அணியுறுப்புகள், பொருளுறுப்புகள், கருத்து வெளிப்பாட்டு உறுப்புகள், அடிப்படை மரபுகள்

என ஐந்து வகையாகப் பிரித்து விளக்கம் தந்து, அவற்றில் அகப்பொருளுக்கு ஏற்பச் சிறப்பாக இடம் பெறும் இலக்கியக் கொள்கைகளை குறுந்தொகையுடன் ஒப்பிட்டும், உறழ்ந்தும் தனது முனைவர் பட்ட ஆய்வினைச் செய்துள்ளார். யாப்பாராய்ச்சி பலரால் தனியே மேற்கொள்ளப்பட்டுள்ள நிலையில் அகப்பொருளுக்கெனச் சிறப்பாக இடம்பெறும் பொருளுறுப்புக்களான திணை, கைகோள், கூற்று, கேட்போர், பொருள், துறை, மரபு ஆகியவை பற்றியும் கருத்து வெளிப்பாட்டு உறுப்புக்களான களன், காலம், முன்னம், ஆகியவை பற்றியும் அடிப்படை மரபுகளான புலனெறி வழக்கு, நாடக வழக்கு, உலகியல் வழக்கு, சுட்டி ஒருவர் பெயர் சொல்லிப்பாடாமை, உவமை, உள்ளுறை, இறைச்சி, ஆகியவற்றை விரிவாக விளக்கும் வகையில் சோழ நாட்டுப் புலவர்களின் அகப்பாடலில் அமைந்துள்ள இலக்கியக் கொள்கையை வெளிக்காட்டும் முயற்சியில் இவ்வாய்வேடு அமைகிறது.

## அகப்பொருள் இலக்கியக்கொள்கை

பழந்தமிழ் இலக்கியம் அகம், புறம் என்ற இருபெரும் பகுதியில் அடங்கும். அகம் என்பது காதல். "ஒத்த அன்பான ஒருவனும் ஒருத்தியும் கூடுகின்ற காலத்துப் பிறந்த பேரின்பம், அக்கூட்டத்தின் பின்னர் அவ்விருவரும் ஒருவருக்கொருவர் தத்தமக்குப் புலனாக இவ்வாறு இருந்ததெனக் கூறப்படாததாய், யாண்டும் உள்ளத்துணர்வே நுகர்ந்து இன்பமுறுவதோர் பொருளாதலின் அகத்தை அகம்"[25] என்பார் நச்சினார்க்கினியர். எனவே, அகத்தே நிகழ்கின்ற இன்பத்திற்கு அகமென்று ஓர் ஆகுபெயராம். இடம், தன்மை இரண்டாலும் உள்ளார்ந்தது என்பதே அகம் என்ற சொல் உணர்த்தும். அகம் என்பது அறியப்படாதது; மறைபொருளானது என்ற பொருள்களைத் தருகின்றது. அகம், புறம் என்ற

பாகுபாடு பொருளின் அடிப்படையிலேயே அமைந்துள்ளது என்பதைத் தொல்காப்பியர்,

'மக்கள் நுதலிய அகன் ஐந்திணையும்
சுட்டி ஒருவர் பெயர்கொளப் பெறாஅர்'

(தொல். 1000)

என்ற நூற்பாவின் வழி வலியுறுத்துகிறார்.

## முப்பொருள் பகுபாடு

அகத்திணையை முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் என்று மூன்று வகையாகப் பிரித்துத் தொல்காப்பியர் இலக்கணம் வகுக்கிறார். எந்த நாடாக இருந்தாலும் மக்கள் வாழ்வியல் முறையும் பழக்க வழக்கங்களும், சிந்தனையும், செயல்களும் தொல்காப்பியரின் முப்பொருள் பாகுபாட்டினுள் அடங்கி விடும். முதற்பொருள் நிலம், காலம் என இரண்டு வகைப்படும். இதனை,

'முதல் எனப்படுவது நிலம்பொழுது இரண்டின்
இயல்பென மொழிவர் இயல்புணர்ந்தோரே'

(தொல். 950)

என்று தொல்காப்பியர் கூறுகிறார். நிலத்தை **'Space'** என்றும் காலத்தை **'Time'** என்றும் ஆங்கிலத்தில் வழங்குவர். தமிழர்கள் நிலத்தை நான்கு பிரிவாகப் பிரித்தனர். காடும் காடு சார்ந்த பகுதியை முல்லை எனவும், மலையும் மலை சார்ந்த பகுதியைக் குறிஞ்சி எனவும், வயலும் வயல்

சார்ந்த பகுதியை மருதம் எனவும், மணலும் மணல் சார்ந்த பகுதியை நெய்தல் எனவும் நான்கு வகையாகத் தமிழர்கள் நிலத்தைப் பிரித்தனர். ஐந்தாவது ஒரு நிலம் உண்டு. இதனைப் பாலை என்று தமிழ்நூல்கள் வழங்கும். தமிழ்நாட்டில் பாலைநிலம் இல்லை. "இயற்கையான மாறுபட்டால் பருவமழை பொய்யாது வளம் குன்றிய காலத்தில், முல்லை நிலமும், குறிஞ்சி நிலமும் தம் இயல்பை இழந்து புதியதோர் தன்மையைப் பெறும். அத்தன்மையுடைய நிலத்தைப் பாலை என்று சிலப்பதிகாரம் குறிப்பிடும். முதல்பொருளின் மற்றொரு பகுதியாகிய காலத்தைப் பெரும்பொழுது, சிறுபொழுது என்று இருவகைப்படுத்துவர் தமிழ்ச் சான்றோர். பெரும்பொழுது என்பது ஓராண்டின் ஆறு பிரிவாகக் கூறிட்டபகுதிகள். அவை கார், கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனில், முதுவேனில், என்பவை. சிறுபொழுது என்பது ஒரு நாளின் ஆறு கூறிட்ட பகுதிகள். அவை வைகறை, விடியல், ஏற்பாடு, நண்பகல், மாலை, யாமம் என்பவை. இவ்வாறு ஐந்திணைக்கும் பெரும்பொழுது, சிறுபொழுதுகள் பகுக்கப்பெற்று அவ்வந் நிலத்திற்கேற்பத் தலைவன் தலைவியர் மாட்டுத் தோன்றும் காமக் குறிப்பைச் சிறப்பித்தல் பற்றிய கருத்தாக்கத்திற்குக் களனாக அமைகிறது.

முதற்பொருளிலிருந்து தோன்றுவது கருப்பொருள். அஃது இடத்திலும் காலத்திலும் தோன்றும். இதனைத் தொல்காப்பியர்.

'தெய்வம் உணாவே மா மரம் புள் பறை
செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ
அவ்வகை பிறவும் கருவென மொழிப'

(தொல். 964)

என்று கூறுவர். முதற்பொருளாம் காலத்தின் இயக்கத்தால் கருவாகி உருவாகும் பொருள்கள் கருப்பொருள் எனப்பட்டன.

உரிப்பொருளாவது, மக்களுக்கு உரியபொருள். உரிப்பொருள் மக்கள் வாழ்க்கையொட்டி அமையும். அவர்கள் வாழும் வாழ்க்கை நெறியே - ஒழுக்கமே - உரிப்பொருள் என்று கூறினாலும் பிழையாகாது. உரிப்பொருளை, ஐந்தாகப் பகுத்து,

'புணர்தல் பிரிதல், இருத்தல் இரங்கல்
ஊடல் அவற்றின் நிமித்தம் என்றிவை
தேருங் காலைத் திணைக்குரிப் பொருளே'
(தொல். 960)

என ஐந்து வகைத் திணைகளுக்கும் ஐந்து வகை உரிப்பொருளைக் குறிப்பிடுகிறார் தொல்காப்பியர்.

காதல் பற்றி அமைந்த அகப்பாடல்களில் முதல், கரு, உரி ஆகிய முப்பொருள்களும் சிறப்பாக அமைந்திருப்பதைச் சங்கப்பாடல்கள் வழி அறியமுடிகிறது. இவற்றுள் முதற்பொருளினும், கருப்பொருளும், கருப்பொருளினும் உரிப்பொருளும் சிறப்புடையனவாகக் காணப்படுகிறது. அகப்பொருள் பற்றிய பாடல்களில் உரிப்பொருளாகிய புணர்தல் பிரிதல், இருத்தல், இரங்கல், ஊடல் ஆகிய ஒழுக்கங்கள் இல்லாமற் பாடப்பெறுமாயின் அப்பாடல்கள் பொருட்பயனற்றவையாகக் கருதப்பெறும். தமிழிலக்கிய வரலாற்றில் இலக்கியம் பயனளிக்கவல்லதாக அமைய வேண்டும் எனும் பயன்முதற்கொள்கை தொல்காப்பியரிடமே உருப்பெறுகிறது. அறம், பொருள், இன்பம் என்னும் உறுதிப்பொருள்

மூன்றையும் வலியுறுத்தவேண்டும் என்ற நோக்கத்தில் களவியல் முதற்சூத்திரத்தில்,

'இன்பமும் பொருளும் அறனும் என்றாங்கு
அன்பொடு புணர்ந்த ஐந்திணை..............'

தொல். 1038:1-2)

என்று உரிப்பொருளை வலியுறுத்துகிறார்.

## திணை

மக்களின் ஒழுக்கம் திணை எனப்படும். திணை என்றால் ஒழுக்கம் என்று பொருள். மனித இனம் உயர்வான வாழ்க்கை ஒழுக்கம் உடையது. எனவே உயர்திணை எனப்பட்டது. திணை என்ற சொல் முதலில் நிலத்தைக் குறித்துப் பின்னர் அந்நில மக்களின் வாழ்க்கை ஒழுகலாறுகளை அகத்திணை, புறத்திணை என்று பாகுபடுத்தி அதற்குரிய கருவி திணை என்று வழங்கப்படும். அகத்திணைகளான குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை பெருந்திணை, கைக்கிளை, ஆகிய ஏழும், புறத்திணைகளான வெட்சி, கரந்தை, வஞ்சி, உழிஞை தும்பை, வாகை, காஞ்சி, பாடாண் ஆகியவற்றோடு இணைத்துக் கூறுவர் தொல்காப்பியர்.

## பெயர் சுட்டாமை

அகப்பொருள் இலக்கியக் கொள்கையில், 'சுட்டி ஒருவர் பெயர்கொளப் பெறாஅர்' என்ற மரபு குறிப்பிடத்தக்கது. அகன் ஐந்திணைப் பாடல்களில் சுட்டி ஒருவரது இயற்பெயர் இடம் பெறாது. தொல்காப்பியர்

அகத்திணையில் களவிலும் கற்பிலும் ஈடுபடும் மாந்தர்களின் இயற்பெயரைச் சுட்டும் வழக்கம் இல்லை என்பதை,

'மக்கள் நுதலிய அகன் ஐந்திணையும்,
சுட்டி ஒருவர் பெயர்கொளப் பெறா அர்'
(தொல். 1000)

என்று குறிப்பிடுகிறார். அகப்பாடல்களில் தலைவன் தலைவியர் பொதுவாகவே குறிக்கப்பெறுவர். காதல் உணர்ச்சி அனைவருக்கும் பொதுவாக இருப்பதால் மக்கள் என்று குறிப்பிடுகிறார். காதல் உணர்ச்சியில் ஈடுபடும் மாந்தர்களின் பெயர்களைச் சுட்டினால் அது தனி மனிதர்களுக்கு உரியதாகி விடும். அகம் புறம் என்ற பாகுபாடு இந்தக் கொள்கையை அடிப்படையாகக் கொண்டே பிரிக்கப்படுகிறது.

## நாடக வழக்கும், உலகியல் வழக்கும்

அகத்திணை இலக்கணம் என்பது உணர்ச்சிமயமான காதலை அறிவுக்குப் பொருத்தமாகப் புனைவதற்கு வகுக்கப்பட்டது. அகத்திணை ஒழுக்கங்கள் உலகப் பொது உணர்வாகவும் ஒருவன் ஒருத்தியின் அந்தரங்கமாகவும் இருப்பதால் அவற்றை இலக்கியமாக்கச் சில வரம்புகளையும் நெறிமுறைகளையும் பின்பற்ற வேண்டும். நாடகப் பாங்கில், உலக நடைமுறைக்கு ஒப்ப நடப்பவும், கற்பனையும் கலந்து புனையப் பெற வேண்டும். நடப்பாகவும் குறிக்கோள் நிலையிலும் பாடப்படும் முறையே புலனெறி வழக்கம் எனப்படும். நாடக வழக்காவது "சுவைபட வருவனவெல்லாம் ஓரிடத்து வந்தனவாகத் தொகுத்துக் கூறுதல்"(26) என்று விளக்கம் தருவர் இளம்பூரணர். சுவையற்றன எல்லாவற்றையும்

தள்ளிவிட்டுச் சுவைபட வருவனவற்றையே சங்க அகப்பாடல்கள் உலக வாழ்க்கையைத் தழுவி அமைகின்றன.

உலகியல் வழக்காவது, "உலகத்தார் ஒழுகலாற்றோடு ஒத்து வருவது"(27) என்பது இளம்பூரணர் கருத்து. "உலகில் நடப்பதை எழுதுவது, நடந்ததைப் புனைவது, நடக்கக் கூடியதைச் சித்தரிப்பது என்றெல்லாம் கூறுவதைத விட, பாடற்கருத்தைப் படித்தால் உலகத்தார் வழக்காற்றுடன் ஒத்து வருவனவெல்லாம் உலக வழக்கு"(28) என்ற தமிழண்ணலின் கருத்து சிந்தனைக்குரியது. உணர்வு நிலையாகிய காதல் ஒழுக்க நிகழ்ச்சிகளை உலக வழக்கிற்கு மாறுபடாமலும் யாரையும் குறிப்பிடுவனவாகத் தோன்றி விடாமலும் புனைய வேண்டும். உலகில் நடக்கும் உண்மை நிகழ்ச்சிக்குக் கற்பனை அணி பூட்டி நாடக வழக்கமாகக் காட்ட வேண்டும். அவ்வாறு காட்டும் முறை புலனெறி வழக்கம் எனத் தெரிகிறது. அகப்பாடல்களில் காணப்படும் அடிக்கருத்து உலகியல் வழக்கு. அதனைப் புலப்படுத்தும் முறையே நாடக வழக்கு என்பதும் புலனாம்.

அகத்திணை ஒழுக்கங்களைப் புனைவதற்கு ஏற்ற பாவகை கலிப்பாகவும் பரிபாடலும் என்று தொல்காப்பியர் காலத்து நிலையைக் கூறுகிறார். அவர் கூற்றைத் தழுவிச் சங்க இலக்கியத்தில் கலித்தொகையும் பரிபாடலில் சில பாடல்களும் அமைந்துள்ளன. ஏனைய அகப்பாடல்கள் யாவும் ஆசிரிப்பாவிலேயே அமைந்துள்ளன. இது சங்க காலத்தில் தோன்றிய மரபு மாற்றத்தையே புலப்படுத்துகிறது. தொல்காப்பியர் அகத்திணைக்கு இன்றியமையாத வெளிப்பாட்டு உத்திகளான நாடக வழக்கையும், உலகியல் வழக்கையும் பாடும்போது

கலிப்பாவையும், பரிபாடலையும் வைத்துப் பாடல் செய்ய வேண்டும் என்பதை,

'நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்
பாடல் சான்ற புலனெறி வழக்கம்,
கலியே பரிபாட்டு ஆயிரு பாவினும்
உரியதாகும் என்மனார் புலவர்'

(தொல். 999)

என்ற நூற்பாவின் வழி வலியுறுத்துகிறார்.

உவமை

உவமை என்பது பொருளை விளக்குவதற்குப் படைப்பாளிகள் பயன்படுத்தும் பொருள் விளக்கக் கருவியாகும். கருத்துக்களை அடுக்கிக் கொண்டு படைப்பாளிகள் தங்கள் படைப்புகளை உருவாக்கும் போது அந்தக் கருத்துக்களையும் புலப்படுத்தி உவமைகளைப் பயன்படுத்துகின்றனர். ஆதலின் உவமை என்பது புலப்பாட்டு நெறியில் முதன்மையானதும் தலைமையானதும் குறிப்பிடத்தக்கதுமாகும். எஸ்.வையாபுரிபிள்ளை "ஒரு பொருளை வேறொன்றினொடு ஒரு வகையில் ஒப்பிட்டுக் கூறுவது தான் உவமை"[(29)] என விளக்கம் தருகிறார். தொல்காப்பியர் வினை, பயன், மெய், உரு, என்ற நான்கின் அடிப்படையில் உவமை பிறக்கும் என்று குறிப்பிடுகிறார். இதனை,

'வினை பயன்மெய் உரு என்ற நான்கே
வகைபெற வந்த உவமைத் தோற்றம்'

(தொல். 1222)

என்ற நூற்பா உணர்த்தும். உவமை, சிறப்பு, நலன், காதல், வலிமை ஆகிய நான்கு பொருளினையும் நிலைக்களாகக் கொண்டு கூறப்படும். உவமை கூறுமிடத்துத் தலைவியும் தோழியும் கூறும் உவமைகள் நிலம் பெயர்ந்து அமையாது எனவும், தலைவன் நிலம் பெயர்ந்து உவமைகள் கூறுவதற்குரியவன் எனவும் மற்றவர்கள் எவ்விடத்தும் உவமை கூறுதற்குரியர் எனவும் தொல்காப்பியர் உவமை கூறவோரையும் உவமையாகக் கூறும் நிலைக்களனையும், வரையறையையும் கூறுமிடங்கள் சிந்தனைக்குரியன. உவமை கூறுவோர் என்ற தகுதியைத் தலைவன், தலைவி, தோழி, ஆகியோர் மட்டுமே பெறுகின்றனர். தலைவியும், தோழியும் தான் வசிக்கும் நிலத்தில் உள்ள பொருட்களையே உவமையாகக் கூற வேண்டும் என்ற விதி அக்கால மகளிர் இடம் பெயர்ந்து செல்லும் வழக்கம் இல்லை என்பதை மறைமுகமாக உணர்த்துகிறது. மனைவி, இல்லாள் மறையுறை மகளிர் போன்ற சொல்லாட்சிகள் இதனை மெய்ப்பிக்கும். தலைவன் பொருள்வயிற்பிரிவின் போது பல நிலங்களைக் கடந்து செல்ல நேரிடுவதால் அவன் கண்ட பொருட்களையெல்லாம் உவமையாகக் கூறும் தன்மையுடையவனாகிறான்.

## உள்ளுறை

உவமை உள்ளுறை உவமை, ஏனை உவமை என இருவகைப்படும் என அகத்திணையியலில் தொல்காப்பியர் குறிப்பிடுகிறார். உவமம் என்பது அணிகளுள் ஒரு வகை. ஒப்புமை உடைய பொருள்களை ஒப்பிடுவது. ஒப்பிடும்போது உவமை - பொருள், உவம உருபு, பொதுத்தன்மை என்ற நான்கும் புலப்படுமாறு வெளிப்படையாக அமையும். இது அகம், புறம் ஆகிய எல்லாத் திணைப் பாடல்களிலும் பயன்று வரும். உள்ளுறை உவமம் என்பது நுட்பமானது. உவமையை மட்டும் கூறி அதற்குரிய

பொருளை உய்த்துணர வைப்பது. இவ்உள்ளுறை உவமை, உடனுறை, உவமம், சுட்டு, நகை சிறப்பு என ஐந்து வகைப்படும். இளம்பூரணர் "உள்ளுறையாவது பிறிதொரு பொருள் புலப்படுமாறு நிற்பதொன்று........ உடனுறையவாது உடனுறைவதொன்றைச் சொல்ல, அதனானே பிறிதொரு பொருள் விளங்குவது........... உவமை என்பது உவமையைச் சொல்ல உவமிக்கப்படும் பொருள் தோன்றுவது....... சுட்டு என்து ஒரு பொருளைச் சுட்டிப் பிறிதோர் பொருட்படுத்தல்....... நகையாவது நகையினால் பிறிதொரு பொருளுணர நிற்றல்...... சிறப்பு என்பது இதற்குச் சிறந்தது இஃது எனக் கூறுவதனானே பிறிதோர் பொருள்கொளக்கிடப்பது"[(30)] என்று விளக்கம் தருகிறார். இதனால் உள்ளுறை என்பது உட்பொருள், குறிப்புப் பொருள் என்று பொருள்படும். உள்ளுறை தெய்வம் ஒழுந்த கருப்பொருள்களைத் தனக்கு இடனாகக் கொண்டு வருமென்பதை,

'உள்ளுறை தெய்வம் ஒழிந்ததை நிலன்எனக்
கொள்ளும் என்ப குறியறிந்தோரே'

(தொல். 993)

என்று கூறுகிறார் தொல்காப்பியர். புலவன் தான் கூறக் கருதிய பொருளை உள்ளடக்கி, இதனுடன் ஒத்துப் பொருள் அல்லது உவமேயக் கருத்து முடிவதாக என உவமையில் உள்ள குறிப்புப் பொருள் அடக்கி அதனை முற்ற முடியக் கூறுவது உள்ளுறை உவமையாகும். இதனை, "யான் புலப்படக் கூறுகின்ற இவ்வுவமத்தோடே புலப்படக் கூறாத உவமிக்கப்படும் பொருள் ஒத்து முடிவதாகவென்று புலவன் தன் உள்ளத்தே கருதி, தான் அங்ஙனம் கருதும் மாத்திரையேயன்றியும் கேட்டோர் மனத்தின்னும் அவ்வாறே நிகழ்வித்து, அங்ஙனம் உணர்த்துவதற்கு உறுப்பாகிய சொல்லெல்லாம் நிறையக்கொண்டு முடிவது

உள்ளுறை உவமம்"[31] என உரை செய்கிறார் நச்சினார்க்கினியர். உள்ளுறை என்னும் இவ்வெளிப்பாட்டு உத்தி அகப்பொருளுக்கே உரியது என்பது தொல்காப்பியரின் கொள்கை.

## இறைச்சி

இறைச்சி என்ற சொற்றொடரைத் தொல்காப்பியர் ஆறு இடங்களில் கையாள்கிறார். இவ்வகை உத்தியும அகப்பொருளுக்கு உரிய இன்றிமையாத உறுப்பாகவே தொல்காப்பியர் குறிப்பிடுகிறார். இறைச்சி என்ற சொல் கருப்பொருள்களின் ஒரு பிரிவாகிய மான், ஆடு, மாடு, முதலிய விலங்குகளையும் பறவைகளையும் குறிக்கும். இறைச்சியைத் தொல்காப்பியர்,

'இறைச்சி தானே உரிப்புறத்ததுவே'

(தொல். 1175)

என்று வரைவிலக்கணம் செய்கிறார். இறைச்சி என்பது உரிப்பொருள்களின் புறத்தே தோன்றும் என்பது புலனாகிறது. இவ்விறைச்சி மக்கள் நுதலிய அகன் ஐந்திணையில் இவ்வுயிரினங்களின் வாழ்வு முறை பற்றிச் சுட்டுமிடங்கள் பல உண்டு. உரிப்புறமாகிய இவ்வுயிரினங்களின் செயல்களைக் குறிக்குமிடத்து அவற்றில் பிறிது பொருள் தருவனவும் உள; தராதனவும் உள. தெளிவுடன் தெரிந்து கொள்ள வல்லவர்க்கு இவ்விறைச்சியிற் பிறக்கும் பிறிது பொருள் புலனாகும். பிரிவுக் காலத்தில் அன்புறுதகுவனவாம் உயிரினங்களைத் தலைவன் வழியிடைக் காண நேரின், அவள் நினைவு வந்து விரைவில் திரும்புவான் என்று தலைவியைத் தோழி வற்புறுத்தி ஆற்றும் பகுதியில் இறைச்சிப் பொருளை உய்த்துணர முடியும்.

## புறப்பொருள் இலக்கியக் கொள்கை

அகப்பொருளைப் பாடும் போது இன்ன இனன்வாறு பாட வேண்டும் என்று தொல்காப்பியர் தனியே இலக்கியக் கொள்கையை குறிப்பிடுவது போலப் புறப்பொருளுக்கும் தனியே இலக்கியக் கொள்கைகளை புறத்திணையியலில் குறிப்பிடுகிறார். அகம் என்பது காம உணர்வு என்றாற் போலப் புறத்திற்குக் குறிப்பிட்ட ஒரு உணர்வைக் கூறுவதற்கில்லை. புறத்தினும் அகமே முதன்மையானதாகவும் இன்றியமையாததாகவும் புலவர்களால் பேசப்பட்டிருக்கிறது.

## திணையும் துறையும்

புறப்பொருள் என்பது போர், வீரர், கொடை, பிறப்பு இறப்பு, புகழ் போன்றவற்றைப் பேசுவதாகும். அகத்திணையைப் போலவே புறத்திணையும் ஏழு. அவை வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை, வாகை, காஞ்சி, பாடாண் என்பன. அகன் ஐந்திணை என்று ஏழு அகத்திணைகளில் ஐந்திணைச் சிறப்பிப்பது போலப் புறத்திணைகளில் சிலவற்றை மட்டும் சிறப்பிக்கின்ற வழக்கம் இல்லை. ஒவ்வொரு திணையும் பல்வேறு துறைகளாக வகுக்கப்பட்டிருக்கின்றன. அகப்பொருளில் கூற்று, கிளவி என்ற அமைப்பு முறை இருக்கும். புறப்பொருளில் யார் கூற்று என்று பாடலை நோக்கும் மரபு இல்லை. அதற்கு ஈடாகத் துறை அமைந்துள்ளது. துறை என்ற சொல் புறப்பொருளுக்குரிய கலைச்சொல். திணை என்பது அகம், புறம் என்ற இரண்டிற்கும் உரிய பொதுச்சொல்.

## பாடுபொருளின் ஆண்மை - முதன்மை

புறப்பொருளில் மன்னன், மக்கள், சமுதாயம், கொடை, அறம் என்பன பொருள்களாக அமைகின்றன. ஆடவர்களே, புறத்திணையில் முதன்மைப்படுத்தப்படுகின்றனர். பெண்களுக்குப் புறப்பாடல்களில் முதன்மையோ, தலைமையோ, வழங்கப்பெற வில்லை. ஆடவர்களின் வீரம், புறப்பொருளில் பாராட்டி உரைக்கப்பெறுகிறது. தொல்காப்பியர் காலப்போர், நேருக்கு நேராக நின்று செய்யும் போராதலின் தனிமனித வீரத்தை அவர் பாராட்டிப் புறத்திணையைப் பாடவேண்டும் என்று குறிக்கிறார். அவர் பாடாண்திணை என்று ஒரு திணைக்குப் பெயரிட்டுள்ளதையும் ஈண்டு ஒப்பு நோக்குதல் வேண்டும்.

## முப்பொருள் - புறப்பொருள்

அகப்பாடல்களில் கருப்பொருள், முதற்பொருள், உரிப்பொருள், என்று மூன்று பொருள்களைப் பிரித்துப் பார்ப்பர். முதற்பொருளும் கருப்பொருளும், இயற்கை வருணனையாக அமையும். இயற்கை வருணனை சங்கப் பாட்டின் உயிர்நிலை ஆவதில்லை. இயற்கையை இயற்கை அழகுக்காகப் பாடி மகிழ்கின்ற பாட்டு ஒன்றும் சங்கப்பாடல்களில் இல்லை. அழகான இயற்கை வருணனைகள் வந்தாலும் அவை திணை ஒழுக்கத்தினை விளக்கவும் தலைவன் தலைவி என்ற இவர்களின் இயல்பையும் உணர்ச்சியையும் காட்டவுமே பயன்படுத்துகின்றன. இயற்கையைத் திணை ஒழுக்கதோடு ஒன்றாக இயைவித்தே சங்கப்புலவர்கள் காண்கின்றனர். அவர்கள் பாட்டினுள் ஓர் ஒற்றுமை இருப்பதுபோல இயற்கையும் மனிதனுமாகப் பிணைந்த ஒற்றுமையையே அவர்கள் உலகில் கண்டுள்ளனர் என்பது தெரிகிறது.

அகப்பாடல்களுக்கு வலியுறுத்தப்படட் கருப்பொருள், முதற்பொருள், உரிப்பொருள்என்ற முப்பொருள்கள், புறப்பாடலில் வலியுறுத்தப்படவில்லை. இங்குப் புலவன், வீரத்தையோ, போரையோ, வெற்றியையோ அவலத்தையோ கொடையையோ பாடுகின்றான்.

## புறப்பொருள் கூற்று

ஊரும் அயலும் சேரியோரும், நோய் மருங்கு அறிவோரும் தந்தையும் தன்னையும் ஆகிய அறுவரும் சொல்லிய சொல்லாகச் செய்யுள் செய்யும் மரபு இல்லை. இவர் கூற்றாகப் பிறர் கூறவரேயன்றி இவர் கூறமாட்டார்கள். ஆனால் புறத்திணைக் கண் கூறப்பெறுவர்.

## பண்ணொடு பாடுதல்

புறத்திணைப் பாடல்கள் தன்னுணர்ச்சிப் பாடல்கள், இவற்றில் பதிற்றுப்பத்துப் பாடல்களுக்குப் பண் குறிக்கப்பட்டுள்ளன. புறநானூற்றுப் பாடல்களுக்கும் பண் வகுக்கப்படவில்லை. எனினும் இவை இசையொடு பாடும் இயல்புடைய பாடல்களேயாம். அகப்பாடல்களுக்கு இத்தன்மை இல்லை. எனவே புறப்பொருளிலக்கியக் கொள்கையில் பண்ணொடு பாடுதல் முதன்மையானது.

## உவமை உருவகம்

புறப்பொருள் பாடல்களை இலக்கிய நயப்படுத்த உவமை, உருவகம் ஆகிய இரண்டும் இன்றியமையாதது. உள்ளுறை, இறைச்சி அகப்பொருளுக்கு உரியன. எனினும் உள்ளுறை போலப் புறப்பொருளிலமைந்து கருத்தை விளக்குனவற்றைக் ‘குறிப்புப்பொருள்’

என்று கொள்ளலாம். எனவே உவமை, உருவகம், குறிப்புப்பொருள் என்பன புறப்பாடல்களை இலக்கிய நயமாக்கப் பயன்பட்டுள்ளன என்பது தெற்றென விளங்குகிறது.

## பாடுபொருள் வரையறை

தொல்காப்பியம் பாவிலும் (கலி), பரிபாடலிலும் அகப்பொருளையே பாடவேண்டும் என்று விதிக்கின்றது. எனவே புறப்பொருளை இவ்விரு பாவகையிலும் பாடக்கூடாது என்பது பெறப்படும். புறநிலை வாழ்த்து என்ற புறப்பொருள் பாட்டைக் கலிப்பாவிலும், வஞ்சிப்பாவிலும் பாடக்கூடாது என்ற விதி செய்கிறது தொல்காப்பியம். இது வெண்பாவினும் ஆசிரியப்பாவினும் இவை இரண்டும் புணர்ந்த மருட்பாவினும் வரப்பெறும். இதனைத் தொல்காப்பியர்,

‘வழிபடுதெய்வம் நின்புறம் காப்பப்
பழிதீர் செல்வமொடு வழிவழி சிறந்து
பொலிமின் என்னும் புறநிலை வாழ்த்தே
கலிநிலை வகையும் வஞ்சியும் பெறாஅ’

(தொல். 1367)

என்ற நூற்பாவில் வலியுறுத்துகிறார்.

வெண்பா, ஆசிரியப்பா என்னும் இரண்டும் மயங்கி வருகின்ற மருட்பா, புறநிலை வாழ்த்து, வாயுறை வாழ்த்து, செவியறிவுறூஉ, கைக்கிளை ஆகிய நான்கு பொருள்களில் மட்டும் தான் பாடப்பெறும். இங்ஙனம் தொல்காப்பியர் சில பாடுபொருள்களை இன்ன இன்ன யாப்பினால் தான் வெளிப்படுத்த வேண்டும் என்று கூறியுள்ளார். இதன்

மூலம் இன்ன யாப்பு வகையில் தான் புறப்பொருளைப் பாடவேண்டும் என்று தொல்காப்பியர் கொள்கை வகுப்பது புலனாம்.

## பெயர் சுட்டும் மரபு

தொல்காப்பியர் புறப்பொருளுக்கு எனச் சில இலக்கியக் கொள்கைகள் வகுத்துள்ளார். மக்கள் நுதலிய அகனைந்திணையில் ஒருவர் பெயரைச் சுட்டிச் சொல்லக் கூடாது என்பது தொல்காப்பியம். இக்கொள்கைக்கு இணங்க அகப்பாடல்களில் ஒருவரது இயற்பெயர் இடம் பெற்றாலோ அறியப்பெற்றாலோ அது அகமாகாது. அவை மக்கள் பற்றியதாகாமல் ஒருவரை மட்டும் கருதியதாகிவிடும். புறநானூற்றில் பேகனுக்கும் அவன் மனைவி கண்ணகிக்கும் இருந்த குடும்பச் சிக்கல்களைத் தீர்க்க முயன்ற பாடலக்ள் (புறம்.143-150) பெயரறியப் பாடப்பெற்றமையால் புறப்பாடல்களில் சேர்க்கப்பட்டுள்ளன. அகப்பொருள்களில் கிளவித்தலைவன், இயற்பெயர் வரக்கூடாது. புறப்பொருளில் வரலாம் என்பது விதி. இதனை,

'புறத்திணை மருங்கின் பொருந்தின் அல்லது
அகத்திணை மருங்கின் அளவுதல் இலவே'

(தொல். 1001)

என்று தொல்காப்பியர் வலியுறுத்துகிறார். எனவே புறப்பாடல்களில் பாடப்பெறும் தலைமை மாந்தர் பெயர் இடம் பெறுவது இயல்பாகும். அகப்பொருள் புறப்பொருள் பாடல்களில் மிகமிக அடிப்படையான வேற்றுமையாகத் தொல்காப்பியர் புறப்பொருள் இலக்கியக் கொள்கையாகக் குறிப்பிடுகிறார்.

## ஆய்வு முடிவுகள்

1. காலம் காலமாகப் பின்பற்றப்படும் ஒழுக்க நெறியே அவ்விலக்கியத்தின் கொள்கை என்று அகராதிகள் விளக்கம் தருகின்றன.
2. இலக்கியத்தைப் படைப்போன், பயன்படுத்துவோர் ஆகிய இருசாராருக்கும், படைக்கும் செயற்பாங்கு படைக்கப்பட்ட பொருள் என்பன குறித்துப் பொதுவாக விளங்கும் கருத்துக் கூறுகளே இலக்கியகொள்கையாகும்.
3. தோற்றம், பண்பு, இயல்பு, பயன், வகை மதிப்பீடு பற்றிய அனைத்துச் செய்திகளையும் தொகுத்து உணர்த்துவதே இலக்கியக் கொள்கையாக ஏற்றுக் கொள்ளப்படுகிறது.
4. ஒரு படைப்பு எப்படிப் படைப்பாகிறது? என்று கோட்பாடு வகுத்துத் தருவது இலக்கியக் கொள்கையாக கருதப்படும். ஒரு நூல் இலக்கியமாக விளங்க என்னென்ன கொள்கைகள் தன்பால் கொண்டிருக்கிறதோ அவையனைத்தும் இலக்கியக் கொள்கை எனப்படும்.
5. ஓர் இலக்கியத்தின் கொள்கையை ஓரிரு ஆண்டுகளில் கண்டுவிட முடியாது.
6. இலக்கியக் கொள்கை என்னும் தொடர் தன்னளவிலே பொருள் உணர்த்துவதாக (வேற்றுமை அடிப்படையில்) அமைந்திருக்கும் சிறப்பினைப் பெற்றுள்ளது.
7. எள்ளிலிருந்து எண்ணெய் எடுப்பதுபோல, இலக்கியத்தினின்று இலக்கியக் கொள்கை வெளிப்படும்.

8. இலக்கியக் கொள்கைக்கும், இலக்கியக் கோட்பாட்டிற்கும் நுன்னிய வேறுபாடு உண்டு. அறிவுஅதக் கொள்கையை வரன்முறையான சிந்தனை நெறியமைய வகுத்துக் கொள்ளும் முறைமை கோட்பாடாகும்.

9. இலக்கிய வரலாறு, இலக்கியத்திறனாய்வு, இலக்கியக் கொள்கை என்ற துறைகள் ஒன்றை ஒன்று தழுவி அமைந்துள்ளன. இம் மூன்றில் ஒன்றினை மற்றை இரண்டின் துணையின்றி அறிய இயலாது.

10. இலக்கியக் கொள்கையை, அதன் அமைப்பு முறையில் அகநிலை இலக்கியக் கொள்கை, புறநிலை இலக்கியக்கொள்கை என இரண்டாக வகைப்படுத்தப்படுகிறது.

11. தொல்காப்பியர் இலக்கியக் கொள்கையை, அகப்பொருள் இலக்கியக் கொள்கை, புறப்பொருள் இலக்கியக்கொள்கை என அதன் பொருள் அடிப்படையில் வகைப்படுத்தி இலக்கணம் செய்கிறார்.

12. அகப்பொருள் இலக்கியக்கொள்கை, முப்பொருள் பாகுபாடு திணை, பெயர்சுட்டாமை, உவமை, உள்ளுறை இறைச்சி, உலகியல் வழக்கு, நாடகவழக்கு முதலிய கூறுகளை அடிப்படையாகக் கொண்டு அமைகிறது. புறப்பொருள் இலக்கியக் கொள்கை, பெயர்சுட்டும் மரபு, பன்னொடுபாடுதல் போர், வீரச்செயல்கள், பகிர்ந்துண்டு பல்லுயிர் ஓம்பும் கொடைச்சிறப்பு என வீரத்தை அடிப்படையாகக் கொண்டு விளங்குகிறது.

# சான்றெண் விளக்கம்

1. ........................., மதுரைத் தமிழ் பேரகராதி, ப. 286.
2. ........................., பேரகத்தியத் திரட்டு, மேற். 1.
3. ........................., சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ் பேரகராதி, ப. 603.
4. ........................., மதுரைத் தமிழ் பேரகராதி, ப. 484.
5. ந. சி. கந்தையா, செந்தமிழ் அகராதி, ப. 229.
6. ........................., க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி, ப. 378.
7. க. கைலாசபதி, இலக்கியமும் திறனாய்வும், பக். 60, 61.
8. மேலது, ப. 67.
9. சி. கனகசபாபதி, இலக்கிய காலங்களும் கொள்கைகளும், ப. 28.
10. மேலது.
11. கா. சிவத்தம்பி, இலக்கியமும் கருத்து நிலையும், ப. 24.
12. துளசி. இராமசாமி (ப.ஆ), தமிழகக் கலைச்செல்வங்கள், ப. 22.
13. ச. வே. சுப்பிரமணியன், கேபகவதி (ப.ஆ), தமிழ் இலக்கியக்கொள்கை, தொகுதி 8, பக், 10, 12.
14. ச. வே. சுப்பிரமணியன் ச.சிவகாமி (ப.ஆ), தமிழ் இலக்கியக் கொள்கை, தொகுதி 9, ப. 49.
15. ச.வே. சுப்பிரமணியன், கேபகவதி (ப.ஆ), தமிழ் இலக்கியக் கொள்கை, தொகுதி 8, ப. 21.
16. துளசி, இராமசாமி (ப.ஆ), தமிழகக் கலைச் செல்வங்கள், ப. 23.
17. கா. சிவத்தம்பி, இலக்கியமும் கருத்து நிலையும், ப. 23.
18. துளசி. இராமசாமி (ப.ஆ), தமிழகக் கலைச் செல்வங்கள், ப. 23.
19. க. பிரபாகரி, இலக்கியத் திறனாய்வும் கொள்கைகளும், ப. 51.
20. மேலது, பக். 51, 52.
21. குளோரியா சுந்தரமதி, தமிழ் இலக்கியக்கொள்கை, தொகுதி - 6, ப. 32.
22. ப. மருதநாயகம், திறனாய்வாளர் தெ.பொ.மீ. ப. 2.

23. மேலது.

24. கா. காளிமுத்து, தொல்காப்பியம் அதன் இலக்கியக் கொள்கைகளும் குறுந்தொகையும், ப. 18.

25. ……………………, தொல்காப்பியம், பொருளதிகாரம், தொகுதி-I (அகத்திணையியல் - புறத்திணையியல்) நச்சினார்க்கினியர் உரை, ப. 12.

26. மு. சண்முகம் பிள்ளை (ப.ஆ), தொல்காப்பியம் பொருளதிகாரம், தொகுதி-I (அகத்திணையியல் - புறத்திணையியல்), இளம்பூரணர், உரை, ப. 82.

27. மேலது – 83.

28. தமிழண்ணல், சங்க இலக்கிய ஒப்பீடு, (இலக்கியக் கொள்கைகள்) ப. 21.

29. எஸ். வையாபுரியப்பிள்ளை, இலக்கியச் சிந்தனை, ப. 85.

30. மு. சண்முகம் பிள்ளை (ப.ஆ), தொல்காப்பியம் - பொருளதிகாரம் தொகுதி - I (அகத்திணையியல் - புறத்திணையியல்) இளம் பூரணர் உரை, பக். 74, 75.

31. ……………………தொல்காப்பியம் பொருளதிகாரம் தொகுதி – I (அகத்திணையியல் - புறத்திணையியல்) நச்சினார்க்கினியர் உரை, ப. 46.

# இயல் - 2

## சோழநாட்டுப் புலவர்கள் வாழ்வும் வரலாறும்.

சங்க காலத்தில் தமிழகத்தை மூவேந்தர்கள் ஆட்சி செய்து வந்தனர். தொல்காப்பியர் பண்டைத் தமிழகத்தை, 'வண்புகழ் மூவர் தண்பொழில் வரைப்பின்' என்று குறிப்பிட்டுள்ளார். சங்க காலச் சோழர்களின் அடையாளச் சின்னமான அத்திப்பூமாலையையும் குறிப்பிட்டுள்ளார். இதன் மூலம் தமிழகத்தில் சேர, சோழ, பாண்டியர் அரசகுடிகள் நெடுங்காலமாக ஆட்சி செய்து வந்துள்ளமை புலனாகிறது.

சோழ நாட்டைக் 'குணபுலம்' அல்லது 'கிழக்கு நாடு' என்று சிறுபாணாற்றுப்படையைப் பாடிய இடைக்கழி நாட்டு நல்லூர் நத்தத்தனார் குறிப்பிடுவார். பிசிராந்தையார், 'சோழ நன்னாடு' என்றும், ஆலூர் மூலங்கிழார். 'புனல்நாடு' என்றும், மாறோக்கத்து நப்பசலையார், 'காவிரியை உடைய நன்னாடு' என்றும், குறிப்பிடுகின்றனர். பத்துப்பாட்டிற்கு உரையெழுதிய நச்சினார்க்கினியர், பொருநராற்றுப்படை உரையில் 'சோழ நாடு' என்றும், பட்டினப்பாலை உரையில் 'சோழ மண்டலம்' என்று குறிப்பிடுவார். "கடலைக் கிழக்கு எல்லையாகவும் கோட்டைக்கரையை மேற்கு எல்லையாகவும், வெள்ளாற்றைத் தெற்கு எல்லையாகவும், ஏணாட்டை வடக்கு எல்லையாகவும் கொண்டு 24 காதம் விரிந்து கிடந்தது சோழ நாடு என்று பழம் பாடலொன்று அறிவிக்கின்றது."(1) சோழநாடு, "பரப்பளவில் அது பாண்டிய நாட்டின்

பாதியளவை விட மிகவும் சிறியது. அது சேரநாட்டின் பரப்பளவில் காற்பங்குதான்"[2] என்பர் பா. சூரியநாராயணன்.

சோழநாட்டின் முக்கிய ஆறாகக் காவிரி திகழ்ந்தது. 'சோனாடு சோறுடைத்து' என்னும் பழமொழி நிலைபெறச் செய்தது காவிரியாறே. 'பொன்னி' என்றும் அழைக்கப்படும். ஆகையால் சோழநாடு 'காவரிநாடு' 'பொன்னிநாடு' என்றும் அழைக்கப்படும். நிலம் வளமுடையதாகையால் அதன் முக்கிய விளைபொருள் நெல். எனவே சேர, பாண்டியரை விட மிகச் சிறிய நிலப்பகுதியைச் சோழர்கள் ஆட்சி செய்த போதிலும், அவர்களே தமிழக அரசக் குடும்பங்களுள் மிகவும் செல்வச் சிறப்புடையவர்களாகத் திகழ்ந்தனர். சோழர்கள் தங்களை சூரிய குலத்தவர் என்றும், அவர்களுடைய கொடியின் அடையாளமும், அரசாங்க முத்திரையும் புலி ஆகும்.

சோழருடைய முக்கியத் தலைநகரங்கள் திருச்சிராப்பள்ளி அருகிலுள்ள உறையூரும், கிழக்குக் கடற்கரைத் துறைமுகமாகிய காவிரிப்பூம்பட்டினமும் ஆகும். இப்பட்டினம் 'சம்பாபதி' என்னும் தெய்வத்தின் பெயரால் அழைக்கப்பட்டது.

சோழநாட்டுப் புலவர்கள் எவர் எவர் என இனம் காண்பது இவ்வாய்வின் முக்கிய நோக்கமாக அமைகிறது. சோழநாட்டில் பிறந்து வாழ்ந்த புலவர்கள், சோழநாட்டை, இடத்தைக் குறிப்பிட்டுப் பாடுதல், சோழ மன்னர்களைப் பாடுதல், சோழ நாட்டில் பிறந்து, பிற மன்னர்களைப் பாடுதல் போன்றவற்றின் அடிப்படையில் சோழநாட்டுப் புலவர்கள் தெரிவு செய்யப்படுகிறார்கள். சோழநாட்டின் மூன்றுவகைப் பிரிவுகளைச் சார்ந்த சோழநாடு, நடுநாடு, தொண்டை நாடு ஆகிய மூன்று நாட்டினரையும் சோழநாட்டுப் புலவர்களாகவே கருதி, இவ்வாய்வில்

எடுத்துக்கொள்ளப்பட்டுள்ளனர். சான்றாக 'கிடங்கில்' என்ற ஊர் தொண்டை நாட்டின் தென்பகுதியான ஒய்மா நாட்டின் தலைநகராக விளங்கியது. கிடங்கில் என்ற ஊரைச் சார்ந்த மூன்று புலவர்களும் இவ்வாய்வில் எடுத்துக்கொள்ளப்பட்டனர். சோழநாட்டுப் புலவர்கள் ஐம்பத்து ஐந்து பேர்(4) என்பர் ந. சஞ்சீவி. ஆனால் இவர் குறிப்பிடும் புலவர்களில் ஒன்பது புலவர்கள் சோழநாட்டைச் சேர்ந்தவர்கள் என்பதற்கான போதிய ஆதாரங்கள் கிடைக்கவில்லை. எனவே நாற்பத்தாறு புலவர்களுடன் கழார்கீரன் எயிற்றியார், காவற்பெண்டு, பெருங்கோழி மாநாய்கன் மகள் நக்கண்ணையார், மாவளத்தன் ஆகிய நான்கு புலவர்களையும் சேர்த்து ஐம்பது புலவர்கள் சோழநாட்டுப் புலவர்களாகத் தெரிவு செய்து, இவ்வாய்விற்கு பயன்படுத்தப்பட்டுள்ளனர். சோழநாட்டுப் புலவர்களின் அட்டவணை பின்னிணைப்பில் கொடுக்கப்பட்டுள்ளது. இவர்களுள் ஐந்து பெண்பாற் புலவர்களும் அடங்குவர். அகம் பாடிய புலவர்கள் 36 போர். புறம்பாடிய புலவர்கள் 26 பேர். சோழநாட்டைச் சேர்ந்த அரசப்புலவர்கள் அறுவர். வீரவாழ்வு வாழ்ந்த சோழர்களில் அறுவர் புலவர் என்பது மகிழ்வுக்குரியது சோழநாடு சோறுடைத்து என்பது வழக்கு எனினும் சோழநாடு தமிழ் வளக்கும் செந்தமிழ் நாடாகத் திகழ்ந்திருக்கிறது.

"செந்தமிழ் நாடே
மன்ற வாணன் மலர்திரு வருளால்
தென்றமிழ் மகிமை சிவணிய செய்த
அடியவர் கூட்டமு மாதிச் சங்கமும்
படியின்மாப் பெருமை பரவுறு சோழனும்
சைவமா தவருந் தழைத்தினி திருக்கும்
மையறு சோழ வளநா டென்ப"[3].

என்ற பழம் பாடலொன்று சோழநாட்டைச் செந்தமிழ் நாடு என்று செப்பும் இது பிற்கால வழக்கு. ஆனால் சங்க இலக்கியங்கள் சோழ நாட்டின் சிறப்பாக உறையூரில் அறமன்றம் இருந்தமையையே பேசுகின்றன. அப்பாட்டுப் பாண்டிய நாட்டில் சங்கம் வைத்துத் தமிழ் வளர்த்ததாகச் சாற்றுகின்றது. எட்டுத்தொகையில் பதிற்றுப்பத்தும், ஐங்குறுநூறும் சேர நாட்டில் தொகுக்கப்பட்டன. இவை சேரர் தொடர்புடையன; பத்துப்பாட்டில் ஒன்று கூடச் சேரருடன் தொடர்பு பெறவில்லை. பரிபாடலும் கலித்தொகையும் பாண்டிய நாட்டுச் சார்புடையனவாய்ப் பாண்டிய நாட்டிலேயே தொகுக்கப்பட்டன. நற்றிணையும் அகநானூறும் பாண்டிய வேந்தர் முயற்சியால் தொகை பெற்றன. சோழ நாட்டில் தொகுக்கப்பெற்ற நூல்கள் எட்டுத்தொகையில் ஒன்று கூட இல்லை.

சோழ நாட்டில் எந்த நூலும் தொகுக்கப்படவில்லை என்றாலும் சோழ நாட்டுப் புலவர்களின் பாடல்கள் இத்தொகை நூல்களில் காணப்படுகின்றன. இதனால் அறியப்படுவது என்ன ? எங்குத் தொகுக்கப்பட்டாலும் தமிழ்ப்பாடல்கள் கற்றோரை அடைந்தமையை இத்தொகுப்பு முயற்சி காட்டுகிறது. பத்துப்பாட்டில் சேரநாட்டார் பாடிய பாடல் ஒன்றும் இல்லை. தமிழ்நாடு மூன்றாக விளங்கினும் சங்க காலத்தில் தமிழ் வளர்த்த பெருமை பாண்டியநாட்டிற்கே உரியதாகும். எனினும் ஒவ்வொரு நாடும் தன்னால் இயன்ற கொடையைத் தமிழுக்குக் காலந்தோறும் செய்துவந்தமையை இலக்கியச் சான்றுகள் காட்டுகின்றன. அந்த வகையில் பல்வேறு சிறப்பு இயல்புகளையுடைய சோழநாட்டில் வாழ்ந்த புலவர்களின் வரலாற்றினை இக்கட்டுரை ஆராய்கிறது.

## அரிசில் கிழார்

சோழநாட்டில் புகழ்பெற்ற ஊர்களுள் அரிசில் குறிப்பிடத்தக்கது. அரிசில் என்பது அரிசிலாற்றங்கரையில் அமைந்த ஊராகும். "இவ்வூரருகே காவிரியினின்றும் பிரிந்து சென்ற ஒரு கிளை அரிசிலாறு என வழங்குவதாயிற்று. "இச்சான்றோர் இவ்வூருக்கு உரியராய்க் கிழார் என்ற சிறப்புப் பெயர் பெற்று வாழ்ந்ததோடு நல்லிசைப் புலமையில் சிறந்து விளங்கினார். ஆயினும் சான்றோர் இவர் இயற்பெயரை விடுத்து அரிசில்கிழார் என்ற சிறப்புப் பெயரையே பெரிதெடுத்து வழங்கினமையின், நாளடைவில் இயற்பெயர் மறைந்து போயிற்று. இப்போது அரிசில் என்ற ஊரும் மறைந்து போயிற்று. போகவே இச்சான்றோரது அரிசிலூரை, திருச்சி மாவட்டத்து அரியிலூராகவும், மைசூர் நாட்டு அரிசிக்கரையாகவும் கொள்ளலாமோ என ஆராய்ச்சியாளர் மயங்கலுற்றனர். பூஞ்சாற்றூர் என்பது சோழநாட்டிற் சங்க காலத்திருந்ததோரூர்; அஃது இடைக்காலச் சோழர் காலத்தும் இருந்தமை கல்வெட்டுகளால் தெரிகிறது; இப்போது அது மறைவிட்டது. இவ்வாறே அரிசில்கிழாரது அரிசிலூரும் மறைந்ததெனக் கோடல் வேண்டும்"[5] என்பர். ஔவை சு.துரைசாமிப்பிள்ளை இவ்வூரில் வேளாண் மரபில் தோன்றியவர் அரிசில்கிழர். இவர் கல்விச் செறிவும், ஆட்சித்திறனும் ஒருங்கே அமையப்பெற்றவர். சேர மன்னருள் தகடூரெறிந்த பெருஞ்சேரலிரும் பொறையைப் பாடி, அவன் தந்த நாட்டரசைத் தான் மேற்கொள்ளாது, அவனையே மேற்கொண்டு ஆட்சி புரியுமாறு இரந்து, பின்னின்று வண்புகழ் பெற்று பெரும் புலவராவர்.

இவர் இயற்றிய செய்யுள்கள் பதினேழு. பதிற்றுப்பத்தில் எட்டாவது பத்தினையும், புறநானூற்றில் ஏழு பாடல்களையும் **(146, 230, 281, 285, 300, 304, 342)** பாடியுள்ளார்.

## ஆடுதுறை மாசாத்தனார்

ஆறுகளில் மக்கள் இறங்கி நீராடுதற்கேற்ற இடங்கள் 'துறை' எனப்படும். தமிழ்நாட்டில் ஆற்றையடுத்துள்ள சில ஊர்கள் துறை என்னும் பெயரைத் தாங்கி நிற்பதைக் காணமுடிகிறது. "காவிரியாற்றின் இருமருங்கும் அமைந்த செழுஞ்சோலைகளில் மயில்கள் தோகை விரித்தாடும்; மந்திகள் ஆடும் துறை மயிலாடுதுறை என்றும் குரங்குகள் ஆடும் துறை குரங்காடுதுறை என்றும், பெயர் பெற்றன. காவரியின் வடகரையில் ஒரு குரங்காடு துறையும், தென்கரையில் மற்றொரு குரங்காடு துறையும் உண்டு. இக்காலத்தில் தென்குரங்காடுதுறை ஆடுதுறை என்றே வழங்கப்படுகிறது"[6] என்பர் ரா.பி. சேதுப்பிள்ளை மாசாத்தனார் ஆவடுதுறை என்னும் ஊரினைச் சார்ந்தவர். "சாத்தனூர் என்பது ஊர்ப்பெயர். திருவாடுதுறை என்பது திருக்கோயிலுக்குப் பெயர். நாளடைவில் சாத்தனூர் என்பது மறைந்து போக திருவாவடுதுறையென்ற பெயரே ஊருக்கும் பெயராகிவிட்டது. இச்சாத்தனூர் என்னும பெயர் மாசாத்தனார் பெயரால் பண்டைச் சோழ மன்னரான கிள்ளிவளவன் முதலிய சோழ மன்னரால் வழங்கப்பட்டனவாதல் வேண்டும். அதனால் அவர் ஆவடுதுறை மாசாத்தனார் என ஏடுகளில் வழங்கப்படுகிறது"[7] என்பர் ஒளவை சு. துரைசாமிப்பிள்ளை.

இவர் பாடிய பாடலொன்று புறநானூற்றில் (227) காணப்படுகிறது.

## ஆதிமந்தி

சோழ நாட்டுப் புலவர்களுள் ஆதிமந்தியாரும் ஒருவர். பெண்பாற் புலவராகத் திகழ்ந்த ஆதிமந்தியார் நல்லிசைப் புலமை வாய்ந்த பாடல்களை இயற்றியுள்ளார். "ஆதிமருதியார் என்பது இவரது இயற்பெயராக இருந்திருக்கலாமென்றும், பிறகு ஏடு எழுதுவோர் கைப்பிழையால் அப்பெயர் ஆதிமந்தியாக மாறியிருக்கும்"[(8)] என்றும் கூறுவர் உ.வே. சாமிநாதையர் இவர் பெயர் 'மந்தி' எனவும் வழங்கும். "வஞ்சிக் கோனாகிய ஆட்டனத்தி என்பானை இவர் மணந்தவர். அவன் பெயர் அத்தி. ஆதிமந்தியைக் கரிகால் வளவன் மகள் என்றும், ஆட்டனத்தியைச் சேரர் குலத்தில் தோன்றிய அரசகுமாரன் என்றும், கற்புக்கடம் பூண்ட பொற்புடைத் தெய்வமாகிய கண்ணகி பாராட்டிய கற்புடை மகளிர் எழுவரில் ஆதிமந்தியாரும் ஒருவர்"[(9)] என்றும் சிலப்பதிகாரம் சுட்டும். இவ்வரலாற்றினை வேங்கடராஜீலு ரெட்டியார்"[(10)] மறுக்கிறார். வெள்ளிவீதியார் என்ற பெண்பாற்புலவர், பரணர் முதலியோர் இவரைப் பாராட்டியுள்ளனர். அகம்.147-ஆம் பாடலால் ஔவையாருக்குக் காலத்தால் முந்தியவர் வெள்ளி வீதியார் என்பதும், அகம்.45-ஆம் பாடலால் வெள்ளி வீதியாருக்குக் காலத்தால் முந்தியவர் ஆதிமந்தியார் என்பதும் அறியமுடிகிறது.

இவர் குறுந்தொகையில் ஒரு பாடலை (31) மட்டும் பாடியுள்ளார்.

## ஆற்காடு கிழார் மகனார் வெள்ளைக் கண்ணத்தனார்

ஆர்காடு என்னும் பெயர் அத்தி மரத்தினால் வந்த பெயர். ஆர் என்றால் அத்தி மரம். அத்திப்பூ மாலையைச் சோழர் அணிந்தனர். பழங்காலத்தில் மரங்களின் பெயரையே ஊர்ப்பெயராக இட்டனர். ஆலங்காடு, வேற்காடு, கடம்பங்காடு என்பன போல ஆர்க்காடு என்பதும் மரங்களினால் வந்த பெயராகும். "சோழநாட்டில் ஆர்காட்டுக் கூற்றம் என்னும் பிரிவு சங்க காலத்திலும் பிற்காலத்திலும் இருந்தது. ஆர்க்காட்டுக் கூற்றத்தின் தலைநகரம் ஆர்க்காடு. ஆர்க்காடு நகரம் சங்க காலத்தில் பெரிய நகரமாக இருந்தது. 'அழிசி' என்னும் சோழன் ஆர்காட்டில் இருந்தான். 'தாலமி' என்னும் யவனர் சோரையரின் (சோழரின்) தலைநகரம் 'ஆர்கொடஸ்' என்று கூறுவது இந்த ஆர்காட்டையே. இந்தச் சோழநாட்டு ஆர்க்காடு தொண்டைநாட்டு ஆர்காடு அன்று. அதுவேறு; இதுவேறு. சோழ அரசன் உள்ளிட்ட எழுவரைப் பாண்டியன் நெடுஞ்செழியன் தலையாணங்கானம் என்னுமிடத்தில் வென்றான் என்பது வரலாறு. இந்தத் தலையாணங்கானம் சோழநாட்டு ஊர் என்று நம்பப்படுகிறது"(11) என்பர் மயிலை சீனி வேங்கடசாமி ஐயர்.

இவர் அகநானூற்றில் ஒரு பாடலை (64) மட்டும் பாடியுள்ளார்.

## ஆலங்குடி வங்கனார்

குடி என்னும் சொல் ஊர்ப்பெயர்களில் அமைந்து குடியிருப்பை உணர்த்துவதாகும். உறவு முறையுடைய பல குடும்பத்தார் ஒரு குடியினராகக் கருதப்படுவர். இத்தகைய குடியினர் சேர்ந்து வாழுமிடம் குடியிருப்பு என்றும், குடி என்றும வழங்கப்படும். தமிழ்நாட்டில் ஆலங்குடி

என்ற பெயரால் பல ஊர்கள் வழங்கப்படுகின்றன. வங்கனார் என்னும் சொல் கடல் வாணிபம் செய்து வந்த குடியைச் சேர்ந்தவர் எனக்காட்டுகிறது. பாண்டியன் கொற்றச் செழியனின் பேராண்மையும், வீரத்தையும் பரிசளிக்கும் பான்மையும், 'ஒளிறு வாள் தானைக் கொற்றச் செழியன்' (அகம்.106) என்று பாடியுள்ளமையால் பாண்டிய நாட்டைச் சேர்ந்த ஆலங்குடி வங்கனார் என்பாரும் உளர். மதுரை மாவட்டம் திருமங்கலம் தாலுகாவில் ஆலங்குடி என்னும் ஊர் உள்ளமை இங்கு குறிப்பிடத்தக்கது. இவர் ஊர் இன்ன ஆலங்குடி என்று நிச்சயிக்க முடியவில்லை. ஆனால் "இவ்வங்கனார் சோழருடைய ஊரையும், அவ்வூரில் உள்ள அறங்கூறவையத்தையும். 'மறங்கெழு சோழர் உறந்தை அவையத்து, அறங்கெட அறியாது' (நற்.400) எனச் சிறப்பித்துக் கூறுதலின் இவர் சோழநாட்டவர் எனத் துணிந்து கூறலாம்"(12) என்பர் அ. பின்னத்தூர் நாராயணசாமி ஐயர்.

இவர் அகநானூற்றில் ஒரு பாடலையும் (106), குறுந்தொகையில் இரண்டு பாடல்களையும் (8, 45), நற்றிணையில் மூன்று பாடல்களையும் (230, 330, 400), புறநானூற்றில் ஒரு பாடலையும் (319) ஆகமொத்தம் ஏழு பாடல்களைப் பாடியுள்ளார்.

## ஆவூர் கிழார்

சோழ நாட்டில் புகழ்பெற்ற ஊர்களில் ஆவூர் குறிப்பிடத்தக்கது. நால்வகை நிலங்களிலும் பொதுவாகத் தமிழ்மக்கள் குடியிருந்து வாழ்ந்தோராயினும். மருத நிலமே சிறப்பாகக் குடியிருப்புக்கு ஏற்றதாகக் கொள்ளப்பட்டது. ஆதலால், 'ஊர் என்னும் பெயர் மருதநிலக் குடியிருப்பைக் குறிக்கும்.' மரப்பெயர், மரப்பெயர் முதலிய எல்லா

வகையான பெயர்களோடும் ஊர் என்னும் சொல் சேர்ந்து வழங்குவதைக் காண முடிகிறது. "ஆவூர் கிழாரது இயற்பெயர் தெரிந்திலது. ஆவூரென்ற பெயருடைய ஊர்கள் தஞ்சை மாநாட்டிலும் வடஆர்காடு மாநாட்டிலும் உள்ளன. திருவண்ணாமலைப் பகுதியிலுள்ள ஆவூரே இச்சான்றோரது ஊராக இருக்கலாமென எண்ணுதற்கேற்ப, முல்லை நிலத்தையே இவர் சிறப்பித்துப் பாடியிருக்கிறார். தஞ்சை மாநாட்டு ஆவூர் காவிரியாற்றின் தென்கரையில் உள்ளது. அஃது ஏழாம் நூற்றாண்டில் வாழ்ந்த திருஞான சம்பந்தரால் சிறப்பித்துப் பாடப்பெற்றதேன்னும் மருதவளஞ்சார்ந்து அண்ணாமலை நாட்டு ஆவூரின் வேறுபடுகிறது"[13] என்பர் ஔவை சு. துரைசாமிப்பிள்ளை.

இவர் புறநானூற்றில் ஒரு பாடலை (332) பாடியுள்ளார்.

## ஆவூர்கிழார் மகனார் கண்ணத்தனார்

இவர் சோழநாட்டைச் சேர்ந்த ஆவூர்கிழாரின் மகனாவார். தனது தந்தையாரின் பெயருடன் இவரது இயற்பெயரும் சேர்ந்து ஆவூர்கிழார் மகனார் கண்ணனார் என வழங்கப்படுகிறது. சங்க காலத்தில் தந்தையும், மகனும் ஒருங்கே புலமை பெற்றிருந்த சிறப்பினை இவர்களின் வாயிலாக அறியமுடிகிறது. இவர் இயற்றிய அகநானூற்றுப் பாடலொன்று (202) சங்கத்தொகை நூல்களுள் கிடைக்கப்பெறுகிறது. இவரது தந்தையாரைப்போல ஒரு பாடல் மட்டும் பாடினாலும் அகம் பாடி தந்தையினின்று வேறுபடுகிறார்.

இவர் அகநானூற்றில் ஒரு பாடலை (202) மட்டும் பாடியுள்ளார்.

## ஆவூர் மூலங்கிழார்

ஆவூர்ப் புலவர்களில் மூலங்கிழாரும் ஒருவர். இவர் வேளார் குடியினைச் சேர்ந்தவர். 'ஆவூர் மூலங்கிழார், ஆவூர் மூலம் என்னும் ஊரினர்.' ஆனால், ஆவூர் மூலம் என்பதில் மூலம் என்ற சொல் ஊரைக் குறிப்பாகத் தெரியவில்லை. ஏனெனில் ஐயூர் மூலங்கிழார் என்றொரு சோழநாட்டுப் புலவரும் வாழ்ந்துள்ளார். எனவே, 'மூலம்' என்ற சொல் ஊரைச் சுட்டவில்லை. ஆவூர் காவிரியாற்றங்கரையின்கண் அமைந்துள்ள செய்தியை, ஆவூர் மூலங்கிழார் சுட்டிப்பாடுவதால் சோழநாட்டைச் சார்ந்த புலவர் என்பது உறுதியாகிறது.

இவர் இயற்றிய செய்யுள்கள் பதினொன்று. அவற்றுள் புறநானூற்றில் எட்டுப்பாடல்களும் (38, 40 166, 177, 178, 196, 261, 301), அகநானூற்றில் மூன்று பாடல்களும் (24, 156,341) அடங்கும்.

## இடைக்காடனார்

இவர் இடைக்காடு என்ற ஊரினர். தான் பிறந்த ஊருடன் ஆர் விகுதியை இணைத்து இடைக்காடனார் எனச் சேர்த்து அழைக்கப்படுகிறார். "இடைக்காடு என்பது பட்டுக்கோட்டை தாலுகாவில் உள்ளது. இவர் சாதியில் இடையர். மற்ற புலவர்களிடத்தும் அன்புடையவர்; பெரும் பொருளைச் சிறுகவிக்குள் அடக்கும் இயல்பினர்; கவி செய்யும் ஆற்றல் மிக்கவர் என்பது திருவாலவாயுடையார் திருவிளையாடல் புராணத்தால் அறியலாகும். இவர் கூறும் உவமைகள் சிறப்புடையன. இவருடைய செய்யுள்களை உற்று நோக்குமிடத்துப் பெரும்பான்மையாக முல்லைத் திணை, மழை, இடைச்சாதி என்பவற்றின்

இயல்புகளும் சிறுபான்மையாக மருதத்திணை வளமும் அமைந்திருப்பது விளங்கும். சில பாடல்கள் இடைக்காடர் முறி என்று பழைய உரைகளில் காணப்படுகின்றன. இதனால் ஊசி, முறி நூல் ஒன்று இவரால் இயற்றப்பட்டது என்று தெரிகிறது"[14] என்பர் உ.வே.சா. இவர் பாடிய அகப்பாடல்களில் பெரும்பாலும் முல்லைத் திணையைச் சிறப்பித்துப் பாடியுள்ளார் என்பது குறிப்பிடத்தக்கது. "நற்றிணை 221-ஆம் பாட்டு ஒரு பிரதியில் இடைக்காடர் பாடியதெனவும், மற்றைப் பிரதிகளிலெல்லாம் இளவேட்டனார் பாடியதாக அச்சிடப்பட்டது; பின்னர் ஆராயுமிடத்து இளவேட்டனார் பாடியனவெல்லாம் பாலைத் திணைப் பாடலாயிருந்தலான் முல்லையை அவர் பாடிலரெனவும் இடைக்காடனாரே பாடியிருக்க வேண்டும் மென்றுங் கருதலாயிற்று. அதனையும் சேர்க்க இவர் பாடியனவாக நற்றிணையில் மூன்று பாடல்களும் (142, 221, 316) குறுந்தொகையிலொன்று (251), அகநானூற்றில் ஐந்து பாடல்களும் (139, 194, 274, 284, 304, 374) புறநானூற்றில் ஒரு பாடலும் (42), திருவள்ளுவ மாலையிலொன்றுமாகப் பதினொரு பாடல்கள் கிடைத்திருக்கின்றன"[15] எனபர் பின்னத்தூர் நாராயண சாமி ஐயர்.

## இருப்பிடத்தலையார்

உவமையால் பெயர் பெற்ற சங்கப்புலவர்களுள், இருப்பிடத் தலையாரும் ஒருவர். இவரது இயற்பெயர் தெரியவில்லை. தான் பாடிய புறப்பாடலில் 11-ஆம் அடியில் யானையின் பெரிய கழுத்தை, இரும்பிடத்தலையிலிருந்து என சிறப்பித்துக் கூறுவது பற்றி, இவரை இருப்பிடத்தலையார் என்று அழைக்கப்படுகிறார். "இவர் கரிகாற் சோழனின் அம்மான். இருப்பினும் இவர் பாண்டிய மன்னன் கருங்கை

ஒள்வாட் பெரும்பெயர் வழுதியைப் பாடியதால் பாண்டியர் மரபைச் சார்ந்தவர்"[16] எனவும் உரைக்கப்படும். "கரிகாற்சோழன் இவர்பால் இளமையில் கல்வி கற்றுச் சிறப்புற்றானென்று முன்றுறையனார் கூறுவர். இப்பாட்டில் இவர் பெரும் பெயர் வழுதியின் குடிப்பிறப்பும், மனை மாண்பும் கொடைப்புகழும் எடுத்தோதிப் பாராட்டி வாழ்த்தியொழியாது சொற்பெயராமை வேண்டும் என வற்புறுத்தும் திறம், கரிகாலனைப் பேரரசனாக்கும் திறம் இவர்பால் உண்மையினை நாமறியப் புலப்படுத்துகிறது"[17] என்பர் ஔவை சு. துரைசாமிப்பிள்ளை.

இவர் புறநானூற்றில் ஒரு பாடலை (3) மட்டும் பாடியுள்ளார்.

## உறையூர்

சங்க இலக்கியங்களில் மதுரையை அடையாகப் பெற்றும், காவிரிப்பூம்பட்டினத்தை அடையாகப் பெற்று புலவர்கள் விளங்கினர். சங்க காலத்திய சோழர்கள் தலைநகரான 'உறையூர்' என்னும் ஊர்ப் பெயரை அடையாகப் பெற்று ஆன்ற தமிழ்ப் புலவர்கள் பலரும் வாழ்ந்திருக்கின்றனர். சங்க காலத்துத் தலைநகரங்கள் மிகச் சிறப்புற்று விளங்கின. சேர நாட்டிற்கு வஞ்சியும், சோழ நாட்டிற்கு உறையூரும், பாண்டிய நாட்டிற்குக் கூடலும் தலைநகரமாய்ச் சிறந்திருந்தன. ஒவ்வொரு நாட்டிற்கும் கடற்கரைத் துறைமுகங்கள் பெரும் சிறப்புற்றுத் தலைநகரங்கள் போல் அமைந்திருந்தன.

சேர நாட்டிற்குத் தொண்டியும், சோழ நாட்டிற்குக் காவிரிப் பூம்பட்டினமும், பாண்டிய நாட்டிற்குக் கொற்கையும் புகழ்பெற்ற துறைமுகங்களாகும். தமிழ் நாட்டுத் தலைநகரங்கள் மூன்றும்

ஆற்றோரங்களிலேயே அமைந்திருத்தல் குறிப்பிடத்தக்கது. வஞ்சிமாநகர் பேரியாற்றங்கரையிலும், உறந்தை மாநகர் காவிரியாற்றங்கரையிலும், கூடல் மாநகர் வையையாற்றங்கரையிலும் இருந்தமை, உலக நாகரிகத் தோற்றம் ஆற்றங்கரைகளையே சார்ந்துள்ளது என்பதைக் காட்டுகிறது. இவை தமிழ்நாட்டுத் தலைநகரங்களின் பழமையை நிலை நாட்டுகின்றன.

முடிகெழு வேந்தர் மூவர் ஆண்ட முத்தமிழ் மண்ணிலே சோழ மன்னரின் பேராட்சிப் பெருந்தலை நகராய் விளங்கியது உறந்தை. உறந்தை என்பது உறையூரின் தொன்மைப் பெயர். பேராசிரியர் என்னும் உரையாசிரியர், “உறையூர் என்பதனைப் ‘பிறங்கு நிலைமாடத்து உறந்தை போக்கி’ (புறம்.69) எனவும் மேலையார் திரித்த வகையானே இக்காலத்துந் திரித்துக் கொள்ளப்படுவன உள”[(18)] என்று தம் தொல்காப்பிய உரையில் எழுதுவர். அவர் கருத்துப்படி உறையூர் என்பது உறந்தை என்று திரிக்கப்பட்டது என்பது உணரப்படும். உறையூர் என்பது பழைய வழக்கு; மக்கள் வழக்கு. ஆனால் சங்கப் பாடல்களில் உறையூர் என்ற ஆட்சி இல்லை. மக்கள் வழக்கில் உறையூர் என்பது மிகுந்திருக்க வேண்டும். சங்க இலக்கியம் முழுமையும் ‘உறந்தை’ என்ற வழக்கே பயின்று வந்துள்ளது. சிலப்பதிகாரத்தில் மட்டும் ‘உறையூர்’ என இளங்கோவடிகள் ஆண்டிருப்பதும், இவ்வூரைச் சேர்ந்த புலவர்கள் அனைவர் பெயர்களும் உறையூர் என்றே இணைத்துக் கூறப்பெற்றிருப்பதும் குறிப்பிடத்தக்கது. இக்குறிப்புகளால் பேச்சு வழக்கில் ‘உறையூர்’ என்றும், இலக்கிய வழக்கில் ‘உறந்தை’ என்றும் வழங்கியமை புலனாகும். உறந்தை என்ற இலக்கிய வழக்கு பிற்கால வழக்கு என்பது புலனாகும். “உறப்பு என்ற சொல் ‘செறிவு’ என்று பொருள் தருவதைத் தொல்காப்பியச் சொல்லதிகார

நூற்பாவால் அறியமுடிகிறது"[19] எனவே மக்கள் நெருங்கி வாழ்ந்த ஊராக - இடமாக - உறந்தை அமைந்திருக்க வேண்டும் என்பது புலனாகும்.

உறையூரைக் 'கோழி' என்றும், 'கோழியூர்' என்றும் வழங்குவர். 'கோழியானே கோப்பெருஞ்சோழன்' என்பது புறநானூறு 212-ஆம் பாட்டு. இதற்கு 'உறையூரென்னும் படை வீட்டிடத்திருந்தான் கோப்பெருஞ்சோழன்' என்பது பழைய உரை. பாண்டிய நாட்டுப் பரிபாடலும் 'வஞ்சியும் கோழியும் போல' (பரி.திரட்டு. 7:10) என்று சேர நாட்டு வஞ்சியையும், சோழ நாட்டுக் கோழியையும் ஒருங்கிணைந்து விளம்புகிறது. கோழிக்கோடு என்ற ஊர்ப் பெயர் வழங்கும் காணத்தக்கது.

## ஊரமைப்பும் பெயரும்

ஊரின் வீரச்சிறப்பைக் காட்டுமாறு கதைகள் எழுந்ததை உடன்படாதார் உறையூர், கோழியின் சிறையும் கழுத்தும் போல அமைந்திருந்தது என்றும், இஃது ஊர் அமைப்பைக் காட்டுவது என்றும் விளக்கலாயினர். "இக்கருத்து அரும்பதவுரையாசிரியர் காலத்திலேயே உள்ளது."[20] இவ்வாறே "சங்க கால மதுரை விரிந்த தாமரை போல அமைந்திருந்தது."[21] என்று பரிபாடல் பகரும். இன்றைய ஊர்கள் போலச் சங்க கால ஊர்களும் வடிவம் பெற்றிருந்தன. கோழியைப் போல வடிவம் பெற்றவூர் கோழியூர் ஆகும். பிற்காலத்தில் எழுந்த சேந்தன் திவாகரம், உறையூரைக் "கோழி உறையூர்" என்று குறிப்பிடுகிறது; பிங்கல நிகண்டும் "கோழியுறையூர்" என்றே குறிப்பிடுகிறது.

உறையூர் ஆற்றை அடுத்து அமைந்திருந்தது. அந்த ஊரைக் காவிரியின் நீர் அலைத்து நின்றது; அங்குச் சிறு மதகுகளுடன் ஊாப்புறமாக ஆற்றங்கரையை ஒட்டிச் கொல்லைப் புறங்களை உடையதாக உறையூர் அமைந்திருந்தது. இதனைப் 'புனல்தரு புதவின் உறந்தை' (அகம் 237.14) என்றும், 'காவிரிப்படப்பை உறந்தை' (அகம்.385;4) என்றும் வருகின்ற அகநானூற்றடிகள் புலப்படுத்துகின்றன. சங்க இலக்கியங்களில் பெண்களின் அழகைச் சிறப்பிக்கப் பெண்களுக்கு நகரினை ஒப்பிடுவர்; நாட்டு வளங்களைக் கூறுங்கால் துறைமுகப்பட்டினங்களைக் கூறுவர். போர்களைக் கூறுமிடத்தும் கலைஞர்களை ஆற்றுப்படுத்தும் போதும் இடைவழியில் வரும் நகரங்களைச் சுட்டி உரைப்பர். இவ்வாறு சங்கப்பாக்களிடையே நகரங்கள் பற்றிய விவரங்கள் நவிலப்படுகின்றன. இளங்கீரனார்,

'யான்நயத்து உறைவோள் தேம்பாய் கூந்தல்
வளம்கெழு சோழர் உறந்தைப் பெருந்துறை
நுண்மணல் அறல் வார்த்தன்ன,
நன்னெறி யவ்வே நறுந்தண் ணியவே'

(குறு.116)

என்று 'தலைவன் தன் தலைவியின் நறுமணம் வீசும் கூந்தல், வளப்பம் பொருந்திய சோழரது உறையூரிலுள்ள பெரிய நீர்த்துறையின் கண் உள்ள நுண்ணிய கருமணல் நெடிது படிந்தாற்போன்ற நல்ல நெறிப்பை உடையது என்றும், நறுமணமும் குளிர்ச்சியும் உடையது' என்றும் உவமிப்பர். இவ்வாறு அக்காலப் புலவர்கள் மகளிர் அழகை நகரத்தோடு ஒப்பிட்டு உரைப்பர். இம்மரபு புதுமை மிகு செயலாகும். தமிழ்ப்புலவர்கள் தம் காலத்துச் சிறந்த நகரங்களை மகளிர் நலனுடன் ஒப்பிட்டதனால் மகளிர்

அழகினை விரும்பிப் போற்றியது போல் நகர் அழகினையும் விரும்பிப் போற்றினர் என்பது பெறப்படுகிறது. அன்றியும் மகளிர் அழகு அவர்கள் காதலரே துய்த்தற்குரியது; ஏனையர்க்கு உரியதன்று. பிறர் அதனை அடைவதற்குரிய அருமைப்பாடு உடையது. இதன் வழி நகரங்களையும் மாற்றார் அடைய இயலாது என்னும் கருத்தை வெளிப்படுத்தினர். நகரை அழகுபடுத்துதல் வேண்டும் என்ற கருத்தும் தம் நாட்டு மக்களே அதன் பயனைத் துய்த்தல் வேண்டும் என்ற நோக்கும் சங்க கால மக்களிடையே இருந்தமை இதனால் தெளிவாகிறது. தலைவி ஐம்புல நுகர்ச்சிக்குத் தகுதியுடையவளாவது போல உறையூரும் ஐம்புல நுகர்ச்சிக்கும் கவினாக இருந்தது என்பதை இவ்வாறு பாடும் மரபு உணர்த்துகிறது. உறையூருக்குக் கிழக்கே, நெடும் பெருங்குன்றம் ஒன்று இருந்தது என்று குறுங்குடி மருதனார் சுட்டுவர். இதனை

'கறங்கிசை விழவின் உறந்தைக் குணாது
நெடும்பெருங் குன்றத்து அமன்ற காந்தள்' நா.

(அகம். 4;14-15)

என்ற அடிகள் உணர்த்துகின்றன. அந்த நெடும்பெருங்குன்றம் இப்போது திருச்சிராப்பள்ளி மலை என்று வழங்கப்படுகிறது. இஃது இன்று ஊரின் மையத்தில் விளங்குகிறது. உறையூர் வளர்ந்து மலையையும் தன்னத்தே உள்ளடக்கிக்கொண்டிருக்கிறது.

## விழாச்சிறக்குமுறந்தை

உறந்தையில் விழாக்கள் சிறப்பாக நடைபெற்ற செய்தியினைக் 'கறங்கிசை விழவின் உறந்தை' (அகம்.4;14) நா. என்ற அடி உணர்த்தும். உறையூரில் நிகழும் பங்குனித் திருவிழா பெயர் பெற்றது. இதனை, "மதுரை

ஆவணி அவிட்டமே, உறையூர் பங்குனி உத்திரமே, கருவூர் உள்ள விழாவே என இவையும்."[22] என்று பாண்டிய நாட்டெழுந்த களவியல் நக்கீரர் உரை குறிக்கிறது. எனவே உறையூரில் நிகழ்ந்த பங்குனி உத்திரவிழாச் சிறப்பிடையது என்பது உறுதி.

## தமிழ் வளர் உறந்தை

சோழன் மூன்றாம் இராசராசன் காலத்தில் முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் கி.பி.1219 - இல் சோழநாட்டின் மீது படையெடுத்தான். சுந்தரபாண்டியன் உறையூரை அழித்த போது பதினாறுகால் மண்டபம் ஒன்று மட்டும் அழிக்கப்படவில்லை. அது பட்டினப்பாலை அரங்கேறிய மண்டபம் ஆகும். அதனைத் திருவெள்ளறைக் கல்வெட்டுச் செய்யுள் தெரிவிக்கின்றது.

"வெறியார் தளவந் தொடைச்சய மாறன்
வைகுண்டதொன்றும்
அறியாத செம்பியன் காவிரி நாட்டில்
அரமியத்துப்
பறியாத தூணில்லை கண்ணன் செய்பட்டினப்
பாலைக்கன்று
நெறியால் விடுந்தூண் பதினாரு மேயங்கு
நின்றனவே"[23]

இச்செய்யுள் உறையூரில் தமிழுக்கு இருந்த பெருமையை உணர்த்துகிறது. பத்துப்பாட்டில் பொருநராற்றுப்படையும், பட்டினப்பாலையும் கரிகாலனைப் பற்றியன. பொருநராற்றுப்படையினும் பதினாறு இலட்சம் பொன் பரிசு

பெற்ற சிறந்த நூல் பட்டினப்பாலை. ஆற்றுப்படை நூலினும் பட்டினப்பாலை புதுமைப் பாடலாய் அகத்தையும் புறத்தையும் இணைத்துத் தமிழோவியமாகத் திகழ்கிறது. இந்நூல் உறையூரில் அரங்கேறியமையால் இதற்கு மிக உயர்ந்த பரிசைப் புலவர் பெற்றிருக்கிறார். உறையூர் வாழ் ஆன்றோரும், சான்றோரும் அந்நூலின் பெருமையைக் கேட்டு மகிழ்ந்திருக்கவேண்டும். இச்சிறு குறிப்புத் தமிழறிஞரும் ஆர்வலரும் உறையூரில் தழைத்தோங்கியிருந்த பாங்கைத் தெற்றெனக் காட்டுகிறது. இந்தச் சான்றால் ஏனைய சோழநாட்டோடு தொடர்புடைய பல இலக்கியங்கள் இந்த மண்டபத்தில் ஆராயப்பட்டிருத்தல் கூடும். இவ்வாறு தமிழ், உறையூரில் தொன்று தொட்டுத் தொடர்ந்து வளர்ந்திருக்கிறது. உறையூரின் தமிழ்ப் பரப்பையும் வளத்தையும் சங்கப்புலவர் 'உறையூர்' என்ற அடைபெற்ற சிறப்பால் அறிந்து கொள்ள முடிகிறது. உறையூரில் ஒன்பது புலவர்கள் இருந்திருக்கின்றனர்.

## உறையூர் இளம்பொன் வணிகனார்

சோழ நாட்டு உறையூர் வாழ் புலவரில் உறையூர் இளம்பொன் வணிகனார் ஒருவர். இவர் இளம்பொன் வாணிகனர் என்றும் அழைக்கப்படுகிறார். இப்பெயரில் 'இளம்பொன்' என்பதே பெயராகக் காணப்படுகிறது. ஆனால் இப்பெயரையும் காரணப்பெயராக ஆய்வாளர் விளக்குவர். "பொன் வணிகம் செய்த சிறப்பால் சான்றோர் கூட்டத்துள் இவர் இயற்பெயரே வழங்காது இளம்பொன் வாணிகனார் என்ற பெயரே பெயராக வழங்கினமையின் புறநானூற்றைத் தொகுத்த ஆசிரியர் இவரை உறையூர் இளம்பொன் வாணிகனர் என்றே குறித்தொழிந்தார்"(24) என்பர் ஔவை.சு. துரைச்சாமிப்பிள்ளை. இப்பெயர்க்குப் பாடபேதமாக டாக்டர் உ.வே. சாமிநாதையர், 'சாத்தன் கொற்றனார்' என்ற பெயரையும்

தந்திருப்பதால் சாத்தன் கொற்றனார் என்பதும் இவர் இயற்பெயராகக் கருதற்பாலது. ஆனால் டாக்டர் வ. சுப. மாணிக்கனார், “ஆடகம், சாம்பூதம், கிளிச்சிறை, சாதரூபம் என்பன பொன்னின் வகைகள். இவற்றுள் கிளிச்சிறையும் சாதரூபமும் மாற்றுக் குறைந்தனவாதலின் இளம்பொன் என்பர். இப்பொன்வணிகம் செய்தமையால் இப்பெயர் பெற்றனர் போலும்”[25] என்று இப்புலவர் பெயரை விளக்குவர். இருவர் கருத்தும் ஒன்றேயாகும். எனினும் இவர் பெயர்க் காரணத்தை தெளிவாக அறிய முடியவில்லை.

இவர் பாடிய பாடல் புறநானூற்றுப் பாடலொன்றே; இது கரந்தைத் திணை (264) யினது. ஆனால் ‘அகநானூற்று 117-ஆம் பாடலைப் பாடியவர் செயலூர் இளம்பொன் சாத்தன் கொற்றனார் ஆவர். பாடபேதமாக உறையூர் இளம்பொன் வாணிகன் சாத்தன் கொற்றன் என்ற பெயரும் காணப்படுகிறது.”[26] என்பர் வ. சுப. மாணிக்கனார்.

## உறையூர் ஏணிச்சேரி முடமோசியார்

இப்பெரும் புலவர் உறுப்புக் குறையுடைமை பற்றி முடமோசியார் என்றும், உறையூரின் ஒரு பகுதியான ஏணிச்சேரி என்ற பகுதியில் வாழ்ந்தவராதலின் உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் என்றும் வழங்கப்பட்டார். உறையூர் ஏணிச்சேரி என்ற அடை இவர் அங்குத் தொடர்புடையவர் என்பதைப் புலப்படுத்துகிறது. “இவர் பெயர் மோசியார் எனவும் ‘மோசி’ எனவும் குறைத்தும் வழங்கப்பெறும். உறையூர் ஏணிச்சேரியைப் பிறப்பிடமாகக் கொண்டு மோசியார் என்பதை இவரது இயற்பெயரென்னலாமோ? எனின் மோசி கொற்றனார், மோசி சாத்தனார்,

மோசி கீரனார், மோசி கண்ணனார் என்ற பழைய புலவர் பெயர் வழக்கில் இப்பெயர் இயற்பெயரின் வேறாகக் கொண்டு வழங்கப்பெறுதலால், இதனை இயற்பெயரரென்னாது இடப்பெயரென்பதே பொருந்துவதாகும்"[27] மோசி என்பது மோசிகுடி என்ற பெயரின் சுருக்கம் ஆகும். "மோசியின் பெயரால் தமிழ்நாட்டில் பலவூர்களுண்டு. தொண்டை நாட்டில் மோசிப் பாக்கம் என்றும், நடுநாட்டில் மோசி குளத்தூரென்றும், பாண்டிய நாட்டில் மோசி குடி என்றும் காணப்படுகிறது"[28] என்பர் ஔவை சு. துரைசாமிப்பிள்ளை

## ஏணிச்சேரி

மோசி குடி என்னும் ஊரில் பிறந்து உறையூரின் ஏணிச்சேரியில் தங்கியிருந்தமையால் உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் எனப் பெயர் பெற்றார் என்பது முடிவு. "யவனர் சேரி என்ற தொடர் நாளடைவில் ஏணிச்சேரி எனத் திரிந்து அமைந்திருக்கலாம். தலைநகரமாகிய உறையூரையடுத்து யவனர்கள் தங்கியிருந்த பகுதியாகக் கருதலாம்"[29] என்பர் ஆர். ஆளவந்தார். 'யவனர்' என்ற சொல் ஏணி என்று மருவியது என்ற கருத்துப் பொருத்தமற்றது. மதிற்போருக்கு மிக இன்றியமையாத கருவி ஏணி. இந்த ஏணி மதிலை அடைத்திருக்கும் போது மதிலுக்குள்ளேயும் வெளியேயும் பயன்படுத்திக் கோட்டையைத் தாக்கவும், காக்கவும் பயன்படும். இதற்குப் பெரிதும் வேண்டற்பாலன ஏணிகள். இவற்றில் ஏறிக் கோட்டையைக் கைப்பற்றுவர். பதிற்றுப்பத்தில் 'ஏறாஏணி' என்று நாற்காலிகள் குறிக்கப்படுவதும் இங்கு ஒப்பு நோக்கற்பாலது. போர்க்குரிய ஏணிகளை வைத்துப் பேணிக் காத்து வந்த பகுதி 'ஏணிச்சேரி' என்று பெயர் பெற்றிருக்க வேண்டும். சங்க காலத்தில்

கோட்டைப் போருக்கு இவை இன்றியமையாதவை. இத்தகைய போர்கள் பல உறந்தையில் நிகழ்ந்ததைச் சங்கப்பாக்களால் அறியமுடிகிறது. போர்காலங்களிலும் போரல்லாத காலங்களிலும் மதிற்போர்குரிய ஏணிகளைப் பேணியும் காத்தும் இருந்த இடம் ஏணிச்சேரி. இவர் அந்தணர் என்பதைத் தொல்காப்பிய உரையில் பேராசிரியர், "உறையூர் ஏணிச்சேரி முடமோசி.......... அந்தணர்க்குரியன"[30] எனக் குறிப்பிடுவதால் அறியமுடிகிறது.

உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் சேரமான் அந்துவஞ்சேரல் இரும்பொறையால் ஆதரிக்கப்பெற்றவர். இவர் சோழன் முடித்தலைக் கோப்பெருநற்கிள்ளியையும், ஆயையும், பாடியவர். பெருஞ்சித்திரனார், 'திருந்துமொழி மோசி பாடிய ஆயும்' (புறம். 158; 12-13) என்று இப்பெரும் புலவரைப் போற்றுவர். எனவே இவரைப் பெருஞ்சித்திரனாருக்கு முற்பட்டவர் என்பது பொருந்தும்.

இவர் பாடிய சங்கப்படால்கள் பதின்மூன்று. இவை அனைத்தும் புறப்பாடல்களே (புறம். 13, 127, 128, 129, 130, 131, 132, 133, 135, 214, 374, 375). ஆனால் "இவர் இயற்றிய புறநானூற்றுச் செய்யுட்கள் - 14"[31] என்று உ.வே. சாமிநாதையர் குறிப்பர்.

## உறையூர்க் கதுவாய்ச் சாத்தனார்

இவரது இயற்பெயர் சாத்தன். 'கதுவாய்' என்ற சொல் 'ஓரம்' என்று பொருள் தரும். தொடை இலக்கணத்தில் கீழ்க்கதுவாய், மேற்கதுவாய் என்று வழங்குதலும் இதனை உணர்த்தும். உறையூரின் ஓரப் பகுதியைச் சார்ந்தவர் இச்சாத்தனார். அதனால் இவர் இவ்வாறு அழைக்கப்பெற்றார். கதுவாய் என்ற சொல்லுக்கு 'வடுப்பட்டிருத்தல்' என்ற பொருளும்

உள்ளது. போரில் காயம்பட்டு வடுப்பட்டமையாலும் இவருக்கு இப்பெயர் ஏற்பட்டிருக்க வேண்டும். “உறையூரைச் சார்ந்த முதுகண்ணன் சாத்தனார் என்றொரு சங்கப்புலவரும் வாழ்ந்திருப்பதால் இவர்களை வேறுபடுத்திக் காட்டுவதற்காக உறையூர்க் கதுவாய்ச் சாத்தனார் என்று ஊரடையும் பெயரடையும் சார்ந்துவர வேறுபடுத்தி அமைத்துள்ளனர்.”(32) சாத்தனார் என்ற பெயர் ‘சாத்து’ என்பதோடு தொடர்புடையமையால் இவரும் வணிகச் சார்பினரேயாவார்.

இவர் நற்றிணையில் மருதத்திணைப் பாடலைப் (370) பாடியுள்ளார்.

## உறையூர்ச் சல்லியங்குமரனார்

உறையூர்ச் சல்லியங்குமரனாரின் இயற்பெயர் ‘குமரன்’ என்பதாகும். இதற்கு முன்னுள்ள ‘சல்லியன்’ என்பது தந்தையின் பெயராகும். “மகாபாரதம், ‘சல்லியன்’ என்னும் பெயருடைய மன்னனைக் குறிப்பிடுகின்றது. சல்லியன் என்னும் பெயர் சங்க காலத்தில் தமிழகத்திலும் இருந்துள்ளதால் பாரதக்கதை தமிழகத்தில் சங்க காலத்திலேயே பரவியிருந்தமையினை அறிய முடிகிறது”(33). குமரனார் என்ற பெயருடைய புலவர்கள் எண்மர். இவர்களுள் சல்லியங்குமரன் என்ற பெயரில் உறையூர் என்னும் ஊர்ப் பெயரடையின்றி வேறொரு புலவரும் சங்க இலக்கியப் பட்டியலில் சுட்டப்படுகிறார்.

இவர் குறுந்தொகையில் மருதத்திணைப் பாடலைப் (309) பாடியவர். “அகநானூற்றிலமைந்தத 44-ஆவது பாடலைப் பாடியவர் குடவாயிற் கீரந்தையார் எனவும், உறையூர்ச் சல்லியங்குமரனார் எனவும்

பாடவேறுபாடுகள் உள. இப்பாடலுள்ள 'குடவாயில்' அன்னோள்' என்னும் தொடர் வருதலின் பாடியவர் குடவாயிற் கீரந்தையார் என்று கொள்ளுதலே தகும்"(34) என்பர் டாக்டர் வ. சுப. மாணிக்கம்.

## உறையூர்ச் சிறுகந்தனார்

இவரது இயற்பெயர் கந்தன். கந்தன் என்னும் பெயர் சங்க காலத்திலும் அதன் பின்னரும் தமிழகத்தில் பலர் பூண்டிருந்த பெயராகும். இப்பெயர், "வடமொழியில் வழங்கப்படும் இசுகந்த (முருகன்) நீர்கந்த (அருகன்) என்னும் பெயர்களின் திரிபாகவோ, கந்து (சிவலிங்கம்) என்ற சொல்லிலிருந்து அமைக்கப்பட்டதாகவோ இருக்கலாம"(35). தமிழில் 'கந்து' என்னும் சொல் மரத்தின் அடியினைக் குறிக்கும்.: இதனுடன் 'அன்' விகுதிசேர்ந்து கந்தன் என வழங்கலாயிற்று. இவ்வாறு இதனைத் தமிழ்ப் பெயராக விளக்குவதும் சாலும். "உறையூரில் பெருங்கந்தனார் என்பாரும் இருந்தமையால் சிறுகந்தனார் என அழைக்கப்பெற்றுள்ளார்"(36) என்பர் புலவர் கா.கோவிந்தன். பெருங்கந்தனாரினும் வயதால் இளமையுடைவராகச் சிறுகந்தனார் இருந்தாராதல் வேண்டும்.

இவர் குறிஞ்சித் திணையிலமைந்த குறுந்தொகைப் பாடலொன்றைப் (257) பாடியுள்ளார்.

## உறையூர்ப் பல்காயனார்

இவர் உறையூர்ப் பராயனார் என்றும் குறிக்கப்படுகிறார். இவரது பெயர் 'பல்காயனார்' எனக் குறிப்பிடுவதற்கான சான்றுகள் கிட்டில. 'காயம்' என்ற சொல் உடம்பினைக் குறிக்கும். "யாப்பருங்கலம்,

யாப்பருங்கலக்காரிகை என்பனவற்றின் உரைகளில் சுட்டப்படும் பல்காயனாரும் இவரும் ஒருவரோ வேறோ தெரியவில்லை”[37] என்பர் டாக்டர் உ.வே சாமிநாதையர். பல்காயனார் தம்பெயரில் யாப்பிலக்கணம் நூல் ஒன்றை இயற்றியுள்ளமையால் இவர் இலக்கணம் படைப்பதிலும் வல்லவராகத் திகழ்ந்துள்ளார் என்று அறியமுடிகிறது. இது சங்ககால நூலா என்பதில் ஐயமுண்டு.

இவர் பாடியது குறிஞ்சித்திணைக் குறுந்தொகைப்பாடல் (374) ஆகும்.

## உறையூர் மருத்துவன் தாமோதரனார்

இவரது இயற்பெயர் தாமோதரனார். இவர் உறையூரில் மருத்துவத் தொழில் செய்து வந்தமையால் உறையூர் மருத்துவன் தாமோதரனார் என அழைக்கப்படுகிறார். தாமோதரனார் என்பது தெய்வத்தால் வந்த பெயர்: இதனால் இவர் திருமாலின் அடியவராகக் காணப்படுகின்றார். இவர் பாடிய சங்கப் பாடல்களில் மருத்துவக் குறிப்பு எவையும் கிட்டில. இவர் சோழன் குராப்பள்ளித் துஞ்சிய பெருந்திருமாவளவனையும், சேரமான் கோதையின் படைத்துணைவனான பிட்டங் கொற்றனையும் பாடியுள்ளார். பிட்டங்கொற்றனைக் காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனாரும், வடம வண்ணக்கன் தாமோதரனாரும் பாடியிருக்கின்றனர்.

இவர் இயற்றிய செய்யுட்கள் ஐந்து; புறநானூற்றில் மூன்று பாடல்களும் (60, 170, 321), அகநானூற்றில் இரண்டு பாடல்களும் (133, 257) உள்ளன.

## உறையூர் முதுகண்ணன் சாத்தனார்

இவர் உறையூர் முதுகண்ணன் சாத்தன் என்றும் வழங்கப்படுகிறார். இவரது இயற்பெயர் சாத்தன்; தந்தையின் பெயர் முதுகண்ணன் என்பதாகும். அரசர் முதலானோர் வயதாலும் அறிவாலும் முதிர்ந்த பெரியோரைத் தமக்கு அறிவுரை கூறி நல்வழிப்படுத்துவதற்கு அருந்துணையாக அமைத்துக் கொள்வர். கிபி. 12 ஆம் நூற்றாண்டுக் கல்வெட்டு 'வாச்சியன் இரவிக் கூத்தனை முதுகண்ணாகவுடைய இவன் பிராமணி தேவன் நீலியும் இவன் மகன் கூத்தன் இரவியும்' என்று கூறுகிறது. இதனால் நெறிகாட்டும் அறிஞரை 'முதுகண்' என்று அழைப்பதை அறியமுடிகிறது. இம்மரபு தழுவி இப்புலவரும் இப்பெயர் பெற்றிருக்கவேண்டும். இதற்குமாறாக, "இளங்கண்ணன், முதுகண்ணன் என்பவை பண்டைக் காலத்தோர் மக்கட்கு வழங்கிய பெயர்கள்; அவ்வழி உறையூரில் வாழ்ந்த முதுகண்ணன் என்பாரின் மகன் சாத்தனார் எனச் சொற்கிடக்கை கொண்டறிதலே பொருத்த முடையதாகும்"(38) என்பர் உ.வே.சா. இவரால் பாடப்பட்டோன் சோழன் நலங்கிள்ளியாவான். இவனை ஆலத்தூர் கிழாரும், கோவூர் கிழாரும் பாடியுள்ளமையால் இவரும் அவர்களது காலத்தவரே.

இவர் புறநானூற்றில் ஐந்து பாடல்களும் (27, 28, 29, 30, 325), குறுந்தொகையில் ஒரு பாடலும் (133) இயற்றியுள்ளார்.

## உறையூர் முதுகூத்தனார்

உறையூர் முதுகூற்றன், உறையூர் முதுகொற்றன், உறையூர் முதுகொற்றனார், உறையூர் முதுகூத்தனார் என்று நான்கு வகையாக இப்பெயர் குறிக்கப்பட்டுள்ளது. “உறையூர் வாழ்வினராய இவர் ஆரியக்கூத்து, தமிழ்க் கூத்து, என்ற கூத்து வகைகள் அனைத்திலும் சிறந்த பெரியவராக விளங்கியமையால் இவரை அவர்கால மக்கள் ‘உறையூர் முதுகூத்தனார்’ எனச் சிறப்புப் பெயரிட்டு அழைத்தனர் எனவும், கூத்தர் என்ற அப்பெயர் பின்னர் கூற்றனார் எனவும் கொற்றனார் எனவும் மருவி வந்துள்ளது எனவும் கூறுவர்”(39) ஆராய்ச்சியாளர் கா.கோவிந்தன்.

உறையூர் முதுகூற்றன், உறையூர் முதுகொற்றன், உறையூர் முதுகொற்றனார், முதுசாத்தனார் என்ற இப்பெயர்களில் வெவ்வேறு நூற்பதிப்புகளிலுள்ள ஒன்பது பாடல்களையும் (புறம். 331, அகம், 137, 329, குறு. 221, 353, 371, 390, நற். 28, 58) முதுகூத்தனார் என்னும் பெயரிலேயே பேராசிரியர். எஸ். வையாபுரிப்பிள்ளை தம் சங்க இலக்கியப் பதிப்பில் தொகுத்துள்ளார். உறையூர் முதுகூத்தனார் என்னும் பெயரில் புறம். 331 (உ.வே.சா.பதிப்பு) அகம். 137, 329 (ந.மு.வே.சா.பதிப்பு) ஆகிய பாடல்களும், உறையூர் முதுகூற்றன் என்னும் பெயரில் குறு. 353, 371 (உ.வே.சா. பதிப்பு) ஆகிய பாடல்களும். உறையூர் முதுகொற்றன் என்னும் பெயரில் குறு. 321, 390 (உ.வே.சா.பதிப்பு) ஆகிய பாடல்களும் முதுகூத்தனார் என்னும் பெயரில் நற். 28, 59 (பி.நா.பதிப்பு) ஆகிய பாடல்களும் காணப்படுகின்றன.

## ஐயூர் மூலங்கிழார்

வேளாண் மரபைச் சார்ந்த இவர் சோழநாட்டிலுள்ள 'ஐயூர் முலம்' என்னும் ஊரைச் சேர்ந்தவர் ஐயூர் மூலங்கிழார் ஆவார். "ஐயூர் மூலம் என்பது ஒரூர்; ஐயூர் என்பது வேறு; ஐயூர் மூலம் என்பது வேறு"[40] என்பர். ஔவை. சு. துரைசாமிப்பிள்ளை. இவர் கானக்பேரெயில் (காளையார் கோயில்) உக்கிரப்பெருவழுதியைச் சிறப்பித்துப் பாடியுள்ளார். சோழநாட்டைச் சேர்ந்த ஐயூர் மூலங்கிழார் பாண்டியநாட்டு மன்னன் உக்கிரப் பெருவழுதியைப் பாடியிருப்பது குறிப்பிடத்தக்கது. உக்கிரப் பெருவழுதியின் காலத்து ஏனை முடிவேந்தரான சேரமான் மாரிவெண்கோவும் சோழன் இராய சூயன் வேட்ட பெருநற்கிள்ளியும், நண்பராயிருந்தனர். இம்மூவரும் ஒருங்கிணைந்த காட்சியை ஔவையார் மகிழ்ந்து பாடியுள்ளார். இதனால் ஐயூர் மூலங்கிழார் ஔவையார் காலத்தவர் என அறியமுடிகிறது.

இவர் புறநானூற்றில் ஒரு பாடலை (21) மட்டும் பாடியுள்ளார்.

## கழார் கீரன் எயிற்றியார்

கழார் என்பது ஊர்ப்பெயர். காவிரி கடலொடு கலக்குமிடத்தில் உள்ள வளமான நிலம். அஃது இப்புலவர் பிறந்து வாழ்ந்த இடமாக இருத்தல் வேண்டும். இவர் பாடிய நற்றிணைப் பாடலில்,

'வெல்போர்ச் சோழர் கழாஅர்க் கொள்ளும்
நல்வகை மிகுபலிக் கொடையென உகுக்கும்'

(நற். 281:3-4)

என்று சோழநாட்டிலுள்ள கழார் நகரின்கண் மக்களால் வழங்கப்பெறும் பலிச் சோற்றை நினைத்திருக்கும் காக்கை என்று குறிப்பிடுவதால் இவர் சோழநாட்டைச் சேர்ந்தவர் எனத் தெரிகிறது. “கழார் என்னும் ஊர் சோழநாட்டில் காவிரியின் வடகறையில் இருந்தது என்றும்....... கழார் என்ற பெயர் மாத்திரம் களார் என்று சிதைந்து அப்பகுதியில் கிடைக்கும் கல்வெட்டுக்களில் “உலகுடை முக்கோக் கிழானடி வளநாட்டுக் களார் கூற்றம் எனவும் கல்வெட்டுக்கள்.............. குறித்துள்ளன. இப்புலவரின் பெயரில் வரும் கீரன் என்பது இவரது கணவர் பெயர்”(41) என்று பின்னத்தூர் நாராயணசாமி ஐயர்” எழுதுவர். “கீரன் என்பது இயற்பெயராகவோ தந்தையின் பெயராகவோ இருத்தல் வேண்டும்”(42) என்பர் அ. துரையரங்கசாமி.

எயிற்றியார் என்பது இவரின் இயற்பெயர். எயிறு என்ற சொல் பல்லைக் குறிக்கும். இப்பெயரில் எயிற்றினார், பல்லாற்றூர் எயிற்றியனார். கழார்க்கீரன் எயிற்றியனார் எனப்பலர் உள்ளனர். சங்க காலப் பெயர்களில் கண், காது, முதலிய உறுப்புக்களைப் பெயராகக் கொண்டது போல் (பல்) என்ற உறுப்பையும் பெயராகக் கொள்வதை அறிய முடிகிறது.

இவர் குறுந்தொகையில் மூன்று பாடல்களையும் (35,, 261, 330) நற்றிணையில் இரண்டு பாடல்களையும் (281, 312) அகநானூற்றில் நான்கு பாடல்களையும் (163, 217, 235, 294) ஆக மொத்தம் ஒன்பது பாடல்களை இயற்றியுள்ளார்.

## காவற்பெண்டு

இவர் பெயரில் பயிலும் பெண்டு என்ற சொல் பெண்மகள், மனைவி என்ற பொருளைத் தருகிறது. காவற்பெண்டு என்னும் சொல் செவிலி, செவிலித்தாய் என்ற பொருளைத் தருகிறது. காவற்பெண்டு என்ற பெயர் இயற்பெயராகத் தெரியவில்லை. இது தொழிலால் வந்த பெயராகும். இக்காவற்பெண்டு என்ற சொல் மணிமேகலையில், காவற்பெண்டு கடிபகையெறிந்து' என்ற அடிக்கு செவிலித்தாயார் என்று உரையெழுதுவர். காவற்பெண்டு என்ற சொல் செவிலித்தாயைக் குறிப்பது புலனாகிறது. தலைவியைப் புறம் போகாது காத்த முதுபெண்டிர் செவிலி என்றும், தலைவனைப் புறம்போகாது காத்த முதுபெண்டிர் செவிலித்தாய் என்றும் அழைக்கப்பட்டனர். "இவர் சோழன் போர்வைக் கோப்பெருநற்கிள்ளியின் செவிலித்தாய் என்று தெரிகிறது."[43] என்பர் உ.வே.சாமிநாதையர் "அவர் எவ்வடிப்படையில் இவ்வாறு கருதினர் என்பது புலனாகவில்லை. அறிஞர் உ.வே.சாமிநாதையர் இம்முடிவுக்கு வந்தமை ஆராய்ந்து புறநானூற்றில் சிலபாடல்கள் (80-85) போர்வை கோப்பெருநற்கிள்ளியைச் சிறப்பித்ததைக் கொண்டு ஐயரவர்கள் இவ்வாறு கருதியிருக்கக் கூடும்"[44] என்ற கருத்தும் நோக்கத்தக்கது. இவர் பெயர் காவற்பெண்பா? காவற்பெண்பா எனின் காவற்பெண்டு என்ற பாடபேதம் உள்ளது. இது பெண்மகன் மேல் அன்பு கொண்டவள் என்ற பொருள் தரும். எனினும் ஏடுபெயர்ந்து எழுதுவோர் நக்கண்ணையார் பாட்டைத் தொடர்ந்து காவற்பெண்டு பாட்டைத் தொகுத்துள்ளனர். இப்பாட்டு போர்வைக் கோப்பெருநற்கிள்ளியைப் பற்றியதலாலும் இப்பாட்டைப் பாடியவர் பெண் என்பதாலும் பாடலில் சிற்றில் நற்றூண் (புறம்.86:1) என்று பாடியதால் இப்பாட்டு பெருநற்கிள்ளி மீது கொண்ட காதலால் பாடியது எனக் கருதிக்

காதற்பெண்டு என்று தவறுதலாக எழுதிவிட்டனர். இஃது அவர்கள், ஈன்ற வயிறோ இதுவே (86:5) என்ற அடியை நோக்காமையான் விளைந்த பிழையாகும். ஆகையால் காவற்பெண்டு என்ற பாடமே பொருந்துவதாகும்"(45) என்பர் ஔவை.சு.துரைச்சாமிப்பிள்ளை.

பாடலில் உன் மகன் எங்கே ? என்று வினவியபோது ஈன்ற வயிறோ விதுவே' (86:5) ஈன்றடி, பெற்றதாய் பேசுவதாகத் தோன்றிலும் நற்றாய்க்கும் தாய்க்கும் வேறுபாடின்மையின் கூறினாள் என்பர் உ.வே.சா. செவிலித்தாய் என்பவள் ஐவகைத் தாயாருள் வளர்த்ததாய் என்பதால் அன்பின் மிகுதியால் என் மகன் என்றும், ஈன்ற வயிறோ விதுவே' என்று பாடினர் எனக் கொளல் தகும்.

இவர் புறநானூற்றில் ஒரு பாடலை (86) மட்டுமே பாடியுள்ளார்.

## காவிரிப்பூம்பட்டினம்

கடற்கரையில் உண்டாகும் நகரங்கள் 'பட்டினம்' என்று பெயர் பெறும். சங்க இலக்கியதில் காவிரிப்பூம்பட்டினம் தலைசிறந்த பட்டினமாகத் திகழ்ந்தது. இந்நாளில் 'பட்டணம்' என்ற சொல் சென்னைப் பட்டிணத்தைக் குறிப்பது போல சங்க காலத்தில் கடியலூர் உருத்திரங்கண்ணனார் காவிரிப்பூம்பட்டினத்தின் சிறப்பைப் பட்டினப்பாலை என்ற நூலில் சிறப்பித்துப் பாடியுள்ளார். முன்னாளில் 'பட்டிணம்' என்று பெயர் பெற்றிருந்தது காவிரிப்பூம்பட்டினமே என்பது இனிது விளங்கும். காவிரிப்பூம்பட்டினம் 'பூம்புகார்' நகரம் என்று புலவர்களால் புகழ்ந்துரைக்கப்பட்டது. பூம்பட்டினம் எனவும், பூம்புகார் எனவும் அந்நகர்க்கு அமைந்துள்ள பெயர்களை நோக்கிமிடத்து, ஓர் அழகிய

கடற்கரை நகரமாக அது விளங்குகியது என்பது புலனாகும். காவரியாறு கடலில் புகுமிடத்தில் வடகரையின் மேல் காவிரிப்பூம்பட்டினம் அமைந்திருந்தது. ஆற்றங்கரைகளிலே அந்நாளில் சிறந்த ஊர்கள் அமைந்திருந்தன. 'ஆறில்லா ஊருக்கு அழகில்லை' என்ற பழமொழியும் இதனடிப்படையிலேயே எழுந்தன. பூம்புகார், பட்டினப்பாக்கம், மருவூர்ப்பாக்கம் என இரு பிரிவாக அமைந்திருந்தது. சோழநாட்டின் மிக முக்கிய ஆறு காவிரியாகும். காவிரியாற்றின் நீர்வளத்தினால் சோழநாடு செழிப்பும், செல்வமும் பெற்றுத் திகழ்ந்தது. 'சோழநாடு சோறுடைத்து' என்னும் பழமொழி நிலைபெறச் செய்தது காவிரியாறே. காவிரியாறு 'பொன்னி' என்னும் சிறப்புப் பெயரையும் பெற்றிருந்தது.

## காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார்

இப்பெயர் காரிக்கண்ணனார் எனவும் வழங்கும். இவருக்கு இப்பெயர் உறுப்பான் வந்தது போலும். காரி-கரிக்குருவி. கருமைப்பொலிவு மிகுதியாகப் பெற்றிருந்த கண்களை உடையவராதலால் இப்பெயர் இவருக்கு ஏற்பட்டிருக்க வேண்டும். மேலும், காவிரிப்பூம்பட்டினத்தில் செங்கண்ணனார் எனும் புலவரும் வாழ்ந்தமையால் இவரை அவரிடத்தே வேறுபடுத்தலால் காரிக்கண்ணனார் எனப் பெயர்பெற்றுள்ளார். இவர் வணிகர் குலத்தைச் சார்ந்தவர் என்பதனை, "ஊரம் பேரும்" (தொல். மரபியல். நூ.74) உரையின் மூலம் அறியமுடிகிறது. இவர் தான் பிறந்து வளர்ந்த காவிரிப்பூம்பட்டினத்தில் காவிரியாறு கடலைக் கலக்கும் சங்கமுகத்துறையைச் சுட்டிப் (அகம்.123) பாடுகிறார். "பாண்டிய மன்னனுக்குத் திருமாலையும், அப்பாண்டியனுக்கு, சோழனும் ஒருங்கிருந்தபோது அவர்களுக்குக் கண்ணபிரான் பல தேவரிருவரையும் உவமை கூறியிருந்தலின், இவர் திருமாலடியவராகக் கருதப்படுகிறார்"(46)

என்பர் உ.வே.சாமிநாதையர். இவர் சோழன் குராப்பள்ளித் துஞ்சிய பெருந்திருமாவளவன், பாண்டியன் இலவந்திகைப் பள்ளித்துஞ்சிய பெருவழுதி, பாண்டியன் வெள்ளியம்பலத்துத் துஞ்சிய பெருவழுதியும் ஒருங்கே இருப்பக் கண்ட காரிக் கண்ணனார், 'இன்றே போல்க நும்புணர்ச்சி' எனக் குறிப்பிடுவதன் மூலம் ஒற்றுமையை வலியுறுத்தும் சமத்துவப் புலவராகத் திகழ்கிறார்.

இவர் அகநானூற்றில் மூன்று பாடல்களையும் (107, 123, 285), குறுந்தொகையில் ஒரு பாடலும் (297), நற்றிணையில் ஒரு பாடலும் (237), புறநானூற்றில் பாடல்களையும் ஐந்து (57, 58, 169, 171, 353) ஆக மொத்தம் பத்துப் பாடல்களைப் பாடியுள்ளார். எனினும் உ.வே. சாமிநாதையர், "அகநானூற்றில் இவர் பாடிய பாடல்கள் இரண்டு"[47] என்பர். இக்கருத்து தவறானது.

## காவிரிப் பூம்பட்டினத்து செங்கண்ணார்

இவரது இயற்பெயர் கண்ணன். இப்பெருடன் ஆர் விகுதி சேர்ந்து, அவர் வாழ்ந்த ஊரையும் இணைத்துக் காவிரிப்பூம்பட்டினத்துச் செங்கண்ணனார் என அழைக்கப்படுகிறார். காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக் கண்ணனாரிடத்து வேறுபடுத்த செங்கண்ணனார் என வழங்கப்படுகிறார். இவர் பாடிய அகம். 271-இல் 'வணிகராகிச் சென்று' என்று கூறியதனால் இவரை வணிகர் மரபினரென்று கொள்கிறோம்."[48] என்பர் பின்னத்தூர் நாராயணசாமி ஐயர்.

இவர் அகநானூற்றில் இரண்டு பாடல்களையும் (103, 271), நற்றிணையில் ஒரு பாடலையும் (389) பாடியுள்ளார்.

## காவிரிப்பூம்பட்டினத்து கந்தரத்தனார்

கந்தரத்தனார் என்ற பெயர் வேறு புலவர்க்கும் உண்டு. உரோகடத்துக் கந்தரக்கனார் என்ற புலவரின் பெயர் முன் வந்துள்ளது. இவரது இயற்பெயர் இன்னதென்று தெரியவில்லை. காவிரிப்பூம்பட்டினம் என்ற ஊரடையுடன் இவர் அழைக்கப்பெறுகிறார்.

இவர் பாடிய பாடலொன்று குறுந்தொகையில் (342) இடம்பெற்றுள்ளது.

## காவிரிப்பூம்பட்டினத்துச் சேந்தன் கண்ணனார்

இவர் காவிரிப்பூம்பட்டினத்துச் செங்கண்ணனார் என்றும் அழைக்கப்படுகிறார். ஆனால் காவிரிப்பூம்பட்டினத்துச் செங்கண்ணனாரும், காவிரிப்பூம்பட்டினத்துச் சேந்தன் கண்ணனாரும் வேறு வேறு புலவர். இவர் குறுந்தொகையில் ஒரு பாடலை (347) மட்டும் பாடியுள்ளார்.

## காவிரிப்பூம்பட்டினத்துப் பொன்வணிகனார் மகனார் நப்பூதனார்

இவர் காவிரிப்பூம்பட்டினத்துப் பொன்வணிகனார் மகனார் நப்பூதனார் எனக் குறிக்கப்படுகிறார். இதனால் இவர் சோழநாட்டில் உள்ள காவிரிப்பூம்பட்டினத்தைச் சார்ந்தவர் என்றும், இவரது தந்தை பொன்வணிகம் செய்தவர் என்றும், இவர் வணிகர் குலத்தவர் என்றும் தெரிகிறது. இவரது இயற்பெயர் பூதன் என்பதாகும். நப்பூதனார் என்பதில் உள்ள ந என்பது அடைமொழியாகும். இலக்கிய அறிவும்,

சான்றாண்மையும் உடையவர்களை 'ந' என்ற அடைமொழியால் குறிப்பது பண்டை வழக்கமாய் இருந்திருக்கிறது. இதற்கு நக்கீரனார், நத்தத்தனார் நக்கண்ணையார், நப்பச்சலையார் என்ற பெயர்களைச் சான்றாகக் காட்ட முடியும். நம்பூதனார் பத்துப்பாட்டில் முல்லைப்பாட்டை இயற்றியுள்ளார். இதைத் தவிர வேறு நூல்களையோ, பாடல்களையோ இயற்றியதாகத் தெரியவில்லை. நற்றிணையில் உள்ள 26–ஆம் பாடலை இயற்றியவர் பெயர் பூதனார் எனக் குறிக்கப்படுகிறது. இந்தப்பூதனாரும், முல்லைப் பாட்டின் ஆசிரியர் நப்பூதனாரும் வேறு வேறு புலவர். முல்லைப்பாட்டில் தலைவனின் பெயர் சுட்டப்படவில்லை. எனினும் முல்லைப்பாட்டின் தலைவன் தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனை குறிப்பாகத் தெரிகிறது.

## கிடங்கில் காவிதிக் கீரங்கண்ணனார்

இல் என்பது பெரும்பாலும் மக்கள் வாழும் வீட்டைக் குறிப்பதாகும் அச்சொல் சில பழமையான ஊர்ப்பெயர்களில் சேர்த்து வழங்கப்பெறுகிறது. கிடங்கு + இல் = கிடங்கில். பொருட்களைச் சேமித்து வைக்கும் இடம் 'கிடங்கு' என வழங்கப்படும். அவ்வாறு பொருட்களைச் சேமித்து வைக்கும் இடமே ஊராக மாறியிருக்கக் கூடும். "கிடங்கில் என்பது நடுநாட்டகத்துள்ள திண்டிவனம்"[49] என்பர் பின்னத்தூர் நாராயணசாமி ஐயர். கண்ணன் என்ற இவரது இயற்பெயருடன் ஆர் விகுதி சேர்த்து கண்ணனார் எனக் குறிக்கப்படுகிறார். இவரது பெயரில் உள்ள கீரன் என்ற சொல் அவரது தந்தையைக் குறிக்கும். காவிதி என்பது அந்நாளில் வழங்கப்படும் பட்டம் ஆகும். சங்க காலத்தில் வழக்கியல் (Low) துறையில் வல்லமை உடையோர்க்குக் காவிதிப்பட்டம் வழங்கிச் சிறப்பித்துள்ளனர்.

இவர் நற்றிணையில் ஒரு பாடலைப் (218) பாடியுள்ளார்.

## கிடங்கில் காவிதிப் பெருங்கொற்றனார்

இவரது இயற்பெயர் கொற்றன். கொற்றன் என்ற பெயருடைய சங்கப் புலவர்கள் பலர் இருந்ததால் அவர்களிலிருந்து வேறுபடுத்தவே பெருங்கொற்றன் என அழைக்கப்பட்டார். கிடங்கில் என்னும் ஊர் பெயருடன் காவிதிப் பட்டத்தையும் இணைத்துக் கிடங்கில் காவிதிப் பெருங்கொற்றனார் என வழங்கப்படுகிறார்.

இவர் நற்றிணையில் ஒரு பாடலை (364) மட்டும் இயற்றியுள்ளார்.

## கிடங்கில் குலபதி நக்கண்ணனார்

இவரது இயற்பெயர் கண்ணன். 'ந' என்பது சிறப்பு பற்றி வந்தது. ஆயிரம் மாணவர்களை ஆதரித்துக் கல்வி புகட்டுவோர் 'குலபதி' என்று பழங்காலத்தில் வழங்கப்படும் பட்டமாகும். இவர் இப்பட்டத்தை உடையவராதல் பற்றி இவர் சிறந்த ஆசிரியர் என்பது தெரிகிறது. 'புகழு முன்னர் நாணுப; பழியாங்கு ஒல்ப' என்ற உயர்வுடைய கருத்துக்களை வலியுறுத்துவதன் மூலம் இவர் ஒரு நல்லாசிரியராகத் திகழ்கிறார்.

இவர் குறுந்தொகையில் ஒரு பாடலை (252) மட்டும் இயற்றியுள்ளார்.

## குடவாயிற் கீரத்தனார்

குடவாயில் சோழநாட்டில் உள்ளதோர் ஊர். "குடவாயில் என்பது சோழநாட்டில் உள்ளதும், சோழர்களின் தலைநகராக இருந்ததும். தேவாரம் பெற்ற சிவத்தலமுமான ஓர் ஊர்"(50) என்பர் உ.வே. சாமிநாதையர். இவர்

தம் பாடல்களில் பல அரிய வரலாற்றுச் செய்திகள் பொதிந்து காணப்படுகின்றன. இவர் பாடல்களில் சோழரின் தலைநகர் உறந்தை, குடவாயில், காவிரியாறு, ஒல்லையூர், எழில்மலை ஆகிய ஊர்களின் சிறப்பியல்புகளை எடுத்துரைக்கிறார். இவர் தம் ஊரை "தண்குடவாயிலன்னோள்" (அகம்.44) 'கொற்றச்சோழர் குடந்தை (அகம்.60), தேர்வண்சோழர் குடந்தை வாயில் (நற்.379) எனச் சிறப்பிக்கிறார். இதனால் இவர் சோழநாட்டைச் சேர்ந்த புலவர் என உறுதியாகக் கூறமுடியும். சங்க காலத்தில் குடந்தைக்கு அருகில் குடவாயில் அமைந்திருந்தது. "குடந்தை என்பது இந்நாளில் கும்பகோணம் என அழைக்கப்படுகிறது. ஆனால் குடவாயில் என்பதனை குடந்தையென மேலையோர் திரித்தன"[(51)] என்பர் நச்சினார்க்கினியர். "சோழரது திரவிய சாலை குடவாயிலின் கண் உள்ளது"[(52)] என்று குறிப்பிடுகிறார். குடவாயிற் கீரத்தனார் சோழநாட்டில் பிறந்தாலும் ஒல்லையூர் கிழார் மகன் பெருஞ்சாத்தனைப் பாடியுள்ளார். "ஒல்லையூர் என்பது புதுக்கோட்டைத் தனியரசின் கீழிருந்த ஊர்களுள் ஒன்று. இப்போது அதற்கு 'ஒலிய மங்கலம்' என்ற பெயர் வழங்குகிறது. இதனைச் சூழவுள்ள பகுதி ஒல்லையூர் நாடெனப்படும். தென் வெள்ளாற்றின் தென்கரை தென் கோனாடு என்றும், வடகரை வடகோனாடு என்றும் வழங்கின. தென்கோனாட்டின் மேலைப்பகுதி ஒல்லையூர் நாடு."[(53)] குடவாயிற் கீரத்தனார் ஒல்லையூர் நாட்டுக் கிழார் மகன் பெருஞ்சாத்தனிடம் நன்மதிப்புக் கொண்டவர். எனவே தான் பெருஞ்சாத்தன் போரில் இறந்து வானுலகம் சென்றபின் அவனது மறைவிற்கு வருந்தி, ஒல்லையூர் நாட்டிற்கே சென்று, 'முல்லையும் பூத்தியோ வொல்லையூர் நாட்டே' (புறம். 242;6) என்று பாடுகிறார்.

இவர் அகநானூற்றில் பத்துப்பாடல்களும் (44, 60, 79, 119, 129, 287, 315, 345, 366, 385), குறுந்தொகையில் மூன்று பாடல்களும் (79, 281, 369), நற்றிணையில் நான்கு பாடல்களும் (27, 42, 212, 379), புறநானூற்றில் ஒரு பாடலுமாக (242), மொத்தம் பதினெட்டுப் பாடல்களைப் பாடியுள்ளார். சோழநாட்டுப் புலவர்களில் அதிகப் பாடல்கள் பாடியவர்கள் என்ற பெயரை இவர் பெறுகிறார்.

## கோவூர்கிழார்

சோழநாட்டில் உள்ளதோர் ஊர் கோவூர். இவ்வூரைச் சார்ந்து, வேளாண் மரபைச் சார்ந்தவர் கோவூர் கிழார். இவர் சோழன் நலங்கிள்ளியையும், குளமுற்றத்துச்துஞ்சிய கிள்ளிவளவனையும் பாடியுள்ளார். நன்றியறிவு உள்ளவர். பிறருடைய சீற்றத்தைத் தணித்தலிற் கண்ணுங் கருத்துமாக இருந்து வாழ்ந்தவர். யாவரும் மன ஒற்றுமையுடன் இருக்கவேண்டும் என்பது இவரது கொள்கை.

சோழன் நலங்கிள்ளியின் நெருங்கிய நண்பரான கோவூர்க்கிழார், இன்னொரு சோழ மன்னனுடன் போரிடுதலைத் தவிர்க்கும் கடமையை வலியுறுத்தி, அச்சோழனைப் பார்த்துக் கூறும் புறநானூற்றுப் பாட்டும், குற்றமற்ற புலவன் இளந்தத்தனை மரண தண்டனையினின்றும் காப்பாற்றும் பொருட்டு அவர் சோழன் நலங்கிள்ளிக்கு செய்து கொள்ளும் விண்ணப்பமும், தன் அரசப்புலவர்களுக்குத் தெளிவான, உறுதியான அறிவுரை கூறக்கூடிய அவருடைய துணிவை எடுத்துக் காட்டுகின்றன. சோழன் குளமுற்றத்துஞ்சிய சோழன் கிள்ளிவளவன் மலையமானுடைய குழந்தைகளை யானையை விட்டு மிதிக்கச் செய்ய, அதன் முன் விட,

கோவூர்கிழார், ஒரு புறாவின் உயிரைக் காத்தற்பொருட்டு, தனது உயிரை ஈந்த முன்னோனின் (சிபி) வழிவந்தவன் என்பதை நினைவுபடுத்தி களங்கமற்ற சிறிய அக்குழந்தைகள் அரசனது அவையைக் கண்டு சிறிதும் அஞ்சாமல் யானையைக் கண்டதும் அழுகையை நிறுத்திவிட்டன என்றும் அறிவுரை கூறி, அவனை நல்வழிப்படுத்துகிறார்.

இவர், குறுந்தொகையில் ஒருபாடலையும் (65), நற்றிணையில் ஒரு பாடலையும் (393), புறநானூற்றில் பதினைந்து பாடல்களையும் (31, 32, 33, 41, 44, 45, 46, 47, 68, 70, 308, 373, 382, 386, 400), ஆகமொத்தம் பதினேழு பாடல்களைப் பாடியுள்ளார்.

## கோக்குள முற்றனார்

இஃது ஊர்பற்றிய வந்த பெயர். குளமுற்றம் என்பது ஓரூர். குளமுற்றத்துத்துஞ்சிய கிள்ளிவளவன் எனப் புறப்பாடடின் கண் வருதலானும் இவ்வூருண்மை தெரிகிறது. கோவென்னும் உரிமை பெற்ற உழுவித்துண்ணும் வேளாண் மரபினர். "கோக்குளம் என்பது ஓர் ஊர். வெண்காடு, கோக்குள முற்றம் என்ற சொல்லே ஓர் ஊரின் பெயர் என்றும் கொள்ளுதல் கூடும்".[54]

இவர் குறுந்தொகையில் ஒரு பாடலும் (98), நற்றிணையில் ஒரு பாடலும் (96) பாடியுள்ளார்.

## கோப்பெருஞ்சோழன்

இவன் கோழியோன், தேர்வண்கிள்ளி, பெருங்கோக்கிள்ளி, பொத்தியாண்ட பெருஞ்சோழன், என்று கோப்பெருஞ்சோழன் புறநானூற்றுப் பாடல்களாலும், பதிற்றுப்பத்தின் ஒன்பதாம் பதிகத்திலும் குறிப்பிடப்படுகிறான். கோப்பெருஞ்சோழன் உறையூரிலிருந்து ஆட்சிபுரிந்தான் என்பதைக் 'கோழியோன்' என்ற சொற்றொடர் அறிவிக்கின்றது. (கோழி உறையூரின் பழைய பெயர்). தேர்வண் கிள்ளி, பெருங்கோக்கிள்ளி என்ற தொடர்கள், அவன் கிள்ளி வழிச்சோழன் என்பதைக் காட்டுகின்றன. தமது மக்கள் தீயயோருடைய சொற்கேட்டு, தன்னுடன் போருக்குவர, இவன் அவர்களோடு போருக்குச் செல்ல நேர்ந்தது. இந்நிலையில் புல்லாற்றூர் எயிற்றியனார், தடுத்து அவர்கள் உன்னுடைய புதல்வர்களே என்றும், அவனுடைய பகைவராகிய சேரரோடும், பாண்டியரோடும் ஒத்தவரல்லர் என்றும், அவனும் அவர்களுடைய பகைவனல்லனென்றும் வானுலகம் புகுந்தபின், விட்டுச் செல்லும் நாட்டை அவர்கள் மரபுரிமையாகப் பெறுவர் என்றும் பாடுகிறார். மற்றோர் இடத்தில் இக்கருத்தை வலியுறுத்த கோவூர் கிழாரும் சந்திவிக்கிறார். இந்த நிகழ்ச்சிக்குப் பிறகு கோப்பெருஞ்சோழன் தனது எண்ணத்தை மாற்றி, அரசு துறந்து ஊருக்குப் புறத்தே ஆறு சூழ்ந்த சிறிய தனி இடத்திற்குச் சென்று ஒரு மரத்தின் கீழ் பெரியோர் சூள வடக்கிருந்தான். இவ்வாறு வடக்கிருந்து உயிர்துறப்பவர் வானுலகம் புகுவர் என்பது சங்ககால நம்பிக்கையாகும். வாழ்க்கையில் ஒவ்வொருவரும் உயர்ந்த நோக்கங்களும், நன் முயற்சிகளும் இருத்தவேண்டும் என்று உயரிய கருத்துக்களைத் தம்பாடலின் வழி வலியுறுத்துகிறார். கோப்பெருஞ்சோழனின் இணைபிரியாத நண்பர்களாக, பிசிராந்தையாரும். பொத்தியாரும் திகழ்ந்தனர். கோப்பெருஞ்சோழன் வடக்கிருந்த போது

இவ்விருவரும் அவனோடு வடக்கிருக்கத் துணிந்தன் மூலம் அவர்கள் இவன் மீது கொண்ட நட்பும், அன்பும் வெளிப்படுகிறது.

இவர் புறநானூற்றில் மூன்று பாடல்களையும் (214, 215, 216) குறுந்தொகையில் நான்கு பாடல்களையும் (20, 53, 129, 147) இயற்றியுள்ளார்.

## சல்லியங்குமரனார்

இவர் உறையூர் சல்லியங் குமரனாரெனவும் கூறப்படுவர். இவரது இயற்பெயர் 'குமரன்' என்பதாகும். இதற்கு முன் உள்ள 'சல்லியன்' என்பது தந்தையின் பெயராகும். "மகாபாரதம், 'சல்லியன்' என்னும் பெயருடைய மன்னனைக் குறிப்பிடுகின்றது. சல்லியன் என்னும் பெயர் சங்ககாலத்தில் தமிழகத்திலும் இருந்துள்ளதால் பாரதக்கதை தமிழகத்தில் சங்ககாலத்திலேயே பரவியிருந்ததமையினை அறிய முடிகிறது."(55) குமரனார் என்ற பெயருடைய புலவர்கள் எண்மர். இவர்களிடமிருந்து வேறுபடுத்தவே தந்தையின் பெயரை மட்டும் இணைத்து சல்லியங்கமாரனார் என அழைக்கப்படுகிறார். இவர் பாடலில் சோழநாட்டு அரசிலாற்றையும், அதனருகிலுள்ள அம்பல் என்னும் ஊரையும், கிள்ளிவளவனையும் சிறப்பித்துப் பாடியுள்ளதால். இவர் சோழநாட்டுப் புலவர் என்பது உறுதியாகிறது.

இவர் இயற்றிய பாடலொன்று நற்றிணையில் (141) காணப்படுகிறது. எனினும் "இவர் பாடியனவாக நற்றிணையில் 141 ஆம் பாடலொன்றும்,

குறுந்தொகையிலொன்றுமாக இரண்டு பாடல்கள் கிடைத்திருக்கின்றன"[56] என்பர் பின்னத்தூர் நாராயணசாமி ஐயர். ஆனால் இக்கருத்து தவறானது.

## செம்பியனார்

இது சோழர் குடிக்குரிய பெயர். இதனால் இவர் சோழமன்னர் மரபினரென்று தெரிகின்றது. பிற்கால இலக்கிய வகையான 'தூது' இலக்கியம் தோன்றுவதற்கான அடித்தளமாக இவர் இயற்றிய நற்றிணைப் பாடல் திகழ்கிறது. தலைவனைப் பிரிந்த தலைவி, காமம் மிக்க கழிபடர் கிளவியாக, கிளியைத் தூதாகத் தலைவனிடம் சென்று வருமாறு பாடுவது மிகவும் பாராட்டற்பாலது.

இவர் நற்றிணையில் ஒரு பாடலை (102) மட்டும் இயற்றியுள்ளார்.

## செல்லூர்கிழார் மகனார் பெரும்பூதங்கொற்றனார்

செல்லூர்க்கொற்றனார் எனவும், செல்லூர்கிழார் மகனார் பெரும் பூதங்கொற்றனார் எனவும் கூறப்படுபவர் இவரே. செல்லூர் சோழநாட்டுக் கீழைக் கடலருகிலுள்ளது. பரசுராம முனிவர் பெருவேள்வி செய்த ஊர் இதுவே. இக்கொற்றனார் பெரும்பூதனார் என்பவரின் புதல்வர். வணிகர் மரபினர். கொற்றனார் என்ற பெயருடைய புலவரும், சங்கத் தொகை நூல்களில் குறிக்கப்பெறுகிறார். அவரிடமிருந்து இவரை வேறுபடுத்தவே, ஊர்ப்பெயருடன் தந்தையின் பெயரையும் இணைத்துச் செல்லூர்கிழார் மகனார் பெரும்பூதங்கொற்றனார் என அழைக்கப்படுகிறார்.

இவர் இயற்றிய பாடல்கள் மூன்று. அவை நற்றிணையில் ஒன்றும் (30), அகத்திலொன்றும் (250), குறுந்தொகையில் ஒன்றும் (363) ஆகும்.

## செல்லூர் கோசிகன் கண்ணனார்

இவரது இயற்பெயர் கண்ணன். இவரது தந்தையின் பெயர் கோசிகன் என்பதாகும். இவர் வணிகர் மரபினர். தான் வாழ்ந்த ஊரின் பெயருடன், தந்தையின் பெயரையும் இணைத்து, செல்லூர் கோசிகன் கண்ணனார் என வழங்கப்படுகிறார்.

இவர் இயற்றிய பாடலொன்று அகநானூற்றில் (66) இடம் பெற்றுள்ளது.

## சோணாட்டு முகையலூர்ச் சிறு கருந்தும்பினார்

இவர் சோழநாட்டவர். முகையலூர் என்னும் ஊரினர். "முகையலூர் என்பது இடைக் காலதில் முகலாறு என வழங்கி இப்போது மொகலாரென வழங்குகிறது. இதற்கு முகையலென்றும் பெயருண்மையன் சோணாட்டு முகையலூர் இதுவென்று துணியலாம். இவர் பாடிய புறநானூற்றுப் பாடலில். "கருங்கண் எயிற்றி காதன் மகனொடு கான இரும்பிடிக்கன்று தலைக்கொள்ளும் பெருங்குறும்புடுத்த வன்புல இருக்கை" என நயமாகக் கூறியதால் சிறுகருந்தும்பினார் என்ற பெயரைப் பெற்றார் எனத் தெரிகிறது. சிறுகருந்தும்பி – சிறிய கரிய யானைக்குட்டி. இவர் வல்லார் கிழான் பண்ணன் என்ற குறநில மன்னனைப் புகழ்ந்து பாடியுள்ளார்.

இவர் புறநானூற்றில் இரண்டு (181, 265) பாடல்களை இயற்றியுள்ளார்.

## சோழன் நலங்கிள்ளி

கிள்ளிவளவனுக்குப் பின் காவிரிப் பூம்பட்டினத்தைத் தலைநகராகக் கொண்டு ஆட்சிச் செய்தவன். கிள்ளிவளவன் காலத்தில் இவன் சிற்றரசனாக இருந்திருக்கிறான். இவனைச் சான்றோர் சேட்சென்னி, நலங்கிள்ளி என்று கூறுவர். "நலங்கிள்ளி, கிள்ளி வளவன் உடன் பிறந்தோனாவான். இருவருமே வேற்பஃறடக்கைப் பெருவிறற் கிள்ளியின் மக்களாவர். வேற்ஃறடக்கைப் பெருவிறற்கிள்ளி, கரிகாற்பெருவளத்தனின் மகனாவன் என முறை கூறுவாரும் உளர்."(56) இவர் சோழநாட்டின் அரசனாகவும் புலவராகவும் இருந்த சிறப்பினைப் பெற்றவர்.

ஆலத்தூர்கிழார், உறையூர் முதுகண்ணன் சாத்தனார், கோவூர்கிழார் ஆகிய மூவரும் இவனது கொடை, கொற்றம், பிறபண்பு நலன்களை வியந்து பாராட்டியுள்ளனர். சோழன் நலங்கிள்ளி போரின் கடுமையினையும் ஆட்சியின் அருமையினையும் நன்றாக உணர்ந்தவன். கடற்கொள்ளையினைத் தடுக்க, பெரியதொரு கடற்படையினை வைத்திருந்தான். "என்னிடம் வணங்கி வந்து பணிந்து ஈக என இறந்து வேண்டி நிற்பார்களானால், அவர்களுக்கு சிறப்புடைய முரசு கொடுப்பேன். இவ்வுலகில் என்னுடைய வீரத்தைப் போற்றி மதிக்காது மனம் நோகுமாறு ஏளனம் செய்து தருக்கிய அறிவற்றவர், தூங்குகின்ற புலியை இடறிய பேதை போல் உயிருடன் மீளுதல் அரிது. வலிமையுடைய யானையின் காலடியில் பட்ட மூங்கில் மூளை போன்று ஆங்குப் பகைவரின் ஊரைப் போர் தொடுத்து அழிப்பேன். அவ்வாறு நான் செய்யவில்லையென்றால் அன்பில்லா மகளிரை தழுவி என் மார்பில் அணிந்துள்ள மாலை துவள்வதாக"(57) என்று இவர் பாடுவதால்

அன்பில்லாத மகளிரைத் தழுவுதல் அறமன்று என்னும் கொள்கையை உடையவனாத் திகழ்ந்திருந்தான் என அறிய முடிகிறது. மேலும். இவன், "குடிமக்களிடம் வரிகளைப் பெறுவதை விட அரசன் தன் வலிமையால் பொருளை ஈட்டி மக்களை காப்பதே சிறப்புடையது"(58) எனக் கூறுவதன் மூலம் மக்கள் போற்றும் நாயகனாகவும் விளங்கினான் எனத் தெரிகிறது.

இவர் புறநானூற்றில் இரண்டு பாடல்களைப் (73, 75) இயற்றியுள்ளார்.

## சோழன் குளமுற்றத்துத்துஞ்சிய கிள்ளிவளவன்

உறையூரை ஆண்ட சோழ அரசர்களுள் சிறக்க வாழ்ந்தவன் கிள்ளிவளவன். இவன் கரிகாற்பெருவளத்தானின் மகனாவான். நலங்கிள்ளியும், மாவளத்தானும் இவனது தம்பியாராவர். இவன் கரிகாற் பெருவளத்தானுக்குப் பின்னர் காவிரிப்பூம்பட்டினத்தையும், பின்னர் உறையூரையும் தலைநகராகக் கொண்டு ஆட்சிபுரிந்து வந்தான்.

கிள்ளிவளவன் நிலத்தை கிள்ளி (தோண்டி) வளப்படுத்தியமையால் 'கிள்ளிவளவன்' எனவும் அழைக்கப்பட்டிருக்க வேண்டும். சங்கத்தொகை நூல்களுள், கோக்குளமுற்றனார் என்ற புலவரும் குறிக்கப்படுகிறர். "குளமுற்றம் என்பது ஓரூர் குளமுற்றத்துஞ்சிய கிள்ளிவளவன் எனப் புறப்பாட்டின்கண் வருதலாலும் இவ்வுண்மை தெளிக"(59) என்பர் பின்னத்தூர் நாராயணசாமி ஐயர். இவன் புலவர் போற்றும் புகழ் மிக்கவன். ஆலத்தூர் கிழார் போன்ற பதின்மர் இவணைப் புகழ்ந்து பாடியுள்ளனர்.

கிள்ளிவளவனின் அரண்மனையில் புலவர்களும் கலை வல்லுநர்களும் வந்த வண்ணமாக இருந்தனர். இவன் "செந்தமிழ்ப் புலமையில் சிந்தை செலுத்தி இருந்தமையால் நாட்டாட்சியில் கவனம் செலுத்தாமலிருந்ததை"(60) வெள்ளைக்குடி நாகனார் அறிவுறுத்தினார். அதனை ஏற்று குடிகள் போற்றும் அரசனாகவும், பெருவீரனாகவும், புரவலனாகவும் திகழ்ந்தான்.

இவனது குடியின் கீழ் வேளார் தலைவனாகிய பண்ணன், புலவர் போற்றுமாறு வள்ளன்மையுடைவனாகத் திகழ்ந்தான். பண்ணனின் கொடைத்திறத்தினைப் போற்றித் தன் உள்ளன்பினைத் தன் கூற்றாகக் கூறாது பாணன் ஒருவன் கூற்றில் வைத்துப் பாடி மகிழ்கிறான். யான் வாளும் நாளும் பண்ணன் வாழிய" என்று பாடுவதன் மூலம் சிற்றரசனையும் அரவணைத்துப் பாதுகாக்கும் பாண்மை வெளிப்படுகிறது. காவிரிப்பூம்பட்டினம் இவன் காலத்தில் கடல் கொள்ளப்பட்டதென்றும், இவன் அங்கிருந்து உறையூர் அல்லது காஞ்சி நகரை அடைந்து முடிவில் சேரநாட்டில் 'குளமுற்றம்' என்னுமிடத்தில் நடந்த போரில் உயிர் துறந்தான் என்று கூறப்படுகிறது.

இவர் இயற்றிய புறநானூற்றுப் பாடலொன்றே (173) சங்கத்தொகை நூல்களில் காண முடிகிறது.

## சோழன் நல்லுருத்திரன்

சோழன் நல்லுருத்திரன் என்பான், சங்கநூல் காலத்துச் சோழ மன்னர்களுள் காலத்தால் பிற்பட்டவன் என்பதை இவன் பெயரே நன்கு உணர்த்துகின்றது. இவர் பெயரில் உள்ள 'உருத்திரன்' என்ற சொல்

சிவனைக் குறிப்பதாகும். எனவே, இவர் சிவநெறி சார்ந்தவர் என்பது புலனாகிறது. “இப்புலவர் முல்லைக் கலித்தொகையின் ஆசிரியர். பிற தொகைகளில் இவர்தம் பாடல் இல்லையாதலின் இவன் பாடிய யாப்பு கலிப்பா ஒன்றே என அறியலாம்”[61] என்பர் வ. சுப. மாணிக்கம். இக்கருத்து தவறானது. இவர் புறநானூற்றில் 190-ஆவது பாடலையும் இயற்றியுள்ளார். இதில் அவர், பரந்த நோக்கங்களில்லாதவர்கள் தங்களுடைய தேவைகளுக்குத் தங்களுடைய பொருளைச் செலவு செய்யாமல் அதனை இறுகப் பற்றிக் கொள்ளும் இயல்புடையவர்களிடம் நட்பினை தவிர்த்து, உயர்ந்த நோக்கங்களும், முயற்சியுடைய மக்களொடும் தாம் நட்புகொள்ள விழைவாக கூறுகிறார்.

முல்லைக் கலியில், நாடக வழக்கை விடுவித்து உலகியல் வழக்காகவே வைத்துப் பாடல்களை இயற்றியுள்ளார். முல்லைவாழ் இடையர்களின் சமுதாய இயல்புகளையும், அவ்வியல்புக்கு இயைந்த காதலையுமே புனைந்துள்ளார். தொல்காப்பியர் குறிப்பிடும் அகத்திணை இலக்கிய கொள்கைக்கு”[62] ஏற்ப, சோழன் நல்லுருத்திரன் முல்லைக் கலியைப் புணைந்துள்ளார் என்பது குறிப்பிடத்தக்கது.

இவர் முல்லைக் கலியில் 17 பாடல்களையும், புறநானூற்றில் ஒரு பாடலையும் (190) இயற்றியுள்ளார்.

## தாயங்கண்ணனார்

சோழநாட்டு எருக்காட்டூர்த் தாயங்கண்ணனார் என்றும் அழைக்கப்படுகிறார். “இவர் பெயர் ஏடெழுதுவோரால் பிறழ்ந்தெழுதப்பட்டுத் தையங்கண்ணாரெனவும், காணப்படும்.”[63] சங்கத்தொகை நூல்களுள்

காடு வாழ்த்துப் பாடிய ஒரே புலவர் இவரே. பலர் செலச் செல்லாக் காடு வாழ்த்துக்கு நச்சினார்க்கினியர் இவர் பாடிய புறப்பாடலையே (356) உதாரணமாகக் காட்டுவார். ஆனால் இப்பாடலைப் பாடியவர் கதையங் கண்ணனார் என்பவர் பாடியதாக ஔவை சு.துரைசாமிப்பிள்ளை கருதுகிறார். எனினும் எருக்காட்டூர் தாயங்கண்ணார் பாடிய பாடல்கள் புறநானூற்றில் 397-ஆவது பாடலைக் குறிப்பிடுகிறார். மேலும், "இவரது எருக்காட்டூர் சோழநாட்டுத் தஞ்சாவூர் சில்லாவில் நன்னிலம் தாலுகாவில் உள்ளது. குளிக்கரை புகைவண்டி நிலையத்திற்கு மேற்கில் இவ்வூர் இன்றும் இருந்து வருகிறது. அதனைச் சாரா இருந்த மணற்குன்று என்னுமூரை எருக்காட்டூர் சேரிக்குப் பிடாகையான எனத் திருக்கடவூர்க் கல்வெட்டுக்கள் கூறுகின்றன. தாயன் என்பார்க்கு மகனாதலால் இவர் தாயங்கண்ணனாரெனவும், தாயங்கண்ணாரென்ற பெயருடையார் பலர் இருத்தலின், அவரின் வேறுபடுத்த இவர் எருக்காட்டூர்த் தாயங்கண்ணாரெனவும், சான்றோரால் குறிக்கப்படுவாராயினர். தாயங்கண்ணனார், தாயன் என்பார்க்கு மகனாவர். தாயனார் எருக்காட்டூரில் வாழ்ந்தவர். கண்ணனார் எருக்காட்டூரினராதலால் எருக்காட்டூரித் தாயங்கண்ணனார் எனப்படுவாராயினர் என்பர்"[64] "தாயாங்கண்ணனாரும், எருக்காட்டூர் தாயங்கண்ணனாரும் ஒருவரோ, வேறோ தெரியவில்லை"[65] என்பர் உ.வே. சாமிநாதையர்.

இவர் இயற்றிய பாடல்கள் பதினொான்று. இவற்றுள் அகநானூற்றில் ஏழுபாடல்களும் (105, 132, 149, 213, 237, 319, 357), குறுந்தொகையிலொன்றும் (319), நற்றிணையில் ஒன்றும் (219), புறநானூற்றில் இரண்டு (3256, 397) பாடல்களும் அடங்கும்.

## தாயங்கண்ணியார்

சங்கச் சான்றோர்களில் தாயங்கண்ணனார் என்ற ஆண்பாற் புலவர் போன்று தாயங்கண்ணியார் என்ற பெண்பாற் புலவரொருவர் உளர். இவரது இயற்பெயர் 'கண்ணியார்' தாயன் என்பது தந்தையின் பெயர். தந்தையின் பெயருடன் சேர்த்து அழைக்கப்பட்ட புலவர். "தாயங்கண்ணனார் என்ற பெயரில் பல புலவர்கள் வாழ்ந்தால் அவரிலிருந்து வேறுபடுத்த எருக்காட்டூர் தாயங்கண்ணனார் என்றொரு புலவர் திகழ்ந்தார். "இவ்வூருக்கும், தாயங்கண்ணியாருக்கும் தொடர்புடையதாகக் கருதி, தாயம் என்பது உரிமை என்று பொருள்படும். எருக்காட்டூரைத் தாயமாகப் பெற்ற பெருமைமிகக் குடியோடு தொடர்புடையார்"[66] என்பர் புலவர். கா.கோவிந்தன்.

தாயங்கண்ணியார் என்ற பெயரைத் தாய், அம். கண்ணி, ஆர் என்று பிரிக்கலாம். தாய் என்பது அன்னையைக் குறிக்கும். அம் சாரியை கண்ணி மலர்க்கொத்து. இவை சேர்ந்து அமைந்த பெயர் தாயங்கண்ணியார். "தாயன் என்பது தந்தையின் பெயர் என்று கொள்வதை விடப் புலவர் பெயர் என்பதே பொருத்தமாகும். 'தாயம்' என்று ஒரு சொல்லாகக் கொண்டு தாயுரிமையுடைய கண்ணியர் என்று இவரைக் கொள்வதும் ஒவ்வும்"[67] என்பர் கா. அமுதா.

இவர் புறநானூற்றில் ஒரு பாடலை மட்டும் (250) பாடியுள்ளார்.

## துறையூர் ஓடைக்கிழார்

துறையூர் என்பது காவிரிக்கரையின்கண் உள்ளதோர் ஊர். இவ்வூரில் ஓடைக்கிழார் என்னும் புலவர் வாழ்ந்தனர். சோழநாட்டுத் துறையூரில் பிறந்தாலும், ஆய் அண்டிரன் வாழும் பொதிய மலைக்குச் சென்று அவனைப் புகழ்ந்து பாடி தம் வறுமையை போக்கிக் கொள்கிறார். இவர் வேளாண் மரபினர். இருப்பினும் இவரது வறுமையைப் போக்க, ஆய் அண்டிரனிடம் தஞ்சம் புகுகிறார். இவர் தான் வாழும் துறையூரை, 'தண்புனல் வாயிற்றுறையூர்' குறித்துப் பாடுவது குறிப்பிடத்தக்கது. இப்பெயருக்கு துறையூர் அரிசில்கிழார் என்னும் பாடவேறுபாடும் ஏட்டில் காணப்படுகிறது.

இவர் பாடிய புறநானூற்றுப் பாடலொன்று (136) சங்கத் தொகை நூல்களில் காணக்கிடக்கின்றது.

## நல்லாவூர் கிழார்

இவர் வேளாண் குடியைச் சார்ந்தவர். இவருக்கு இப்பெயர் ஊர் பற்றி வந்த பெயர். இவரது இயற்பெயர் இன்னதென்று தெரியவில்லை. இவர் பாடிய அகப்பாடல் சங்க காலத்தில் நடந்த 'வதுவைச் சடங்கை' விரித்து விளக்குகிறது.

இவர் அகநானூற்றில் ஒரு பாடலையும் (86), நற்றிணையில் ஒரு பாடலையும் (154) பாடியுள்ளார்.

## நெய்தற் சாய்த்துய்த்த ஆவூர் கிழார்

இவருக்கு இப்பெயர் ஏன் ஏற்பட்டது எனத் தெரியவில்லை. ஆவூர்க்கிழார் என்ற புலவரும் சங்கத் தொகை நூல்களில் காணப்படுவதால், அவரினின்று இவரை வேறுபடுத்த நெய்தற் சாய்த்துய்த்த ஆவூர்கிழார் எனப் பெயர் பெறுகிறார். இவர் வேளாண் மரபினரைச் சேர்ந்தவர். இவர் நெய்தல் திணையைச் சுட்டிப்பாடவில்லை. இவரது பாடலிலும் இத்தொடர் காணப்படவில்லை. இவர் பாடிய பாடல் குறிஞ்சித் திணையில் அமைந்துள்ளது. எனினும் இவருக்கு இப்பெயர் ஏன் வந்தது எனத் தெரியவில்லை.

இவர் அகநானூற்றில் ஒரு பாடலை (112) மட்டும் பாடியுள்ளார்

## பெருங்கோழி நாய்கன் மகள் நக்கண்ணையார்

சோழநாட்டுப் பெண்பாற் புலவர்களில் பெருங்கோழி நாய்கன் மகள் நக்கண்ணையாரும் ஒருவர். கண்ணன் என்பதன் பெண்பாற் பெயர் கண்ணை என்பதாகும். 'ந' என்ற சிறப்புச் சொல்லும், ஆர் என்ற மரியாதை விகுதியும் இணைந்து நக்கண்ணையார் எனப்பட்டார். இவர் பெயர் புறநானூற்றில் பெருங்கோழி நாய்கன் மகள் நக்கண்ணையார் என்று காணப்படுகிறது. அகப்பாடல்களில் நக்கண்ணையார் என்றே குறிப்பிடப்பட்டுள்ளது. இருவரும் ஒருவரே என்ற கருத்தை உ.வே. சாமிநாதையரும்”[68] ஔவை சு. துரைசாமிப்பிள்ளையும்[69] ந. சஞ்சீவி[70] தாயம்மாள் அறவாணன்[71] ஆகியோர் குறிப்பிடுவர். பெ. சு. மணி[72] இருவரையும் தனித்தனிப் புலவராகக் கருதுவர். இவர் பெயரில் உள்ள

பெருங்கோழி நாய்க்கன் இவரது தந்தையைக் குறிக்கும். இவர் உறையூரில் வாழ்ந்த வணிக மரபினர். மாநாய்க்கன் என்ற பெயரை இளங்கோவடிகள், சிலப்பதிகாரத்தில் குறிப்பதால் பெருங்கோழி நாய்க்கன் என்பது இயற்பெயராகும். இவ்வூர் புதுக்கோட்டை மாவட்டத்திலுள்ள பெருங்களூரே. கோழியூரான உறையூரை வேறுபடுத்தவே இவ்வூர் பெருங்கோழியூர் எனப்பட்டது. பெருங்கோழியூரில் வாழ்ந்து வந்த பெரிய நாவாய் வணிகர் இவர். மாநாய்கன் என்பது கடல் வணிகத்தைக் குறிப்பதாகும். நக்கண்ணையார் தித்தனின் மகன் போர்வைக் கோப்பெருநற்கிள்ளி என்னும் சோழ இளவரைசனை கண்டு காதல் கொண்டவர். ஆயினும் இஃது ஒருதலைக் காதலாகும்.

இவர் நற்றிணையில் இரண்டு பாடல்களையும் (நற். 19, 87) அகநானூற்றில் ஒரு பாடலையும் (அகம்.252), புறநானூற்றில் மூன்று பாடல்களையும் (புறம். 83, 84, 85) ஆக மொத்தம் ஆறு பாடல்களை இயற்றியுள்ளார்.

## வெள்ளைக்குடி நாகனார்

இவர் சோழநாட்டில் வெள்ளைக் குடியின்கண் இருந்த நாகன் எனப்படுவர். சோழன் குளமுற்றத்துஞ்சிய கிள்ளி வளவனை இவர் பாடியுள்ளார். எனவே, இவர் சோழ நாட்டைச் சார்ந்த புலவர் என்பது புலனாகிறது. அக்காலத்து இவருக்குள்ள நிலங்களுக்கு வரிச்செலுத்த முடியாதவராய்த் தம்மீது நிலுவை நின்றதற்கஞ்சி, அரசனைச் 'செவியறிவுறூஉ' என்னும் பொருளில் பாடல் அமைத்து பாடி, அவனது அவைக்களத்துச் சென்று அதனைப் படித்துப் பொருள் கூறித் தாம்

செலுத்த வேண்டிவரியை தள்ளிவிடும்படி செய்து கொண்டார் என்ற செய்தியை இவர் புறப்பாடலின் மூலம் அறிய முடிகிறது.

இவர் இயற்றிய பாடல்கள் மூன்று. அவை புறநானூற்றிலொன்றும் (35) நற்றிணையில் இரண்டும் (158, 196) ஆகும்.

## மாவளத்தன்

திருமாவளவனுக்குப் பின்னர் சிறந்து விளங்கிய அரசர்களுள் நலங்கிள்ளி குறிப்பிடத்தக்கவன். இவனது தம்பி மாவளத்தான். "இவனோ, பிறர் கூறிய பழிகளையும் பொறுக்கும் பண்பு உடையவன். இக்குணம் இவனுக்கு இவன் பிறந்த குடிதந்த பெரும் பண்பாகும். இவன் குடிவந்தார் தமக்குப் பிழை புரிந்தாரையும் பொறுக்கும் பேருள்ளம் படைத்தோராவர். புலவர்க்கும் தலைவனுக்கும் பண்பு இவனிடம் உண்டு"(73) என்பர். மா. இராமாணிக்கனார்.

இவர் குறுந்தொகையில் ஒரு பாடலை (348) மட்டும் பாடியுள்ளார்.

## ஆய்வு முடிவுகள்

1. சங்கப் பாடல்களில் சோழநாட்டைச் சேர்ந்த புலவர்களின் மொத்த எண்ணிக்கை ஐம்பது இவர்களில் ஐந்து பெண்பாற் புலவர்களும், ஆறு அரசப்புலவர்களும் அடங்குவர். அகம்பாடிய புலவர்கள் 38. புறம்பாடிய புலவர்கள் 27. அகமும் புறமும் பாடியவர்கள் 12 பேர்.
2. சோழநாட்டுப் புலவர்களின் பெயர்கள் அவர்கள் வாழ்ந்த ஊருடனும், தந்தையின் பெயருடனும், கணவர் பெயருடனும், உடல் உறுப்புகளின் அடிப்படையிலும், செய்த தொழில்ப்பெயர்களுடனும், அவர்களுக்கு வழங்கிய பட்டங்களை இணைத்தும் பெயர் பெற்றுள்ளனர். தந்தையும், மகனும் (ஆவூர்கிழார் - ஆவூர்கிழார்மகனார் கண்ணத்தனார்) புலவர்களாகத் திகழ்ந்துள்ளனர்.
3. புலவர்களின் பெயர்கள் பெரும்பான்மையும் கந்தன், சாத்தன், குமரன், தாமோதரன், காயனார் (சிவன்), உருத்திரன் என்று கடவுளர் பெயராக உள்ளன. தெய்வ நம்பிக்கையின் அடிப்படையில் இப்பெயர்கள் காணப்படுகின்றன.
4. அரிசில்கிழார், குடவாயிற் கீரத்தனார், கோவூர்கிழார், சோழன் நல்லுருத்திரன் ஆகியோர் எண்ணிக்கையில் அதிகமான பாடல்களைப் பாடியுள்ளனர்.
5. சோழநாட்டுப் புலவர்கள் புறப்பாடல்களை விட அகப்பாடல்களியே மிகுதியாகப் பாடியுள்ளனர்.
6. ஆவூர் மூலங்கிழார், உறையூர் முதுகூத்தனார், குடவாயிற் கீரத்தனார், துறையூர் ஓடைக்கிழார் ஆகியோர் தாம் பிறந்து வாழ்ந்த ஊர்களைச் சுட்டிப் பாடல்களைப் பாடியுள்ளனர்.

7. இருப்பிடர்த்தலையார், சோணாட்டு முகையலூர்ச் சிறுகருந்தும்பினார் ஆகியோர் தம் பாடல்களில் இடம்பெற்ற தொடர்களினால் பெயர் பெற்றுள்ளனர்.

8. பெண்பாற் புலவர்கள் தம் வாழ்வில் நடந்த சொந்த நிகழ்வுகளையே பாடுபொருளாகக் கொண்டு பாடல்களை யாத்துள்ளனர்.

9. சோழநாட்டுப் புலவர்கள் அனைவரும் எந்தக் காலத்தில் வாழ்ந்தனர்; யார் யார் காலத்துப்பின் வாழ்ந்தனர் என்று வரையறை செய்து கூறுவதற்குப் போதிய ஆதாரங்கள் இல்லை.

10. சோழநாடு பற்றியோ, சோழ நாட்டில் உள்ள ஊர்களைப் பற்றியோ தொடர்ச்சியாகத் தெளிவான வரலாற்றை இவர்கள் பாடல்களால் அறியமுடியவில்லை.

11. இவர்களில் ஒருவர் பெயரே பலவாறாகக் கூறப்படுகிறது. அவரை உறையூர் முதுகூற்றன், உறையூர் முதுகொற்றன், உறையூர் முதுகொற்றனார், உறையூர் முதுகூத்தனார் என்று நான்கு வகையாகக் குறிப்பர். இங்கு இந்நான்கு புலவர்களின் பாடல்கள் அனைத்தும் உறையூர் முதுகூத்தனார் பாடல்கள் என்றே கொள்ளப்பட்டுள்ளன.

# சான்றெண் விளக்கம்

1. கடல் கிழக்குத் தெற்கு கரைபெரு வெள்ளாறு
குடதிசையாற் கோட்டைக் கரையாம் - வடதிசையில்
ஏணாட்டுப் பண்ணை இருபத்து நாற்காதம்
சோணாட்டுக் கொல்லையெனச் சொல்

- பழம்பாடல்

2. பா. சூரியநாராயணன், தமிழ்நாட்டு வரலாற்றின் இலக்கிய ஆதாரங்கள், ப. 174.
3. வி. கோ. சூரியநாராயணன் சாஸ்திரியார், தமிழ்மொழியின் வரலாறு, ப. 46.
4. ந. சஞ்சீவி, சங்க இலக்கிய ஆராய்ச்சி அட்டவணை, ப. 37.
5. ஔவை. சு. துரைசாமிப்பிள்ளை (உ-ஆ), பதிற்றுப்பத்து மூலமும் விளக்க உரையும், பாடினோர் வரலாறு, பக். 41, 42.
6. ரா. பி. சேதுபிள்ளை, தமிழகம் ஊரும் பேரும், ப. 19.
7. ஔவை சு. துரைசாமிப்பிள்ளை (உ-ஆ), புறநானூறு இரண்டாம் தொகுதி, ப. 60.
8. உ. வே. சாமிநாதையர், சங்கத்தமிழும் பிற்காலத் தமிழும், ப. 105.
9. சிலப்பதிகாரம், வஞ்சினமாலை காதை, 21 வரி. 11-15.
10. வேங்கடராஜுலு ரெட்டியார், பரணர், ப. 83.
11. மயிலை, சீனி வேங்கடசாமி, சங்ககாலத் தமிழக வரலாறு, இரண்டாம் பகுதி, ப. 43.
12. அ. பின்னத்தூர் நாராயணசாமி ஐயர் (உ-ஆ), நற்றிணை நானூறு மூலமும் உரையும், ப. 5.
13. ஔவை சு. துரைச்சாமிபிள்ளை (உ-ஆ), புறநானூறு இரண்டாம் தொகுதி, ப. 239.

14. உ. வே. சாமிநாதையர் (உ.ஆ), குறுந்தொகை மூலம் உரையும் பாடினோர் வரலாறு, ப. 305.

15. பின்னத்தூர் நாராயணசாமி ஐயர் (உ.ஆ), நற்றிணை நானூறு மூலமும் உரையும் ப. 6.

16. வ. த. இராமசுப்பிரமணியம் (உ.ஆ), புறநானூறு மூலமும் தெளிவுரையும், ப. 61.

17. ஔவை. சு. துரைச்சாமிபிள்ளை (உ.ஆ), புறநானூறு முதற்தொகுதி, ப. 8.

18. ……………………, தொல்காப்பியம் பொருளதிகாரம், பேராசிரியர் உரை, ப. 237.

19. ச. வே. சுப்பிரமணியன் (உ.ஆ), தொல்காப்பியம் தெளிவுரை, ப. 315.

20. உ. வே. சாமிநாதையர் (ப.ஆ), சிலப்பதிகார மூலமும் அரும்பத உரையும், அடியார்க்கு நல்லார் உரையும், ப. 284.

21. பொ. வே. சோமசுந்தரனார் (உ.ஆ), பரிபாடல் மூலமும் உரையும், பரிதிரட்டு, பா. 7.

22. ………………………, களவியல் என்ற இறையனார் அகப்பொருள் உரை, ப. 101.

23. மா. இராசமாணிக்கனார், பத்துப்பாட்டு ஆராய்ச்சி, ப. 259.

24. ஔவை. சு. துரைசாமிப்பிள்ளை (உ.ஆ), புறநானூறு இரண்டாம் பகுதி, ப. 133.

25. வ. சுப. மாணிக்கம் (பொ.ப.ஆ), தமிழ்ப்புலவர் வரலாற்றுக் களஞ்சியம், பகுதி – 1, ப. 234.

26. மேலது.

27. A.KARMEGAAM KONE, ANCIENT FAMOUS TAMIL POETS, PART – 1, PP. 51, 52.

28. ஔவை. சு. துரைசாமிப்பிள்ளை (உ.ஆ), புறநானூறு இரண்டாம் பகுதி, ப. 91.

29. ஆர். ஆளவந்தார், இலக்கியத்தில் ஊர்ப்பெயர்கள், தொகுதி –1, பக். 87-88.

30. ....................., தொல்காப்பியம் - பொருளதிகாரம், பேராசிரியர் உரை, ப. 467.

31. உ. வே. சாமிநாதையர் (உ.ஆ), புறநானூறு மூலமும் உரையும், ப. 27.

32. நா. பாலுசாமி (மு.ப.ஆ), வாழ்வியற் களஞ்சியம், தொகுதி – 5, ப. 546.

33. மேலது.

34. வ. சுப. மாணிக்கம் (பொ.ப.ஆ), தமிழ்ப்புலவர் வரலாற்றுக் களஞ்சியம் பகுதி-1, ப. 325.

35. நா. பாலுசாமி (மு.ப.ஆ), வாழ்வியற் களஞ்சியம் தொகுதி - 5, ப. 547.

36. கா. கோவிந்தன், சங்கத்தமிழ்ப்புலவர் வரிசை, தொகுதி - 4, ப. 70.

37. உ. வே. சாமிநாதயைர் (உ.ஆ), குறுந்தொகை மூலமும் உரையும், ப. 107.

38. நா. பாலுச்சாமி (மு.ப.ஆ), வாழ்வியற் களஞ்சியம், தொகுதி - 5, ப. 549.

39. கா. கோவிந்தன், சங்கத்தமிழ்ப்புலவர் வரிசை, தொகுதி - 9, ப. 84.

40. ஔவை. சு. துரைசாமிப்பிள்ளை (உ.ஆ), புறநானூறு, முதற்தொகுதி, ப. 60.

41. அ. பின்னத்தூர் நாராயணசாமி ஐயர் (உ.ஆ), நற்றிணை மூலமும் உரையும், ப. 15.

42. மொ. அ. துரையங்கசாமி, சங்ககாலச் சிறப்புப் பெயர், ப. 63.

43. உ.வே. சாமிநாதையர் (உ.ஆ), புறநானூறு மூலமும் உரையும், ப. 186.

44. நா. பாலுச்சாமி (மு.ப.ஆ), வாழ்வியற்களஞ்சியம், தொகுதி – 10, ப. 702.

45. ஔவை. சு. துரைசாமிப்பிள்ளை (உ.ஆ), புறநானூறு முதற்தொகுதி, ப. 207.

46. உ. வே. சாமிநாதையர் (உ.ஆ), குறுந்தொகை மூலமும், உரையும், பாடினோர் வரலாறு, ப. 311.

47. மேலது.

48. அ. பின்னத்தூர் நாராயணசாமி ஐயர் (உ.ஆ), நற்றிணை மூலமும் உரையும், ப. 19.

49. மேலது.

50. உ.வே சாமிநாதையர் (உ.ஆ), குறுந்தொகை மூலமும் உரையும், பாடினோர் வரலாறு, ப. 333.

51. ......................., தொல்காப்பியம் - பொருளதிகாரம் நச்சினார்க்கினியர் உரை, ப. 388.

52. அகம். 60; 13-14.

53. ஔவை. சு.துரைசாமிப்பிள்ளை (உ.ஆ), புறநானூறு, முதற்தொகுதி, ப. 91.

54. அ.பின்னத்தூர் நாராயணசாமி ஐயர் (உ.ஆ), நற்றிணை மூலமும் உரையும், ப. 23.

55. நா. பாலுசாமி (மு. ப. ஆ), வாழ்வியற் களஞ்சியம், தொகுதி - 5, ப. 546.

56. அ. பின்னத்தூர் நாராயணசாமி ஐயர் (உ.ஆ), நற்றிணை மூலமும் உரையும், ப. 22

57. புறம் . 73.

58. புறம் . 75.

59. அ. பின்னத்தூர் நாராயணசாமி ஐயர் (உ.ஆ), நற்றிணை நானூறு மூலமும் உரையும், ப. 23.

60. புறம். 35.

61. வ. சுப. மாணிக்கம், தமிழ்க்காதல், ப. 337.

62. தொல். 999.

63. பின்னத்தூர் நாராயணசாமி ஐயர் (உ.ஆ), நற்றிணை மூலமும் உரையும், ப. 27.

64. ஔவை. சு. துரைசாமிப்பிள்ளை (உ.ஆ), புறநானூறு, இரண்டாம் தொகுதி, ப. 453.

65. உ. வே. சாமிநாதையர் (உ.ஆ), குறுந்தொகை மூலமும், உரையும், பாடினோர் வரலாறு, ப. 360.

66. கா. கோவிந்தன், சங்கத்தமிழ்ப்புலவர் வரிசை-5, பெண்பாற் புலவர்கள், ப. 49

67. கா. அமுதா, சங்ககாலப் பெண்பாற் புலவர்கள் வரலாறும் அவர்தம் இலக்கியக் கொடையும் (ஆய்வேடு), ப. 115.

68. உ. வே. சாமிநாதையர் (உ.ஆ), புறநானூறு மூலமும் உரையும், ப. 51.

69. ஔவை. சு. துரைசாமிபிள்ளை, (உ.ஆ), புறநானூறு முதற்பகுதி, ப. 203.

70. ந. சஞ்சீவி, சங்க இலக்கிய ஆராய்ச்சி அட்டவணை, ப. 57.

71. தாயம்மாள் அறவாணன், மகடூஉ முன்னிலை - பெண்புலவர் களஞ்சியம், ப. 139.

72. பெ. சி. மணி, சங்ககால ஔவையாரும், உலக பெண்பாற் புலவர்களும், ப. 202.

73. மா. இராசமாணிக்கனார், சோழர் வரலாறு, ப. 73.

# இயல் - 3

## அகப்பாடல் திறன்

அகப்பொருளைப் பாடல்களாகப் பாடிய போது பாடல்களின் பாடுபொருள் முதற்பொருள், கருப்பொருள் உரிப்பொருள் என்று முப்பொருளாக அமையப் பாடப்பட்டன. நிலத்தையும் பொழுதையும் பாடும் போது கருப்பொருள்கள் தாமே பாடலில் இடம்பெற்றன. இவற்றை மையப்படுத்திப் பாடுபொருள் அமையும். இவற்றுக்கெனச் சில மரபுகளைத் தொல்காப்பியம் வகுத்திருக்கிறது. ஓர் அகப்பாடலைத் திணை, கிளவி (துறை) என்று காண்பது பாட்டை அறிந்துணர எளிய வழியாகும்; பாட்டுக்குப் பொருள் கொள்வதற்கு ஏற்பத் துறை அமையும்; பாட்டில் இடம் பெறும் முதற்பொருள், கருப்பொருள்களுக்குத்தக திணை அமையும். கூற்று நிகழ்த்துவோர் யார் என்றும், கூற்றைக் கேட்போர் யார் என்றும் தொல்காப்பியம் மரபை வகுத்திருக்கின்றது. இவற்றையெல்லாம் அகப்பாடல் கொண்டு அறியமுடியும். இவற்றை அறிவதன் வழி, பாட்டின் திணை துறையைத் தெளிவாகப் புரிந்து கொள்ள இயலும். இப்பகுதியில் சோழநாட்டுப் புலவர்கள் பாடிய அகப்பாடல்களுக்கு எழுதப்பட்டுள்ள திணையும் துறையும் எவ்வாறு பொருந்துகின்றன என்பது ஆராயப்பெறுகிறது.

## அரிசில்கிழார்

இவர் குறுந்தொகையில் முல்லைத்திணைப் பாடலொன்றைப் பாடியுள்ளார். 'கள்ளைப் பெய்த நீல மணியைப் போன்ற நிறமுடைய கலத்தைப் போல சிறிய வாய்ப்பகுதியையுடைய சுனையின் கண் உளவாகிய பிளந்த வாயினையுடைய தேரைகள், கரடிகை எனும் பறவையைப் போல ஒலிக்கும் நாட்டின் தலைவன், களவுக்காலத்தில் சென்ற திங்களில், நீண்ட பொழுது விளங்கும் முழுநிலா நாளில் என்னுடைய நெடிய தோள்களைத் தழுவினான். அதனால் இன்றும் அவன் சூடிவந்த முல்லையின் நறுமணம் என்தோள்களில் கமழ்கின்றன' எனத் தோழி 'கடிநகர்புக்கு, நலம் தொலையாமே நன்கு ஆற்றினாய்' என்றாட்குத் தலைவி உரைக்கும் முகமாக இப்பாடல் அமைந்துள்ளது.

## முல்லையின் மணம்

தலைவன் சென்ற திங்களில் தலைவியை மணத்தானாயினும் அவன் சூடிவந்த முல்லையின் மணம், இன்னும் தன் தோள்களில் வீசுவதாகத் தலைவி கூறுவது, தலைவனின் அன்பு மாறாத பண்பினை விளக்குவதாகும். அம்முல்லையின் மணத்தை இன்னும் நினைத்து மகிழ்ந்து வாழ்வதாகத் தலைவி குறிப்பிடுவதால் இப்பாடலின் (193) திணை முல்லையாயிற்று.

"சிறந்த ஆடவர் மேனியில் முல்லை முகையின் மணமும், மகளிர் மேனியில் செண்பகமலரின் மணமும் இயல்பாகவே காணப்படும். தலைவனின் இயற்கை மணமாகிய முல்லையின் மணம், களவில் அவன்

தன்னைப் புணர்ந்த வழித் தன் மேனியில் படிதலால் அது இன்றும் மணப்பதாயிற்று எனக் கூறல் இயற்கைக்கு மாறாயது"[1] என ரா.இராகவையங்கார் கூறுவர். புணர்ந்த மைந்தர்க்கு மகளிர் மேனியின் மணம் வீசுவதாகப் பாடுதலே மரபாகும். மைந்தர் மேனியின் மணம் மகளிர் மேனியில் நாறுவதாகப் பாடுதல் மரபன்று. நன்மக்கட்கு மணம் இயல்பாகிய நறுமணம், அவர்தம் மேனியில் நிலைத்து நிற்குமேயன்றி, கலந்தாய் மெய்யில் மாறிப்புக்கு நிற்றல் இல்லை. ஆதலின், முல்லை மணம் இன்றும் என் மேனியில் நிற்பதாயிற்று எனக் கூறுதாகக் கொள்வதே ஏற்புடையதாகும். இன்றைக்கு எனக்கும் இயல்பாகிய செண்பக மணம், அவர் மேனியில் நாறாது, தனக்கு இயல்பாகிய முல்லையின் மணமே நாறுவதாய் உளது எனத் தலைவி கூறுவதால் பொருள் உணர்த்தலும் ஏற்புடையதாகும்.

தலைவனும், தலைவியும் இல்லறம் நடத்தும் மனைக்குச் சென்ற தோழீ, நீ வரைவு நாளளவும் நின்நிலம் தொலையாமல் ஆற்றியிருந்தாய் என்று பாராட்ட அது கேட்ட தலைவி, 'அஃது என் வலியன்று; தலைவன் செய்த தண்ணளியே என்று ஆற்றியிருந்தமையால் திணை முல்லையாயிற்று. முல்லை நிலத்திற்குரிய பூ முல்லையையும், தலைவன் பெயரான 'நாடன்' என்ற சொல்லும பாடலில் பயின்று வருதலால் முல்லைத் திணையாயிற்று.

## ஆதிமந்தி

இவர் இயற்றிய மருதத்திணைப் பாடலொன்று குறுந்தொகையில் (31) இடம்பெற்றுள்ளது. அயலார் தலைவியை மணம் செய்யும் பொருட்டு முயன்ற காலத்தில் அதுகாறும் தலைவனைப் பற்றிய செய்தியை

வெளியிடாத தலைவி, நான் ஆடுகளத்தில் துணங்கைக் கூத்தாடும் இயல்புடையேன்; என்னோடு நட்பு செய்து பிரிந்தமையால், என் கைவளைகளை நெகிழச்செய்த தலைவன் அத்துணங்கைக் கூத்திற்கு தலைக்கை தந்தான். அவன் இப்போது வீரர்கள் கூடி எடுக்கும் வில்விழாவின் கண்ணும், மகளிர் தமக்குரிய மள்ளரைத் தழுவியாடுகின்ற துணங்கைக் கூத்தின்கண்ணும் இவையல்லாத பிற இடத்துத் தேடியும் காணக்கிடைத்திலேன்' என்று புலம்புவதாக இப்பாடல் அமைந்துள்ளது.

கரிகாற் சோழனின் மகனான ஆதிமந்தியார், தன் கணவனான ஆட்டனத்தியைத் தேடித் திரிந்ததாகப் பாடிய இப்பாடல் அகப்பொருளுக்குரிய இலக்கண மரபுடன் புனைகிறார். 'சுட்டி ஒருவர் பெயர்கொளப் பெறார்' என்ற அகப்பொருள் இலக்கியக்கொள்கையைப் பின்பற்றிப் இப்பாடல் அமைந்தாலும் தலைவிக்கு உரிய மாண்புகளில் குறிப்பிடத்தக்கது, கிழவோர்ச் சேர்தல் கிழத்திக்கில்லை என்பதாகும். எனினும் இக்கருத்தைச் சங்க இலக்கியப் பாடல்களுடன் ஒப்பிட்டு நோக்கும் தேவை ஏற்படுகிறது.

தொல்காப்பியர் தலைவிக்குரிய பண்புகளை அகத்திணையில், களவியல், கற்பியல், பொருளியல், ஆகிய இயல்களில் விளக்குகிறார். தலைவி தலைவனுடன் கடல் கடந்து செல்லும் வழக்கம் இல்லை (தொல்.அக.34) என்றும், மடலேறுதல் மகளிர்க்கு இல்லை (தொல்.அக.35) என்றும் குறிப்பிடுகிறார்.

தலைவி தன் கற்பைக் காக்க உறுதிபூண்டு பேசுமிடங்களைக் களவியலில்,

‘உயிரினும் சிறந்தன்று நாணே; நாணினும்
செயர்தீர் காட்சிக் கற்புச் சிறத்தன்று எனத்
தொல்லோர் கிளவி புல்லிய நெஞ்சமொடு
காமக்கிழவன் உள்வழிப் படினும்
தாவில் நன்மொழி கிழவி கிளப்பினும்
ஆவகைப் பிறவும் தோன்றுமன் பொருளே’

(தொல். 1059)

என்று குறிப்பிடுகிறார். காமக்கிழவோன் உள்வழிப்படல் ‘தலைவிக்குரிய செயலாகக் குறிப்பிடும் இடம் உற்றுநோக்கத்தக்கது.

## உள்வழிப்படுதல்

உள்வழிப்படல் என்ற சொல்லை உள் + வழி + படுதல் எனப் பிரிக்கலாம். உள் என்ற சொல் இடம், உட்பொருள், உள்ளென்னேவல், மனம் என்ற பொருள்களைத் தருகிறது. உள்கல், உள்குதல், உள்ளல் என்ற சொற்கள் ‘நினைத்தல்’ என்ற ஒரு பொருளையே குறிக்கின்றன. ‘உள்வழிக் கடந்தோன்’ என்றசொல் கடவுளைக் குறிக்கும். உள்ளத்தின் வழியே கடந்து சென்றால் இறைவனை அடையமுடியும் என்பது பொருள். உள்வழிப்படல் என்ற சொல் ‘உள்ளத்தின் வழியே செல்லுதல்’ என்ற பொருளைக் குறிப்பதை அறிய முடிகிறது. எக்காலத்தும் ஒரு பெண்ணுக்கு உயிரை விட நாணம் சிறந்தது. நாணத்தை விட குற்றமற்ற அறிவார்ந்த கற்புச் சிறந்தது. இதனை உட்கொண்ட மனத்துடன் தன் காமத்திற்கு உரியவனாகிய தன் தலைவன் இருக்குமிடம் தேடிச்செல்ல நினைத்து பேசினும், குற்றமற்ற பிற நன்மொழிகளாய் அதனொடு

தொடர்புடையனவற்றைத் தலைவி சொன்னாலும் அவ்வகைப்பட்டன பிறவும் பாடுபொருளாக அக இலக்கியத்தில் இடம்பெறும் என்பது மேற்கூரிய நூற்பாவின் அடிக்கருத்தாகும்.

இளம்பூரணர் "உயிரினும் நாண் சிறந்தது; அதனினும் குற்றத்தீர்ந்த காட்சியினையுடைய கற்புச் சிறந்தது என முன்னோர் கூற்றையுட்கொண்டு தலைவன் உள்ளவிடத்துச் செலலும் வருத்தமில்லாச் சொல்லைத் தலைவி சொல்லுதலுமாகிய அவ்வகைப் பிறவும் தோன்றும் அவை பொருளாம்"(2) என்று உரைசெய்கிறார். இவ்வாறு செய்தல் பொருளல்ல என்று கூறற்க என்றுவாறு என விளக்கமும் தருகிறார்.

பண்டைக் காலத்தில் பொதுவாகத் தலைவனைத் தலைவி தேடிச் செல்வது இழுக்கான செயல் எனக் கருதப்பட்டடது. தொல்காப்பியத்தை அடியொற்றிச் சங்கப் பாடல்களும் அமைகின்றன. இளம்பூரணர் கருத்துப்படி, தலைவி தலைவன் இருக்குமிடத்தைச் சென்று அடையலாம் என்றால் அவர் எடுத்துக் காட்டும் பாடலில் அத்தகைய குறிப்பு இல்லை. தலைமகள் தன் நெஞ்சிற்கும் சொல்லுவானாய் தோழி கேட்பச் சொல்லியது என்ற துறைபட அமைந்த குறுந்தொகைப் பாடலில் (11) தலைவி, தலைவன் இருக்குமித்தை அடைவோம்! எனத் தன் நெஞ்சிற்குக் கூறிய பாடலையே எடுத்துக்காட்டுகிறார். இந்தப் பாடலில் தலைவன் இருக்குமிடத்தைத் தலைவி சென்று சேர்ந்ததாகக் குறிப்பு இல்லை. இதனை,

'எழுவினி வாழியென் நெஞ்சே

.....................................

மொழிபெயர் தேத்தா ராயினும்

வழிவிடல் சூழ்ந்திசின் அவருடை நாட்டே'

(குறுந். 11:4-8)

என்ற பாடலடிகள் மெய்ப்பிக்கும். எனவே தொல்காப்பியர் குறிப்பிடும் உள்வழிப்படுதல் என்ற சொல்லாட்சி, தலைவன் இருக்குமிடத்தைத் தலைவி தானே அடைதல்' என்ற பொருளை ஒருபோதும் வலியுறுத்தவில்லை. தொல்காப்பியர் பொருளியலில்,

'உம்பும் உயிரும் வாடியக் கண்ணும்

என்னுற் றனகொல் இவையெனின் அல்லதைக்

கிழவோற் சேர்தல் கிழத்திக்கு இல்லை'

(தொல். 1149)

எனப் 'பிரிவால் உடம்பும் உயிரும் வாடியபோதும்' இவை ஏன் இப்படியாயின என வருந்துவதல்லது, தலைவன் இருக்குமிடம் தேடிச்செல்வது தலைவிக்கு இல்லை என மீண்டும் வலியுறுத்துகிறார். தனித்து நெஞ்சோடு உசாவுங்காலத்து தலைவனிருக்கிமிடம் போவோமா? எனக் கூறுவதுண்டு. ஆனால் அவ்வாறு தலைவனை நாடிச் செல்லுதல் இல்லை என்றும் குறிப்பிடுகிறார். இவ்வாறு தலைவன் இருக்குமிடம் செல்வோமா? என்ற கூற்று மடற் கூற்றையொத்தது.

தலைவன் 'மடலேறுவேன்' என்று கூறுவது அன்பின் ஐந்திணை. அதுபோலவே தலைவி, தலைவன் உள்வழிப்படுவதாகக் கூற்று

நிகழ்த்துவாளே தவிர, அவ்வாறு உள்ள இடத்துத் செல்லுதல் இல்லை. வெள்ளூர் கிழார் மகனார் வெண்பூதியாரின் குறுந்தொகைத் தலைவி, தலைவனின் பிரிவால் வாடிய வழி, உலன்று,

> 'யாங்கண் செய்கம் எழுகென ஈங்கே
> வல்லர் கூறி இருக்கும் .........................'
>
> (குறுந். 219;4-5)

என்று பாடுகிறார். தலைவனே தலைவியை நாடிச்செல்லும் இயல்பு வழக்கத்தில் உண்டு. இந்தத் தமிழ்ப் பண்பாடே இன்றும் திருக்கோயில் வழிபாட்டு நெறிமுறைகளில் ஒன்றாகப் பின்பற்றப்பட்டு வருகிறது. திருக்கோயில்களில் வழிபாட்டு நெறிமுறைகளின் இறுதி நிகழ்ச்சியாக ஒவ்வொரு நாளின் முடிவிலும் இறைவன் இறைவி இருக்கும் இடத்திற்குச் சென்று பள்ளியறையில் துயிலும் முறை பின்பற்றப்படுகிறது. எனவே தலைவன் தலைவியை நாடிச் செல்லாமே தவிர தலைவி தலைவனைத் தேடிச் செல்லும் மரபு இல்லை என்பது வெளிப்படை.

## புதிய பொருள்

ஆதிமந்தியின் கணவன் கழார் நகரினை அடுத்து காவிரியில் புதுவெள்ளப் புனல் விழாவில் அடித்துச் செல்லப்பட்ட நிலையில், தன் கணவனை தேடி ஊர் ஊராகச் சென்று அலைந்து புலம்பிய அவல நிலையைப் பரணர் தம் அகப்பாடல்களில் (அகம்.76, 135, 222, 236) குறிப்பிடுகிறார். ஔவையாரும், வெள்ளிவீதியார் தன் கணவனைத் தேடி அலைந்து திரிந்த செய்தியைத (அகம். 147) குறிப்பிடுகிறார். பரணரும், ஔவையாரும் முறையே ஆதிமந்தி, வெள்ளிவீதியார் ஆகியோர் தம் காதலர்களைத் தேடி அலைந்த செய்தியை உவமையாவே

கையாண்டுள்ளனர் என்பது இவண் நோக்கத்தக்கது. தொல்காப்பியர் தலைவனிருக்கும் இடத்தைத் தானே தேடிச் செல்லும் வழக்கம் இல்லை எனத் தெளிவாகக் குறிப்பிட்டுள்ள போதும், சங்க இலக்கியத்தில் ஆதிமந்தியார் பாடல் (குறுந். 31) மட்டும் தன் தலைவனை ஊர் ஊராகத் தேடி அலைந்து புலம்பிய நிலையைப் பாடியுள்ளார். "பெண் எழுத்தைத் தனிப்பட்ட முறையில் விமர்சனம் செய்து ஆய்வுக்கு உட்படுத்த வேண்டிதற்கான தேவை இன்று வரை நீடித்து வருகிறதென்றே கூறவேண்டும். படைப்பிலக்கியம் புனைவதற்காக எழுதுகோலைப் பெண் ஏந்தத் தொடங்கிய காலகட்டத்திலேயே ஆணாதிக்க கருதியல்கள் சமூகத்தில் நிலைப்பட்டுப் போய் வேர்பிடித்துத் தழைத்து விட்டன என்பதும் அவற்றின் தாக்கங்கள் குடும்பத்தளத்தில் மட்டுமின்றி கலை, இலக்கியம், சமயம் அரசியல் எனச் சமுதாயத்தின் பலதளங்களிலும் தமது சுவடுகளை அழுத்தமாகப் பதியத் தொடங்கிவிட்டன"(3) என்ற கருத்தாக்கம் ஈண்டு மணங்கொள்ளத்தக்கது.

சங்க அகப்பாடல்களில் அவற்றின் திணை, துறைக் கட்டமைப்பிற்கேற்பக் காதல் வயப்பட்ட பெண்ணின் மன ஆற்றாமைகளையும், உடல் சார்ந்த பசலைத் துன்பங்களையும் ஆண்பாற்புலவர்கள் போலவே பெண்பாற் புலவர்கள் காட்டியுள்ள போதிலும் ஒரு சில பாடல்கள் பெண்ணுக்குரிய மரபு வழி மதிப்பீடுகளை விமர்சனம் செய்து அவற்றைத் தாண்டும் எல்லைப் பெண் துணிவதைச் சித்திரிப்பதாகவே உள்ளன. அவற்றுள் 'யாண்டும் காணேன் மாண்தக் கோணை' என்ற ஆதிமந்தியாரின் பாடலும் குறிக்கத்தக்கது. ஆதிமந்தியார் தன் கணவனைக் காவிரியாற்றில் தொலைத்த நிலையில் அவனைத் தேடிச்செல்கிறாள். தன் கணவன் என்ன ஆனான்' என்று தெரியாமல் அவனைத் தேடிச்செல்கிறாள். ஆதிமந்தியார் சென்ற செலவின் நோக்கம்

வேறுபட்டது. தலைவி, தலைவனை புணர்ச்சியின் நோக்கமாகத் தான் தேடிச்செல்லுதல் கூடாது' என்று வலியுறுத்துகிறார் தொல்காப்பியர். ஆதிமந்தியார் புணர்ச்சி நோக்கமின்றித் தன் முதல்வனையே (கணவன்) தொலைந்த நிலையில் தேடிச் செல்லுதல் தமிழ்ப்பண்பாட்டு மரபைச் சிதைப்பதாகப் பொருள்கொள்ளக் கூடாது. தலைவி தன் முதலையே (முதல்வனையே) தொலைத்த நிலையில் தலைவன் உள்ளவிடத்துத் தேடிச்செல்லலாம் என்ற புதிய விதி தொல்காப்பியத்துள் மறைந்து நிற்பதை ஆதிமந்தியாரின் பாடல் வழி அறியமுடிகிறது.

## ஆர்க்காடுகிழார் மகனார் வெள்ளைக் கண்ணத்தனார்

இவர் இயற்றிய அகநானூற்றுப்பாடல் (64) முல்லைத் திணையிலானது. இஃது வினைமுற்றி மீளும் தலைமகன் தேர்பாகற்குச் சொல்லியது எனும் துறையில் அமைகிறது.

தேர்ப்பாகனே! உலகத்தையே கடக்கவல்ல பறவை போன்ற வேகம் கொண்ட பிடரிமயிற் பொருந்திய செருக்குடைய குதிரையினை நன்கு செலுத்தும் கூறுபாடு அமைந்த அழகினைக் கொண்ட கடிவாள வரினைத் தேர்ந்து கொள்வாயாக! செம்முல்லையின் அரும்பு மலர்ந்த குளிர்ச்சி மிக்க செல்வதற்கு இனிதான பெருவழியில் அழகாக விளங்கும் அகன்ற இலையினையும், எண்ணெய் வழியப் பெற்ற வலிமை பொருந்திய தண்டினையும் உடைய வெற்றி தரும் வேலை ஏந்திய ஏவலர்கள் செல்லும் வேகத்தைவிட விரைந்து செல்லுமாறு நம் செலவினை மேற்கொள்கிறோம். விரைந்தோடும் மழைநீர் வரிவரியாக இழைத்த செம்மண் நிலப்பாகத்தில் தேர்விடும் வழியில் உள்ள ஈரமணலைக் காட்டுக் கோழி கிளரும். பாம்பு வாழும் புற்றின் ஈரமான மேற்புரத்தைக் குத்திக் கொம்பில் மண்கொண்ட தலைமை சான்ற ஆனேறு எக்காலத்தும்

தன்னுடன் உடன் நிற்றலை விரும்பிய தன் இளைய பசுவினைத் தழுவிய வண்ணம் மாலைப்பொழுதில் ஊர்நோக்கி வரும். பறவைகள் யாவும் ஒருங்குசேர்ந்து கன்றுகளை அழைக்கும் குரலையுடைய அம்மாலைப் பொழுதில் தொழுவங்களில் சென்றுசேரும் அப்பசுக்கள் பூண்டுள்ள தெளிந்த ஓசையுடைய மணிகள் விட்டுவிட்டு ஒலிக்கும். கேட்பதற்கு இனிய ஒலியினைத் தனிமைத் துன்பத்தைக் கொண்டுள்ள மாலைப்பொழுதில் கேட்கும் தோறும், கலங்கிய நிலையில் வாழ்பவளாகிய நம் தலைவியின் செயலற்ற துயர நிலையை நீக்கும் காலம் இதுவேயாகும்' என்று தலைவன் மாலைப் பொழுதின் இயல்பையும், தலைவியின் பிரிவுத் துன்பத்தையும் எடுத்துக் கூறுவதால் பாடலின் திணை முல்லையாயிற்று. தலைவி தலைவனைப் பிரிந்து ஆற்றியிருத்தலை''

'புலம்பு கொள் மாலை கேட்டொறும்
கலங்கினள் உறைவோள் கையறு நிலையே'

(அகம். 64;16-17)

என்று குறிப்பிடுவதன் மூலம் முல்லைத் திணை ஒழுக்கம் குறிக்கப்படுகிறது.

## ஆலங்குடி வங்கனார்

இவர் குறுந்தொகையில் இரண்டு மருதத்திணைப் பாடல்களையும் (8, 45), நற்றிணையில் மூன்று மருதத்திணைப்பாடல்களையும் (230, 330, 400), அகநானூற்றில் ஒரு மருதத்திணைப்பாடலையும் (106) பாடியுள்ளார். இவர் பாடிய அணைத்துப்பாடல்களும் மருதத்திணையைச் சார்ந்தவை. இவர் மருதம் பாடுவதில் வல்லவர் எனத் தெரிகிறது.

தலைவன் பரத்தமை பூண்டு ஒழுகிய செய்திளை அறிந்த தலைவி, தன் தலைவனுடன் பரத்தையை தொடர்பு படுத்திப் பேசினாள். இதனைக் கேட்டுப் பொறுக்காத பரத்தை, நாம் அதற்குக் காரணமான யாதொன்றும் செய்யமாட்டோம். ஆயினும் அவள் கூறும் பழியினின்றும் நீங்கப் பெற்றிலோம். ஆதலின், வெற்றி பொருந்திய பாண்டியன் விளங்கும் வாட்படையினையும், குற்றமற்ற படைக்கலப்பயிற்சியையும் கொண்டு, செல்லுகின்ற போரினை வெல்லுந்தோறும் கற்றாகிய உணவினைப் பெறும் பாணன், தான் அடிக்கும் மத்தளத்தின் கண்போலும் தன் வயிற்றிலே அவள் அறைந்து கொள்ளுமாறு செறிந்த வளைகள் ஒலிக்க கைகளை வீசிச் சிறுபொழுது அவள் வாழும் மனையிடத்தே நின்று உலவி வருவோம் எனத் தலைவியை இகழ்ந்து பேசுகிறாள். பாடலில் மருத நிலத் தலைவனை ஊரன் என்று குறிப்பதாலும், மருத நிலத்தின் இயல்பை,

‘எறி அகைந்தன்ன தாமரைப் பழனத்து
பொரி அகைந்தன்ன பொங்குபல் சிறுமீன்
வெறி கொள் பாசடை, உணிஇயர் பைப்பயப்
பறை தபு முது சிரல் அசைவு வந்து இருக்கும்
துறைகேழ் ஊரன் ...................................’

(அகம். 106;1-5)

என விளக்குவதாலும் திணை முல்லையாயிற்று. தலைவி தன்னைப் பழித்துக் கூறினாள் என்பதை அறிந்த காதற்பரத்தை, தலைவன் தன்னுடைய மனைவிக்கு அஞ்சி வாழ்வதாக அவள் சுற்றத்தார் கேட்குமாறு கூறுவதாக இக்குறுந்தொகைப் பாடல் அமைகின்றது.

## ஆடிப்பாவை

வயல் அருகில் உள்ள மாமரத்தின் முற்றி வீழ்ந்த இனிய பழத்தைப் பொய்கையிலுள்ள வாளை மீன்கள் கவ்வி உண்பதற்கு இடனாகிய மருத நிலத் தலைவன், எம்முடைய வீட்டில், எம்மை வயப்படுத்துவதற்காகப் பெருமொழிகளைக் கூறிச் சென்று, தம்முடைய வீட்டில், முன்நிற்பவர் கையையும் காலையும் தூக்கும் போதும் தானும் தூக்குகின்ற கண்ணாடிக்குள் தோன்றும் பாவைபோல, புலவர்வனை ஈன்ற தன்னுடைய மனைவிக்கு அவள் விரும்பிய செயல்களை எல்லாம் செய்கிறான்.

பாடலில் மருத நிலமான வயலை 'பழனம்', 'கழனி' என்ற சொற்கள் குறிக்கின்றன. மருத நிலத்தலைவனை 'ஊரன்' என்ற சொல்லும் குறிப்பதால் திணை மருதமாயிற்று. இப்பாடலைக் காமக்கிழத்தியர் தலைவனை இகழ்ந்தது"[(4)] என் இளம்பூரணரும், "இல்லிடத்திருந்து தலைவனும் தலைவியும் ஊடியும், கூடியும், உணர்த்தியும் செய்த தொழில்களைக் கேட்டு காமக்கிழத்தி இகழ்ந்தது"[(5)] என நச்சினார்க்கினியரும் விளக்குவர்.

## தலைவியின் கலக்கம்

தலைமகற்குப் பாங்காயினார் வாயில் வேண்டிய வழி, தோழி வாயில் நேர்ந்தது என்னும் துறைபட அமைந்த மற்றொரு குறுந்தொகைப்பாடலில், வளம் பொருந்திய ஊரின் தலைவன் விரைந்து செல்வதற்கு உரிய தேரினை ஒப்பனை செய்து, அதில் ஏறி, தூய அணிகலன்களையுடைய பரத்தையர்களைத் தழுவச் சென்றான். அப்பரத்தையர் சேர்க்கையை விட்டு

விடியலில் துயில் எழுந்து தன் இல்லத்தை அடைகிறான். பரத்தையோடு துய்த்த அடையாளங்கள் உடம்பில் வெளிபட்டுத் தோன்றுமாறு இருந்ததைக் கண்டு ‘அவன் சிறுவனுக்குத் தாயாகிய தலைவி, உயர்குடியில் பிறந்தவர் இவ்வாறெல்லாம் இடருறத் தக்கது போலும் என உள்ளம் கலங்கிறாள்.

பரத்தையரை அடைய நினைக்கும் தலைவனின் வேட்கை மிகுதியைச் சுட்ட, அவன் விரைந்து செல்லும் தேரினைச் சுட்டப்பட்டுள்ளது. பரத்தையர் அணிந்த அணிகள் தூயனவேயன்றி, அவர்கள் தூயவரல்லர் என்பது ‘வாலிழை மகளிர்’ என்ற தொடரினால் அறியப்படும்.

பாடலில் மருத நிலைத்தலைவன் ‘ஊரன்’ என்ற சொற்றொடரால் குறிக்கப்பிடுவதால் திணை மருதமாயிற்று. பரத்தையிற் பிரிந்த தலைவன், தனக்கு ஆண்மகள் பிறந்தது அறிந்து காண வருதலும், இல்லுறை மகளிர் தம் தலைவன் செயல்மறந்து ஏற்றுக் கொள்ளுதலும் உலக இயல்பாகும்.

## பார்வை ஒன்றே போதும்

பரத்தை காரணமாகப் பிரிந்த தலைவன் தோழியை தலைவியின் ஊடல் தீர்க்க வாயிலாக வேண்டினான். அதற்கு, ஊரனே! என்னைக் கைவிட்டுப் பரத்தைக்கே அருள்செய்ய, நின்னைக் காணும்போது நேரும் இனிமையொன்றே எனக்குப் போதும் என வாயில் மறுத்தும் சினந்தும் கூறியதாக நற்றிணைப் பாடல் (230) அமைகிறது.

பாடலில் மருதநிலத்தலைவனை ‘ஊரன்’ என்றும், மருத நிலத்தின் இயல்பை,

‘முயப்பிடிச் செவியின் அன்ன பாசடை
கயக்கணக் கொக்கின் அன்ன கூம்பு கூகை,
கணைக்கால், ஆம்பல் அமிழ்ந்து நாறு தண்போது,
குணக்குத் தோன்று வெள்ளியின், இருள் கெட வரியும்
கயற்கணம் கலித்த பொய்கை ஊர!’

(நற். 230;1-5)

என்று குறிப்பிடுவதன் மூலம் திணை மருதமாயிற்று.

## அரிது அரிது

ஆலங்குடி வங்கனார் பாடிய நற்றிணை 330 ஆவது பாடல் ஒரு படி மேலே சென்று, பரத்தையின் காரணமாக தலைவியைப் பிரிந்த தலைவன், மீண்டு தலைவியை நாடி, தலைவியின் ஊடலைத் தணிக்குமாறு தோழியை வேண்டினான். அதனை மறுத்த தோழி, ஊரனே! பரத்தையரை எம் மனையில் தருவித்துக் கூடினாலும் அவராலும் புல்லிய மனத்தின் உண்மை அறிதல் அரிதே! அப்பரத்தையரும் எம் போன்ற கற்புடைமகளிராதல் அதனினும் அரிதே என்று கடிந்து தோழி வாயில் மறுப்பதாக அமைந்துள்ளது.

எருமைக்கடா நரையினம் இனிய பொய்கையில் பாய்ந்து வருத்தம் நீங்கிய பின் தொழுவம் புகாது மருத நிலலிலே தங்கும் இயல்பினை, தலைவனின் பண்பு நலனுடன் ஒப்பிட்டுக் கூறுதலால் பாடலின் திணை மருதமாயிற்று. இதனை,

'தடமருப்பு எருமை பிறழ்சுவல் இரும்போத்து
மடநடை நாரைப் பல்இனிம் இரிய
நெடுநீர்த் தண்கயந் துடுமெனப் பாய்ந்து
நாள்தொழில் வருத்தம வீடச் சேட்சினை
இருள்புனை மருதின் இன்னிழல் வதியும'

(நற். 330;1-5)

என்ற பாடலடிகள் சுட்டும்.

## நெஞ்சத்து உறையோன்

பரத்தை தலைவனைப் புகழ்ந்து' முன்பு நின்று யாதோ புகழ்நதவாறெனின் நின் இன்று அமையாம்' என்று கூறும் முகமாக நற்றிணையில் இருப்பாடலைப் பாடியுள்ளார் ஆலங்குடி வங்கனார். பரத்தைத் தன்னைப்பிரியும் தலைவன் முன்சென்று, ஊர! நீயின்றி நானிருப்பதில் தவறுமுண்டோ? நீ என் நெஞ்சிட்டிருந்து நீங்க அறியவில்லையன்றோ? என்று தலைவனின் இன்றியமையாமையை எடுத்துக் கூறுவதால் இப்பாடலில் குறிப்பிடப்பெறும் பரத்தை இற்பரத்தையாக திகழ்ந்திருக்க வேண்டும்.

தலைவன் தன்னைவிட்டு நீங்கினாலும், தன் மனதில் இருந்து விலகமுடியாது என்பதை, சோழ நாட்டில் அறம் நிலைபெற்றிருப்பதைப் போல, என் உவமையின் வாயிலாக, எடுத்துக்காட்டுகிறார் இப்பாடலின் பரத்தை இதனை,

'மறம் கெழு சோழர் உறந்தை அவையத்து,
அறம்கெட அறியாதாங்கு, சிறந்த
கேண்மையொடு அளைஇ, நீயே
கெடு அறியாய் என் நெஞ்சத்தானே'

(நற். 400;7-10)

என்ற பாடலடிகள் மெய்ப்பிக்கும் பாடலில் மருதநிலத்தலைவனை 'ஊர!' (400;4) என்ற சொற்றொடர் குறிப்பிடுகிறது. மருத நிலமான வயலும் வயல் சார்ந்த இடமான கழனியை, நெல்விளை கழனி' (400;2) என்ற பாடலடியும் மருதத்திணையை உறுதிசெய்கிறது.

ஆலங்குடி வங்கனார் பாடிய ஐந்து அகப்பாடல்களும் மருத்திணையின. முதற்பொருளான வயலும், உரிப்பொருளான "ஊடலும் ஊடல் நிமித்தமும்' மிகவும் இயல்பாக ஓவியமாக புணைந்து, நம் மனதில் நீங்கா இடத்தினைப் பெறுகிறார். இவர் பாடிய பாடல்கள் அனைத்திலும் தலைவனை 'ஊரன்' என்றே குறிப்பிடுகிறார்.

## ஆவூர் கிழார் மகனார் கண்ணத்தனார்

இவர் அகநானூற்றில் குறிஞ்சித் திணைப் பாடலொன்றை பாடியுள்ளார். இப்பாடல் இரவுக் குறிக்கண் வந்து நீங்கும் தலைமகற்குத் தோழி சொல்லி வரைவு கடாயது' என்னும் கூற்றில் அமைந்துள்ளது. தலைவியை மணம் செய்து கொள்வதில் கருத்தின்றி களவின்பத்தையே விரும்பி ஒழுகும் தலைவன் நாள்தோறும் இரவுக்குறியின்கண் வந்து மீண்டான். இதனையறிந்த தோழி, நடு இரவில் நீ கடந்து வரும் இடமோ புள்ளிகளைக் கொண்ட படத்தினை உடைய பாம்பினது தலை

துண்டாகுமாறு வலிய இடியானது முழங்கும் அச்சம் ஏற்படுத்தும் பரந்தகன்ற இடமாகும். அவ்விடத்தே தளர்ச்சியுற்ற உள்ளத்துடன் வேலே துணையாகக் கற்களையுடைய இருள் செறிந்த சிறு வழியில் எதிர்வரும் துன்பத்தை சிந்தனை செய்து வருகிறாள். அவ்வாறு வரும் நின்னிடத்து நினைவைச் செலுத்திப் பொறுப்பதற்கு அரியதான நினைவாகிய துன்பக் கடலை நீந்துவோர் எம்மையன்றி வேறு யாரும் உளரோ? என்று வரைவு வேண்டுகிறாள்.

குறித்திணையின் முதற்பொருள் மலையும், மலை சார்ந்த இடமாகும். இதனை, 'வயங்குவெள் அருவிய குன்றத்து' என்று குறிப்பிடுவதால் இப்பாடலின் திணை குறிஞ்சியாயிற்று. குறிஞ்சிநிலத் தலைவனை 'நாட' (202;8) என்ற சொல் குறிக்கிறது. குறிஞ்சித் திணைக்குரிய உரிப்பொருள் புணர்தலும் புணர்தல் நிமித்தமும் ஆகும். நீ இரவின்கண் வருதலால் வழியின் ஏதப்பாட்டினை நினைத்து யாம் துன்பப்படுதல் போலத் துன்பப்படுவார் வேறு யாரும் இலர் எனத் தோழி கூறுவதால், எமது துன்பம் நீங்கத் தலைவியை விரைந்து மணந்து கொள்க என வரைவு வேண்டுதலால் புணர்தல் நிமித்தமாகிய திருமணத்தை வலியுறுத்தவதாகத் தோழி கூறுகிறாள்.

## ஆவூர் மூலங்கிழார்

இவர் அகநானூற்றில் மூன்று பாடல்களைப் (24, 156, 341) பாடியுள்ளார். அவை முறையே முல்லை, மருதம் பாலை திணைகளில் அமைந்துள்ளது.

தலைவியைப் பிரிந்து வினைவயிற் சென்ற தலைவன் வேற்று நாட்டில் வேந்தன் பாசறையில் இருந்தவன் தான் திரும்பி வருவதாகக் கூறிச் சென்ற பருபவரவு கண்டு தலைவியை நினைத்துக் கூறியதும், வினைவயிற் சென்ற தலைவன் தான் மேற்கொண்ட வினை முடித்தபொழுது தன் நெஞ்சிற்குக்குச் சொல்லியதூஉம் என்ற பொருள் அமையும் படி அகநானூற்றுப் பாடல் (24) அமைகிறது.

## பாசறைப் புனைவு

யாமோ, காவலையுடைய மதிற்கதவினைப் பாய்ந்து குத்துதலாலே பூண் பிளக்கப்பட்டு நுனியின் கூர்மை மழுங்கிப்போய் மொட்டையான வெண்ணிறக் கோட்டினையும் சிறிய கண்களையும் உடைய யானையின் நீண்ட நாவினைக் கொண்ட ஒளிபொருந்திய மணியின் ஓசையும் கழிகளுடன் கட்டப்பட்ட கரிய தோலார் ஆன கேடகத்துப் பொழிகின்ற அம்புகள் தைத்தலால் எழுகின்றன. ஓசையும் நள்ளிரவில் முரசு முழங்கும் ஓலியுடன் சேர்ந்தொலிக்கும். அவ்விரவில் உறையினின்றும் உருவி மீண்டும் உறைக்குள் இடப்படாத வாளினையும் வலிய தோளினையும் இரவில் அயர்ந்து தூங்கும் சேனையினையும், மிக்க சினத்தையும் கொண்ட வேந்தனது பாசறையின் கண் உள்ளோம். அங்கு அவள் எவ்வாறு ஆற்றியிருக்கிறாளோ ? யாம் அறியோம்! என்று தலைவன் தம் நெஞ்சிற்கு உரைக்கிறான்.

பாடலில் முல்லைத் திணைக்கு உரிய காலம் வைகறையை, ‘வயங்கு கதிர் கரந்த வாடை வைகறை’ (24;6) என்று குறிப்பிடுவதால் பாடலின் முற்பகுதி முதற்துறையையும், தலைவன் பாசறையின் புனைவு பிற்பகுதியில் அமைவதால் இரண்டாவது துறையும் பாடற் கருத்தாகப்

பொதிந்து காணப்படுகிறது. முல்லைத்திணையின் உரிப்பொருளான ஆற்றியிருத்தல் 'பனி இருங்கங்கலும் தமியன் நீந்தி' (24;9) என்ற பாடலடி உணர்தும்.

## வரைவு வேண்டல்

ஆவூர் மூலங்கிழார் பாடிய மற்றொரு அகப்பாடல் (156), மருதத்திணையில் அமைந்துள்ளது. களவொழுக்கத்தில் தலைவன் தலைவியை இரு குறியிடத்தும் கண்டு அளவளாவி வந்தான். அதனைக் கண்ட தோழி, தலைவியை குறியிடத்தே விட்டுவந்து, தாய் வெறியாடல் எடுத்தமையையும் தலைவி வருந்துவதையும் தலைவனிடம் கூறிக் குறிப்பாகத் தலைவியை மணந்து செல்லுமாறு தோழி கூற்றில் அமைந்துள்ளது இப்பாடல்.

வயலும் வயல் சார்ந்த இடமும் மருதமாகும். கழனி எனும் சொல்லும் வயலைக் குறிக்கும். இம்முதற் பொருள் மருதத்திற்குரியது. இப்பாடலில் காலப் புனைவு இல்லை. பகன்றை என்பது மருத நிலத்திற்கு உரிய ஒருவகைக் கொடி முதற்பொருளால் இப்பாடல் முல்லைத் திணையாயிற்று. இப்பாடலில் மருதத் திணைக்குரிய ஊடல் பற்றிய குறிப்பு இடம்பெறவில்லை. மாறாக தோழி தலைவனை வரைவு கடாயது என்னும் பொருளில் பாடலில் அமைவதால் இப்பாடல் உரிப்பொருள் மயக்கத்தை அனுமதிக்கிறது. தோழின் கூற்றைக் கேட்பவன் தலைவன் என்பதைப் 'பெரும' என்ற சொல் வெளிப்படுத்துகிறது.

## எங்ஙனம் ஆற்றுவேன்?

பிரிவின்கண் தோழிக்குத் தலைமகள் சொல்லியது எனும் கூற்றில் பாலைத் திணைப் பாடலொன்றையும் ஆவூர் மூலங்கிழார் பாடியுள்ளார். தலைவன் தலைவியைப் பிரிந்து பொருள் ஈட்டச் சென்றான். அவன் குறிப்பிட்ட பருவம் கழிந்தும் வாராமையால் தலைவி ஆற்றாது வருந்தினாள். அது கண்ட தோழி ஆற்றியிருத்தல் நின் கடமை எனக் கூற அதுகேட்ட தலைவி, வந்துள்ள இளவேனிற் பருவத்தைச் சுட்டிக்காட்டி இவ்வின்ப இளவேனிற் பருவத்தே யாரே ஆற்றியிருக்க வல்லார் என கையுற்றுக் கூறுகிறாள். பாடலில் முல்லைத் திணைக்குரிய இளவேனிற் காலம் புனையப்பட்டுள்ளது, இதனை,

> 'மழைகழிந் தன்ன மாக்கால் மயங்குஅறல்
> பதவுமேயல் அருந்து துளங்குஇமில் நல்ஏறு
> மதவுடை நாக்கொடு அசைவீட குரகி
> ..................................................
> யாணர் வேனில் மன் இது'
>
> (அகம். 341;6-12)

என்ற பகுதி விளக்குகின்றன.

## இடைக்காடனார்

இவர் பாடிய பாடல்கள் அனைத்தும் அகப்பாடல்களாகவே அமைந்துள்ளன. அவற்றுள் குறுந்தொகை 251-ஆவது பாடல் முல்லைத்திணையைச் சார்ந்தது. இப்பாடல் தலைவன் கூறிச்சென்ற கார்காலம் வந்தபொழுது தலைவி வருந்த 'இது கார்காலமன்று; இப்பொழுது பெய்வது காலம் அல்லாத காலத்துப் பெய்யும் மழை என்று

தோழி வற்புறுத்துவதாக அமைந்துள்ளது, பாடலில் மாரி பருவம் மாறிப் பெய்யினும் இது கார்காலம் அன்று என்பதை,

‘மடவ வாழி - மஞ்ஞை மா இனம்
காலம் மாரி பெய்தென, அதன் எதிர்
ஆலலும் ஆலின; பிடவும் பூத்தன
கார் அன்று - இகுளை! தீர்க, நின் படரே!

**(குறுந். 251;1-4)**

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன.

இடியின் முழக்கமும், மயிலின் அகவல் ஓசையும், பிடவின் மலர்ச்சியும், கார்பருவம் வந்தமை தலைவிக்கு உணர்த்திய போதிலும் தோழி, தலைவியிடம், அவற்றைப் போல நீ மடவை அல்லையாதலால், அவை உரைப்பதை நம்பவேண்டாம்’ என்றும் யான் உரைப்பதே உண்மை என்றும் கூறினாள். இடியும் மயிலும், பிடவும் தமக்குத் தீமையே செய்தலின் அவற்றை அறியாமையுடையன எனத் தோழி கூறினாள். ஐந்து அறிவுடைய மயில், ஓரறிவுடைய பிடவு ஆகியவை கூறுவதை, ஆறறிவுடைய நாம் உண்மை என நம்புதல் தகாது என உணர்த்தினாள். எனினும் கார்ப்பருவம் வந்திலது என்ற தோழியின் கூற்று, தலைவியை ஆற்றுவிப்பதாக கூறப்பட்ட பொய்யுரையால் திணை முல்லையாயிற்று.

## காலதாமதம்

பொருளீட்டப் பிரிந்த தலைவன் தலைவியிடம் ‘யான் கார்பருவம் தொடங்கும் முன் வருவேன்’ எனக் கூறிச் சென்றான். அப்பருவமும் வந்தது. அப்பருவத்தில் நிகழ்வனவெல்லாம் நிகழ்ந்தன. பின்னரும்

தலைவன் வந்தான் அல்லன்’ என்று தலைவி கூற்றாக அகநானூற்றின் 139-ஆவது பாடல் அமைந்துள்ளது.

இப்பாடலில் முல்லைத் திணைக்குரிய கார்காலப் புனைவே மிகுதியாக இடம்பெற்றுள்ளது. தலைவன் தலைவியைப் பிரிந்து சென்ற நிலையை,

‘இன்னும் வாரார் ஆயின் - நன்னுதல்
யாதுகொல் மற்று அவர்நிலையே ? காதலர்
கருவிக்கார் இடி இரீஇய
பருவம் அன்று, அவர் வருதும் என்றதுவே’

(அகம். 139;16-20)

என்று குறிப்பிடுவதன் மூலம் பாடலின் திணை பாலையாயிற்று. பாடலில், கருவிக்கார் இடிஇரீஇய பருவம் அன்று’ என்று குறிப்பிடுதால் பாலைத்திணைக்குரிய திணை மயக்கம் அனுமதிக்கப்படுகிறது. பாடலில் பிரிவுக்குரிய நோக்கம் தெளிவாகப் புலப்படவில்லை.

## வினைவயிற் பிரிவு

பருவம் கண்டு ஆற்றாமை மீதூரத் தலைமகள் சொல்லியது என்னும் கூற்றில் மற்றொரு முல்லைத்திணைப் பாடல் (194) அமைந்துள்ளது.

இப்பாடலில், வேந்து வினை முடிப்பதற்காகத் தலைவன் தலைவியை பிரிந்து சென்றான். அப்போது கார்பருவத் தொடக்கத்திலேயே

வந்து விடுவேன் எனக் கூறிச்சென்றான். கார்பருவமும் வந்தது. ஆனால் தலைவன் வரவில்லை. அது கண்ட தலைவி ஆற்றாமை மிகுந்தவளாய் வருந்தித் தன் தோழியிடம் கூறுவதால் பாடலின் திணை முல்லையாயிற்று. பாடலில் முல்லைத்திணைக்குரிய காலம் கார்காலம் ஆகும். முல்லைத் திணைக்குரிய சிறுபொழுது வைகறையாகும். இதனை, ன்பெரும்புலர் வைகறைஸ் என்ற சொற்றொடர் குறிக்கிறது. இப்பாடல் தலைவன் போர் வயிற் பிரிதலை, குறித்துப்பாடுகிறது.

## கற்பின் நல்லாள்

வினைமுடித்த தலைவன் தலைவியைக் காணவேண்டும் என்ற பெருவிருப்பினால் தேர்ப்பாகனை நோக்கித் தேரை விரைந்து செலுத்தும் படியாகக் கூறிய முல்லைத்திணைப் பாடலைப் (274) பாடியுள்ளார். பாடலில் கார்காலத்தில் நிகழும் மழைப் பொலிவை,

'இருவிசும்பு அதிர முழங்கி, அரநலிந்து
இகுபெயல் அழிதுளி தலைஇ, வானம்
பருவம் செய்த பானாட் கங்குல்

(அகம். 274;1-4)

என்ற பாடலடிகள் விளக்குகின்றன. பாடலில் தலைவனைப் பிரிந்த தலைவி ஆற்றியிருந்தமையை,

'முல்லைத சான்ற கற்பின்
மெல்இயற் குறுமகள் உறைவுஇன் ஊரே'

(அகம். 274;14-15)

என்று தலைவன் குறிப்பிடுவதால் திணை முல்லையாயிற்று.

வினைமுற்றிய தலைவன் தேர்ப்பாகற்குச் சொல்லியது தன் நெஞ்சிற்குச் செல்லியதூஉம் ஆம் என்ற இரு துறைபட அமைந்த மற்றொரு முல்லைத் திணைப் பாடலையும் (284) இடைகாடனார் பாடியுள்ளார். முல்லைத் நிலத்தின் கருப்பொருளான முல்லைத் தோட்டத்தில் தெறித்து எய்யும் அம்பினையும் இழுத்துக் கட்டிய நாணையுடைய வில்லையும் உடைய மறவர்கள் தினை கொண்டு சமைத்த கள்ளினை உண்டு. வேட்டைமேற் சென்று மானை உண்பதையும் குறிப்பதால் திணை முல்லையாயிற்று.

'நம்மினும் தான்தலை மயங்கிய
அம்மா அரிவை உறைவு இன் ஊரே''

(அகம். 284;12-13)

என்ற பாடலடிகள், தலைவனைப் பிரிந்த தலைவி ஆற்றியிருக்கிறாள் என்ற முல்லைத் திணையின் உரிப்பொருள் உணர்த்தப்படுகின்றன. பாடலில் 'நம்மினும்' என்ற சொல் இடம்பெறுவதால், கேட்போன் தேர்பாகனாக இருக்க இடமுள்ளது. எனினும் பாடலில் தேரினை விரைந்து செலுத்துக போன்ற குறிப்புகள் இடம்பெறவில்லை. எனவே இப்பாடல் தன் நெஞ்சிற்குக் கூறியதாகக் கொள்வதற்தே இடம் நிரம்ப உள்ளது. பாடலில் விளி ஏதும் இடம்பெறாதது இக்கருத்துக்கு வலிமை சேர்கின்றது.

போர்க்களத்தின்கண் வேந்தனுக்குத் துணையாதற்பொருட்டுத் தலைவன் தலைவியைப் பிரிந்தவன், கார்பருவத் தொடக்கத்து மீண்டு வருவேன் எனக் கூறிச் சென்றான். அப்பருவம் வந்த பின்னும் கருதி வந்த வினை முடியாமையின், பாசறைக்கண் இருந்தவாறே தலைவியின் துன்ப நிலையை நினைத்துப் பெரிதும் வருந்தியவனாய் தன் நெஞ்சிற்குச்

சொல்லியது என்ற துறையில் அமைந்த மற்றொரு முல்லைத் திணையில் (304) ஒரு பாடலைப் பாடியுள்ளார். தலைவி, தலைவனைப் பிரிந்து ஆற்றியிருந்தமையினை,

'நம்நோய் தன்வயின் அறியாள்
எம்நொந்து புலக்கும்கொல், மாஅ யோயே?
(அகம். 304;19-20)

என்ற பாடலடிகள் உணர்த்தும் தலைவன் பாசறையின் கண் இருந்தமையை,

'ஏந்துகோட்டு யானை வேந்தன் பாசறை
வினையொடு வேறுபுலத்து அல்கி
(அகம். 304;17-18)

என்ற பாடலடிகள் மெய்ப்பிக்கும்.

இடைக்காடனார் பாடிய மற்றொரு அகநானூற்றுப்பாடல் (374). முல்லைத் திணையில் அமைந்துள்ளது. பாசறை முற்றிய தலைமகன் தேர்பாகற்குச் செல்லியவாறு அமைந்துள்ளது. பாடலின் முற்பகுதியில் வைகறைப் பொழுதில் பெய்யும் மழையின் வருணனை இடம்பெறுகிறது. அப்பருவ காலத்தே பெருத்த தோளினையும் நுண்ணிய இடையினையும், திருந்த செய்யப்பெற்ற அணிகலன்களையும் உடைய நம் தலைவி விருந்தாக நம்மை ஏற்றுக்கொள்ளுமாறு நம் தேர் விரைந்து செல்வாயாக! எனத் தலைவன் தேர்பாகற்கு உரைப்பதாக அமைந்த இப்பாடலில், முல்லை நிலத்திணையின் பருவகாலமான கார்காலத்தையும், சிறுபொழுதான வைகறைப் பொழுதையும் குறிப்பிடுவதால் திணை முல்லையாயிற்று. 'பெயர்பெய்து கழிந்த பூநாறு வைகறை' (அகம்.374;10)

என்ற பாடலடி இதனை மெய்ப்பிக்கும். தலைவன் தேர்பாகனை பெறுந! என்று விழிப்பதன் மூலம் கேட்போன் தேர்ப்பாகன் என அறியமுடிகிறது.

## விருந்தோம்பல்

வினைமுற்றி மீளுந் தலைமகன் தேர்பாகற்குக் சொல்லியவாறு நற்றிணையில் **142-ஆவது** பாடல் அமைந்துள்ளது. பிரிந்து சென்று வினைமுடித்த தலைமகன், தலைவியைக் காணும் விருப்பத்துடன் தேர்ப்பாகன் தேரினை விரைவாகச் செலுத்துதல் வேண்டும் என்பது புலப்பட, நம் காதலி இருக்கும் ஊர் ஈண்டுள்ள காட்டில் இருக்கின்றது என உவந்து கூறுவதாக இப்பாடல் படைக்கப்பட்டிருக்கிறது.

இரவு நேரத்தில் விருந்தினர் வரினும் மகிழ்ந்து அவர்களை எதிர்நோக்கும் என் தலைவி; அவள் என் சொற்கேட்டு இல்லிருந்து நல்லறம் செய்யும் கற்பினையும் மென்மையான இயல்பினையும் உடையவள். அத்தகைய காதலி தங்கியிருப்பதும் இக்காட்டகத்தே உள்ள ஊராகும். அந்த ஊரில் மழை பொழிகின்ற மழைக்காலத்து இறுதி நாளில் பால் விலை கூறும் இடையன் கையில் பலவாகிய காலிட்டுப் பினைய உறியுடன், தீக்கடைகோல் முதலான கருவிபலவற்றை இட்ட கோப்பையினையும் ஒருசேரச் சுருட்டிக் கட்டினான். அவற்றை பனையோலைப் பாயோடு சேர்ந்துக் கட்டி முதுகில் சுமந்து சென்றான். அங்ஙனம் செல்கையில் பல நுண்ணிய நீர்த்திவலைகள் அவனுடைய உடம்பின் ஒரு பகுதியை நனைத்தன. கையிலிருந்த கோலையூன்றி அதனிடம் ஒரு காலை ஊன்றியவளாய் அவ்விடையன் நாவை மடித்தபடி 'வீளை' ஒலியை எழுப்பினான். அவ்வொலி கேட்ட ஆட்டுக் கூட்டம் வெற்றியடங்களில் திரியாது மயங்கி அவ்வண்ணமே தங்கி நிற்கும் காட்டுப் பகுதியில் அமைந்துள்ளது தலைவியின் ஊர் என்று தலைவின் ஊரைப்

புனைகிறார் இடைக்காடனார். பாடலின் திணை முல்லை; முல்லைத் திணைக்குரிய கார்காலம்,

'வான் இகபு சொரிந்த வயங்கு பெயற் கடைநாள்,
பாணி கொண்ட பல்கால் மெல் உறி'

(நற். 142;1-2)]

எனப் புனைவதால், முல்லையாயிற்று. முல்லைத் திணையின் மக்கட் பெயர்களுள் ஒன்றான 'இடையன்' பற்றிய புனைவு இடம்பெறுவதால் பாடலின் திணை முல்லையாயிற்று. பாடலில் 'பெயல்கடைநாள்' என்றமையால் கார்பருவம் முடியும் காலம் உணர்த்தப்பட்டது. 'முல்லை சான்ற கற்பின் மெல் இயற் குறுமகள்' என்றது தான் வருமளவும் ஆற்றியிருக்கி வேண்டிய தலைவனின் சொல் கேட்டுத் தலைவி ஆற்றியிருத்தலை உணர்திற்று. குறித்த காலம் கடந்து கொண்டிருக்கிறது தலைவி ஆற்றியிருந்து தன் துன்பம் மறைத்தல் இனியும் அரிது; எனவே தேரை விரைவாகச் செலுத்துதல் வேண்டும் என்பது பாடலில் குறிப்பாகவே உணர்த்தப்படுகிறது. பாடலில் கேட்போன் தேர்ப்பாகன் என்பதை அரிய நேரிடையாக எந்தக் குறிப்பும் இல்லை. குறிப்பால் உணர்த்துவதாக உள்ளது. முல்லை நிலத்துக் கற்பின் நல்லாளின் விருந்தோம்பல் பண்பு ஈண்டு விளக்கப்படுகிறது.

## எந்தாய் வருக!

தேர்ப்பாகனே! நம் காதலி வரும் விருந்தினரை எதிர்கொண்டு போற்றும் விருப்பம் மிகுந்தவளும் பெரிய தோளுடைய இளமகளாவாள். அவள் மின்னல் போல ஒளிவிட்டுத் திகழ்கின்ற அணிகளை அணிந்தவளாய் நம் நல்ல மாளிகை பொலிவு பெற விளங்குபவள்.

அத்தகைய இளையோள், நடத்தலை அறியாத சிறிய பாதங்களையும் பூப்போன்ற கண்களையுமுடைய புதல்வன் தூங்குமிடத்திற்குச் துவளும் நடையிளைாய் விடியற் பொழுதில் சென்று, 'எந்தாய் வருக' என அழைப்பாள் அத்தகைய இனிய குரலை நாமும் கேட்கவேண்டும். எனவே தேரினை விரைவாகச் செலுத்துவாயாக எனும் பொருள்பட நற்றிணையில் **221-** ஆவது பாடல் அமைந்துள்ளது. முல்லை நிலத்திற்குரிய முதற்பொருள் பற்றிய வருணை,

'மணி கண்டன்ன மாநிறக் கருவிளை
ஒண் பூந் தோன்றியொடு தண்புதல் அணிய
பொண் தொடர்ந்தன்ன தகைய நன் மலர்க்
கொன்றை ஒள் இணர் கோடுதொறும் தூங்க
வம்பு விரித்தன்ன செம்புலப் புறவில்
நீர் அணிப்பெரு வழி நீள் இடைப்போழ'

(நற். 221;1-6)

என்று அமைவதால் பாடலின் திணை முல்லையாயிற்று. பாடலில் 'செல்க - பாக! - நின் செய்வினை நெடுந்தோ' என்ற பாடலடியால் கேட்போன் தேர்ப்பாகன் என்று அறியமுடிகிறது. முல்லைத்திணையின் சிறுபொழுதான 'விடியல்' குறிப்பிடப்பட்டுள்ளது.

## ஆறுதல் மொழி

பிரிவிடை மெலிந்த தலைமகளைத் தோழி வற்புறுத்தியவாறு நற்றிணைப் பாடலொன்றை (316) இடைக்காடனார் இயற்றியுள்ளார். தலைவனுடைய பிரிவால் வருந்தும் தலைவியிடம் தோழி, தோழி! நீ

வருந்தாதே! நம் தலைவர் முல்லை மலர்கள் அரும்பும் பொழுது வந்து விடுகிறேன் என்று பிரிந்து சென்றார். அவர் திரும்பி வருவதற்கு முன்பே, முல்லை மலரும் வண்ணம் இந்த மழை பெய்யத் தொடங்கி, இடி இடிக்க தொடங்கிவிட்டது. ஆதலால் இந்த மேகம் அறியாமல் செய்யும் செயல் என்று தோழி தலைவியை ஆற்றுவதால் பாடலின் திணை முல்லையாயிற்று. முல்லை நிலத்தில் பூக்கும் முல்லை மலரை, 'மலரின் மௌவல் நல் வரக் காட்டி' (316;2) என்று சுட்டுகிறார். பாடலில் தோழி தலைவியை தேற்றுவதால், தலைவன் களவிக் காலத்தில் பிரிந்து சென்றுள்ளான் என்பதை அறிய முடிகிறது. தோழி தலைவியை மடவது அம்ம! என்று குறிப்பிடுவதால், கேட்போள் தலைவியாகிறாள்.

நின்பற்களைப்போல முல்லை அரும்புகள் தோன்றும் காலத்துத் தாம் வருவதாகக் கூறிச் சென்றார். ஆனால் அறிவற்ற மேகம், அப்பருவம் வருவதற்கு முன்னே முல்லை அரும்புமாறு மழையைப் பெய்கின்றதே என வருந்துவலியினாள். இஃது தலைவன் குறித்த பருவமன்று அவ்வாறாயின் அவர் வந்திருப்பார். ஏனெனில் அவர் வாய்மை பிழையாதவர் எனக் குறித்தனள். ஆகவே தலைவியை கவலையுறாதே எனத் தெளிவிக்கிறாள். கண்ணகன் விசும்பின் மதி என்ற குறிப்பானும் இது கார்ப்பருவமன்று எனக் குறிப்பிற் புலப்படுத்தினாள். அவர் வருங்கால நின் எயிறு முல்லையென நகை கிந்துமன்றே! அதற்குரிய பருவம் வரவில்லை என தலைவியைத் தோழி ஆற்றுவிக்கிறாள்.

## உறையூர் கதுவாய்ச் சாத்தனார்

இவர் நற்றிணையில் மருதத்திணைப் பாடலொன்றைப் (370) பாடியுள்ளார். தலைவி தலைவனை ஏற்காமல் ஊடி இருக்கின்றாள்.

ஊடல் நீடிக்கிறது. தலைவனோடு பாணனும் உடனிருக்கின்றான். தலைவனுடைய புறத்தொழுக்கத்துக்குக் துணையாவோன் பாணனே. ஊடல் நீடிக்கப் பாணன் தலைவனுடன் பேசுகின்றான். தலைவனுடைய புறத்தொழுக்கத்துக்குக் காரணமாக பாணனே, தலைவனுக்கு வாயிலாகப் புக்கான். தலைவி வாயில் மறுத்தாள். ஊடிய தலைவி சினத்தைத் தணிக்கத் தலைவனுக்குப் பழைய நிகழ்ச்சி – திருமணம் ஆன புதிதில் நிகழ்ந்த நிகழ்ச்சி நினைவுக்கு வருகிறது. அது தலைவியின் அறியாமையைக் காட்டுகிறது. அவள் தலைப்பிரசவத்தின் (கடுஞ்சூல்) போது மகிழ்ச்சியாக நாணி முகமூடி வெட்கியதை இந்தப் பாட்டுப் புனைகிறது. தலைவி ஊடி நிற்பதால் பாட்டுத் திணை மருதமாகிறது. வேறு கருப்பொருள், முதற்பொருள் எவையும் இப்பாட்டில் புனையப்படவில்லை. இப்பாட்டுக்குப் பின்னத்தூர் நாராயணசாமி ஐயர், “இஃது ஊடல் நீட ஆற்றானாய் நின்றான் பாணற்குச் சொல்லியது; முன் நிகழ்ந்ததனைப் பாணற்குச் சொல்லியதூஉமாம்”(6) என்று இரண்டு கிளவிகளைக் குறிப்பர். இரண்டு கூற்றிலும் கூறுபவன் தலைவன். கேட்பவன் பாணன். முதல் துறையில் தலைவி ஊடிய குறிப்பு உள்ளது. ஆனால் பாட்டில் குறிப்பெச்சமாக ஊடியமை வருவித்து உரைக்கப் பெறுகிறது. இரண்டாவது துறைக் குறிப்பே இதற்கு நன்கு பொருந்துவதாகும்.

நற்றிணையைப் பல பிரதிபேதங்களோடு பதிப்பித்த அறிஞர் ஔவை சு.துரைச்சாமிப்பிள்ளை, இப்பாட்டுக்குத் துறைக் குறிப்பு எழுதும்போது வேறு வகையாகக் குறிப்பிடுகிறா். ”இஃது ஊடல் நீட ஆற்றானாய் நின்றான் முன்னிகழ்ந்ததனைப் பாணற்குச் சொல்லியது”(7) என்பர். பின்னத்தூர் நாராயணசாமி ஐயர் கூறிய இரண்டு துறையையும் அவர் ஒன்றாக்கிக் காட்டுகிறார். இந்தத் துறைக் குறிப்பு, பாடுபொருளை

முழுமையாக அடியொற்றியதாகும். இதனை அவர் அந்நூலின் அடிக்குறிப்பில் "அச்சுப்பிரதியில் இது 'ஊடல் நீட' ஆற்றானாய் நின்றான் பாணற்குச் சொல்லியது என்றும் முன்னிகழ்ந்ததனைப் பாணற்குச் சொல்லியதூஉமாம் என்றும் இரண்டு பட்டுக்கிடக்கிறது"[8] என்று இரண்டு துறைக் குறிப்பிற்கும் விளக்கம் தருகிறார். பாடலில் ஊடல் நீடியமையும், அதனால் தலைவன் ஆற்றாதவனாகி இருந்தமையும் வெளிப்படப் புனையப் படவில்லை. எனினும் ஔவை சு. துரைச்சாமிப்பிள்ளை குறிப்பே பொருத்தமானது. ஏடுபெயர்த்து எழுதியவர்கள் ஒரே துறையை இரண்டாக்கி விட்டனர் என்பது ஏற்றுக்கொள்ளத்தக்க விளக்கமாகும்.

தலைவன் தலைவியின் தலைப்பேற்றின் போது தன்பால் நடந்து கொண்ட நிகழ்ச்சியை நினைத்துப் பார்க்கிறான். தலைவியின் புறக்கணிப்பு அவளது மடமையை நினைவூட்டுகிறது. சாத்தனார் கற்பனையாகப் பழைய நிகழ்ச்சியைத் தலைவன் நினைத்துப் பார்ப்பதாகப் பாடியிருக்கிறார். ஊடி நிற்கும் சூழலை உண்மையாகவும், இலக்கிய நயம்படவும் அவர் அமைத்திருப்பது குறிக்கற்பாலது. ஆனால் துறையும் திணையும் அகமரபிற்கேற்ப அமைந்திருக்கின்றன. உலகியல் வாழ்க்கையில் நடக்கக்கூடிய இனிய நிகழ்ச்சியைப் புலவர் இயற்கையியலாகப் புனைகிறார்.

## உறையூர் சல்லியங்குமரனார்

உறையூர்ச் சல்லியங்குமரனார் குறுந்தொகையில் ஒரு பாடல் (309) பாடியவர். இது பரத்தையிற் பிரிந்து வந்த கிழவற்குத் தோழி வாயில் நேர்ந்தது. உழவர்கள் தம் கைத்தொழிலான களையெடுத்தலை மேற்கொண்டிருந்தனர். அவர்கள் வண்டுகள் உண்ணும்படியான

மலர்களைத் தம் வாசம் கெட அவற்றைக் களையெனப் பறித்து வரப்பிலே இட்டனர். எனினும் அந்நெய்தல் மலர்கள் உழவர்கள் அருளில்லாதவர்கள் என எண்ணாது மீண்டும் அக்கழனியிலேயே பூத்தன. ஆதுபோல நீ எமக்கு இல்லாதன பல செய்தாலும் எங்களுக்கு உன்னையன்றி வேறுயாருமில்லை என்று பரத்தையிற் பிரிந்து வந்த தலைவனைத் தோழி வாயில் நேர்கிறாள். தலைவனைப் பரத்தையர் தொடர்பு கருதி வெறுக்காது அவனை ஏற்றுக் கொள்கின்றாள் தோழி. கணவனைக் குற்றம் செய்தான் என்று புறக்கணிக்காது பொறுத்து ஏற்றுக் கொள்ளும் பெண்மைக் குணத்தைப் புலவர் போற்றுகிறார்.

## திணை துறைப் பொருத்தம்

வயலும் வயல் சார்ந்த இடமும் மருதமாகும். வயலைச் 'செறு' (309;5) என்று இப்பாட்டுக் கூறுகிறது. செறு என்னும் சொல் வயலைக் குறிக்கும். இதில் காலப் புனைவில்லை. நெய்தல் திணைக்குரிய நெய்தல் மலர் மருதத்திணையைச் சுட்டுவதால் இப்பாடல் கருப்பொருள் மயக்கத்தை அனுமதிக்கிறது.

தலைவன் அறமல்லாதன பல செய்தாலும் கணவனை அன்றி மனைவியர்க்கு உரியவர் அவனன்றி வேறுயாருமில்லை. எனவே உன்னை ஏற்றுக்கொள்கிறோம் என்பதை 'நின் இன்று அமைதல் வல்லாமாறே' (குறு. 309:9) என்கிறார் ஆசிரியர். இதனால் இத்துறை வாயில் நேர்தலாயிற்று. தொல்காப்பியர் வாயில்களுக்கு உரியோர்களில் தோழியையும் எண்ணுவர். எனவே இக்கிளவி தொல்காப்பிய நெறியில் அமைந்திருக்கிறது. தோழியின் கூற்றைக் கேட்பவன் தலைவன் என்பதனைப 'பெரும' என்ற சொல் வெளிப்படுத்துகிறது. 'நீ' எமக்கு

இன்னாதன பல செய்யினும்' என்று வருவது, மருத உரிப்பொருளாகிய ஊடலை உணர்த்துகிறது.

## உறையூர்ச் சிறுகந்தனார்

உறையூர்ச் சிறுகந்தனார் குறிஞ்சித்திணையில், வரைவுணர்த்திய தோழிக்குக் கிழத்தி உரைத்தாகப் (குறு. 257) பாடல் பாடியுள்ளார். குறிஞ்சித் திணையின் முதற்பொருள் மலையும் மலை சார்ந்த பகுதியுமாகும். இஃது 'ஆர்கலிவெற்பன்' (257:4) எனத் தலைவனைச் சுட்டுவதால் குறிஞ்சியாயிற்று. குறிஞ்சிக்குரிய பலாமரம்,

'வேரும் முதலும் கோடும் ஓராங்குத்
தொடுத்த போலத் தூங்குபு தொடரிக்
கீழ்தாழ் வன்ன வீழ்கோட் பலவின்'

(குறுந். 257 ; 1-3)

என்று புனையப் பெறுகிறது. இதனாலும் திணை குறிஞ்சியாயிற்று. ஈண்டுக் காலப் புனைவு இல்லை. குறிஞ்சித் திணைக்குரிய உரிப்பொருள் புணர்தலும் புணர்தல் நிமித்தமும் ஆகும். தோழி தலைவிக்குத் திருமணம் உறுதி செய்யப்பட்டதைக் கூறிய போது அதற்கு மறுமொழியாகத் தலைவனைப் பிரிதலின்றி ஒன்றியிருத்தலே எனக்கு இன்பம் என்று கூறினாள். இவ்வாறு புணர்ச்சி நிமித்தத்தையும் தலைவன் வரைவையும் கூறியமையால் இஃது உரிப்பொருளால் குறிஞ்சியாயிற்று. இதனை,

‘ஆர்கலி வெற்பன் வருதொறும் வரூஉம்
அகலினும் அகலா தாகி
இகலுந் தோழிநங் காமத்துப் பகையே’

(குறுந். 257 ; 4-6)

என்பதால் அறியமுடிகிறது. பாட்டில் வெளிப்படையாக் தோழி தலைவிக்கு வரைவுணர்த்திய குறிப்புச் சுட்டப்படவில்லை. தலைவன் எல்லாக் காலத்தும் தன்னுடனேயே இருக்கவேண்டும் என்று தலைவி விழைகிறாள். களவில் கூடலும் பிரிவும் இயற்கை; வரைவு நிகழ்ந்தால் எஞ்ஞான்றும் தலைவனைக் கூடியிருக்கலாம் என்பதால் தலைவி இங்ஙனம் இயம்பினாள். இதனால் இது குறிஞ்சித் திணையாய் வரைவுணர்த்தியமைக்கு மறுமொழியாய்க் கொள்ளப்பெற்றது. தலைவி தன் தோழியை, ‘இகலும் தோழி நம் காமத்துப் பகையே’ (257;6) என்றாள். அண்மை விளியாகத் தலைவி விளிக்கப்பெறுகிறாள். இதனால் கேட்பவள் தோழி; கூறுபவள் தலைவி என்பது பெறப்படும்.

## உறையூர்ப் பல்காயனார்

இவர் இயற்றிய குறுந்தொகைப்பாடல் (374) குறிஞ்சித் திணையில் அமைந்துள்ளது. இஃது அறத்தொடு நின்றமை தோழி கிழத்திக்கு உரைத்தது. தலைவன் ‘மலைகெழு வெற்பன்’ (374;3) என்றமையால் திணை குறிஞ்சியாயிற்று. இச்செய்யுளில் காலம் பற்றிய புனைவு இல்லை.

தலைவியின் மறைந்த ஒழுக்கத்தைப் பெற்றோருக்கு வெளிப்படத் தோழி எடுத்துக்காட்டியதால் துறை அறத்தொடு நிற்றலாயிற்று. களவை வெளிப்படுத்தியதை,

'எந்தையும் யாயும் உணரக் காட்டி
ஒளித்த செய்தி வெளிப்படக் கிளந்தபின்'

(குறுந். 374; 1-2)

என்றமை காட்டும். தலைவியின் களவொழுக்கத்தைத் தலைவியின் தந்தைக்கும் தாய்க்கும் உணர்த்திடத் தோழி கூறினாள். களவொழுக்கம் என்பதை மறைந்த ஒழுக்கம் என்பது போல், 'ஒளித்த செய்தி' என்று களவை உறையூர்ப் பல்காயனார் வழங்குவது புதிய தொடராக்கமாகும். இத்தொடரான் களவு பிறருக்கு ஒளித்ததாக விளங்குவதைக் காணமுடிகிறது. களவே கற்பு பிறருக்கு ஒளித்ததாக விளங்குவதைக் காணமுடிகிறது. களவே கற்பு வாழ்வாக மாறுகிறது என்பதை 'நன்று புரி கொள்கை ஒன்றாகின்றே' (374;4) என்ற அடி காட்டுகிறது. இப்பாட்டுக் குறிஞ்சித் திணைக்குரியதாய்ப் புணர்தல் நிமித்தமாகிய உரிப்பொருளையுடையதாகத் திகழ்கிறது.

## உறையூர் மருத்துவன் தாமோதரனார்

உறையூர் மருத்துவன் தாமோதரனார் அகப்பாடல் இரண்டும் (அகம். 133.257) புறப்பாடல் மூன்றும் (புறம். 60, 170, 321) பாடியவர். இரண்டு அகநானூற்றுப் பாடல்களும் பாலைத் திணையைச் சார்ந்தவை.

முல்லை திரிந்து பாலை நிலமாயிருக்கிறது. அரும்பு முதிர்ந்த வெட்சிப்பூக்கள் குருந்த மலர்களோடு கற்பாறையில் கிடக்கும் மிளை நாட்டுப் பாலை வழியில், மரலைக் கடித்துத்தின்னும் பெண்மானுடன் கூடிய ஆண் மான்கள் வாழுகின்றன. அந்தக் காட்டினைக் கடந்து

சென்று விட்டான் தலைவன். இது தலைவன் சென்ற அத்தத்தின் இயல்பு; பாலை நிலத்தின் தன்மையாகும்.

ஆண் வெள்ளெலி, சிவந்த பரல்கள் மிக்க வன்னிலத்தில் கிளறிப்போட்ட புழுதியில் வேங்கைப்பூக்கள் விழுந்து கிடக்கும். கார்காலம் வந்தமையால் பசிய புதர்களையுடைய முல்லை நிலத்தே வெள்ளிய மேகம் தவழ்ந்திடும். புதுக்கொல்லைகளையுடைய சிறிய மலைப்பக்கலில் வாடிய காயாம்பூக்கள், இலவமலர்கள் ஆகியவற்றைச் சுமந்து வரும் கான்யாற்றுக்காற்று எழுப்புதலின் மேலே எழுந்துளிகளையே தலைவன் உண்பான். பாதையின் இயல்பைப் புனைந்துரைத்த தலைவன் இந்தப்பாதை வழியே தலைவி வருவதற்கு வன்மையுடையளோ? என்று தலைவன் தன்னை வினவியதாகத் தலைவி தோழியிடம் கூறினாள்.

இவ்வண்ணம் ஆசிரியர் முழுமையாகப் பாலைத் திணையைப் புனைகின்றார். முல்லை நிலமாக இருந்த புறவு, மழை பெய்யாமையால் பாலையாகியிருக்கிறது. இளங்கோவடிகள்,

'வேனலங் கிழவனொடு வெங்கதிர் வேந்தன்
தானலந் திருகத் தன்மையிற் குன்றி
முல்லையும் குறிஞ்சியும் முறைமையிற் றிரிந்து
நல்லியல் பிழந்து நடுங்குய றுத்துப்
பாலை யென்பதோர் படிவங் கொள்ளும்'

(சிலம்பு : 11;62-66)

என்றிந்த இயல்பை விவரிக்கிறார். முல்லை திரிந்த பாலைத்திணையை உறையூர் மருத்துவன் தாமோதரனார் பாடுகின்றார்.

தலைவன் 'காற்று மேல் எழுப்பும் துளிகளை உண்போம்' என்று தலைவியை வினவியமையால் அவள் தன்னை அவன் உடன் கொண்டு செல்லுதலும் கூடும் என எண்ணினாள். உடன் கொண்டு செல்லுதல் பற்றிப் பேசியமையால் உரிப்பொருளால் இது பாலையாயிற்கு. 'கொண்டு தலைக் கழிதலும்' என்னும் நூற்பா உரையில் நச்சினார்க்கினியர் இப்பாட்டை எடுத்துக்காட்டி, "இது பாலைக் கண் இரங்கல் நிகழ்ந்தது"[9] என்று எழுதினார். தலைவியைத் தலைவன் வினவினதன்றி அங்ஙனம் செய்திலரே என்று தலைவி இரங்கினாள் என்றும் உய்த்துணர முடிகின்றது.

இது தலைவி கூற்று. அவள் பேசியதைக் கேட்டவள் தோழி. தலைவி பிரிவாற்றாள் என்று தோழி கருதியது பாட்டில் புனையப்படவில்லை; புனையும் மரபுமில்லை. தலைமகள் ஆற்றுவல் என்பது மட்டும் பாடலில் வலியுறுத்தப்படுகிறது. பாட்டில் 'தோழி' (133; 13) என்று தலைவி தோழியிடம் வினவுவதால் திணையும் துறையும் பாடற் கருத்துக்குப் பொருந்துமாறு விளங்குகின்றன.

அகநானூற்றிலுள்ள (257) இன்னொரு பாட்டும் உறையூர் மருத்துவன் தாமோதரனார் பாடியது. இப்பாட்டும் முந்திய அகப்பாட்டைப் போலத் (133) தலைவனுடன் தலைவி உடன் போதலைப் பேசுகிறது. இது தலைவி தலைவனுடன் உடன் போகின்ற போது தலைமகட்குத் தலைமகன் சொல்லியது. இப்பேச்சு பாலைவழியில் நடைபெறுகிறது.

பாலை வழியைக் 'கள்வர் பகைமிகு கவலை செல் நெறி' (257;12-13) என்பர் தாமோதரனார். 'யா மரத்தின் பட்டைகளைத் தின்று கழித்துப் போட்ட சக்கையாகிய சுள்ளிகள் உப்பு வாணிகர்க்குத் தீ முட்டும் துரும்பாகும். இத்தகைய துன்பமிக்க பாதையில் இரவில் உண்ணும்

இரையினை விரும்பிக் குட்டிக்கரடிகள் புற்றில் உள்ள வெள்ளிய பாம்பினைக் கையில் பிடிக்கும். பாதிரிப் பூக்கள் வாடிப்போய் மணம் வீசும் 'வேனில் நாளில் தலைவனும் தலைவியும் சுரத்தில் செல்கின்றனர்' (அகம்.257; 1-21). இது குறிஞ்சிப் பாலை. 'வேனிற் பாதிரி', 'நாள் சுரம்' என்றும் 'கள்வர் பகைமிகு கவலைச் செல்நெறி' என்றும் வருவன பாலைக்குரிய முதற்பொருளை உணர்த்துகின்றன.

தலைவன் தலைவியைப் பிரிதல் மட்டும் பாலை உரிப்பொருள் அன்று. தலைவனும் தலைவியும் தம் உற்றார் உறவினரைப் பிரிதலும் பாலைக்குரிய உரிப்பொருளாகும். தாமோதரனாரின் இரண்டு பாட்டும் பாலையின் இந்த உரிப்பொருளையே உணர்த்துகின்றன. தலைவன், தலைவியை உடன் போக்காக அழைத்துச் செல்லுகிறான். தலைவி தன் சீறடி சிவப்ப வண்டு மொய்த்தலையும் பொருட்படுத்தாது எல்வளை ஒலிக்கும் முன் கையுடன் மெல்லிய பணைத்தோள் விளங்க வீசி அவனுடன் நடந்து வருகின்றாள். அவள் ஆண் மகனோடு இணைந்து காட்டு வழியில் சோர்வுறாது நாடந்து வருதலைக் கண்டு, அவன் மேல் கொண்ட அன்பை உணர்ந்து அவளைப் பாராட்டுகின்றான். தலைவியின் நடை அழகு, உடன் வந்தமையால் பாராட்டப்படுகிறது. இதனால் பாலை உரிப்பொருள் செவ்வனம் அமைந்து இப்பாட்டுச் சிறக்கின்றது.

பாலை வழியில் உடன் வரும் பெண்ணின் நடையைப் பாராட்டுவதால் தலைவி கேட்பவளாகவும் தலைவன் கூற்று நிகழ்த்துபவனாகவும் அமைகின்றனர். தலைவி கூடவே வருதலால் அவளைப் பற்றிய விளி பாடலில் இல்லை. இரண்டு அகநானூற்றுப் பாடல்களும் உடன் போக்கையே பேசுகின்றன. இவ்வாறு உறையூர் மருத்துவன் தாமோரதனார் பிரிவாகிய உரிப்பொருளையே பாடியுள்ளார்.

## உறையூர் முதுகண்ணன் சாத்தனார்.

இவர் குறிஞ்சித் திணையில் (குறு. 133) வரைவு நீட்டித்த இடத்துத் தலைமகள் சொல்லியதாகப் பாடியுள்ளார். அப்பாட்டின் கருத்தாவது; 'தோழி குறவனுக்குரிய தோட்டத்தில் விளைந்த பொன்னைப் போன்ற சிறிய தினைக்கதிரைக் கிளி உண்டதால் கூழையாகிய தாளில், பெரிய மழை பெய்தமையால் அத்தினையின் இலை தழைத்தாற் போலத் தலைவன் என் பெண்மை நலத்தை உண்டு பிரிந்ததனால் உண்டான தனிமை வருத்ததோடு என் வலி அழிந்தும் யான் இன்னும் உயிரோடு இருக்கிறேன்' எனத் தலைவி வருந்துகிறாள் என்று காணப்படுகிறது. திருமணம் முடியாமல் காலம் நீட்டித்தமையால் வருந்தித் தலைவி இங்ஙனம் இயம்புகிறாள்.

குறிஞ்சி வாழ் ஆடவனைப் 'புனவன்' எனக் குறிப்பிடுவார் புலவர். புனத்திற்குரியவன் புனவன் ஆவான். குறிஞ்சித்திணைக்குரிய உணவுப் பொருளான தினையைப் 'பொன்போல் சிறு தினை' (133;1) என்று ஆசிரியர் சுட்டுகின்றார். குறிஞ்சிப் பறவையான கிளியையும் சுட்டுவதால் இப்பாட்டுத்திணை குறிஞ்சியாயிற்று.

தினை விளையும் காலம், திருமணம் நிகழும் காலம். ஆதலின் முதற்பொருளின் ஒரு கூறாய் காலம் சுட்டப்படுகிறது. தலைவன் தலைவியிடையே நிகழ்ந்த முதற் புணர்ச்சியை 'நலம் புதிதுண்ட' (133;5) என்ற தொடர் உணர்த்துகின்றது. தலைவன் திருமணம் செய்துகொள்ளும் காலம் கடந்ததால் தலைவி வருந்திப் புலம்புகிறாள். ஆதலின் கிளவியும் பொருத்தமாகிறது.

## உறையூர் முதுகூத்தனார்

உறையூர் முது கூத்தனார் பாடிய பாடல்கள் என்று அறிஞர் உவே. சாமிநாதையரின் குறுந்தொகைப் பதிப்பு மூன்று பாடல்களைத் தருகிறது. அவற்றின் எண்கள் 221, 353, 371, இன்னொரு பாட்டுப் புறநானூறு 331. பேராசிரியர் எஸ். வையாபுரிப்பிள்ளை சங்க இலக்கியப் பதிப்பில் இப்புலவரை 'முதுகூத்தனார்' என்றே கொண்டார். அப்புலவரின் பாடல் விவரம் :

| வ.எண் | நூலின் பெயர் | உ.வே.சா.பதிப்பு | எஸ்.வையாபுரிப் பிள்ளை பதிப்பு |
|---|---|---|---|
| 1. | குறுந்தொகை | 221, 353, 371, | 221, 353, 371,390 |
| 2. | நற்றிணை | - | 28, 58 |
| 3. | அகநானூறு | - | 173, 329 |
| 4. | புறநானூறு | 331 | 331 |

குறுந்தொகை 221-ஆம் பாடல் உறையூர் முதுகொற்றன் பாடியது என்று டாக்டர் உ.வே. சாமிநாதையர் பதிப்பித்துள்ளார். இதற்கு முதுகூற்றன் என்று பாட பேதமுள்ளது. பெயர்கள் வெவ்வேறாயினும் ஊர் உறையூர் என்பதேயாகும்.

இப்பாடல் முல்லைத்திணைப்பாட்டு, முல்லை நிலத்தின் கருப்பொருளான முல்லை மலர்தலையும் ஆட்டிடையர் ஆடுகளை மேய்த்தலையும் புலவர் புனைகுவர். இதனையே 'ஆடுடை இடைமகன்'

என்ற தொடரும் வலியுறுத்துகிறது. முல்லை மலர்தலைக் கொண்டு கார்கால வருகை புனையப்பட்டிருப்பது தெளிவாகிறது.

கார்கால முல்லை மலர்தலைக் காட்டிய ஆசிரியர், அங்கு வாழும் இடையர் ஆட்டைக் காட்டில் நிறுத்திவிட்டுப் பாலொடு வந்து வீட்டிலிருந்து கூழொடு பெயருவர் என்பதன் மூலம் மாலைக் காலம் என்பதை உணர்த்துகிறார். 'காரும் மாலையும் முல்லை' (தொல். 952;1) என்பது தொல்காப்பியம். முல்லைத் திணையின் பெரும்பொழுதும் சிறுபொழுதும் இங்குப் புனையப் பெறுகின்றன.

தலைவன் வருவதாகக் கூறிச் சென்ற பருவம் வந்தது கண்டு தலைவி தலைவன் வரவில்லையே என்று கவன்றாள். அது கண்ட தோழி தலைவியை 'நீ ஆற்றியிருத்தல் வேண்டும்' என்று வற்புறுத்தினாள். 'அவரோ வாரார் முல்லையும் பூத்தன' (குறுந். 221;11) என்ற குறுந்தொகை அடி இதனைக் காட்டுகிறது. இதனால் 'பிரிவிடைப் பருவ வரவின்கண் வற்புறுத்தும்' என்ற கிளவி அமைகிறது. தோழி தலைவியை ஆற்றியிருத்தல் வேண்டும் என வெளிப்படக் கூறியதாகப் பாட்டில் இல்லை. எச்சமாகவே உள்ளது.

தலைவி 'முல்லை மலர்ந்தது; கார்காலம் வந்து விட்டது. அவர் வந்திலர். யான் எங்ஙனம் ஆற்றியிருப்பேன்' என்றாள். இதனால் இப்பாட்டுத் தலைவி கூற்றாயிற்று. தோழி இவ்வாறு கூறும் உரிமையுடையவள் அல்லள். தலைவி தோழியை விளிக்கின்ற சொல்லொன்றும் பாடலில் இல்லை. எனினும் தலைவி தோழியிடமே இவ்வாறு மனம் விட்டுப் பேச முடியும். பிறரிடம் இங்ஙனம் உரையாடுவதில்லை. இந்த அகத்தினை மரபு கருதி இது தோழிக்கு உரைத்ததாயிற்று. இப்பாட்டை ஆராய்ந்த நச்சினார்க்கினியர்,

“இருத்தலென்னும் உரிப்பொருள் வந்தது. இது பருவங்கண்டு ஆற்றாது கூறியது இது முல்லை சான்ற கற்பாயிற்று; அவன் கூறிய பருவம் வருந்துணையும் ஆற்றியிருத்தலின்;”[10] என்று கருத்துரைக்கிறார். ஆதலின் இப்பாடலுக்கு எழுதப்பட்ட திணையும், கிளவியும் பொருத்தமானவையாகும்.

அறிஞர் உ.வே. சாமிநாதையர் குறுந்தொகைப் (353) பாடலை ‘உறையூர் முது கூற்றன் பாடியது’ என்று பதிப்பித்துள்ளார். இந்தப் பாடலைச் சௌரிப் பெருமாளரங்கனார், ‘கடியலூர் உருத்திரங்கண்ணனார் பாடியது”[11] எனப் பதிப்பித்துள்ளார். இது பொருத்தமற்றதாகும்.

இப்பாடலில் தலைவனை ‘வெற்பன்’ என்றும் நிலத்தைக் ‘கோடுயர் நெடுவரைக் கவாஅன்’ என்றும் புலவர் சுட்டுவதால் இப்பாட்டு முதற்பொருளால் குறிஞ்சியாயிற்று. முதற்பொருளில் இன்னொரு கூறான காலம் பற்றிய குறிப்பு இல்லை. குறிஞ்சிக்குரிய புணர்ச்சியைத் துறைக்குறிப்பில் வரும் ‘பகற்குறி வந்து ஒழுகும் தலைமகன்’ என்பதனால் அறியலாகின்றது. பகலில் தலைவனும் தலைவியும் அருவியாடலை,

‘ஆர்கலி வெற்பன் மார்பு புணை யாகக்
கோடுயர் நெடுவரைக் கவாஅற் பகலே’

(குறுந். 353;1-2)

என்று பாட்டுணர்த்துகிறது. புணர்ச்சிக்காகப் பகற்குறியில் வந்தொழுகும் தலைவன், தலைவி இல்லத்தினின்றும் வெளியே வருகின்றமையால் ஊரினர் அவள் வருவதைக்கண்டு விடுவரோ என அஞ்சினான்.

அதனால் அவளை இரவில் சந்திக்க விரும்பினான். அவன் சிறைப்புறத்தே நின்றான். அவனுக்குக் கூறுவது போலத் தோழி தலைவியை நோக்கி 'நம் அன்னையின் காவல் இரவில் மிக்கது' என்று இரவுக்குறி மறுத்துத் தலைவனை வரையத் தூண்டினாள். தாய் இரவில் தலைவியை விட்டுப் பிரிந்திருக்க மாட்டாள் என்பதை,

> 'நிறையிதழ் பொருந்தாக் கண்ணோடு இரவிற்
> பஞ்சி வெண்திரிச் செஞ்சுடர் நல்லிற்
> பின்னுவீழ் சிறுபுறந் தழீஇ
> அன்னை முயங்கத் துயலின் னாதே'
>
> (குறுந். 353: 4-7)

என்ற பகுதி உணர்த்தும். எனவே பாட்டுக்குரிய திணையும் துறையும் பொருளை நோக்கியே அமைக்கப்பட்டுள்ளன. பாடலின் கருத்தை அடிப்படையாகக் கொண்ட கருத்துப் புலப்படத் துறை வகுக்கப்பட்டுள்ளது.

## நச்சினார்க்கினியர் சிந்தனை

நச்சினார்க்கினியர் களவியலுரையில் "இரவுக்குறி நயந்த தலைவன் சிறைப்புறமாக, பகற்குறி நேர்வாள் போல் தோழி இரவுக்காப்பு மிகுதி கூறியது, பாடின்னருவி யாடலென்றாள் அதன்கண் உதவினானென்பது பற்றி அல்லது களவிற்கு உடனாடுதல் இல்லை"(12) என்று இப்பாடல் பற்றி எழுதிப் போற்றினார். இவ்வாறு இரவுக்குறி நயந்த தலைவனை மறுத்து இரண்டு குறியும் மறுத்தமையாகப் பொருள் கொண்டார் நச்சினார்க்கினியர். அறிஞர் உ.வே. சாமிநாதையார் பதிப்பில் 'பகற்குறியில் தலைவன், தலைவியைக் கூடுகிறான். அவன் இரவுக்குறி நயக்கின்றான்;

அதனைத் தோழி மறுக்கின்றாள்' என்ற வேறுபாடு கிடைக்கிறது. நச்சினார்க்கினியர் புணர்ச்சியின்மை சுட்ட மூலக்குறிப்பு பகற் புணர்ச்சி நடைபெறுதலை மட்டும் நவிலுகிறது.

திருக்கண்ணபுரத்தலத்தான் திருமாளிகைச் சௌரிப் பெருமாளரங்கன் அவர்கள் இதனைப் பாலைத்திணை என்றும் "இது பிரிவிடைத் தோழிக்குக் கிழத்தி மெலிந்து கூறியது"(13). என்றும் புதுப்பித்துள்ளார். அறிஞர் உ.வே.சாமிநாதையர் குறிப்பிலுள்ள துறைக் குறிப்பைச் சௌரிப் பெருமாளரங்கன் அடிக்குறிப்பில் தந்திருக்கிறார். வெற்பன் மார்பு துணையாக மலைத் தாழ்வாரத்துப் பகலில் அருவியாடுதல் இனிதாகும். இதழ்கள் மூடாத கண்களோடும் இரவில் பஞ்சுத்திரியின் சுடரை (விளக்கை) யுடைய இல்லில் பின்னல் வீழ்ந்த புறத்தைத் தழுவி அன்னை அணைக்கத் துயிலுதல் இனிதாகும். இவ்வாறு பாலைத்திணையாக இவர் விளக்குகிறார். பாடலடிகளில் வேற்றுமையில்லை. பாடலின் பொருளைக் காண்பதிலேயே திணையும் துறையும் வேறுபடுகின்றன. இது குறிஞ்சிதிரிந்த பாலையாம்.

அறிஞர் உ.வே. சாமிநாதையர் பதிப்பு, தோழி கூறுவதாகவும் தலைவி கேட்பதாகவும் சிறைப்புறம் தலைவன் இருப்பதாகவும் இப்பாட்டைக் கொண்டது. இது நச்சினார்க்கினியர் கருத்தைத் தழுவியதே. சௌரிப்பெருமாளரங்கன் பதிப்பு, தலைவி தோழிக்குக் கூறியதாகக் கூறுவோரையும் கேட்போரையும் மாற்றியது.

## காமமோ பெரிதே

இந்தப் பாடல் (குறுந். 371) முதுகூற்றன் பாடியது என்பர் அறிஞர் உ.வே. சாமிநாதையர். இது வரைவிட வற்புறுத்தும் தோழிக்குத் தலைமகன் சொல்லியது. 'மைபடு சிலம்பின் ஐவனம் வித்தி அருவியின் விளைக்கு நாடனொடு' (371:2-3) என்ற பாடற் பகுதி, இதனைக் குறிஞ்சித் திணையாகக் காட்டுகிறது. சிலம்பு, ஐவனம், அருவி என்பன குறிஞ்சிக்குரியன. இது களவொழுக்கத்தைப் பேசுகிறது.

தலைவி தன்னுடலில் ஏற்பட்ட மாறுபாடுகள் தலைவன் பிரிவால் ஏற்படவில்லை என்றும் காமம் பெரிதாயினமையின் அவனை நலியச் செய்தது என்றும் கூறுகிறாள். கற்பொழுகத்தில் தான் இவ்வாறு கூறுவர். அது பாலைத்திணையாகும். ஆனால் இங்குக் களவொழுக்கமாகத் துறை எழுதப்பட்டிருக்கிறது. அதற்கேற்ப வரைவிடை வற்புறுத்தும்' என்பது துறையில் இடம் பெறுகிறது. இதனை உணர்த்தும் வண்ணம் பாட்டில் நேர் குறிப்பில்லை; வளை நெகிழ்தல், பசப்பூர்தல் இரண்டும் காமத்தின் பெருமையைக் காட்டுவன. தலைவி தன் காமநிலையைத் தோழியிடம் உரைக்கின்றாள். அதனால் இது களவாயிற்று. எனவே இது வரைவிடை வற்புறுத்தும் தோழிக்குத் தலைமகள் சொல்லியதாயிற்று. தலைவி கூற்று; தோழி கேட்போர் ஆவார். திணையும் துறையும் பாடுபொருளுக்குத்தக்கவே எழுதப்பட்டிருக்கின்றன.

## உடன்போக்குப் பாலை

அறிஞர் உ.வே சாமிநாதையர் 'எல்லு மெல்லின்று' (குறுந். 390) என்று தொடங்கும் பாட்டை 'உறையூர் முது கொற்றன் பாடியது' என்பர். பேராசிரியர் எஸ்.வையாபுரிப்பிள்ளை 'முதுகூத்தனார் பாட்டு'[14] என்பர். இப்பாட்டின் கருத்து; சிறிய பிடியானை போன்றவளுக்குத் துணையாகியவனே: சூரியனும் மறைந்தான்; வணிகர் கூட்டம் வந்து அடைந்ததாகப் பகைப்புலத்தே கொள்ளும் பகைமை போல வளையை அணிந்த நெடிய வேலை ஏந்திக் காவல் காட்டினிடத்தே வந்து பெயரும் ஆறலைக் கள்வரது தண்ணுமை முழங்கும் ஒலியைக் கேட்பாயாக! ஆதலின் நீவிர் இருவரும் உடன் போதலை விளக்குக! என உடன் போகின்ற தலைவனையும் தலைவியையும் கண்டோர் எச்சரிக்கின்றனர். பாலைத்திணைக்குரிய உரிப்பொருளைக்

'கொண்டுதலைக் கழிதலும், பிரிந்தவண் இரங்கலும்
உண்டென மொழிப ஓரிடத் தான'

(தொல். 961)

என்று வகைப்படுத்துவர் தொல்காப்பியர். இதில் 'கொண்டுதலைக் கழிதல்' (உடன் போக்கு) என்னும் உரிப்பொருள் இப்பாடலில் பயிலுகிறது. பாலைத்திணைக்கு உரிய பறை தண்ணுமையும், தொழில் ஆறலைத்தலும் பாடலில் பயின்று வந்தமையால் திணை பாலையாயிற்று,

இப்பாடல் கண்டோர் கூற்றாக அமைந்துள்ளது தொல்காப்பியர் கண்டோர் கூற்றுகளை அகத்திணையியலில் குறிப்பிடுகிறார். இதனைப்

‘பொழுதும் ஆறும் உட்குவரத் தோன்றி
வழுவின் ஆகிய குற்றம் காட்டலும்
ஊரது சார்வும் செல்லும் தேயமும்
ஆர்வநெஞ்சமொடு செப்பிய வழியினும்
புணர்ந்தோர் பாங்கின் புணர்ந்த நெஞ்சமொடு
அழிந்தெதிர் கூறி விடுப்பினும், ஆங்கத்
தாய்நிலை கண்டு தடுப்பினும் விடுப்பினும்
சேய்நிலைக்கு அகன்றோர் செலவினும் வரவினும்
கண்டோர் மொழிதல் கண்டது என்ப’

(தொல். 986)

என்ற நூற்பாவால் உணரமுடிகிறது. இதனால் கண்டோர் கூற்று ஐந்து இடங்களில் நடைபெறும் என்பது புலனாகிறது. இந்நூற்பாவில் சொல்லியவற்றில், செல்லும் வழியின் குற்றங்காட்டிக் கண்டோர் உரைக்கின்றனர். ஆறலைக் கள்வரைப் புலவர் ‘வேற்றுமுனை வெம்மையிற் சாத்துவந் திறுவதென’ (குறு.390;3) என்பர். இது பாதையில் கொள்ளையிடுவோர் உள்ளமையைக் கூறுகிறது. இதற்கு எழுதப்பட்ட துறை பொருத்தமானது. நச்சினார்க்கினியரும் ‘இடைச்சுரத்துக் கண்டோர் பொழுதும் ஆறும் உட்குவரத்தோன்றி வழுவினாகிய குற்றம் காட்டியது’(15) என்று துறை வரைகுவர். இரண்டு துறைக்குறிப்புகளும் ஒன்றே; நடைதான் வேறு.

## ஆற்றுவிக்கும் தோழி

நற்றிணையில் உறையூர் முதுகூத்தனார் பாடல்கள் இரண்டுள (28, 58). இவை உறையூர்ப் புலவர் பாடியன. இதில் நற்றிணை 28 ஆவது பாடல் பாலைத் திணையில் தோழி கூற்றாக உள்ளது.

இது பிரிவின் கண் ஆற்றாளாய தலைவிக்கு தோழி சொல்லியது. தலைவன் பிரிந்து போனமையால் தலைவி பெரிதும் வருந்தினாள். ஆதற்கு ஆற்றாத தோழி 'மலைகிழவோன் கள்வன் போலக் கொடியவன்' என்று தோழி கூறினாள்.

'மணியென இழிதரு மருவிப் பொன்னென
வேங்கை தாய ஓங்குமலை யடுக்கத்து
ஆடுகழை நிவந்த பைங்கண் மூங்கில்
ஓடுமலை கிழிக்கும் சென்னிக்
கோடுயர் பிறங்கல் மலை கிழவோனே'

(நற். 28;5-9)

என்ற புனைவுப் பகுதி குறிஞ்சிக்குரியதாய்ப் பாலையைக் காட்டுகிறது. அருவி, வேங்கை மலர், மலை அடுக்கம் ஆகியன குறிஞ்சிக்குரிய பொருட்கள். இவை குறிஞ்சி, பாலையாகத் திரிந்தது என்பதைக் காட்டுகின்றன. தலைவனைப் அவள் ஆற்றியிருக்க வேண்டும் என்ற கருத்தாய்த் தோழி இவ்வாறு கூறினாள். அதனால் பிரிவின்கண் ஆற்றாளாகிய தலைவிக்குத் தோழி சொல்லியதாகிறது.

## பிறிதொரு துறை

இப்பாட்டிற்கு இன்னொரு துறையும் உண்டு. அது 'குறை நயப்புமாம்'. தோழி தலைவியைக் குறை நயப்பக் கூறியதாகலின் இது களவுக்குரிய பாட்டு.

'என்கைக் கொண்டு தன்கண் ஒற்றியும்
தன்கைக் கொண்டென் நன்னுதல் நீவியும்
அன்னை போல இனிய கூறியும்
கள்வர் போலக் கொடியன் மாதோ'

(நற். 28;1-4)

இவ்வாறு தோழி பொய்யாகத் தலைவியிடம் கூறுகிறாள். அது கேட்ட தலைவி தலைவன் என்பால் கொண்ட காதலால் செய்தானாக; இவள் அவனை வேறுபடக் கருதுகின்றாள் என உற்றது கூறிக்குறைநேர்கின்றாள். அதனால் இது குறைநேர்கின்றாள். அதனால், இது குறைநயப்பித்தலாகும். எனவே இரண்டு துறையும் இதற்குப் பொருத்தமாகும். பாட்டின் பொருளுக்குத் தக்கவாறு திணை துறை அமைக்கவேண்டும். இளம்பூரணர் இந்தப் பாட்டைக் 'கிழவனை மகடூஉப் புலம்பு பெரிதாகலின் அலமரல் பெருகிய காமத்து மிகுதியும்'[16] என்பதற்கு எடுத்துக்காட்டுகிறார்.

## குறிஞ்சியா? நெய்தலா?

முதுகூத்தனார் பாட்டாக (நற்.58) நற்றிணையில் உள்ள பாட்டு நெய்தல் திணையைச் சார்ந்தது. 'அறிஞர் உ.வே.சாமிநாதையர் நூல் நிலைய வெளியீடு இதனை முதுகூத்தனார் பாட்டு என்றும் ஔவை சு.துரைச்சாமிப்பிள்ளை பதிப்பு உறையூர் முதுகூத்தனார் பாட்டு என்றும் பதிப்பித்துள்ளன.'[17] எனவே இப்பாட்டு உறையூர் முதுகூத்தனார் பாட்டு என்றே கொள்ளப்பட்டது. இப்பாடலில் உறையூர் முதுகூத்தனார்,

'கையற வந்த பொழுதொடு மெய்சோர்ந்து
அவல நெஞ்சினம் பெயர உயர்திரை
நீடுநீர்ப் பனித்துறைச் சேர்ப்பன்
ஓடுந்தேர் நுண்ணுகம் நுழைந்த மாவே'

(நற். 58;8-11)

என்று தலைவனை நெய்தல் தலைவனாகப் பாடுகிறார். வெண்கோடு இயம்ப நுண்பனி அரும்பக் கையற வந்தது பொழுது. பகற்பொழுது கழிந்த மாலைப் போதுவரின் கடற்கரைக் கண் வெள்ளிய சங்குகள் முழங்குதலும் நுண்ணிய பனியரும்புதலும் நெய்தல் திணையில் இயற்கை. 'பனிக்காலம்' பாடலில் சுட்டப்படுகிறது. இப்பாட்டு முதற்பொருளால் நெய்தல் திணை.

இப்பாட்டுக்குரிய துறை 'இது பகற்குறி வந்து நீங்கும் தலைமகன் போக்கு நோக்குத் தோழி மாவின் மேல் வைத்துச் சொல்லியது' (நற்.58) என்பதாகும். களவிற் பகற்குறியில் தலைமகளைக் கண்டு நீங்கும் தலைமகனை அது விலக்கி இரவின்கண் வருதல் வேண்டுமெனக் கூறக் கருதி, 'இவண் சிறிது தங்கிச் செல்வாயாக' என்று சொல்ல வாயெடுத்ததும் தலைமகன் தேரிற் பூட்டிய குதிரைகள் விரைந்து சென்றமை கண்டாள். அவ்வாறு சென்றமைக்காக அந்தக் குதிரைகளைச் சிறுவர் பறையை அடிப்பது போல அடிக்கவேண்டும் என்று தோழி கூறினாள்.

'வரைவு கடாதல்' என்பது குறிஞ்சிக்குரியது. பகற்குறியைத் தோழி இரவுக்குறியாக்க முயலுகிறாள். தலைவியை ஆயத்தில் விட்டுத் தோழி தலைவனிடம் சென்று, உன் தேரிற் பூட்டிய குதிரைகள் பறையை அடிப்பதுபோல ஒறுக்கத் தக்கன என்று கூறிக் குறிப்பால் வரைவு

கடாயினாள். இவ்வாறு திருமணம் செய்து கொள்ள தூண்டுவது குறிஞ்சித்திணை. ஆனால் முதற்பொருளால் இந்தப்பாட்டு நெய்தல் திணையாகக் கொள்ளப்பட்டிருக்கிறது. நற்றிணை உரையாசிரியர் பின்னத்தூர் நாராயணசாமி ஐயர், 'நுண்பனியரும்பும் மாலையெனவே கூதிர்பொழுதெனக் கருதலானே இரவிடைமுயக்கம் இன்றியமையாதாயிற்று; இரவில் வெளிப்படையாகத் தங்க வேண்டின் வரைந்தன்றி இயலாமையின் வரைவு தோன்றக் கூறியவாறாயிற்று'(18). என்று எழுதிப் போந்தார். இப்பாட்டு முதற்பொருளால் 'நெய்தல் திணை' என்று கொள்ளப்பட்டது. துறையோ வரைவு கடாதலைக் குறிப்பாக உணர்த்துவதாகிறது. நச்சினார்க்கினியார் இப்பாடலுக்கு, 'இது பகற்குறி வந்து போகின்ற தலைவன் புறக்கிடை நோக்கி ஆற்றாத தலைவி குறிப்பறிந்து மாவின் மேல் வைத்து வற்புறுத்தது'(19) என்று துறை எழுகிறார். கருத்து வேறுபாடில்லை.

## உறையூரைப் பாடிய புலவர்

தலைமகன் பிரியும் எனக் கருதி வேறுபட்ட தலைமகட்குத் தோழி சொல்லியது என்னும் துறையில் பாலைத் திணைப் பாடலொன்றை (அகம்.137) உறையூர் முதுகூத்தனார் பாடியுள்ளார். இப்பாட்டின் ஆசிரியர் முதுகூற்றனார் என்ற பாடபேதமும் உள்ளது. அப்பாட்டின் கருத்து; 'தலைவியே! புதிய வழிப்போக்கர்கள் நீர் இல்லாத காரணத்தால் கிணற்றுச் சேற்றைக் கிண்டி அங்கு ஊறும் நீரைக் குடித்துச் சென்றனர். அவ்வாறு சென்றதால் உண்டான அடையாளத்தைக் கண்ட ஆண் யானைகள். அவற்றைப் பெண்யானைகளின் அடிச்சுவடு என்று எண்ணி அவற்றைத் தொடர்ந்து செல்லும் தன்மையுடையது காட்டாற்றுப்பாதை.

இக்காட்டுப் பாதை வழியில் தலைவன் தலைவியைப் பிரிந்து செல்லவில்லை. இன்னும் தலைவி பக்கத்திலேயே உள்ளான். வெற்றியுடைய வீர முரசத்தையுடைய பேராற்றல் படைத்த சோழ மன்னனின் தலைநகரமான இனிய கள்ளையுடைய உறையூர். அங்கு ஓடி வரும் நீர் இடித்தலால் இடித்து விழும் கரைகளையுடைய காவிரியாற்றின் நடுவில் பொருந்தியுள்ள அழகிய வெண்மையுடைய தேன் மணம் கமழும் குளிர்ந்த சோலை. அங்குப் பங்குனி விழா நிகழ்ந்தது. அது முடிந்த மறுநாள் தீயில்லாத அடுப்புகளையுடைய விழாக்களம் போல் பெரிதும் அழகிழந்து வறியதாய் உள்ளது. இவ்வாறு தலைவன் உடனிருப்பதனால் தலைவியின் நெற்றியும் அழகிழந்துவிட்டது. துளை செய்யப்படாத முத்துகள் பிறந்ததற்கு இடமான தெளிந்த கடலை உடையவனும் வீரப்பண்பு உடையவனும் திண்ணிய தேர் உடையவனுமாகிய பாண்டிய மன்னனின் பொதிய மலையில் வளரும் நல்ல அழகுடைய நீண்ட மூங்கிலைப்போன்ற நின் தோள்களும் பழைய அழகும் கெட்டன. இங்ஙனம் தோழி தலைவியைப் பார்த்துக் கூறுகிறாள். தலைவன் பிரிவால் தலைவியின் நெற்றி தன்னழகையிழந்தது; பொலிவிழந்தது. இதற்கு உறையூரில் பங்குனி உத்திரத்திற்கு அன்னமிட உணவாக்கிய பின் அங்குள்ள அடுப்புகள் தீயின்றி வறிதே பாழாய்க் கிடப்பதை உவமை கூறினார். புலவர் உறையூரில் வாழ்ந்தமையால் அங்கு நடக்கும் நிகழ்ச்சியையே தன்பாடலில் உவமையாகப் புலவர் கையாண்டார். இப்பாடல் பாலை நிலத்தின் இயல்பை,

'ஆறுசெல் வம்பலர் சேறுகிளைத் துண்ட
சிறுபல் கேணிப் பிடிஅடி நசைஇச்
களிறு தொடூஉக் கடக்கும் கான்யாற்று அத்தம்'

(அகம். 137; 1-4)

எனப் புனைகிறது. புதிய வழிப்போக்கர்களை, 'ஆறுசெல் வம்பலர்' எனக் குறிப்பிடுகிறது. பாலைத் திணைக்குரிய விலங்குகளில் ஒன்றான யானையைச் 'சிறுபல் கேணிப் பிடிஅடி நசைஇக்' (137:2) என்பர். 'சிறுபல் கேணி' எனத் தண்ணீரின்றி வறட்சியாக நிலை இருத்தலைப் புலவர் காட்டுகின்றார். தலைவன் பிரியாத நிலையிலும் தலைவி உடல்நலம் மெலிதலால் பிரிதல் நிமித்தமாகிய உரிப்பொருளை இப்பாடல் பேசுகிறது.

தலைவன் பிரியப் போகிறான் என்பதை அறிந்து தலைவி வருந்துகிறாள். அவளுடைய வருத்தத்தை நெற்றி காட்டி விடுகின்றது. அதனைப் புலவர் உவமை வழி உணர்த்துகிறார்.

'வென்நெறி முரசின் விறற்போர்ச் சோழர்
இன்கடுங் கள்ளின் உறந்தை ஆங்கன்
வருபுனல் நெரிதரும் இருகரைப் பேரியாற்று
உருவ வெண்மணல் முருகுநாறு தண்பொழில்
பங்குனி முயக்கம் கழிந்த வழிநாள்
வீஇலை அமன்ற மரம்பயல் இறும்பில்
தீயில் அடுப்பின் அரங்கம் போலப்
பெரும்பாழ் கொண்டன்று நுதலே......'

(அகம். 137; 5-12)

என்பது உவமைப் பகுதி பிரிவு என்னும் உரிப்பொருளை உறையூர் முதுகூத்தனார் தலைவியின் நெற்றியையும் தோளையும் கொண்டுணர்த்துகிறார். இப்பாடல் பாலைத் திணை என்றும் இது பிரிவாகிய உரிப்பொருளை உணர்த்துகிறது என்றும் அறிய முடிகிறது.

சோழநாட்டுப் பங்குனி விழாவும் பாண்டியர் மலைப்பிளவும் இங்குப் பேசப்படுகின்றன. புலவரது ஒற்றுமையுணர்வு இதனால் புலனாகிறது.

## பாலைப் புனைவு

'பிரிவிடை வேறுபட்ட தலைமகள் தோழிக்குச் சொல்லியது என்ற துறையில் இவர் பாடிய பாலைத்திணைப் பாட்டு அகநானூற்றில் (329) உள்ளது. உறையூர் முதுகூத்தனார் என்ற பெயருக்கு உறையூர் முதுகூற்றனார் என்ற பாடவேறுபாடுமுள்ளது. பாலைத்திணை என்பதற்குத் தகச் சுரநெறியும் வறண்ட மலையும் புனையப்படுகின்றன. குடிசைகள் நிறைந்த குடியிருப்புகள் மிக்க சிற்றூர். அங்கு உப்புவணிகர் நுகத்தில் பிணிக்கப்பெற்ற மாடுகள் வண்டியை வருந்தியிழுக்கின்றன. அந்தப் பாதையில் புழுதியைத் திரட்டிக் காற்றுச் சுழற்றி வீசும்; இவ்வாறு புனைவு அமைகிறது. முதற்பொருள் கருப்பொருள் புனைவால் இப்பாடல் பாலைத்திணை என்பது பெறப்பட்டது. இது தலைவியைப் பிரிந்து தலைவன் சென்ற வழி இந்த அத்தத்திலுள்ள சீறூரில் தங்கியபின் பன்மலை கடந்து போவான் தலைவன். இவ்வாறு தலைவி, தலைவன் பிரிவையும் அவன் செல்ல வழிகளையும் விவரிக்கும் முகமாகப் பிரிவாகிய உரிப்பொருளை வெளிப்படுத்துகிறாள். எனவே இப்பாட்டுப் பாலைத் திணை என்பதும் 'பிரிவிடை வேறுபட்ட தலைமகள் தோழிக்குச் சொல்லியது' என்பதும் பொருத்தமுற அமைந்துள்ளது.

## இன்னொரு துறை

'பிரிவுணர்த்திய தோழிக்குத் தலைமகள் சொல்லியதூஉமாம்;' என்று இன்னொரு கிளவியும் இப்பாட்டுக்குள்ளது. ஒன்று, பிரிந்த பின் வருவது; இன்னொன்று தலைவன் பிரிவுணர்த்தியதைத் தலைமகள் சொல்லியது.

முன்னது பிரிவு; பின்னது பிரிவு நிமித்தம். எனினும் திணையிலோ கூற்றிலோ வேற்றுமையில்லை.

இரண்டிலும் கூற்று நிகழ்த்துபவளும் கேட்பவளும் தலைவியும் தோழியும் ஆவார். அதில் வேறுபாடில்லை. பாடலில் தலைவி தோழியை விளிக்கும் சொல் இல்லை. சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகப் பதிப்பில் மூன்றாம் அடியில் 'வாழ்தல் வல்லுநராயிற் காதலர்' (அகம். 329-3) என்பதற்குப் பாடபேதமாகத் 'தோழி' என்ற சொல் காணப்படுகிறது. இச்சொல் அண்மை விளியாகத் தோழியை விளிக்கிறது. இந்தப் பாடபேதத்தைக் கொண்டால் தலைவனைக் குறிக்கும் 'காதலர்' என்ற கிளவியில்லாது போகும். இச்சொல் இல்லையெனில் பொருள் கிட்டும். ஆதலின் இப்பாட்டுக்குரிய திணையும் துறையும் செவ்வனே வகுக்கப்பட்டிருக்கின்றன.

## கழார்கீரன் எயிற்றியார்

இவர் அகநானூற்றில் மூன்று பாலைத் திணைப் பாடல்களையும் (163, 217, 235), ஒரு முல்லைத் திணைப்பாடலையும் (294), குறுந்தொகையில் இரண்டு மருதத்திணைப் பாடல்களையும் (35, 330), ஒரு குறிஞ்சித் திணைப்பாடலையும் (261), நற்றிணையில் இரண்டு பாலைத்திணைப் பாடல்களையும் (281, 312) ஆக மொத்தம் ஒன்பது அகத்திணைப் பாடல்களைப் பாடியுள்ளார்.

## வருத்தும் வாடை

தலைவனது பிரிவாற்றாமையால் தலைவி பெரிதும் வருந்தினாள். அதுகண்ட தோழி தலைவியை நோக்கி நீ எம் தலைவன் வரும்வரை ஆற்றியிருத்தல் வேண்டும் என வற்புறுத்த தலைவியோ, பலவகைப்பட்ட மலர்களின் அழகு அழியுமாறு வானத்தில் ஒன்று கூடி இடி முழக்கம் செய்த மேகம் மழையைப் பொழிவித்த பின்னர் குறைந்த பெயலைக் கொண்ட கூதிர்பருவத்து இறுதி நாளில், உள்ளத்தே வெறுப்பு மிகந்திருக்குமாறு எம் தலைவர் எம்மைவிட்டுப் பிரிந்து சென்றார். அவரை நினைத்து எஞ்சியிருந்த வளையல்களும் கழன்று வீழ்ந்தன. தலைவன் வரவைப் பெரிதும் ஆவலுடன் எதிர்நோக்கியிருக்கும் என்னைத் தலைவர் இவள் இரங்கத்தக்கவள் என்று கூட நினைக்க வில்லை. நீரைக் குடித்த யானை பெருமூச்சு விட்டாற் போன்று இடம் மறையுமாறு வீசும் பனித்துளியால் தாமரை மலரும் கரிந்து போகும். அத்தகைய முன்பனிக் காலத்து நள்ளிரவில், மலையையும் நடுங்கச் செய்யும் குளிரைக் கொண்ட வாடைக்காற்றே! என்னை வருந்துவது போன்று எம் தலைவரையும் வருத்தாதே! என்று தன் ஆற்றாமை தோன்ற வாடைக் காற்றை விளித்துத் தலைவி கூற்று நிகழ்த்துகிறாள். தலைவனைப் பிரிந்த தலைவி,

'சென்றோர் உள்ளிச் சிறுவளை நகிழ
பெருநசை உள்ளமொடு வருநசை நோக்கி'

(அகம். 163;4-6)

என்று குறிப்பிடுவதன் மூலம் பிரிவுத்துன்பம் உணர்த்தப்பெறுகிறது. பிரிவின் கொடுமை பாலைத் திணைக்கு உரியது. பாடலில் குறிஞ்சித் திணைக்கு

உரிய முன்பனிக்காலம் சுட்டப்படுகிறது. குறிஞ்சி, முல்லை, பாலை மருதம் நெய்தல் என்ற ஐந்து திணைகளின் வரிசையில் நடுவில் அமைந்து மட்டுமின்றி அதற்குரியதாகிய பிரிவு என்னும் உரிப்பொருள் எல்லா நிலங்களுக்கும் பொதுவானது. மேலும் பாலைக்கு என்று தனிநிலம் தமிழகத்தில் இல்லை. கோடை வெப்பம் நெடுங்காலம் மழையின்மை ஆகிய காரணங்களால் முல்லையாகிய காடும் குறிஞ்சியாகிய மலையும் பாலை நிலத்தன்மை பெறுமே அன்றி, தார்ப் பாலைவனம் போன்றோ சகாராப்பாலைவனம் போன்றே எங்கும் மணலாய் விரிந்து - எதுவும் விளையாத பாலை தமிழகத்தில் இல்லை. எனவே கால முதற்பொருளில் வேனிற் காலங்களும் நண்பகலும் மட்டுமே பாலைத்திணைக்கு உரியவை என்று தொல்காப்பியர் இலக்கணம்"[20] செய்கிறார். ஆனால் இப்பாடல் முதற்பொருள் மயக்கத்தை அனுமதிக்கிறது. பாடலில் 'குளிர்கொள் வாடை' என்ற விளி இடம்பெறுதால் கேட்போர் வாடைக்காற்று எனவும், கூற்று நிகழ்த்துபவள் தலைவி என்றும் அறிய முடிகிறது.

பிரிவுணர்த்திய தோழிக்கு தலைமகள் ஆற்றாமை மீதூர சொல்லிய பாடலொன்றைப் (217) பாடியுள்ளார் கழார்க்கீரன் எயிற்றியார். பொருள் ஈட்டும் பொருட்டு தலைவன் தலைவியைப் பிரியக் கருதினான். அதனைக் குறிப்பால் உணர்ந்த தோழி தலைமகளுக்குக் கூற அதுகேட்ட தலைவி தன் ஆற்றாமை மிகுதியை தோழிக்கு எடுத்துக் கூறுகிறாள்.

## பிரிவுத் துன்பம்

பனிக்காலத்தில் ஆடவரைப் பிரிந்து வாழும் பெண்கள் தம் நலன் இழந்து நடுக்கம் கொண்டு விளங்கினர். இப்பனிக் காலம் பொருள் ஈட்டப் பிரிவார்க்கு ஏற்ற காலம் என்று எண்ணி எத்தகைய பெரும்பொருளைப்

பெறுவதாயினும் எம்மை விட்டுப் பிரியாதீர் என்று தலைவரிடம் கூறுமாறு எனக்குத் துணையாகவுள்ள உன்னிடம் யான் கூறினேன். நீயும் நம் தலைவரிடமும் இதனைக் கூறியிருப்பாய். அவ்வாறு நீ கூறியும் நம் மீது அருள் இல்லாது நம்மைப் பிரிந்து செல்வரானால் நமது பெண்மை நலத்தினை நுகர்ந்து, அவரால் கைவிடப்பட்ட நம் மேனியைக் கண்டு காமநோய் மேலும் வருந்துவதாலே வலிமையற்றுத் தானே உடைந்து அழியும் உள்ளத்துடன் அவர் புணர்தலை விரும்பிக் கடும் பணியால் மிக வருந்தி பற்களை நறநறவென்று கடித்து நடுக்கம் கொள்வோம் அதுவன்றி எம்மால் என்ன செய்ய முடியும் என்று தலைவி ஆற்றாமை மீதூரக் கூறுகிறாள். இப்பாடலின் திணை பாலை என்று குறிப்பிடப்பட்டுள்ளது. பாலைத் திணைக்குரிய பெரும் பொழுதான பின்பனிக்காலம் பற்றிய புனைவு பாடலில் இடம்பெறுகிறது. கார்காலத்தைத் தொடர்ந்து பின்பனிக்காலம் வருதலை,

'பெய்துபுறந் தந்த பொங்கல் வெண்மழை
எஃதுஉறு பஞ்சித் துய்ப்பட் டன்ன
துவலை தூவல் கழிய......................
அச்சிரம் வந்தன்று;.......................
எயிறுதீப் பிறப்பத் திருகி,
நடுங்குதும் - பிரியின்மாம் கடுபனி உழந்தே''

(அகம். 217;1.20)

என்ற பாடலடிகள் மெய்ப்பிக்கும். பாடலில் தலைவி, தலைவனின் பிரிவால் துன்புறுதல் பாலைத் திணையின் பிரிதல் நிமித்தம் உணர்த்தப்படுகிறது. இப்பாடலில் புலவர் 'எயிறு' பற்றிய செய்தியைக் குறிப்பிடுவதால் காரணப் பெயராக (எயிற்றியார்) அமைந்திருக்கக் கூடும் என அறிய முடிகிறது.

மற்றொரு அகநானூற்றுப்பாடல் (235) மேற்கூறிய சூழலில் அமைந்துள்ளது. பாடலின் திணை, கூற்று பொருள் ஆகியவை அனைத்தும் ஒன்றாக அமைந்துள்ளது. பின்பனிக்காலம் குறித்த செய்தியை,

'பனிகடி கொண்ட பண்புஇல் வடை
மருளின் மாலையொடு அருள் இன்றி நலிய'
(அகம். 235;15-16)

என்ற பாடலடிகள் விளக்குகின்றன. தலைவன் பொருள்வயிற் பிரிவு மேற்கொண்டான் என்பதை 'பொருள் புரிந்து உள்ளார்' என்ற சொற்றொடர் உணர்த்தும் பாடலில் அம்ம வாழி தோழி! என்ற விளி இடம்பெறுவதால் கேட்பவள் தோழி என்றும், கூறுபவள் தலைவி என்னும் அறியமுடிகிறயது. தலைவனைப் பிரிந்த தலைவி பசலை நோய் கொண்டு வருந்துவதால் பாலைத்திணையின் பிரிவுத்துன்பம் வெளிப்படுகிறது.

## வாடை வருத்தம்

பருவ வரவின் கண் வற்புறுத்தும் தோழிக்குத் தலைவி சொல்லியதாக முல்லைத் திணைப் பாடலொன்றையும் பாடியுள்ளார் எயிற்றியார். தலைவனது பிரிவாற்றமையால் பெரிதும் வருந்திய தலைவியைத் தோழி! நீ ஆற்றியிருத்தலே நின் கடன் என்று கூற, அதனைக் கேட்ட தலைவி, இருண்ட மேகமானது விண்ணதிர முழங்கி மிக்க மழையினைப் பெய்து ஓய்ந்தது. புகை போன்ற நுண்ணிய பனித்துளிகள் பெய்து ஓய்ந்தது. புகை போன்ற நுண்ணிய பனித்துளிகள் பூக்களின் உள்ளே நிறைந்தன. தம் காதலரைப் பிரிந்து வாடும் செயலற்ற

மகளிரது நீர் சொரியும் கண்களைப் போல கருநிறக் காக்கணம் பூவும் மலர்ந்தது. அகண்ற வயிலிடத்தே கண்ணுக்கு இனிமை தரும் முற்றிய நெற்கதிர்கள் மண்நோக்கிச் சாய்ந்து கிடந்தன. அத்தகைய முன்பனிக் காலத்தின் நள்ளிரவில் சினங்கொண்ட அரசனது பாசறையின் கண்ணே நெடிது காலம் தாழ்த்திருந்து, நமது துன்பத்தினை ஒரு சிறிதும் நினைத்துப் பாராத அறமற்றவரான நம் தலைவர் நமது இத்துன்ப நிலையினைப் போக்க வருவார் என்று எண்ணி, இடைவிடாது வீசும் வாடைக் காற்றால் யான் என் செய்வேன் என்று தோழியிடம் முறையிடுகிறாள். பாடலில் முல்லைத்திணைக்குரிய கார்காலம் - மழைக்காலம் புனையப்பட்டுள்ளது. இதனை,

'மல்குல் மாமழை விண்அதிர்பு முழங்கி
துள்ளுப்பெயல் கழிந்த பின்றை'

(அகம். 294;1-21)

என்ற பாடலடிகள் உணர்த்தும். முல்லைத் திணைக்குரிய உரிப்பொருள் 'ஆற்றியிருத்தல்' ஆகும். தவைலனைப் பிரிந்த தலைவி,

'இந்நிலை களைய வருகுவர்கொல்? என
ஆனாது எறிதரும் வாடையொடு
நோனேன் - தோழி! என் தனிமையானே'

(அகம். 294;14-16)

என்று குறிப்பிடுவதன் மூலம் இருத்தல் நிமித்தம் சுட்டப்பெறுகிறது. எனவே பாடலின் திணை முல்லையாயிற்று. பாடல் முதற்பொருள் மயக்கத்தை அனுமதிக்கிறது. ஏனெனில் பாடலில் முல்லைத் திணைக்கு

உரிய கார்காலம் குறிப்பிடப்படுவதுடன் அதனைத் தொடர்ந்து முன்பனிக் காலமும் சுட்டப்பெறுகிறது. முன்பனிக் காலம் குறிஞ்சித் திணைக்குரியது.

## மாறுபட்ட கண்கள்

குறுந்தொகையில் மருதத்திணைப்பாடல் பிரிவிடை மெலிந்த கிழத்தி, தோழிக்குச் சொல்லியதாக (35) அமைந்துள்ளது. தலைவன் தன்னைப் பிரியும் நாளிலேயே அதற்கு உடன்படாமல் கண்கள் மறுத்திருக்க வேண்டும். அப்போது அவ்வாறு செய்யாமல், தலைவன் பிரிந்த பின்னர் அவர் பிரிந்து வாழும் நாட்களையும் வழியின் ஏதங்களையும் வராமையையும் குறித்துக் கலங்குதல் நாணமற்ற செயல். குளிர் காற்று வீசும் வாடைக் காலத்தில் எம்முடைய கண்கள் நாணமின்றி இருக்கின்றன' என்று தலைவி தலைவனைப் பிரிந்து இரங்குவதாக இப்பாடல் அமைகிறது. வாடையை உடைய கூதிர்காலம் தலைவனும் தலைவியும் இன்புறுவதற்கு ஏற்ற காலம் ஆதலின் உடன் இருப்பதற்குரிய காலத்தில் பிரிந்து உறைகின்றார் என்று தலைவி வருந்துவதால் பாடலின் திணை மருதமாயிற்று. "தலைவன் பிரிந்தமையால் மெலிவுற்ற தலைவி அழுதாளாக, 'நீ அழுத்து ஏன்? என்று வினவிய தோழிக்கு, 'தலைவர் பிரிந்த காலத்தில் அழாமல் உடம்பட்ட என் கண்கள் இப்பொழுது நாணமின்றி அழுதன' என்று தன் வருத்தத்தைக் கண்ணின் மேலேற்றித் தலைவி உரைத்தது"(21) என்று கூற்று விளக்கம் தருகிறார் உ.வே.சாமிநாதையர்.

## தூங்காத விழிகள்

இரவுக்குறிக்கண் தலைமகன் சிறைப்புறமாக, தலைவி தோழிக்குச் சொல்லுவாளாய்ச் சொல்லிய குறிஞ்சித் திணைப் பாடலில் மேகங்கள் சூல்முற்றியப் பல நாட்களாகப் பெய்யும் கார்கால மழையை பொழிந்தமையால் செவ்வி கெட்டு உள்ளீடாகிய விதை இல்லையாகிய எள்ளின் குருட்டுக் காய்களுக்கு இனியவாகச் சில மழை தூவும் கார்பருவத்தின் இறுதிநாட்களில், சேற்றில் நிற்றலை வெறுத்த சிவந்த கண்களையுடைய எருமை, இரவில் 'ஐ' என்ற ஒலியுடன் சேற்றை விட்டு வெளியே வரக் கரையும். இத்தகைய அச்சத்தைத் தரும் உதிர்ப்பருவம், என்னுடைய நெஞ்சம் துன்பம் காரணமாக ஊர் காப்பாளர் இரவில் துயிலாது நாழிகையை எண்ணிக் கொண்டிருப்பது போல என் கண்கள் துயிலவில்லை என்று தலைவி கூறுகிறாள்.

குறிஞ்சித் திணையின் முதற்பொருளான காலம், குளிர்காலமாகிய பெரும்பொழுதும், நள்ளிரவாகிய சிறுபொழுதும் ஆகும். பாடலில் கூதிர்கால வருணனையாக இடம்பெறுவதால் திணை குறிஞ்சியாயிற்று. சிறுபொழுதான யாமம், காலக் கணக்கர், நள்ளிரவில் நாழினை வட்டினைக்கூர்ந்து நோக்கிக் கணக்கை எண்ணிக் கொண்டிருப்பதுபோல தலைவியின் கண்கள் துயில வில்லை என்று குறிப்பிடுவதால் முதற்பொருள் பொருந்தி வருகிறது.

காவலர் இரவல் துயிலாது நாழிகை வட்டிலைக் கூர்ந்து நோக்கி, யாமக்கணக்கை அறிவிப்பர். அவர்கள் துயிலாது இருந்தலைப்போல யானும் தலைவன் வரும் பொழுதை நினைந்து துயிலாது இருந்தேன் என்று குறிப்பிடுவதன் மூலம் தான் படும் துன்பத்தையும், அச்சத்தையும்

கூறி, வரைதலே இதற்கு சரி என்று குறிப்பாக வரைவு வேண்டினாள். வரைவு நேர்தல் குறிஞ்சித் திணைக்குரிய துறை.

## மாலை மலரும் நோய்

பிரிவிடை வேறுபட்ட கிளவிக்கு தோழி, அழுக்கினை தூயதாக்கும் நன்மையுடைய கைகளைக் கொண்ட ஆடை வெளுப்பவன், ஆடையைக் கஞ்சியில் தோய்த்து எடுத்து முதலில் நீளப் புடைத்துப் பின் முறுக்கி குளிர்ந்த நீரில் இடுவாள். அவிழாத முறுக்குப் போல, பெரிய இலைகளையுடைய பகன்றைக் கொடியில் அவிலும் நிலையில் உள்ள வெள்ளிய பூக்கள் தோற்றமளிக்கும். அவை இனிய கருமையுடைய கள்ளினை உடையவை. நுறுநாற்றம் இல்லாத அக்கள்ளின் மணம் எங்கும் கமழும். இத்தகைய துன்பத்தைத் தரும் மாலைக் காலமும், தனிமைத் துயரும். தலைவன் நம்மைப் பிரிந்து சென்ற நாட்டில் இல்லை போலும் என்று கூறுவதாக நற்றிணையில் ஒரு மருதத்திணைப் பாடல் (330) இடம் பெற்றுள்ளது.

பகன்றை பனிக்காலத்தில் மலர்வது. அகன்ற இலைகளைக் கொண்டது. கொடி இனத்தைச் சார்ந்தது. பெரிய பூக்களைக் கொண்டது. தேன் மிகுதியாக உடையது. இதன் மணம், கள்ளின் மணம் போலல்லாமல் இருப்பதால் இதனை யாரும் சூடுவதில்லை. இதன் மலர் புலைத்தி நீரில் தோய்த்து, வெளுத்துப் பசையிட்ட ஆடைபோல வெண்மையாக இருக்கும். இதனைச் ‘சிலதை’ என நச்சினார்க்கினியரும் (குறிஞ்சிப்பாட்டு.88) ‘பெருங்கயால்’ என அடியார்க்கு நல்லாரும் (சிலம்பு.13-155) கூறுவர்”[22] என்பர்.

பாடலில் மாலை நேரப் புணைவு மட்டும் குறிப்பிடப்படுகிறது. மாலை குறிஞ்சித் திணைக்கு உரியது. எனவே இப்பாடல் முதற்பொருள் மயக்கத்தை அனுமதிக்கிறது. பகன்றை மலரின் தோற்றமும் மணமும் அவர் குறித்த பருவத்தை உணர்த்தியும் வாரார் ஆயினர் எனக் கவன்றதால் ஊடல் நிமித்தம் வெளிப்படுத்தப்படுகிறது. இப்பாடலின் மூலம் பண்டைக் காலத்தில் ஆடைகளுக்கு 'கஞ்சிபோட்டு வெளுக்கும் வழக்கம்' இருந்ததை அறிய முடிகிறது. பாடலில் தோழி! என்ற விளி இடம்பெறுவதால் கூற்று நிகழ்த்துபவள் தலைவி என்றும், கேட்பவள் தோழி எனவும் அறியமுடிகிறது.

குறித்த பருவத்துவாராத தலைவனை எண்ணித் தலைவி வருந்துகிறாள். தலைவன் வருவன்; பொறுத்திரு எனத் தோழி கூற, அதுகேட்ட தலைவி, குளிர்காலத்தில் நாம் அவருடன் இருக்கும் காலையும் நம் உறங்காமை அறிவர். அறிந்திருந்தும் வாராமையின் அவர் நம்மிடத்து அன்பில்லாதவர் என்று ஒரு பாலைத்திணைப் பால் (281) நற்றிணையில் அமைந்துள்ளது.

## அன்பு இல்லாதவன்

தோழி! மாசற்ற மரத்திலிருந்து மக்கள் இடுகின்ற பலிச்சோற்றை உண்ணுகின்ற காக்கை காற்று மோதும் நெடிய கிளையிலிருந்து தன்மேல் விழுகின்ற மழைத்துளியோடு அசைந்து கொண்டிருக்கும். வெற்றி கொள்ளும் போரையிடைய சோழாது கழார் என்னும் ஊரில், கொள்ளப்பெறும் நல்ல பற்பல வகையான பலிச் சோற்றுக் கொடையோடு அளிக்கப்பெறும் அளவில்லாத சோற்றை அழகிய பலவாகிய ஊன் துண்டங்களோடு கூடிய பெரிய விருந்தைப் பெறுவதற்காக அக்காக்கை

கருதியிருக்கும். அதுபோல் மழைபெய்து உண்டான மயக்கத்தை உண்டாக்கும் இருள் பரந்த நடு இரவில் தலைவர் தம் அருகில் இருக்கவும் நாம் நமக்குண்டான பனியின் கடுமையினால் வருத்த முற்றிருப்பதோடு கண் துயிலாதவராகவும் இருப்போம். இதனை அறிந்தும் அவர் வந்திலர். எனவே அவர் நம்மீது அன்பில்லாதவர் எனத் தலைவி வருந்துகிறாள்.

பாடலில் பாலைத் திணைக்குரிய பின்பனிக்காலம் தலைவிக்குத் துன்பத்தைத் தருவதாக இடம்பெற்றுள்ளது. இதனை,

'மழை அமைந்து உற்றமால் இருள் நடுநாள்
நாம் நம் உழையராகவும் நாம் நம்
பனிக் கடுமையின் நனிபெரிது அழுங்கி'

(நற். 281;7-9)

என்ற பாடலடிகள் மெய்ப்பிக்கும். அன்பிலர் தோழி நம் காதலரே! என்ற பாடலடியால் தலைவனைப் பிரிந்த தலைவியின் பிரிவுத் துன்பம் வெளிப்படுகிறது. எனவே இப்பாடலின் திணை பாலையாயிற்று. பாடலின் புலவர் சோழநாட்டைச் சேர்ந்தவர் என்பதால் தான் பிறந்த ஊரினைச் சுட்டிப் பாடுகிறார். இப்பாடலுக்கு வன்பொறை எதிரழிந்த தலைமகள் தோழிக்குச் சொல்லியது; ஆற்றாளென கவன்ற தோழி தலைமகட்குக் குரைத்ததூஉமாம்' என இருவேறு கூற்றுக்களையும் எடுத்துக் கூறி, உரை இரண்டற்கு மொய்க்கும்"[23] என்பர் பின்னத்தூர் நாராயணசாமி ஐயர். பாடலின் கருத்து இரண்டு துறைகளுக்கும் பொருந்துவதாகவே அமைந்துள்ளது.

பொருள் வலித்த தலைமகன் தன் நெஞ்சினை நெருங்கிச் சொல்லியதாக மற்றொரு பாலைத்திணைப் பாடலைக் (312) கழார்க்கீரன் எயிற்றியார் பாடியுள்ளார். தொழில் காரணமாகப் பிரியக் கருதிய தலைமகன் தன் நெஞ்சிடம், நெஞ்சமே! அவள் அருகிலேயே இருந்து கொண்டு பிரியாமல் இருந்த அந்த கோடைக் காலங்கிளலேயே அவள் நடுங்கினாள். அவ்வாறு அல்லாமல் கார்காலம் முதலான பனிக்காலதில் நம் பிரிவால் எங்ஙனம் நடுங்குவாளோ ? எனத்தலைவன் வருந்துகிறான். பாடலில் தலைவன் தன்னை வாடைக்காலத்தில் பிரிந்து எவ்வாறு இருப்பாள் என்று நினைத்து வருந்துதல் பிரிதல் நிமித்தத்தை உணர்த்துகிறது இதனை,

'கோடைத் திங்களும் பனிப்போள்
வாடைப் பெரும் பனிக்கு என்னள்கொல் ? எனவே'
(நற். 312;8-9)

என்ற பாடலடிகள் தெரிவிக்கின்றன. நோம் என் நெஞ்சே! என்ற விளி பாடலில் இடம்பெறுவதால் தலைவன் தன் நெஞ்சிற்கு உரைக்கின்ற தன்மையை அறியமுடிகிறது.

## காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார்

இவர் அகநானூற்றில் மூன்று பாலைத் திணைப் பாடல்களையும் (107, 123, 285), நற்றிணையில் ஒரு பாலைத் திணைப் பாடலையும் (237) குறுந்தொகையில் ஒரு குறிஞ்சித்திணைப்பாடலையும பாடியுள்ளார்.

தோழி தலைமகள் குறிப்பு அறிந்து வந்து தலைமகற்குச் சொல்லியதாக இப்பாடல் அமைந்துள்ளது. தலைவன் களவொழுக்கத்தை மேற்கொண்டு ஒழுகினான். இரவு நேரத்தில் தான் சுரவழிகளைக் கடந்து வருதல் பெற்றோர் தலைவியை இச்செறித்தல், அன்னையின் கடிந்துரை போன்றவற்றால் அதற்கு இடையூறு உண்டாகத் தலைவியை அவள் சுற்றத்தார் அறியாவண்ணம் உடன்போக்கிலே கொண்டுபோக விரும்பினான். தன் விருப்பத்தைத் தோழீயிடம் கூற, தோழியும் தலைவிக்குத் தெரிவித்து அவளுடைய உடன்பாட்டைக் குறிப்பால் அறிந்து வந்து தலைவனிடம் கூறுகிறாள்.

## பாலையின் கொடுமை

தலைவி, பெரிய புலியானது ஆண்மானை அடித்து கொன்று கருங்கற்களையுடைய அகன்ற பாறையில் கிடத்தி அதனை வயிறு நிறையுமளவு தின்று கைவிட்டுப் போன காய்ந்த இறைச்சியை வழிச்செல்லும் வம்பலர் கண்டு மகிழ்ச்சி அடைந்து அவ்விறைச்சிறை தழைத்த மூங்கிலின் விளைந்த நெல்லரிசியுடன் ஒருங்கே கூட்டி ஆயர் சேரியிலுள்ள தயிரை இட்டு வெள்ளிய நினைத்தை உருக்கிக் கூட்டிச் சமைந்த வெண்மையான சோற்றை தேக்குமரத்தின் இலையில் வைத்து உண்பர். அவ்வாறு உண்ணுவதற்கு இடனான போர்த்தொழிலை அன்றி பிறிது தொழில் அறியாத. வஞ்சினமொழியையும் சினம் மிக்க நாயையும் உடைய வடுகரது ஆண்மை விளங்கும். அரிய போர் முனைகளைக் கொண்ட பானல் வழியினை வருந்திக் அடக்கவும் இசைந்தாள் என்று பாலைத்திணையின் கொடுமையை அழகாகப் படம் பிடித்துக் காட்டுகிறாள். இதனை,

'கருங்கல் வியல் அறைகிடப்பி, வயிறு தின்று
இரும்புலி துறந்த ஏற்றுமான் உணங்கல்
நெறிசெல் வம்பலர் உவந்தனர் ஆங்கன்
'ஓலிகழை நெல்லின் அரிசியொடு ஓராங்கு
ஆன்நிலைப் பள்ளி அளை பெய்து அட்ட
வால்நிணம் உருக்கிய வாஅல் வெண்சோறு
புகர் அரைத் தேக்கின் அகல்இலை மாந்தும்
கல்லா நீள் மொழிக் கத நாய் வடுகர்'

(அகம். 107;4-11)

என்ற பாடலடிகள் மெய்ப்பிக்கும்.

தொல்காப்பியர், தலைவியை உடன் கூட்டிக்கொண்டு அவள் ஊரைவிட்டுப் பிரிதலும், அவ்வாறு உடன்போக்கில் செல்லும்போது பிரிய நேர்ந்தற்காக வருந்துதலும் பாலை உரிப்பொருள் வகையாகப் பாடப்படுவதும் உண்டு என்று குறிப்பிடுகிறார். இதனை,

'கொண்டுதலைக் கழிதலும் பிரிந்தவண் இரங்கலும்
உண்டென மொழிப ஓரிடத்தான்'

(தொல். 961)

என்ற நூற்பாவின் வழி விளக்குகிறார். இப்பாலைத் திணைப் பாடலில் தலைவனுடன் தலைவி உடன்போக்குச் செல்லத் துணிந்ததைத் தோழி எடுத்துரைப்பதால் இப்பாடல் பாலைத்திணையாயிற்று. பாடலில் 'என் தோழியும் வருமே' என்ற தொடரால் தோழி கூற்று நிகழ்த்துபவளாகவும் கேட்போன் தலைவன் எனவும் தெரிகிறது.

## மயங்கும் நெஞ்சம்

பொருளீட்டக் கருதிய தலைவன் தலைவியைப் பிரிந்து சென்றான். சென்றவன் இடைச்சுரத்துத் தலைவியை நினைந்து வருந்தும் தன் நெஞ்சினை இடித்துத் தலைவன் கூறியவாறு அமைந்த அகப்பாடல் (123) தலைவனின் நெஞ்சம் மருதளிப்பதை மிக அழகாக எடுத்துக்காட்டுகிறா் புலவா் காவிரிப் பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனாா்.

நெஞ்சே! உண்ணாமையால் வாடி வருந்திய வயிற்றினையும் நீராடாத விரதத்தினையும் உடைய தவசியா் போல, மலைகள் செறிந்த சிறிய வழிகளில் ஒரு சேரக்கூட்டம் கூட்டமாகச் செல்லும். காட்டு யானைகளின் அழகு அழிதற்கு இடனான குன்றுகளைக் கடந்து போய்ப் பொருள் ஈட்டி வருவதையும் நீ செய்கின்றாய் இல்லை. சிறந்த சிலவாகிய ஐந்து பகுதிகளைக் கொண்ட கூந்தலையுடைய நம் தலைவியின் நல்ல மாா்பினைப் பொருத்தி வீட்டில் தங்க விரும்பினால் வறுமை வந்து விடுமோ என அதற்குடம் அஞ்சுகிறாய். சோழா்கள் வள்ளல் தன்மை பெரிதும் உடையவா்கள். கூா்மையான நிலவு போன்ற இலைவிளங்கும் நெய்ப்பு மிக்க நெடிய வேற்படையினையும் கருமேகம் போன்ற நிறமுடைய கிடுகுகளையும் உடையவா்கள். அவா்தம் ஓடக் கோலும் மறையுமளவு நீா்ப்பெருக்குயை காவிரி சென்றடையும் கடற் பெருந்துறையிடத்து இறாமீனோடு வந்து மாலையோடு மீண்டும் வெல்லும் பெருங்கடல் வெள்ளம் போல பொருளீட்டத் தலைவியைப் பிரிந்து செல்லுதல் அல்லது செல்லாது செலவினைக் கைவிடுதல் என்னும் இரண்டில் ஒன்றினை நீ துணிந்து தோ்ந்து கொண்டாய் இல்லை. எனவே வருத்தம் மேலிட நீ மனமுடைந்து அழிவுறுகின்றாய் எனத் தலைவியைப் பரிந்து வந்த தலைவன் இடைசுரத்து வருந்தித் தன்

மனத்திற்குக் கூறுவதாக அமைந்த பாடலில் தலைவனின் மனம் முடிவு எடுக்க முடியாது வருந்துவதை அறிய முடிகிறது. இப்பாடலில் தலைவனின் மனத்திற்குச் சோழநாட்டின் காவிரியாறு உவமையாகக் கையாளப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது. பாடலில் பாலைத்திணைக்குரிய உரிப்பொருளான பிரிதல் நிமித்தம் பாடுபொருளாக அமைவதால் திணை பாலையாயிற்று. பாடலில் 'விழிய நெஞ்சே' என்ற தொடரால் கேட்போன் தலைவனின் நெஞ்சாகவ் கூற்று நிகழ்த்துவோன் தலைவன் எனவும் அறிய முடிகிறது.

## இணைபிரியாத நட்பு

உடன்போக்கு உடன்படுவித்த தோழி தலைமகட்குக் சொல்லியவாறு மற்றொரு அகப்பாடலை (285) காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக் கண்ணனார் பாடியுள்ளார். தலைவன் பிரிவனை உணர்ந்த தலைவி பெரிதும் வருந்தினாள். அதுகண்ட தோழி தலைவனிடம் சென்று தலைவியையும் உடன் அழைத்துச் செல்லுமாறு வேண்டத் தலைவனும் உடன்பட்டான். அச்செய்தியை தோழி தலைவியிடம் சென்று, கடுமையான காட்டுவழிகளில் பெருத்த தோள்களையும், குவளை மலர்போன்ற மையுண்ட கண்களையும் உடைய உன்னைத் தலைவன் தொலைதூரம் கொண்டு உடன் செல்ல அனுமதித்து விட்டதால் நாம் இருவரும் பன் முறை ஆரத் தழுவிக் கொள்வோம். கூருவாயாக என்று கூறுதன் மூலம் தலைவி-தோழி நட்பு வெளிப்படுகிறது. இப்பாடலில் பாலை நிலத்தின் இயல்பை,

'எவ்வம் இகந்துசேண் அகல வைஎயிற்று
ஊன்நசைப் பிணவின் உறுபசி களைஇயர்
காடுதேர் மடப்பிணை அலற, கலையின்

ஓடுகுரங்கு அறுத்த செந்நாய் ஏற்றை
வெயில்புலந்து இளைக்கும் வெம்மைய பயல்வரி
இரும்புலி வேங்கைக் கருந்தோல் அன்ன
கல்எடுத்து எறிந்த பல்கிழி உடுக்கை
உலறுகுடை வம்பலர் உயர்மரம் ஏறி
ஏறுவேட்டு எழுந்த இனம்நீர் எருவை
ஆடுசெவி நோக்கும் அத்தம்......................'

(அகம். 285;3-12)

என்ற பாடல் அடிகள் விளக்கும். இப்பாடலின் வழித் தலைவிக்கும் தோழிக்கும் இடையே அமைந்த நட்பின் ஆழத்தை உணரமுடிகிறது.

குறுந்தொகையில், குறிஞ்சித்திணை பட அமைந்த பாடல் தோழி வரைவு மலிந்தது என்னும் துறையில் காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார் ஒரு பாடலை (297) இயற்றியுள்ளார்.

## உடன் செல்க!

களவுக்காலத்தில் ஊர் அலர் உரைத்தலாலும் காப்புக் கைமிக்குத் தலைவிமாட்டுக் காமம் பெருகியவழியும் தோழி தலைவியைத் தலைவனுடன் உடன்போக்கில் அனுப்பி வரைந்து கொள்ளச் செய்தலே தக்கது எனத் துணிந்தாள். அதனைத் தலைவியிடம் கூறுவதாக இச்செய்யுள் அமைகின்றது. மறவர் அம்பின் பகையைப் பொருள் செய்யாராய் எதிர்த்து இறந்திட்ட புதியார்மேல இட்டுவைத்த இலைகுவை ஊர்போல தோன்றும் பரந்த இடத்தில் நல்லவற்றைக் கூறிக்கொண்டு நீ அவருடன் கூடிப்போதல் பொருளாகுமென உணர்ந்திட்டேன். எனவே தமர் வரைவு நேர்ந்தமையின் அச்சமின்றி உடன் போகலா என்று தோழி

உரைக்கிறார். இப்பாடல் கருப்பொருள் மாற்றத்தை அனுமதிக்கின்றது. பாலை நிலத்துக் கொடிய வழிகளும் தலைவனுடன் உடன்போக்கில் புணர்ந்துடன் செல்லுங்கால் இனியவாகும் எனத் தோழி தலைவிக்குக் கூறினாள். இடைச்சுரத்துத் தலைவியோடு செல்லும்போது தமர்வரின் ஆணையிட்டுக் கூறுதலும் வரைந்து கொள்வல் என்று கூறுதலும் 'நல்ல' கூறதலாகும். நல்ல கூறுதல் தலைவிக்கும் பொருந்தும். பாடலில் 'புணர்ந்துடன் போதல் பொருள் என்ற தொடரால் குறிஞ்சித்திணைக்குரிய உரிப்பொருளான புணர்தலும் புணர்தல் நிமித்தமும் சுட்டப்படுவதால் திணை குறிஞ்சியாயிற்று. பாடலில் மன்றல் அவர் எனப்பாடம் கொண்டு தலைவன் உடன் போக்கில் சென்று தன் ஊரில் வதுவை அயர்வான் என்பதைத் தலைவன் தெளிவதற்கு முன்பே தான் தெளிந்ததாகத்தோழி கூறுவதாகப் பொருள் உரைத்தல் பொருந்துவதாக உள்ளது.

காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார். நற்றிணையில் பாலைத்திணைப் பாடலொன்றைப் (237) பாடியுள்ளார். தலைவன் பிரிவைத் தலைவி ஆற்றாள் எனக் கருதித் தோழி தேறுதல் மொழி உரைத்தனள். அப்போது தலைவி தானே ஆற்றியிருக்கும் திறம் கண்டு வியந்தவளாய் தலைவன் வருவதாகக் குறித்த கார்பருவம் வந்தும் பிரிவுபற்றி நீ ஊடி நிற்கவில்லையே' என்று மாறுபட உரைப்பதாக இப்பாடல் அமைந்துள்ளது.

## எதிர்மறை

மடந்தாய்! வியப்பிடைய இரவலர் வரும்போது அவர்களுக்கு வழங்கக் கருதி ஆய் அண்டிரன் பல யானைகளை உடையவனாய் விளங்கினான். அவனுடைய யானைக் கூட்டம் போல விளங்கும் உலகம் மகிழுமாறு சொல்ல அரிதான பல்வேறு உருவத்துடன் விளங்கும்

எழுச்சிமிக்க மேகங்கள் ஓங்கித் தோன்றும். அவற்றை உற்று நோக்குவாயாக! இதுவே தலைவன் வருவதாகக் குறித்த கார் பருவமன்றோ ? பசலை மிகப்பெற்ற தோளும் வாட்டமுற்று நீர் வடிக்கும் கண்களும் அழகுகெட்டு வேறுபட்டன. இவ்வாறு வேறுபடுமாறு இனிய உயிர்போன்றவரும் பிரிவதற்கு அரிய வருமான காதலர் என்னைப் கைவிட்டவராய் நெடுந்தூரம் சென்றவராய் விட்டுப் பிரிந்தனர்' என்று கூறி, நீ உன் உள்ளத்தில் ஊடுதலைச் செய்யவில்லையே! எனத் தோழி தலைவியின் செயல்பாட்டைக் கண்டு மாறுபட உரைக்கிறாள். பாடலில் பாலைத்திணைக்கு உரிய உரிப்பொருளான 'பிரிதல் நிமித்தம்' பயின்று வருதலால் திணை பாலையாயிற்று. இப்பாடலில் முல்லைத் திணைக்கு உரிய கார்பருவம் பற்றிய செய்திகள் இடம்பெறுவதால் திரிந்து காணப்படுகிறது.

அகப்பாடல்களில் புறச் செய்திகைள இடம்பெறச் செய்வதில் காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார். அதிக கவனம் செலுத்துகிறார். இவர் சோழ நாட்டுப்புலவர் என்பதால் காவிரியாற்றை உவமையாகக் கையாள்கிறார். வரலாற்றுச் செய்திகளையும் அவர் பாடல்களில் இடம்பெறச் செய்கிறார்.

## காவிரிப்பூம்பட்டினத்துச் செங்கண்ணனார்

இவர் அகநானூற்றில் இரண்டு பாடல்களையும், நற்றிணையில் ஒரு பாடலையும் பாடியுள்ளார். அகநானூற்றுப் பாடல்கள் இரண்டும் பாலைத் திணையிலும், நற்றிணைப் பாடல் குறிஞ்சித் திணையிலும் அமைந்துள்ளன.

தலைவன் தலைவியைப் பிரிந்து பொருள் ஈட்டச் சென்றான். அவன் திரும்பிவரக் காலம் நீட்டித்தது. பிரிவாற்றாத தலைவி, தலைவர்

அருளின்றிப் பிரிந்து சென்றார். பசலையை எனக்கு உசாத்துணையாக வைத்துவிட்டு என் அழகையெல்லாம் தம்முடன் கொண்டு போயினரே! அதனையாவது அவர் எனக்கு மீண்டும் தந்தருள்வாரா? எனப் பெரிதும் வருந்தித் தோழிக்குச் சொல்லியவாறு அமைந்த அகநானூற்றுப்பாடலில் பாலை நிலத்தின் இயல்பை சிறப்பாக எடுத்துக்காட்டுகிறார்.

பெரிய தலையினையும், கூர்மையான சிவந்த நாவினையும் உடைய குறும்பூழ்சசேவல், தெளித்துவிட்டது போல பல அழகிய புள்ளிகளை பெற்று, நிழல் அற்றுப்போன பரந்தகன்ற பாலை நிலத்தே, புல்லூற்றினால் எறிதற்குக் குறிவைக்கப்பட்ட சேவல் அதனைத் தப்பி பாதுகாப்பான இடத்திற்குச் சென்று தங்க எண்ணி, தானிருந்த காய்ந்து போன சிறு புதர் தனித்துக் கிடப்ப வெளியேறிச் செல்லும். அவ்வாறு செல்லும் அச்சேவல் முன்னிடத்தில் உள்ளதாகிய வன்னிலத்தைச் சார்ந்திருக்கும் பெரிய மனறத்திலே ஆறலைக் கள்வர் வழிப்பறிக்காக வழியைப் பார்த்து தங்கியிருக்கும் பசுக்களைக் கொண்ட சிற்றூரினிடத்தே அதன்கண் தங்கியிருப்போர் விட்டுப்போன உயர்ந்த நிலைகளையுடைய பெரிய வீட்டில் இறப்பு நிழலின் ஒரு பக்கத்தே தங்கித் தனிமையில் பெருமூச்சு விட்டபடி இருக்கும் எனப் பாலை நிலத்தின் இயல்பினை விளக்குவதால் பாடலின் திணை பாலையாயிற்று. பாலை நில மக்கட்பெயர்களுள் ஆறலைக் கள்வரைக் குறிப்பதாலும் பாடலின் திணை பாலையாயிற்று. தலைவனைப் பிரித்து தலைவி வருந்துவதால் பாலைத் திணையின் உரிப்பொருளான பிரிதலும், பிரிதல் நிமித்தமும் உணர்த்தப்படுகிறது. பாடலில் இடையர்கள் விட்டுச் சென்ற இல்லம் குறிப்பிடப்படுதலால், முல்லை நிலம் பாலை நிலமாக திரிந்திருக்கக் வேண்டும்.

## தோழியின் மதிநுட்பம்

செலவு உணர்த்திய தோழி, தலைமகளது குறிப்பு அறிந்து தலைமகனைச் செலவு அழுங்கச் சொல்லியது' என்ற கூற்றில் அமைந்த அகநானூற்றுப்பாடல் பாலைத் திணையில் அமைந்துள்ளது. பொருள் ஈட்டகக் கருதிய தலைவன் தலைவியைப் பிரிய எண்ணினான். அதனைத் தோழியிடம் கூற அவளும் தலைவன் கருத்தினைத் தலைவியிடம் கூறினாள். அதுகேட்ட தலைவி அடைந்த துன்பத்தைக் கண்ட தோழி, தலைவன் பிரிவால் அவள் இறந்துபடுவாள் என எண்ணியவளாய் தலைவன்பால் சென்று அவனது செலவைத் தோழி தடுக்கிறாள். புள்ளிகளையும் கோடுகளையும் சிவந்த கால்களையும் உடைய ஆண்புறா, தன் புல்லிய பெட்டைப் புறாவுடன் நெடுந்தூரம் சென்று அறல்பட்ட மணல் வழியில் உள்ள பரற்கற்களை ஆய்ந்து எடுத்து உண்ணும், அப்புறாக்கள் வாடிய மரச்செடிகளைதயும், மழை பெய்யாது வறண்டு போன இடத்தையும் உடைய சிறிய குன்றுகளை அடுத்துள்ள, ஆறலைக் கள்வரும், கொடிய விலங்குகளும் தீங்கு செய்யும் அரிய சுர வழிகளை நெடுந்தூரம் கடந்து செல்லும் வழிப்போக்கரின் செல்லும் உயிரை செல்லவொட்டாது தடுத்து நிறுத்தும் சுவைமிக்க காய்களை கொண்ட நெல்லி மரத்தின் அழகிய கிளைகளிலிருந்து ஒலி செய்யும். அத்தகைய காட்டுவழியில் சென்று, நிலையில்லாத பொருளை ஈட்ட நினைப்பிராயின் நம் முயற்சி வலிமை பெறுக. ஆனால் அத்தகைய நாட்டில் உம்பிரிவால் தலைவியின் வளையல்கள் நெகிழ்வதை தடுக்கும் மருந்தும் உண்டோ? அவ்வாறு இருப்பில் நீ தலைவியை பிரிந்து செல்க! என்று தோழி தலைவனிடம் கூறவதால், தோழியின் மதிநுட்பம் புலப்படுகிறது. நெல்லி மரத்தின் காய்கள் வழிப்போவரது தாகத்தை மட்டும் தீர்த்துப் போகும்; உயிரைப் போகவொட்டாது தடுக்கும் தன்மையன என்று குறிப்பிடுவதால் தோழியின் மதிநுட்பத்துடன் கூடிய சொல்வன்மை புலப்படுகிறது. பாடலில்

பாலை நிலத்தின் இயல்பினைப் புனைவதால் திணை பாலையாயிற்று. தலைவனைப் பிரிந்த தலைவியின் வளையல்கள் நெகிழ்வதால், பிரிவின் நிமித்தம் பாடலில் குறிப்பாகச் சுட்டப்படுகிறது.

பகற்குறி வந்து ஒழுகா நின்ற காலத்துத் தலைமகன் கேட்பச் சொல்லியவாறு அமைந்த குறிஞ்சித் திணைப் பாடலொன்றை (நற். 389) காவிரிப்பூம்பட்டினத்துச் செங்கண்ணனார் பாடியுள்ளார்.

## வரைவே தரும்!

மணம் புரியாது களவில் பகற்குறி வரும் தலைவன் விரைந்து மணம் முடிக்க வேண்டும் என்னும் கருத்தினாளாய்த் தோழி, தலைவன் ஒருசார் பகற்குறியில் இருப்பதை உணர்ந்து தலைவியை நோக்கி, எம் தந்தை களிற்று யானையின் முகத்தைப பலிக்குமாறு சிறந்த அம்பெய்யும் தொழின்றிப் பிற தொழிலுணராத ஏவல் செய்யும் இளையோருடன் விலங்கு வேட்டையாடச் சென்றனன். எனவே சிறிய கிளிகள் கொய்து அழிக்குமாறு விளங்கும் பெரிய கதிர்களையுடைய திணைப்புனத்திற்குக் காவலாகச் செல் என்று அன்னையும் விடுத்தனள். அது முதலாக நாம் காவல் செய்தோம். அப்போது மலைநாடனின் நட்பு ஏற்பட்டுக் காதலாக மலர்ந்தது. அத்தொடர்பு அறுமாறு வேங்கைப்புலிபோன்றது மலர்ந்து நின்றது. அன்னையும் எதனாலோ என்னையும் அமர்ந்து நோக்கினாள் என்று தலைவியிடம் உரைக்கிறாள். பாடலில் 'வேங்கை புலியை ஈன்றன' என்றது வேங்கையில் புள்ளியையுடைய மலர்கள் மலர்ந்து புலியிருப்பது போலத் தோன்றும். வேங்கை மலர் மலருங்காலத்து திணை கொய்வது மரபு. திணைகொய்யின் களவு தடைபடும் தலைவியை இல்வயிற் செறிப்பர்.

எனவே வேங்கையின் மலர்ச்சியைக் கூறி தலைவனிடம் குறிப்பாக திருமணம் வேண்டி வரைகிறாள்.

## காவிரிப்பூம்பட்டினத்துக் கரந்தரத்தனார்

இவர் குறுந்தொகையில் குறிஞ்சித்திணைப் பாடலொன்றை (குறுந்.342) இயற்றியுள்ளார். செறிப்பு அறிவுறுக்கப்பட்டான் வரைவின்கண் செல்லாது பின்னும் வரைவு வேண்டின தலைமகளைத் தோழி நெருங்கிச் சொல்லி வரைவு வேண்டியவாறு அமைந்துள்ளது. இப்பாடல் பெரிய பலாப்பழத்தைக் காத்தலை மறந்து காட்டில் வாழும் குறவன், முசுக்கலை உண்ட காரணத்தால் புறத்தே அதன் சுளைகள் மணம் வீச, அதன்பின்னர், அவர் தன் காவலுக்கு உரிமையுடைய பலாமரங்கள் தோறும் பெரிய வலைகளைக் குரங்குகள் வராமல் பிணித்தனன். இத்தகைய மலைநாட்டின் தலைவனே! நின்னை விரும்பியவரின் துன்பத்தை நீக்கும் பயனில் புகாத இயல்புடையை' என நின்னை யான் கூறியும் பசிய சுனையின்கண் வளர்ந்த குவளையின் தண்ணிய தழையை ஆடையாக உடைய தலைவி, இல்லில் செறிகப்பட்டு வருந்துதல் தகுமோ? எனவே வரைவு செய்க என்று தோழி வற்புறுத்துகிறாள்.

குறித்திணைக்குரிய மக்கட்பெயரை, 'காவல் மறந்த கானகன்' என்று குறிப்பிடுவதன் மூலம் பாடலின் திணை குறிஞ்சியாயிற்று. நயந்தோர் துன்பம் தீர்க்கும் பயன் தலைப்படாதவன் எனத் தோழி தலைவனை இயற்பழித்த வழி, ஆதுகண்டு பொறுக்கமுடியாத தலைவி வருந்துகிறாள் என்று குறிப்பிடுவதால் முன்பு தலைவனுடன் புணர்ந்த செய்தியை அறியமுடிகிறது.

குரங்கினுக்கு அமைக்கப்பட்ட வலை, அதனை வாராமல் தடுப்பதற்கேயன்றி அதனை அகப்படுத்துவதற்கு அன்று அதுபோல இச்செறிப்பும் தலைவியைக் காத்தல் குறித்ததேயன்றி தலைவனை அகப்படுத்தும் நோக்கம் உடையதன்று; வரைவினை விரைவுபடுத்துதே அதன் நோக்கமாகும்.

## காவிரிப்பூம்பட்டினத்துச் சேந்தன் கண்ணனார்

இவர் பொருள் வலிக்கும் நெஞ்சிற்குத் தலைமகன் சொல்லி செலவழுங்கியதாக பாலைத்திணையில் அமைந்து குறுந்தொகைப் பாடலொன்றைப் (347) பாடியுள்ளார்.

தலைவன் பொருள் குறித்துச் செல்லும் சுரம் நீரற்ற சுனைகளையுடையதாக உள்ள பாலை நிலத்தின் கண் இளமையுடைய வாகை மரத்தின் கொம்பில் பூத்த மலர், மடப்பத்தையுடைய கரிய மயிலின் உச்சிக் கொண்டையைப் போலத் தோற்றமளிக்கும். இத்தகைய காட்டின்கண், தலைவி நம்மோடு பொருந்துகின்ற முயக்கத்தைச் செய்வாள் எனின், பொருள் செய்வதற்கு விரும்பிய நின்னுடைய துணிவு பெரிதும் நன்மை உடையதாகும் என்று தன் நெஞ்சுக்கு உரைக்கிறான்.

இப்பாடலின் தலைவன், பொருள் வயிற்பிரிவின் கண் தலைவியை உடன்கொண்டு செல்லும் மரபு இல்லை என்பதால், அவளை விடுத்துச் செல்லுதல் தன்னால் இயலாமை கருதிச் செலவைத் தவிர்க்கிறான். தலைவி உடன் வரப் பெரின். பொருள் வலிந்த தன் நெஞ்சின் துணிவு நன்று என்பதால் உடன் வரப்பெறாமையால் அச்செலவு தீது எனக் கருதினான்.

பாலைத் திணையின் நிலத்தை, ‘மல்கு சுனை உலர்ந்த நல்கூர் சுரமுதல்’, ‘கான நீள் இடை’ ஆகிய சொற்றொடர்கள் குறிப்பிடுவதால் பாலைத் திணையாயிற்று. பாடலில் பாலைத் திணையின் உரிப்பொருளான பிரிவு, பற்றிய சிந்தனை ஏற்பட்ட தலைவன் அதனைத் தவிர்க்கும் முகமாக தன் நெஞ்சை செலவு அழுங்கிய காரணத்தால் பாலையாயிற்று. பாடலில் நன்றே-நெஞ்சம்! என்ற விளி இடம்பெறுவதால் கூறுபவன் தலைவன் என்று கேட்பது அவனது நெஞ்சம் என்றும் அறிய முடிகிறது.

## காவிரிப்பூம்பட்டினத்துப் பொன் வணிகர் மகனார் நப்பூதனார்

இவர் பத்துப்பாட்டில் ஒன்றான முல்லைப்பாட்டினை இயற்றியுள்ளார். இது ஐந்தாவது நூலாக இடம்பெற்றுள்ளது. முல்லைத் திணையை வருணிக்கும் பிற சங்கப் பாடல்களில் சிறந்ததாக முல்லைப்பாட்டு கருதப்படுகிறது. இது நேரிசை ஆசிரியப்பாவில் 103 அடிகளைக் கொண்டு விளங்குகிறது. முல்லைப்பாட்டு முல்லைத் திணைக்குரிய ‘இருத்தல்’ ஒழுக்கத்தைச் சிறப்பிக்கிறது. தன்னைப் பிரிந்து சென்ற தலைவன் வினைமுடித்துத் திரும்பி வரும்வரை தலைவி ஆற்றியிருக்கும் செய்தியை இந்நூல் விளக்குகிறது. இதனுள் கார்கால வருணனை, பெருமுது பெண்டிர் விரிச்சி கேட்டல், பாசறை அமைப்பு, பாகர்கள் யானையை பழக்கும்முறை, புண்பட்டு நின்ற வீரனை நினைத்து வருந்தும் மன்னனின் நிலை, தலைவியின் தனித்துயிர் முதலியன சிறப்பாகக் கூறப்பட்டுள்ளன. தலைவன் பிரிவுத் துன்பத்தால் துயருறும் தலைவியின் செவியிலே கொம்பும், சங்கும் கலந்து ஒலிக்கும் ஒலி (தேரொலி) கேட்கின்றன. இதோடு பாட்டும் முடிகின்றது.

ஒரு தலைவன் பிரிவை எண்ணி வருந்தும் தலைவியின் இயல்பும் போர்களத்தில் தலைவன் வீரம், போர்களம், போர்முறை பற்றிய செய்திகளை நேர்முக வருணனை போல கண் முன் நிறுத்திக் காட்டியுள்ளார் நப்பூதனார். போர் நிமித்தம் தலைவியைப் பிரிய நேர்ந்த தலைவன், தலைவியிடம் கார்காலம் தொடங்குமுன் வருவேன் என்று கூறிப்பிரிகிறான். கார்காலம் தொடங்கியும் அவன் வராது கண்டு வருந்தும் தலைவியை முதுபெண்டிர் விரிச்சி கேட்டு அவளை ஆற்றிவிக்கின்றனர். பின்பு தனிமையில் தலைவி தன்னை ஒருவாராக ஆற்றுவித்து கொள்கிறாள். இதனிடையே தலைவன், பாசறை அமைந்து போரில் காயம் பட்ட வீரர்களை எண்ணி வருந்துகிறான். பிறகு தலைவன் போரினை வென்று தலைவியை அடைகிறான். இதுவே முல்லைப்பாட்டின் பொருள்.

முல்லைப்பாட்டு பல்வேறு வரலாற்றுச் செய்திகளை உள்ளடக்கி, வரலாற்று ஆவணமாகவும் திகழ்கிறது. முல்லைப் பாட்டில் சங்க காலத்து மக்களின் நம்பிக்கைகள் குறித்தும், போர்ப் பாசறை குறித்தும் செய்திகள் இடம்பெற்றுள்ளன. 'விரிச்சி கேட்டல்' என்பது சங்கப் பண்பாடு. இதற்கு 'நற்சொல் கேட்டல்' எனப் பொருள்படும். தமக்கு மயக்கமான துன்பம் தரும் வேளையில் சாதகமான நற்சொற்களைக் கேட்கக் கோவிலுக்குச் செல்வது வழக்கம். அங்கு இறைவனை நெல்லும், மலரும் தூவி வழிபடுவது, அதே நேரத்தில் மனம் மகிழும்படியான சொல்லைத் தற்செயலாக யாராவது ஒருவரின் வாய்மொழியாக கேட்டுவரவும் செய்வர். இந்த நிகழ்வை முல்லைப்பாட்டு பதிவு செய்கிறது. மன்னர்கள் பெரும்பாலும் வேனிற் காலத்தில் போருக்குச் சென்றனர். போருக்குச் செல்லும் மன்னன், பகைவரின் கோட்டையை அடுத்தே இடத்திலேயே பாசையை அமைத்தான். பாசறை பழுதடைந்த வில் அம்புகளாலும் பலவகை நிறத்துணிகளாலும் அமைக்கப்பட்டது. பாசறை தனித்தனியே குடில்கள் அமைக்கப்பட்டு மன்னனுக்கென்று தனியிடம்

அமைக்கப்பட்டுள்ளது. மன்னனுக்குக் காவலாக யவனப்பெண்கள் இருந்தனர். பொழுதைக் கணக்கிட்டு, அறிய நாழிகை வட்டில் என்ற கருவியும் அதை இயக்குவதற்கு அலுவலரும் இருந்தனர்.

முல்லைப்பாட்டு எனப் பெயர்பெறும் இப்பாடலில் முல்லைத்திணைக்கு உரிய முதல், கரு, உரிப்பொருட்கள் சிறப்பாகப் பொருந்தி வருகின்றன. 'காரும் மாலையும்' முல்லைக்கு உரிய முதற்பொருள் முல்லைப்பாட்டில் கார்கால வருணையை,

'நீர்செல நிமிர்ந்த மாஅல்போல
பாடுஇமிழ் பனிக்கடல் பருகி வலன் ஏர்பு
கோடு கொண்டு எழுந்த கொடுஞ்செலவு எழிலி
பெரும்பெயல் பொழிந்த சிறுபுன் மாலை'

(முல்லைப்பாட்டு. 3-6)

என்ற பாடலடிகள் மெய்ப்பிக்கும். முல்லைத்திணைக்கு உரிய கடவுள் திருமால். முல்லைத்திணைக்குரிய மக்கள் இடையர்கள். இவர்களது தொழில் மாடுமேய்தல், மோர்விற்றல் முதலியவையாகும். இதனை,

'நடுங்கு சுவல் அசைத்த கையள் கைய
கொடுங்கோல் கோவலர் பின் நின்று உய்த்தர'

(முல்லைப்பாட்டு.14-15)

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. தலைவனைப் பிரிந்து தலைவி ஆற்றியிருத்தலை,

'இன்துயில் வதியுநன் காணாள் துயர் உழந்து
நெஞ்சு ஆற்றுப்படுத்த நிறைதபு புலம்பொடு
நீடு நினைத்து தேற்றியும், ஒடவளை திருத்தியும்
மையல் கொண்டும்................................'

(முல்லைப்பாட்டு. 80-83)

என்ற பகுதி விளக்கும். முல்லைத்திணைக்குரிய முதல், கரு, உரி என்னும் மூன்று பொருள்களையும் பெற்றுத் திகழ்வதோடு, முல்லைத் திணைக்குப் புறமாகிய வஞ்சித்திணையும் இடைப்பறவரலாக இடம்பெறுகிறது. வஞ்சித் திணை புறப்பொருளுக்கு உரியதாயினும் பாசறை பற்றிய வருணனையைச் சொல்ல வேண்டியிருப்பதால் நப்பூதனார் இதனைப் பொருத்திக் காட்டியுள்ளார்.

## முல்லையா ? நெய்தலா ?

நச்சினார்க்கினியர் இப்பாடலுக்கு உரைசொல்லும்போது 'முல்லை சான்ற கற்பு பொருந்தியதனால் இது முல்லையென்று பெயர் பெற்றது என்றும், இல்லறம் நிகழ்த்துதற்குப் பிரிந்து வருமளவும் ஆற்றியிருவென்று கணவன் கூறிய சொல்லைப் பிழையாமல் ஆற்றியிருந்து இல்லறம் நிகழ்த்திய இயற்கை முல்லையாகுமென்று கருதி இருத்தல் எனும் பொருள்தர இச்செய்யுட்கு நப்பூதனார் பெயர் இட்டமையால் கணவன் வருமளவும் ஆற்றியிருந்தாளென்று பொருள் கூறுவதே முறையென்றும் கூறுவார் நச்சர். எனினும் பாடலைச் சிதைத்துப் பொருள் கொண்டு, நெய்தற் திணையாகவும் பாலைத்திணையாகவும் நூல் கருத்தாதலை வலியுறுத்துகிறார். முல்லையென்பது காதலனைப் பிரிந்த காதலி அவன் வருமளவும் ஆற்றியிருக்கும் ஒழுக்கமாகும் தலைவி ஆற்றாமல் வருந்தினாள் என்றால் அது நெய்தல் ஒழுக்கமாகும். ஆசிரியர்

'முல்லைப்பாட்டு' என்று பெயரிட்டமையால் அவ்வொழுக்கம் மட்டுமே கூறப்படவேண்டும் என்று கொண்டு நேராகப் பொருள் கூறாது, பொற் சாரிகை பின்னிய நற்பட்டாடையினை துண்டு துண்டாகக் கிழித்துச் சேர்த்துத் தைத்து அவம்படுவார் போலச் செய்யுட் சொற்றொடர்களை ஒரு முறையிமின்றித் துணித்துத் துணித்துத் தாம் வேண்டியவாறு சேர்த்துப் பன்னி உரை வரைகிறார்"[24] என்று நச்சினார்க்கினியர் மீது மறைமலை அடிகள் குற்றம் சாட்டுவார் அடிகளார். முல்லைப்பாட்டில் வருவது முல்லை ஒழுக்கமே என்பதை நிறுவ அதனை நெய்தல் ஒழுக்கத்தினின்று வேறுபடுத்தி விளக்கம் தருவார். ஆனால் அடிகளாரின் விளக்கத்திலும் இரங்கலே ஓங்கி நிற்கிறதென்றும் நச்சினார்க்கினியர் உரையில் அவர்காணும் முறை அவர் உரைக்கும் பொருந்துமென்றும் தெ.பொ.மீ.குற்றம் சாட்டுவார். முல்லைக்கும் நெய்தலுக்கும் அடிகளார் காட்டும் வேறுபாட்டையும் தெ.பொ.மீ குறையுடையது என்று கூறி, "வெளிப்படையாகவோ, மறைமுகமாகவோ தலைவனும் தலைவியும் மீண்டும் கூடுவர் என்பதற்கான குறிப்பு இருக்குமாயின் அதுமுல்லை. குறிப்பேதுமின்றிப் பிரிவுணர்வே மேலோங்கி நின்று அஃதே தலையாய உணர்வாய் இருப்பின் அக்கவிதை பாலையாகும்"[25] என்பது தெ.பொ.மீயின் விளக்கம் என்பர் ப. மருதநாயகம். முல்லைப்பாட்டின் சிறப்பை "முல்லை இந்தியத் துணைக்கண்டம் முழுவதும் ஒரு தனிச்சிறப்புடைய படிமமாக வளர்ந்துள்ளது. அதன் வெண்மை நிறம் தூய்மையும், குற்றமற்ற தன்மையும் உடையதாகும் அதன் அடக்கமான ஒளியும் மணமும் இன்பம் தருவதாகும். சூழவரும் இருளில் நம்பிக்கை ரேகையாக நிற்கிறது. அதன் நடுக்கும் இளமை இரக்கவுணர்வைத் தூண்டுகிறது. அதன் ஒளி வரவேற்பு நல்கும் புன்னகையாகப் பரவுகிறது. இம்முல்லைப்பாட்டில், இவ்வெள்ளை மொட்டு மணம் வீசும் மலராக மலர்ந்து இனிய தேன் பெற்று யாழிசை யெழுப்பும் தேனீக்களின் இசை

காதிற்கும், மலரின் மணம் நாசிக்கும் அதன் மென்மை மெய்க்கும் வெண்ணிறம் கண்ணிற்கும் மலரின்தேன் நாக்கிற்கும் பெருவிருந்து அளிக்கும்"[26] என்று உணர்த்துகிறார் முனைவர் பா. மருதநாயகம்.

## கிடங்கில் காவிதிக் கீரங்கண்ணனார்

இவர் நற்றிணையில் நெய்தல் திணைப் பாடலொன்றை (218) மட்டும் பாடியுள்ளார். இப்பாடல் வரைவிடை மெலிந்த தலைமகள் வன்பொறை எதிர் ஓழிந்தது என்றும் கூற்றில் அமைந்துள்ளது.

## தளர்ந்த மனம்

மணம் செய்து கொள்ள உடன்பட்ட தலைவர் காலம் தாழ்த்துதலால் தலைவி வருந்தினாள். அவள் தன்னைப் பொறுத்திருக்கும்படி வற்புறுத்திய தோழியிடம், மாலைப் பொழுதும் வந்தது; தொடர்ந்து இரவும் வந்தது; அவர் கூறிய பருவம் கழிந்தது கூகையின் குரலுடன் அன்றிலின் குரலையும் கேட்டு நிற்பேன் போலும்' என்று மனம் தளர்ந்து தோழியிடம் உரைக்கிறாள் தலைவி.

நெய்தல் திணைக்குப் பொருத்தமான சிறுபொழுது சாயுங்காலம் ஆகும். இதனை 'எற்பாடு' என்று குறிப்பிடுகிறார் தொல்காப்பியர். இதனை,

'.........................................எற்பாடு
நெய்தல் ஆதல் மெய்பெறத் தோன்றும்'

(தொல். 954)

என்ற நூற்பாவால் அறியமுடிகிறது. எல்-சூரியன்; பாடு-படுதல். படுதல் என்ற சொல்லுக்குத் தோன்றுதல், மறைதல் என்ற இருபொருளும் உண்டு. இங்கு மறைதல் என்ற பொருளில் வந்துள்ளது. இந்நற்றிணைப் பாடலில், 'ஞாயிறு ஞான்று கதிர் மழுங்கின்றே' என்ற தொடரால் சூரியன் மறையும் சாயங்காலம் குறிப்பிடப்படுவதால் நெய்தல் திணைக்கு உரிய முதற்பொருளால் திணை நெய்தலாயிற்று. நெய்தல் திணைக்கு உரிய உரிப்பொருள் இரங்கலும் இரங்கல் நிமித்தமும் ஆகும். பாடலில் தலைவன் வருவதாகக் கூறிய பருவம் கழிந்தது. மாலை நேரமும் வந்தது. தலைவன் வாரது கண்ட தலைவி இரங்கி நிற்கிறாள் இரவு வரை. பாடலில் ஆனா நோய் அடவருந்தி' என்ற தொடரால் தலைவியின் வருத்தம் அறிப்படுகிறது.

## கிடங்கில் காவிதிப் பெருங்கொற்றனார்

இவர் பாடிய முல்லைத் திணைப் பாடல் நற்றிணையில் (364) தொகுக்கப்பட்டுள்ளது. தலைவனைப் பிரிந்த தலைவி, தலைவன் குறித்துச் சென்ற பருவமும் கழிந்தது. இவ்வாறு சில வைகல் கழித்து மாலைப்பொழுதுடன் மழையும் சேர்ந்து வந்தால் எங்ஙனம் யான் உயிர்வாழ்வேன எனத் தோழியிடம் கூறுவதாக இப்பாடல் அமைந்துள்ளது பகலிலும் இரவிலும் இடியுடன் கூடிய மழை பொலிதலால் குளிர்ந்த வாடைக் காற்றுடன் பனியின் சினம் என்னை வாட்டின. சிறிய செவ்விய நாவினை உடைய மணியின் இனிய ஓசை ஒலிக்கும் வண்ணம் பல வகை ஆனிரைகள் ஊரிலே செலுத்தி வந்த ஆயர்கள் நிரை ஓம்பலைத் தவிர பிறிதொரு தொழிலை அறியாதவர்கள். ஆவர்கள் ஊதும புல்லாங்குழல் இசையும் பிரிந்தோரின் உயிர் உடலை விட்டு உடனே

நீங்கும்படி விரைந்து வருகின்ற வாடைக் காற்றும் ஒரு சேர வந்து சேர்ந்தால் எங்ஙனம் யான் ஆற்றியிருக்கக் கூடும் என்று குறிப்பிடுவதால் திணை முல்லையாயிற்று. முல்லைத்திணைக்குரிய கருப்பொருள்களான, மக்கள், விலங்குகளை, 'பல் ஆ தந்த கல்லாக் கோவலர்' என்று குறிப்பிடுவதாலும் திணை முல்லையாயிற்று. முல்லைத் திணைக்கு உரிய முதற்பொரளான, காரும் மலையும்'

'உயிர்செலத் துணைதரும் மாலை
செயிர்தீர் மாரியொடு ஒருங்க தலைவரினே'
(நற். 364;11-12)

என்று குறிப்பிடப்படுகிறது.

## கிடங்கில் குலபதிக் கண்ணனார்

இவர் குறுந்தொகையில் குறிஞ்சித் திணைப் (252) பாடலொன்றைப் பாடியுள்ளார். தலைமகன் வரவறிந்த தோழி 'அவர் தம்மை வலிந்து போயினார்க்கு எம் பெருமாட்டி தீயன கடிந்து நன்கு ஆற்றினாய்' என்றதற்குத் தலைவி மறுமொழி கூறுவதாக இப்பாடல் அமைந்துள்ளது.

## நல்லவன்

தலைவியின் வளையல் நெகிந்தமை கண்ட தோழி, தலைவனின் புறத்தொழுக்கத்தைச் சுட்டிக் காட்டி அவனை கொடியவன் என இகழ்ந்துரைத்தாள். தலைவி, தன்னுடைய காதலன், அறிவான் அமைந்த சான்றோன் எனவும். அவன் பழிபாவங்களுக்கு நாணுபவன் எனவும் பாராட்டிக் கூறித் தோழியை தன்பொருட்டு வருந்தற்க என்றாள்

கொடியவனின் கொடுமையைப் பேணாது, இன்முகத்துடன் அவனை ஏற்றுக் கொள்ள முடிந்தமைக்குக் காரணம், அவள் பால் அமைந்த கடவுள் தன்மை நிலை பெற்ற கற்பேயாகும்.

பாடலில் குறிஞ்சி நிலத் தலைவனை 'கொடியன் ஆகிய குன்றுகெழு நாடன்' என்று குறிப்பிடுவதால் திணை குறிஞ்சியாயிற்று. தலைவன், தன்னைப் பிறர் பாராட்டுவதை விரும்பாதவன். ஆதலின், தலைவி அவனைப் பாராட்டவில்லை. தலைவன் தலைவியின் மெலிவினாள் நேரும் அவளுடைய இறந்துபாடு கண்டு அஞ்சுபவன் ஆதலின், அவனைத் தலைவி ஏற்றுக்கொண்டனள் என்பதால் 'புணர்தல் நிமித்தம்' பாடலில் குறிப்பாக இடம்பெற்றுள்ளது. பாடலில் 'துனியல் வாழி தோழி' என்ற விளியால் கூற்று நிகழ்த்துவள் தலைவி என்றும், கேட்போள் தோழி என்பதும் தெரிகிறது.

## குடவாயிற் கீரத்தனார்

இவர் அகநானூற்றில் பத்துப் பாடல்களையும், நற்றிணையில் நான்கு பாடல்களையும், குறுந்தொகையில் மூன்று பாடல்களையும் பாடியுள்ளார். அகப்பாடல்களில் எண்ணிக்கையில் அதிகம் பாடியோர்களில் குடவாயிற் கீரத்தனாரும் ஒருவர். இவரைப் போலவே சோழன் நலங்கிள்ளி என்பவரும் முல்லைக்கலியில் பதினேழு பாடல்களைப் பாடியுள்ளார். இவர் ஒருவர் மட்டுமே அணைத்துத் திணைப் பாடல்களையும் இயற்றியுள்ளார். எனினும் பாலைத்திணைப்பாடல்களை மிகுதியாகப் பாடியுள்ளார்.

வேந்தன் போர் வினை காரணமாகத் தலைவியைப் பிரிந்த தலைவன் போரில் வென்று மீள்கிறான். அப்போது தன் தலைவியைக் காணப் பெரிதும் விருப்பமுற்றுத் தேரினை விரைவாகச் செலுத்துமாறு தேர்பாகனுக்கு உரைப்பதாக முல்லைத்திணைப் பாடலொன்றை அகநானூற்றில் (44) அமைத்துப்பாடியுள்ளார் புலவர் குடவாயிற் கீரத்தனார்.

## தலைவனின் வேட்கை

பாகனே! நம் அரசனும் போர்முனை வந்து தான் மேற்கொண்ட வினையை வெற்றியுடன் முடித்தான். பகையரசர் தமக்கென விதிக்கப்பட்ட திரைப்பொருளைக் கொடுத்து தம் அரசனுக்கு சுற்றத்தார் ஆயினர். முன்பு பழையன் என்பான் நன்னனும் ஏற்றை நல்ல அணிகலன்கள் அணிந்த அத்தியும் பகைவர் நெருங்குவதற்கரிய வலிமைமிக்க தங்கனும், கட்டியும் வலிய வில்லினையுடைய பொன்னாலான அணிகலன்கள் அணிந்த புனதுரையும் என்று கூறப்படுவோர் முன்பு கூடிப்போர் செய்வதற்கு நின்ற அளப்பரிய சிறப்பு வாய்ந்த போர்க்களத்தே மருந்துகள் வந்து விழும்படி போர்புரிந்து இறந்துவிட்டான். பின்பு பெரும்பூட சென்னி என்பான் அது கண்டு பொறுக்காதனாகி வலிமை பொருந்திய கணையன் உள்ளிட்ட கழுமலம் என்னும் ஊரிமைக் கைப்பற்றினான். அவனது அழும்பில் என்னும் ஊரினை ஒத்தது குடவாயில் என்னும் ஊர். பல்வேறு வளங்களை (சிறப்புகளை) உடைய குடவாயில் போன்ற நம் தலைவியின் நல்ல பண்புகளைக் கொண்ட மார்பின் கண்ணே இனிய துயிலினைப் பெறுதல் வேண்டும். எனவே தேரினை விரைந்து செலுத்துக! என்று தலைவன் கூற்று நிகழ்த்துகிறான்.

இப்பாடல் அகப்பாடலாக அமைந்தாலும் தலைவியின் சிறப்பினை வெளிப்படுத்த, பல்வகை வளங்களும் நிறைந்த ஒரு நகரத்தை உவமைப்படுத்துவது சங்கப் புலவர் இயல்புகளுள் ஒன்று. குடவாயில் கீர்த்தனார் தமது ஊரினைத் தலைவிக்கு உவமையாக்கியுள்ளார். அழும்பில் என்னுமூர், 'விறல்வேள்' என்னும் குறுநிலமன்னனுக்குரிய வளமான நகரம் என்பதை மதுரைக்காஞ்சி சுட்டுகிறது. இவ்வாறு குடவாயிற்கீரத்தனார் சேர, சோழ, பாண்டிய நாட்டில் உள்ள கழுமலம், குடவாயில், அழும்பில் ஆகிய மூன்று நகரங்களையும் எடுத்துக் காட்டுகிறார்.

பாடலில் வினைமுற்றி மீளும் தலைவன், தலைவியை கானும் விருப்பினனாகித் தலைவியைக் காணத் தேரினை விரைவாகச் செலுத்துக! என்று கூறுவதால், முல்லைத்திணைக்கு உரிய உரிப்பொருளான 'இருத்தல் நிமித்தம்' சுட்டப்பெறுகிறது. இப்பாடலில் புறச் செய்திகளுக்கு அதிக முக்கியத்தும் கொடுத்தலால், முதல் கருப்பொருட்கள் இடம்பெற வில்லை. பாடலில் ஊர்க பாக! என்ற தொடரால் கேட்போன் தேர்ப்பாகன் எனவும், கூறுவோன் தலைவன் எனவும் அறிய முடிகிறது.

தலைமகனுக்குத் தோழி, செறிப்பு அறிவுறுத்தி வரைவு வேண்டியவாறு மற்றொரு அகப்பாடலைப் (60) பாடியுள்ளார் குடவாயிற் கீர்த்தனார். நெய்தல் திணையில் இப்பாடல் அமைந்துள்ளது.

## வரைவே நலம்

மணம் கொள்வதில் கருத்தின்றிக் களவொழுக்கமே விரும்பியவனவாய்த் தலைவன் தலைவியைக் காணப் பகற்குறியிடத்தே பல முறை வந்ததைக் கண்ட தோழி, பெரிய கடற்பரப்பில் சென்று மீன்பிடித் தொழிலை மேற்கொள்ளும் தந்தைக்கு கருவாட்டுடன் கூடிய

கொழுமீன் கறி வழங்கும் தலைவி வலிமை பொருந்திய தேரியையுடைய சேரனது தொண்டி எனும் நகரத்திற்கு ஒப்பானவள். அவளை நீ வளையல்களைத் தழும்பு ஏற்படும் வண்ணம் நெருக்கி வருத்துகிறாய். இதனைத் தலைவியின் தாய் அறிந்தால், வெல்லும் வேலையுடைய வெற்றி பொருந்திய சோழ மன்னர் குடந்தை என்னும் ஊரின் கண் பாதுகாத்து வைக்கப்பட்ட பகைவர் நாடு திறையாகத் தந்த நிதியைக் காட்டிலும் மிகவும் அரிய பாதுகாப்பினைச் செய்வாள். எனவே நீ தலைவியை விரைந்து திருமணம் செய்வாயாக என வரைவு வேண்டினாள் தோழி.

இப்பாடல் ஆசிரியர் குடவாயில் என்னும் ஊரினர் ஆதலின் தம் பாடற்றலைவிக்குச் சோழ மன்னர் குடவாயில் பாதுகாத்து வைத்த நிதியை உவமையாகக் கூறுகிறார். இப்பாடல் முதற்பொருளால் நெய்தல் திணையாகத் தொகுக்கப்பட்டுள்ளது. இதனை,

'பெருங்கடற் பரப்பில் சேயிறா நடுங்க
கொடுந்தொழில் முகந்த செங்கோல் அவ்வலை
நெடுந்தமிழ் தொழிலொடு வைகிய தந்தைக்கு
உப்பு நொடை நெல்லின் முரல்வெண்சோறு
அயிலை துழந்த அம்புளிச்சொரிந்து
கொழுமீன் தடியொடு குறுமகள் கொடுக்கும்'

(அகம். 60;1-6)

பாடலடிகள் மெய்ப்பிக்கின்றன. படகுத் தொழிலின் மேற் கருத்தூன்றித் தங்கிய தந்தைக்கு, இளமை பொருந்திய மகள் மீன் கொண்டுவதற்கு முன்னே தான் உப்பு விற்ற நெல்லாலே ஆக்கப்பட்ட மூரல் வெண்சோற்றைப் புளிங்கறியை சொரிந்து கொழுமீன் தடியொடு

கொடுத்தாற்போல, தாம் வரைவதற்குத் தாமும் புறம்பே முயல, நாங்களும் அறத்தொடு நிற்றல் என்ற வகையில் முயல்வோம் என உள்ளுறையாகத் தோழி கூறுகிறாள்.

## வருந்தும் நெஞ்சம்

பொருள்வயிற் பிரிந்த தலைமகன் இடைச்சுரத்துத் தன் நெஞ்சிற்குக் கூறிய பாலைத்திணைப்பாடலில் பாலை நிலத்தின் கொடுமை நன்கு வெளிப்படுகிறது. வலிமை பொருந்திய கையினையுடைய ஆடவர்கள் தோளிலே சோற்று முடிச்சு தொங்க, கிணறு வெட்டும் தொழிலில் முனைந்தவராய் தீப்பொறி பறக்க பாறைகளை வெட்டி மிக்க உவரையுடைய கிணற்றினைத் தோண்டுவர். அப்பாறைகளுக்கு நடுவே ஊறிக்கிடக்கும் நீரினை உண்ண விரும்பிய பசுக்கூட்டங்கள், கிளப்பிய செம்மண் நிறங்கொண்ட புழுதி அகன்ற பெரிய வானத்தின்கண் மிகுதியாகத் தோன்றும். அத்தகைய இடம் அகன்ற காட்டில் நம்மொடு துணையாக கூடி உடன் செல்வோம் என்று நினையாது இங்குவந்து தங்கிய அளவில் வருந்தினாய் நெஞ்சமே! எனத் வருந்துவதால் திணை பாலையாயிற்று.

## வரைவு நன்று

மற்றொரு பாலைத் திணைப்பாடலில் (119) செலவு உணர்த்திய தோழிக்குத் தலைமகள் சொன்னது; தோழி தலைமகட்குச் சொன்னதூஉம் ஆம் என்ற இரு கூற்றுகள் அமையும் பாடலைப் பாடியுள்ளார். தோழி, நம் தலைவர் இளமை பொருந்திய எம்மை விட்டுச் செல்லினும் செல்க; யானை வலிய புலியொடு போரிட்டு வருந்தியமையால் துண்டமாகப்

பிளவுபட்ட தலையின்கண் ஏற்பட்ட நோயால் வருந்தியது. நீர் உண்ணுதற்கு விரைந்து சென்று, மண்ணில் முழங்காலை மடித்து ஊன்றி, அங்கிருந்த சுனையில் தன் துதிகையில் துழாவியும் நீர் கிடைக்கப் பெறாமல் நெட்டுயிர்ப்புக் கொண்டது. நம் தலைவர் செல்லும் பாலை வழியோ அத்தகைய வறண்ட சுனையினைக் கொண்ட மேகம் தவழும் உச்சியினையுடைய மலையிடத்தாகும். அம்மலை வழியில் செல்லும் மக்கள் அறுத்துப் போட்டுச் சென்ற பிரண்டைக் கொடி, இடியுண்ட பாம்பினது பசிய உடலின் துண்டுகள் போல வழியில் வாடிவதங்கிக் கிடக்கும். அத்தகைய காட்டில், உப்பு வணிகர் கூட்டம் சமைத்து உண்டு கைவிட்டுச் சென்ற கல் அடுப்பில் வலிய வில்லினை உடைய மழவர்கள் இறைச்சியை உடையர். இத்தகைய இயல்புடைய பாலைநிலத்தில் பெண்களுடன் செல்லுதற்கு உரியதன்று எனக் கருதாது உடன் அழைத்துச் செல்ல உடன்படுவாரோ? மாட்டாரோ? என அரசனுக்கு உற்றுழி உதவத் தலைவியைப் பிரித்து செல்லும் தலைவனின் நிலையை அறிந்து வருவாயா? எனக் குறிப்பாக கூறுவதன் மூலம் தலைவி தலைவனை வரைவு மேற்கொள்ள வேண்டும் என்ற குறிப்பு பாடல் முழுவதும் ஊடாடி நிற்கின்றது. இதனை 'வரைவு நன்று' என்ற சொற்றொடர் விளக்குகிறது. பாடலில், பாலை நிலத்தின் இயல்பு விளக்கப்படுதலால் முதற்பொருளால் பாலையாயிற்று. போருக்குச் செல்லும் தலைவனின் பிரிவை எண்ணி, தலைவி வருந்துவதால் பாலைத் திணையின் உரிப்பொருளான 'பிரிதலும் பிரிதல் நிமித்தமும்' நன்கு உணரப்படுகிறது. பாடலில் தோழி! என்ற விழி எந்தவிடத்திலும் குறிப்பிடவில்லை. எனவே கூற்று நிகழ்த்துவோளையும், கேட்போளையும் தெளிவாக உணர முடியவில்லை. எனவே இப்பாடல் இருவரது கூற்றாக இருக்கக் கூடும் என்று உரையாசிரியர்கள் கருதினர்.

## பாலையின் இயல்பு

தலைவன் பொருள் வயிற புரிந்தான். பிரிவாற்றாது தலைவி உடல் வேறுபட்டு வருந்தினாள். அது கண்ட தோழி, முடிவில் பிரிவதற்கு அஞ்சி நடுங்கிய காதலர் பின்னர், இவளோடு செல்லுதற்கு அருஞ்சுரம் அரிய வல்ல எனத் தம் உள்ளக் கருத்தை வெளிப்பட மொழிந்தார். ஆதலின் நின்னை மறந்து அவர் வேற்று நாட்டில் தங்குதல் முடியாது. எனவே விரைந்து வந்து விடுவார் எனத் தலைவியை ஆற்றுவிக்கும் முகமாக இப்பாலைத் திணைப்பாடல் அகநானூற்றில் இடம்பெற்றுள்ளது. இப்பாடலில் பாலைத்திணையின் இயல்பு எடுத்தோதப்பட்டுள்ளது. தலைவன் கடந்து சென்றுள்ள காடு, மேற்றுதற்குப் புல்லின்றி மூங்கிலின்றும் உதிர்ந்த நெல்லை கண்ட ஆண்மான், தன் பெண்மானுடன் உண்ண அழைத்தற்கு இடமானது அப்பாலை நிலம். மேலும் கூர்மையானப் படைக்கலன்களை உடைய மழவர்கள் அச்சிற்றூர்களில் வாழும் மக்கள் தம் தலைகளில் கைவத்து அலறி அழும்படி, அவரது ஆனிரைகளைக் கவர்ந்து சென்று அவற்றைக் கொன்று தின்று நீர் வேட்கை காரணமாகத் தெளிந்த சுனை நீரை மிகுதியாகப் பருகுதற்கு இடனான கடத்தற்கரிய பாலை நிலம் என்று பாலைநிலத்தின் கொடுமையைப் படம் பிடித்துக் காட்டுகிறார் குடவாயிற் கீரத்தனார். இதனை,

‘கலங்குமனை சீறூர் கைதலை வைப்ப
கொழுப்பு ஆ தின்ற கூர்ம்படை மழவர்
செருப்புடை அடியர் தெண்சுனை மண்டும்
அருஞ்சுரம் அரிய அல்ல...............’

(அகம். 129;11-14)

என்ற பாடலடிகள் மெய்பிக்கும் பாடலில் ‘ஆயிழை’ என்ற விழி தலைவியைக் குறிப்பதால் கேட்போள் தலைவியாகிறாள்.

## அலைபாயும் நெஞ்சம்

தலைவன் பொருள்தேடச் தலைவியைப் பிரிந்து சென்றான். சென்றவன் இடைச்சுரத்து நின்று தலைவியை நினைத்து ஆற்றாமையால் தன் நெஞ்சிற்குக் கூறியவாறு மற்றொரு பாலைத் திணைப்பாடலைப் (237) படாடியுள்ளார் குடவாயிற் கீரத்தனார். தலைவி வளையல் அணிந்த முன்கையின் விரல்களைத் தொகுத்துக் குவித்து, நம்மைக் காணவேண்டுமென விரதம் கொண்டு, துணையின்றி வருந்தி நிற்பாள். ஆனால் நானோ மழைபெய்யாது நீங்கிய அகன்ற பாலை நிலத்தே திரண்ட காலினையுடைய அழகான பெண்மானின் வெப்பத்தைத் தணித்தற்காக ஆண்மான் முதுகினை நச்சி நிற்கும். இந்த பாலை நிலத்தின் நெடுவழியில் தனித்திருந்து வருந்துகிறோம்! எனத் தன் நெஞ்சிற்கு உரைக்கிறாள். தலைவியைப் பிரிந்து தலைவன் துன்புறுதலை, 'நிரம்பா நின் இடை வருந்தும், யாமே' (அகம்.287;14) என்ற பாடலடி மெய்பிக்கும். 'பிரிதலும் பிரிதல் நிமித்தமும்' பாடலில் சுட்டப்பெறுதலால் பாடலின் திணை பாலையாயிற்று.

## பேதை மகள்

தலைவனுடன் தலைவி உடன்போக்கு மேற்கொண்டதை அறிந்த நற்றாய் வருந்திக் கூறியவாறு மற்றொரு பாலைதிணைப்பாடலைப் (315) பாடியுள்ளார் குடவாயிற் கீரத்தனார். பெரும்புகழ் கொண்ட பாண்டியனின் வளம் பொருந்திய மதுரையைப் போன்ற அரிய காவலையுடைய எம் வீட்டில் சிலம்பு கழி நோன்பு கூட செய்யாத நிலையில், தொலைதூரம் சென்று வற்றிய சுனையில் நீர்பெறாது தளர்ச்சியுற்று, புறாக்கள் கொத்தித்

தின்றமையால் புல்லிய காய்களையுடைய நெல்லிமரத்தின் மீது காற்று வீச, நூல் அறுந்து உதிர்ந்த பளிங்குக் காசுகளைப்போல நெல்லிக்கனிகள் உதிர்ந்த காட்டுவழியில், கூர்மையான வேலினையுடைய தலைவன் பொய்கூறி அழைத்துச் செல்ல அவளும் அவனுடன் சென்று விட்டாள்; தலைவனின் காட்டு ஊரில் அவள் எப்படி வாழ்வாளோ? என நற்றாய் வருந்தி நிற்கிறாள்.

தொல்காப்பியர், நற்றாய் பேசும் இடங்கள் குறித்து அகத்திணையியலில் விளக்குகிறார். இதனை,

'தன்னும் அவனும் அவளும் சுட்டி
மன்னு நிமித்தம் மொழிபொருள் தெய்வம்
நன்மை தீமை அச்சம் சார்தல் என்று
அன்ன பிறவும் அவற்றொடு தொகைஇ
முன்னிய காலம் மூன்றுடன் விளக்கித்
தோழிதே எத்தும் கண்டோர் பாங்கினும்
போகிய திறத்து நற்றாய் புலம்பலும்
ஆகிய கிளவியும் அவ்வழி உரிய'

(தொல். 982)

என்ற நூற்பா எடுத்துக்காட்டுகிறது. நற்றாய் பேசும் இடங்கள் ஆறு. அவற்றுள் ஒன்று. போகிய திறத்து நற்றாய் புலம்பலும் ஒன்று. இப்பாடலில் தலைவன் தலைவியை உடன் அழைத்துச் சென்றதையறிந்து நற்றாய் புலம்புகிறாள். தன் மகளின் உடல் வேறுபாட்டை அறிந்த போதும் நான் அவளை இச்செறிப்பு செய்யவில்லேயே எனப் புலம்புகிறாள்.

குடவாயிற் கீரத்தனார் சோழநாட்டுப் புலவராக இருப்பினும் பாண்டிய நாட்டின் தலைநகரான மதுரையை, தலைவியின் இல்லப் பாதுகாப்பிற்கு உவமை கூறுவதன் மூலம் புலவரின் தொலைநோக்குப் பார்வை (பொது நோக்கு) நன்கு வெளிப்படுகிறது.

## பொருள்வயிற் பிரிவு

தலைவன் பொருள்வயின் பிரிவான என்பதைத் அறிந்த தலைவி, தானும் உடன் வருவேன் என்று கூற, அதற்கு உடன்படாத தலைவன் 'சில நாட்கள் கழியட்டும்' என்று கூறியப் பின்பு ஒரு நாள் தலைவி அறியா வண்ணம் பிரிந்து போயினன்; அது குறித்துத் தலைவியிடம் தோழி கூறியவாறு மற்றொரு பாலைத்திணைப்பாடல் அகநானூற்றில் (345) இடம்பெற்றுள்ளது. வானம் மழைபொழிய வெம்மை நீங்கி நிலமும் குளிர்ந்தது; எம்மையும் உடன் அழைத்துச் செல்க என்று கூறிப் பலமுறை உடன் செல்ல விரும்பினோம். ஆனால் நம் தலைவர் நாம் அறியா வண்ணம் நம்மைவிட்டு அகன்று சென்றுவிட்டார். அவ்வாறு சென்று விட்டாராயினும் அவர் செல்லும் பாலை வழியில் அடிக்கும் காற்றினால் தளரும் நிலையினைக் கொண்ட இத்தி மரத்தின் நீண்ட தனித்த விழுதானது காற்றில் அசைந்தாடித் துடைத்துத் தூய்மை செய்யும் மலையிடத்து மரநிழலில் வெயிலுக்காக தங்கி இளைப்பாறிச் செல்வாராக! என்று தோழி தலைவியிடம் கூறுகிறாள். பாலைத் திணையின் உரிப்பொருளான, பிரிதலும் பிரிதல் நிமித்தமும் 'பாடலின் பாடுபொருளாகித் திணை பாலையாயிற்று.

## வாயில் மறுத்தல்

பரத்தையிற் பிரிந்துவந்த தலைமகன் வாயில் வேண்டிய விடத்து, தோழி சொல்லியது' எனும் கூற்றில் அமைந்த மருதப்பாடலொன்று அகநானூற்றில் (366) இடம் பெற்றுள்ளது. தலைவன் பரத்தையர் சேரிக்குச் சென்றதை அறிந்த தலைவி ஊடியிருந்தாள். மீண்டு வந்த தலைவன் அவளை அணுக அஞ்சித் தோழியை வாயில் வேண்டினான். அதுகேட்ட தோழி, உழவர்கள் தாழ்ந்த கிளைகளையுடைய மருதமரம் தழைத்துச் சிறக்குமாறு அழகு பெற்றுத் திகழும் நீர் சூழ்ந்த நெற்களம் பொலிவுபெறும்படி நெற்கதிரின் போரினைப் பிரித்துக் கடாவவிட்டனர். கள்ளுண்டு களித்த அவ்வுழவர்கள், காளைகளை மாற்றி வேறு காளைகளைக் கொண்டு கடாவவிட்டனர். பின்னர் விரைய வீசும் காற்றில் நெல்லைத் தூற்ற, பறந்து சென்ற தூவு அருகிலுள்ள உப்புக் காயும் உப்பளத்திலுள்ள சிறிய பாத்திகளில் சென்று வீழ்ந்தது. பெரிய நீர்ப்பரப்பினைக் கொண்ட கடலின் குளிர்ந்த துறைகளையுடைய நிலமக்கள், உணவுக்கு இனிமை தரும் உப்பு பாழ்பட்டுப் போனமையால் சினந்து, கழனி உழவருடன் மாறுபட்டுச் சேற்றுக் குழம்பினை எடுத்தெறிந்து கைகலப்பில் ஈடுபட்டனர். இதனைக் கண்ட மருத நிலத்துப் பெரியவர்கள். இருவரையும் அமைதியுறச் செய்தனர். எவ்வி என்பானது நீழல் என்னும் ஊரினைப் போன்ற பேரழகு படைத்த பெருத்த தோளினையும், அழகிய நெற்றியினையும் உடைய பரத்தையோடு தங்கியிருந்தமை அறிந்து கொண்ட தெய்வம் போன்ற தலைவி, அவ்வாற்றலால் நீ தனக்கு தவறு செய்தமை உணர்ந்து அழுதவண்ணம் இருக்கிறாள்' என வாயில் மறுத்துக் கூறுகிறாள்.

மருத நிலத்தில் பூத்த மருத மரத்தினை, தாழ்சினை மருதம் தகைபெறக் கவினிய (366:1) என்று குறிப்பதால் மருதமரம் 'தாழ்சினை

மருதம் தகைபெறக் கவினிய' என்று குறிப்பிடுவதால் மருதத் திணையின் கருப்பொருள் சுட்டப்பெறுகிறது. மருத நில மக்களை 'பாதவர்' என்ற சொல் சுட்டுகிறது. பாடலில் பரத்தையிடம் சென்று மீண்டு வரும் தலைவனைத் தலைவி ஊடி நிற்பதால் உரிப்பொருளால் திணை மருதமாயிற்று. தலைவியின் அழகுக்கு உவமையாக 'எவ்வி நீழல்' என்னும் ஊரினைக் குறிப்பிடுவதால் புலவரின் வரலாற்றுப் பதிவினை நன்கு உணரமுடிகிறது.

## உடன் போக்கு

மகள் உடன் சென்ற வழி செவிலித்தாய் கூற்றில் அமைந்த பாலைத்திணைப்பாடல் அகநானூற்றில் (385) இடம்பெற்றுள்ளது. உற்றார் உறவினர் அறியாமல் தலைவனோடு தலைவி சென்று விட்டமையால் அவளை இழந்த செவிலித்தாய், மயில் போலும் சாயலை உடைய என் மகள், தன்னைப் போன்ற தோழியர் கூட்டமும் என்னைப் போன்ற செவிலியரும் எம் கண்மணி குளிர்ப்பக் கண்டு மகிழுமாறு வலிமை பொருந்திய கையினையுடைய யானையையும், விரைந்து செல்லக்கூடிய தேரினையும் உடைய சோழரது சோலை சூழ்ந்த காவிரியாற்றின் அருகிலுள்ள உறையூரைப் போன்று வளஞ்சார்ந்த தன் தந்தையின் பெரிய இல்லத்தில் சான்றோர் மணஞ்செய்விக்க நிகழும் மண விழாவில் அவளுக்கு மயிர்ச் சாந்து பூசி, மங்கல நீராட்டிப் பல சிறப்புகளையும் செய்விக்கத் தன் காதலனைப் பலரறிய மணம் செய்து கொள்ள விரும்பாமல், அரிய காட்டுவழியில் சென்று தலைவனை மணம் செய்து கொண்டது கொடுமையிலும் கொடுமை' என்று கூறி வருந்துகிறாள். இப்பாடலின் வழி திருமணத்திற்கு முன்பு 'சிலம்புகழி நோன்பு' என்னும் நிகழ்வு நடைபெற்றுள்ளதை அறியமுடிகிறது. பெற்றோர் மணம் செய்த

பொழுதும், யாரும் அறியாத வண்ணம் தலைவன் தலைவியை உடன்போக்கு சென்றவிடத்தும் 'இச்சிலம்புகழி நோன்புன் என்னும் சடங்கு நடைபெறும் என்பதை 'சிறுவன் கண்ணி சிலம்புகழீஇ' என்ற சொற்றொடர் அறிவுறுத்துகிறது.

பாடலில் தலைவியைப் பிரிந்த செவிலித்தாய் வருந்துவதால் பிரிதல் நிமித்தம் பொருளாக அமைந்துள்ளதால் திணை பாலையாயிற்று. கொண்டுதலை கழிதல் பாலை, திணைக்கு உரியது.

குடவாயிற் கீரத்தனார் குறுந்தொகையில் மூன்று (79, 281, 369) பாடல்களைப் இயற்றியுள்ளார். இவை மூன்றும் பாலைத்திணையில் அமைந்துள்ளன.

பொருள் காரணமாகத் பிரிந்த தலைமகனை நினைத்த தலைமகள் தோழியிடம், யாம் தலைவன் பிரிவினை தாங்கப் பெற்றோம் என்று கூறிய தவறால், அவர் நம்மிடம் சொல்லாமலேயே நீங்கிவிட்டார். பொரித்த அடிமரத்தையுடைய ஓமை மரத்தின் பட்டைகளைக் காட்டுயானைகள் விரும்பித்தின்னும். காற்று மோதுகின்ற அம்மரத்தின் இளைகளில் உள்ள அசைகின்ற வற்றிய கொம்பில் ஏறி, தனிமையையும் வருத்தத்தையும் வெளிப்படுத்தும் குரலை ஆண்புறாக்கள் வெளிப்படுத்தி பெண்புறாக்களை அழைக்கும் பாலைநிலத்தில் அமைந்த குடிகளையுடைய சிற்றூரில் அவர் தங்கினாரோ ? என்று வினவுகிறாள். பாடலில் தலைவனைப் பிரிந்த தலைவி வாடியவாறு கூறுதலால் திணை பாலையாயிற்று. 'சொல்லாது ஏகல் வல்லுவோரே' என்ற தொடரால் தலைவன் தலைவியைப் பிரிந்த செய்தியை அறிய முடிகிறது.

பிரிவிடை வேறுபாட்டாளைக் கண்டு, தோழி வற்புறுப்பாட்குக் கிழத்தி உரைத்ததாகப் பாலைத்திணையில் (281) ஒரு பாடலைப் பாடியுள்ளார். செவ்விய அணிகலன்களை அணிந்தவளே! நம்மைச் சார்ந்த தலைவர், தம்முடைய சுரித்து காணப்படும் மயிர்த்தலை விளங்குமாறு, வெள்ளிய மணலின் கண் தழைத்த அடிப்பகுதி திரண்ட பணையின் பசிய மடல் சுருக்கின் உச்சியில் விளக்கும் வெண்குருத்து ஓலையோடு பாலைநிலத்திலுள்ள வேப்பமரத்தின் திரளாகப் கிடக்கும் காட்டைக் கடந்து சென்றாரோ ? என்று தோழி உரைக்கிறாள். இப்பாடலை பாடிய சோழநாட்டு குடவாயிற் கீரத்தனார் ஆதலின் சுரி ஆர் உளைத்தலை என்ற தொடருக்குச் சோழக்குரிய ஆத்திப்பூ சூடியதாகப் பொருள் உணரப்படும். மற்ற இரு வேந்தர்களின் நாடுகளிலும் பொருள் குறித்துப் பிரிந்தமையால் அந்நாட்டொடும் உள்ள நட்புரிமை தோன்றப் பனையும், வேம்பும் சூடியதாகக் குறித்தார். அவ்வந்நாட்டு ஆறலை கள்வர்களால் ஏதும் நேராமை குறித்துப் போந்தை வேம்பு, ஆர் என்ற மூன்றனையும் வழிச் செல்வோர் சூடிச் செல்வர். பாலை நிலத்தில் செல்வோர், எதிரில் வருவோரிடம், அவ்வந்நாட்டரசர்க்கு உரியவராகத் தம்மை கூறிக் கொள்ளும் இயல்பும் உடையராவர் என்பதை அறியமுடிகிறது. பாடலில் ‘கானம் சென்றனர் கொல்லோ ? சேயிலை – நமரே! என்ற தொடரால் தலைவியைத் தலைவன் பிரிந்து சென்ற செய்தியை உணரமுடிகிறது.

தோழி கிழத்திக்கு உடன்போக்கை அனுமதித்துக் கூறியவாறு அகப்பாடலொன்று (369) பாலைத்திணையில் அமைந்துள்ளது. தோழி! பாலை நிலத்தின் அரிய வழிகளில் உள்ள வாகை மரத்தின் நெற்றுகளின் விதைகள் உள்ளே இடப்பட்ட சிலம்பின் பால் ஒலிப்பதைப் போல, மேல்காற்று வீசுவதால் ஒலிக்கும். இத்தகைய காட்டில் நம் தலைவன், நின்னை உடன் கொண்டு போக இசைந்தனர். ஆதலால் செல்லுதல் இனி ஆகும் என்று தோழி கூறி உடன்பாட்டை அனுமதிக்கிறாள்.

சிலம்பு கழி நோன்பு உடன்போக்கின் பின் தலைவன் இல்லத்தில் நிகழ்வது ஆதலின் தலைவி காலில் சிலம்பணிந்து செல்லுதல் நீங்கப்பெறவில்லை. தோழியையும் உடன்போக்கில் அழைத்துச் செல்லும் வழக்கு இன்மையால் 'செல்வாம்' எனத் தன்மைப் பன்மையாக்கிப் பொருள் உரைத்தல் பொருந்தாது. செலவு ஆம் எனப் பிரிந்து, செல்லுதல் ஆகும் எனப்பொருள் உரைத்தல் ஏற்புடையதாகும். 'கானம் செல்வாம்' என்ற சொற்றொடர் பிரிவினைக் குறித்து நிற்கிறது.

குடவாயிற் கீரத்தனார் நற்றிணையில் நான்கு (27, 42, 212, 379) பாடல்களைப் பாடியுள்ளார். 'சிறைப்புறமாகத் தோழி செறிப்பு அறிவுறீஇயது' என்னும் கூற்றில் நெய்தல் திணைப் பாடலொன்றைப் பாடியுள்ளார். தோழி! நேற்று நீயும், நானும் சென்று பூவின் நுண்ணிய தாதில் பாய்ந்து விழுகின்ற வண்டினங்களைப் போக்கி, உப்பங்கழி சூழ்ந்த சோலையில் விளையாடினோம். ஆதனைத் தவிர மறைந்து நாம் செய்த செயல் வேறொன்றுமில்லை. அங்ஙனம் ஏதேனும் செய்திருப்பினும் அது பிறரால் அறியப்பட்டிருக்கும். அவ்வாறாக அன்னை நம்மை நோக்கிப் பொய்கை தோறும் இறாமீனைத் தின்னும் குருகினம் ஒலிப்பச் சுறாக்களும் மிக்க உப்பங்கழிகளில், திரண்டு நன்கு நீண்டு நம் கண்களைப் போலபூத்துள்ள சிறிய பசிய இலைகளையுடைய நெய்தல் பூக்களைச் சென்று பறியுங்கள்! என்று கூறவில்லை. ஆகவே அவள் என்ன கருதியிருந்தாள் எனத் தெரியவில்லை' என்று தோழி சிறைப்புறத்தில் மறைந்திருந்த தலைவன் கேட்குமாறு கூறுகிறாள்.

'நாளும் பறிக்கும் பூவை கொய்ம்மினென்னாளென்றதனால் அன்னை சினமிக்குடையாளெனக் குறிப்பித்ததாம். எவன் குறித்தனளென்றதனால் நம்களவொழுக்கத்தைச் சிறிது அறிந்துடைமையிற் பிற கருதா நின்றனளென்றதாம். இங்ஙனம் கூறவே இனி வரைந்தெய்தினாலன்றிக்

களவொழுக்கமியலாதென வரைவுடன்படுத்திய தூஉமாம்'[27] என்று குறிக்கிறார் பின்னத்தூர் அ. நாராயணசாமி ஐயர், பாடலில் நெய்தல் நில வருணனையை,

> இற ஆர் இனக் குருகு, ஒலிப்ப, கறவம்
> கழிசேர் மருங்கின் கணைக்கால் நீடி
> கண்போல் பூத்தமை கண்டு, நுண்பல
> சிறபாசடைய நெய்தல்
> குறுமோ சென்று' எனக் கூறாதோளே'
>
> (நற். 27;8-12)

என்ற பாடலடிகள் விளக்குகின்றன. நெய்தல் திணைக்குரிய முதற்பொருள் பாடலில் இடம்பெறுவதால் முதற்பொருளால் திணை நெய்தலாயிற்று. நெய்தல் திணைக்குரிய உரிப்பொருள் நேரிடையாக இடம்பெறவில்லை.

## நிகழ்ந்தது நினையல்

வினைமுற்றி மீண்ட தலைவன் தேர்பாகற்கு உரைத்த முல்லைத்திணைப் பாடல் நற்றிணையில் (42) இடம் பெற்றுள்ளது. பாகனே! நீரின்மையாலே கோடையில் பல நாட்களாக வறட்சியுற்ற உலகத்து உயிர்கள் மகிழ்ச்சியோடு தத்தம் தொழிலைச் செய்யுமாறு தொன்று தொட்டுப் பெய்கின்ற வழக்கத்தைப் போல மழை பெய்தது. அதனால் புதிய நீர் நிரம்பிய பள்ளங்கள் தோறும் நாவினால் ஒலி செய்யும் கூட்டத்தையுடைய தவளைகள் ஒலி செய்வதால், நாம் சென்ற தேரிற்கட்டிய மணிகளின் ஒலியை ஒளிபொருந்திய நெற்றியையுடைய நம் தலைவிக்கும் கேட்கவில்லை. எனவே நீவிர் சென்று (முன்னர்)

என்வரவை கூறுமின் என்று கூறக்கேட்ட ஏவலர் விரைந்து தலைவியிடம் அறிவித்தனர். உடனே தலைவி, நீராட்டாத கூந்தலை மாசு நீங்கும்படி கழுவி, சிலவாகிய மலரை பலவாகிய கூந்தலில் முடிந்தாள். அப்போது நான் உள்ளே புகுந்தேன். என்னைத் தன் மெய் வருந்தும்படி வந்து தன் குழல் அவிழ்த்து குலைய என்னை அணைத்துக் கொண்டாள். அத்தகு மடப்பத்தை உடைய எம் அரிவை மகிழ்ந்து எம் வரவைக் கொண்டாடிய தன்மை என்னால் மறக்க முடியாது' எனத் தலைவன் முன்பு நிகழ்ந்ததைச் சொல்லி, குறிப்பாகத் தேரைச் செலுத்துக! என்று கூறுகிறான். முன்பு நிகழ்ந்தமை கூறியதால் தலைவியின் அன்பினையும் தன் ஆவலையும், தலைவி பிரிவால் வாடியிருப்பாள் என்ற கருத்தையும் வெளிப்படுத்துகிறான் தலைவன். முல்லைத் திணைக்குரிய கார்காலம் - மழைக்காலம் பாடலில் இடம்பெறுவதால் திணை முல்லையாயிற்று.

'பழ மழை பொழிந்த புதுநீர் அவல
நா நாவில் பல்கிளை அறங்க'

(நற். 42;3-4)

என்ற பாடலடிகள் கார்காலத்தை உணர்த்துகின்றன. முல்லைத்திணையின் உரிப்பொருளான இருத்தலும், இருத்தல் நிமித்தமும் குறிப்பாக உணர்த்தப்படுகிறது. பாடலில் பாக! என்ற விளி இடம்பெறுவதால் கேட்போன் தேர்ப்பாகன் என்றும் கூறுவோன் தலைவன் எனவும் அறியமுடிகிறது.

பொருள் காரணமாகத் தலைவன் பிரிந்து சென்றான். மீண்டும் வந்தபோது அவனுடன் வந்த இளைஞர் முதலான வாயிலார் தலைவன் பொருள் முடித்து வருவதைத் அறிவித்தனர். அதனையறிந்த தோழி,

குன்றம்கடந்து நம் காதலர் வந்தனர்' என்று உவந்து கூறியதாகப் பாலைத் திணைப் பாடலொன்றை (212) குடவாயிற் கீரத்தனார் பாடியுள்ளார்.

## கொடிய பயணம்

பார்வை ஒன்றுபட வேடன் வலையை அமைத்தனன். அந்த வலையைக் கண்ட நெடிய காலையுடைய கணந்துள் பறவை அச்சமுற்றுக்கத்தும். தனித்துக் குரலெழுப்பும் பறவையின் தெளிந்த ஓசை, பாலை நில வழியில் செல்லும் கூத்தர் வழிச்செல்லும் வருத்தம் புலப்படாதவாறு இசைக்கும் யாழிசையுடன் சேர்ந்து ஒத்து ஒலிக்கும். இத்தகைய வழியில் கடுமையால் ஒலிக்கும் பம்பையுடன் சினமிகுந்த நாயையுமுடைய வடுகர் கூட்டம் தங்கும் நெடிய பெரிய குன்றம் உள்ளது. அக்குன்றம் கடந்த நம் தலைவர் வந்தனர். நம் கையில் செம்பொன்னாற் செய்து அணிவிக்கப்பட்ட தொடி இப்பொழுது கழன்று விழும், அதனை நம் புதல்வன் நோக்கி நம்மை அணைத்துக் கொண்டு அழும் இனிய குரலைக் கேட்கும்தொறும் ஆவலுற்ற மனத்தினராய் இருக்கும் தம் தலைவர் நம்மிடம் வந்து சேர்ந்தனர். நீயும் அவருடன் சேர்ந்து நெடுங்காலம் வாழ்வாயாக' என்று தோழி தலைவியிடம் உவந்து கூறுகிறாள். பாடலில் பாலை நிலத்தின் வருணனை அழகாகப் படம்பிடித்துக் காட்டியுள்ளார் குடவாயிற் கீரத்தனார், இதனை,

'பார்வை வேட்டுவன் படுவலை வெரீஇ
நெடுங்கால் கணத்துளம் புலம்புகொள் தெள்விளி
சுரஞ்செல் கோடியர் கதுமென் இசைக்கும்
நரம்பொடு கொள்ளும் அத்தத்து ஆங்கண்
கடுங்குரல் பம்பைக் கதநாய் வடுகர்
நெடும்பெருங் குன்றம் நீந்தி'

(நற். 212;1-6)

என்ற பாடலடிகள் மெய்ப்பிக்கும். தலைவன் பிரிதலினாலே மெய் இளைத்தலிற் வளையல் கழன்று விழுதலைக் குறிப்பிடுகிறார். அதனையும் மெய்சோர்ந்து காட்டுதலையும் நோக்கவே மகனுக்கு அழுகை பிறந்தமை கூறினாள். பாடலில் புதல்வனைக் குறிப்பிட்டதால் கைகோள் கற்பு எனத் தெரிகிறது.

தோழி, தலைமகனுக்குத் தலைவியின் மடமையைக் கூறி வரைவு கடாயது என்னும் கூற்றில் அமைந்த நற்றிணைப் பாடலொன்றை (379) குடவாயிற் கீரத்தனார் பாடியுள்ளார்.

## மெல்லியல் குறுமகள்

புற்கென்ற தலையை உடைய பெண் குரங்கினது மரமேனும் தன் தொழியையும் சரிவரக் கல்லாத இளமையுடைய வலிய குட்டிக் குன்றிடத்தே பொருந்திய மனையின் முற்றத்தின்னுன்று நீங்காமல் இருக்கும். வேங்கை மரத்தின் தாழ்ந்த நிலையிடத்தே மறைந்திருந்து தலைவியின் கையிலிருந்த தேன் கலந்த இனிய பாலைக் கிண்ணத்தோடு கைப்பற்றிச் சென்று விட்டது. ஆதனால் ஓவியர் எழுதினாற் போல அமைந்த இவள் கண்ணின் அழகெல்லாம் சிறையுமாறு அழுதனள். அவ்வாறு அழுதமையில் கண்கள், தேர்களை இரவலர்க்குப் பரிசாக வழங்கும் வல்லன்மை மிக்க சோழ மன்னர்க்குரிய குடவாயில் என்னும் ஊரில் மழைபெய்து நிரம்பிய அகழியிடத்துக் குளிர மலர்ந்த பெய்யும் மழைநீரை ஏற்கும் நீலமலர் போன்றன. குரங்குக்குட்டி பாற்கிண்ணத்தை பற்றிச் சென்றமையால், தன் அழகிய வயிற்றிலே இவள் அடித்துக் கொண்டதனால் இவளுடைய விரல்கள் சிவந்து அலைகின்ற மேகங்கள் இயங்கும் கொடு முடிகள் உயர்ந்து நிற்கும் பாண்டியனின் பொதியில் என்னும் பெரிய மலையிடத்தே மலர்ந்த செழித்த காந்தளின்

பூக்கமலர்களைப் போன்றன இத்தகைய நனி இளமையும் மடமையும் உடையாள். நின் காமம் தனிப்பது எங்கனம்? என்று தோழி தலைவனிடம் வினவுகிறாள். எனினும், காப்பு கைமிக்க காலத்துத் தலைமகள் தோழிக்குச் சொல்லியதூஉமாம் என்று நற்றிணைக்கு உரை எழுதிய பின்னத்தூர் நாராயணசாமி ஐயா மற்றொரு கூற்றினையும் குறிக்கிறார். கற்பு எனத் தெரிகிறது. கணந்துள் எனும் பறவை நீர்ப்பறவை பாடலில் குறிப்பிடுவதால், 'எந்நில மலங்கிற் பூவும் புள்ளும்' என்ற தொல்காப்பிய நூற்பாவின் கருப்பொருளின் வழுவமைதியின் படி பாலைத்திணைக்கு கருப்பொருளாக அமைந்துள்ளது. கணந்துள் பறவையின் ஓசை, யாழிசையோடு சேர்ந்து இசைக்குமென்றது. நீ தலைவனோடு கூடி எங்கும் இசை பரவ வாழ்வாய் என்று குறிப்பாக உணர்த்தப்படுகிறது.

தலைவியின் கண்கள் நீலமரம் போல ஈரமும், அலையும் பெற்றாமைக்கு அவள் தன் பாற்கலத்தைக் குரங்குக் குட்டி, கவர்ந்து சென்றமை காரணம் என்றும், அவள் கை விரல்கள் காந்தள் போலச் சிவந்தமைக்குக் காரணம், பாற்கலத்தை இழந்தமை குறித்து வயிற்றில் அடித்துக் கொண்டு அழுதமையே காரணம் என்றும் கூறியதால் குரங்குக் குட்டியை வெருட்டித் தன் பாற்கலத்தைக் காத்துக் கொள்ளும் ஆற்றலில்லாப் பேதை என்று குறித்தனள். தலைவி இச்செறிக்கப்பட்ட நிலையில் உடன் பேணுவாரில்லாத் தனிமையில் குரங்குக் குட்டியால் துன்புறுவதையும் குறித்தனள். குரங்குக் குட்டி பாற்கலத்தை கவர்ந்து சென்றது போல நொதுமலர் வரைவு நிகழக்கூடும் என்று தோழி தலைவனைக் குறிப்பாக உணர்த்தி வரைவு கடாவுகிறாள். வரைவு கடாவுதல் துறை குறிஞ்சித்திணைக்கு உரியது. பாடலில் திணை குறிஞ்சியாயிற்று. பாடலில் யாரையும் விளித்துக் கூறிய சொல் இல்லை. எனவே இப்பாடல், தலைவி இச்செறிக்கப்பட்ட நிலையில் வினவிய தோழிக்குத் தலைவி இன்ன காரணத்தால் தம் கண் நீலமொத்தன;

தம்விரல் காந்தளொத்தன எனக் கூறியதாக மற்றொரு கூற்றும் இடம்பெற்றுள்ளது.

## கோக்குள முற்றனார்

இவர் குறுந்தொகையில் ஒரு பாடலையும் (குறு.98) நற்றிணையில் (நற்.96) பாடலையும் பாடியுள்ளார்.

பருவம் கண்டு அழிந்த தலைமகள் தோழி உரைத்த முல்லைத் திணைப்பாடலில், தலைவி, தலைவன் பிரிவினால் பசலை நோயுற்று மெலிந்தமை கூறுதலும், அவனிடம் தூது அனுப்பத் துணிந்தமை கூறுதலும் ஆகிய மெய்பாடுகள் உணர்த்தப்படுகின்றன. கார்பருவத்தில் புதர்கள் தோறும் மழைபெய்து நீர் பெருகியமையும் பீர்க்குப் பூத்தமையும் கூறி, தலைவன் வருவதாகக் தெறிவித்த பருவ வருகையை அவனிடம் தூது அணிப்பி உணர்த்த விரும்பினாள். சிறந்த நெற்றியினையுடையாள் என்று அவரைக் கிட்டிப் போய்ச் சொல்லுவாரைப் பெறின் நல்லதாகும் பெற்றிலேன். கார்கால வருணை இடம்பெறுவதால் பாடலின் திணை முல்லையாயிற்று. பருவம் வந்ததையும் தான் பசப்படைந்ததையும் ஒருங்கே உணருமாறு, பீர்த்தலர் சிலகொண்டு நன்னுதல் இன்னாளாயினள் என்று செப்புநர்பெறின் என்றாள். பீர்க்கு மாரிக் காலத்து அலர்தலையும், மகளிர் பசப்பிற்கு உவமையாதலையும் மாரிப் பீரத் தலர்வண்ண மடவார் கொள்ள' என்ற பகுதியும் ஈண்டு குறிப்பிடத்தக்கது.

## கோப்பெருஞ்சோழன்

அகமும், புறமும் பாடிய அரசப் புலவர்களுள் கோப்பெருஞ்சோழனும் ஒருவர். இவர் பிசிராந்தையாரின் நெருங்கிய நண்பர். இவர் குறுந்தொயையில் நான்கு பாடல்களைப் பாடியுள்ளார்.

செலவு உணர்த்திய தோழிக்குத் தலைவி கூறியதாகப் பாலைத் திணைப் பாடலொன்றை கோப்பெருஞ்சோழன் பாடியுள்ளார். பொருள் கருதித் தலைவன் செல்வரென்று அறிவித்த தோழியை நோக்கித் தலைவி, மடந்தையே! அருளையும், அன்பையும் கைவிட்டுத் துணையாயினாரைப் பிரிந்து, பொருள் விழைந்து செல்வார் அறிவுடையாராயின் அறிவுடையாராக; பிரிவைப் பெறாத நாம் அறிவிலோமாக! எனத் தனது ஆற்றாமை தோன்றக் கூறுகிறாள். பாடலில்,

'அருளும் அன்பும் நீங்கித் துணை துறந்து
பொருள் வயிற் பிரிவோர்;...................'

(குறுந். 20;1-2)

என்று குறிப்பிடுவதால், பாலைத் திணைக்குரிய 'பிரிதல்' உணர்த்தப்படுகிறது. பாடலில் 'மடந்தை நாமே' என்று அண்மை விளியாக குறிப்பிடுவதன் மூலம் தோழி கேட்போளாகவும், தலைவி கூற்று நிகழ்த்துபவளாகவும் இருப்பதை அறியமுடிகிறது. தன்னைப் பிரிந்து செல்லுதல் அறிவுடைய தலைவர்க்கு அழகன்று எனத் தலைவி குறிப்பாக உணர்த்துகிறார்.

## சூளுரையா ? பொய்யுரையா ?

வரைவு நீடித்த வழித் தோழி தலைமகனை நோக்கி, தலைவனே! இல்லத்தின் முன்னே உள்ள அரும்பு முதிர்ந்த புங்கை மரத்தின் மலர்கள் உதிர்ந்து பரவிக்கிடக்கும் வெள்ளிய மணற்பரப்பு, வேலனால் அமைக்கப்பட்ட வெறியாட்டு இடங்கள் தோறும், செங்நெல்லின் வெள்ளிய பொரியைச் சிதறினாற்போன்ற தோற்றத்தைத் தரும். மணல்மேடுகள்

செறிந்த நம் ஊரில் உள்ள அகன்ற நீர்த்துறையில் முட்டுவாயுடன் விளங்கும் கையின் முற்பகுதியைப் பற்றிக் கொண்டு, தெய்வமகளிரை முன்நிறுத்தி நீ கூறிய சூளுரைகள் எம்மைத் துன்புறுத்தின' என்று உரைகிறாள்.

மணல்மேடு தலைவன் தலைவியுடன் விளையாடிய இடம். வியன்துறை, தலைவன் சூரர மகளிரை முன்நிறுத்திச் சூள் உரைத்த இடம். தலைவியிடம், தெய்வம் சான்றாக, நின்னை விரைவில் வந்து மணம் முடிப்பேன்' என்று கையைப் பற்றிக் கூறிய சூளுரைகள், வரைவு நீட்டித்தமையால் பொய்யாயின. நீ உரைத்த சூளுரைகள் எம்மை வருத்தின. சூளரைத்த உன்னை வருத்தவில்லை. அதனால் நீ களவு நீடித்தலை விரும்புகின்றனை எனத் தலைவனுக்குக் குறிப்பால் தோழி புலப்படுத்தினாள். பாடலில் மருதத்திணைக்கு உரிய உரிப்பொருளான ஊடலும் ஊடல் நிமித்தமும் வெளிப்படுகிறது. படலில் மகிழ்ந! என்ற விளி இடம்பெறுவதால் கூற்று நிகழ்த்துபவள் தோழி எனவும், கேட்போன் தலைவன் எனவும் அறியமுடிகிறது.

## நெற்றியின் கூர்மை

இயற்கைப் புணர்ச்சிக்குப்பின் தலைவன் பாங்கனால் தன்குறையை முடித்துக் கொள்ள விரும்பி, அவனிடன் தன் வேட்கை உரைப்பதாக குறிஞ்சித்திணையில் (129) மற்றொரு பாடலை இயற்றியுள்ளார் கோப்பெருஞ்சோழன். என்பால் கெழுதகை அன்புடையாய். இளைஞர் இன்புறுதற்குக் காரணமாகிய நட்புனையுடையாய். நன்றும், தீதும் காணவல்ல அறிஞர்களின் தோழனே! கேட்பாயாக! கரிய கடலினிடையே குளிர்ந்த வளர்பிறையின் எட்டாம் நாளின் வெள்ளிய பிறைத் திங்கள்

தோன்றினாய் போல கூந்தலின் அயலாக விளங்கும் சிறிய நெற்றியானது, யானையைப் புதிதாக அகப்படுத்துதல் போல என்னை அகப்படுத்திய பிணித்தது' என்று தலைவன் பாங்கற்கு உரைக்கும் இப்பாடலில் 'புணர்தல் நிமித்தம்' சுட்டப்பெறுகிறது. பாங்கற் கூட்டம் இயற்கைப் புணர்ச்சிக்குப் பின்பு நடைபெறும் நிகழ்வு ஆகும். எனவே இப்பாடலின் திணை குறிஞ்சியாயிற்று.

'எழுவ' என்ற சொல்லால் பொருளும், சிறாஅர் ஏமுறு நண்ப' என்ற தொடரால் இன்பமும், 'புலவர் தோழ' என்ற தொடரால் அறமும் ஆகிய மூன்று நிலைகளிலும் தனக்கு உற்ற துணையாகப் பாங்கன் விளங்குவதை குறிப்பிட்டுக் கூறுகிறான் தலைவன். பொதுவாழ்வில் பிசிராந்தையாருடன் நட்புக் கொண்ட கோப்பெருஞ்சோழன் தோழமையின் சிறப்பினை உணர்ந்திருந்த காரணத்தால் அகப்பாடலிலும் தனது நட்பின் மேன்மையை உணர்த்துகிறார். பாடலில் 'எழுவ' ஏமுறு நண்ப! புலவர்தோழ! என்ற சொற்சொறடர்கள் இடம்பெறுவதால் கூற்று நிகழ்த்துவோன் தலைவன் எனவும், கேட்போன் பாங்கன் எனவும் அறிய முடிகிறது. தலைவன் பாங்களை எழுவவென்று விளித்துக் கூறுவான் என்பதை தொல்காப்பியமும் எடுத்துக் காட்டுகிறது.

வேனிற்காலத்தில் மலரும் பாதிரி மரத்தின் இதழ்கள் உட்புறம் வளைந்தத பூவில் உள்ள மயிரினைப் போன்று மயிர் எழுந்த படர்ந்த அழகு ஒழுகும் மாமை நிறத்தினையும் நுண்ணிய வேலைப்பாடுடைய அணிகலன்களையும் உடைய தலைவியைக் கொண்டுவந்து தந்ததுபோல, இனிய துயிலினின்றும் எழுப்புகின்றாய். தம் துணையைப் பிரிந்தோர் நின்னை இகழ்ந்து பேசமாட்டார்' எனத் தலைவியைப் பிரிந்த தலைவன் கானாக்கண்டு சொல்லியவாறு ஒரு பாலைத்திணைப் பாடலை **(147)** குறுந்தொகையில் பாடியுள்ளார்.

## கனவு காணும் வாழ்க்கை

தன் காதலியைக் கொண்டு வந்து கனவில் காட்டியதற்காகத் தலைவன் பாராட்டிப் பேசுகிறான். கனவு துயில் நீங்குவதற்கு காரணமாயிற்று. ஆயினும் அதனை இகழாது, தலைவியைக் காட்டியதால் புகழ்ந்து கூறுகிறான். காதலியைக் காட்டும் கனவை யாரும் இகழார் எனத் தன் உணர்வினை உலகின்மேல் வைத்துக் கூறினான். காமம் மிக்க கழிபடர் கிளவியாதலின் தலைவன் கனவினை அழைத்து உரைக்கும் கூற்றாக இப்பாடல் அமைகிறது. பாடலில் பிரிதல் நிமித்தம் சுட்டப்படுவதால் திணை பாலையாயிற்று. பாடலில் கனவே! என்ற விளி இடம்பெறுவதால், கூறுபவன் தலைவன் எனவும், கேட்போன் கனவு எனவும் தெரிகிறது. தலைவன் தலைவிக்குரிய ஒருபாற் கூற்றுக்கள் நிகழும் இடங்களில், கனவை விளித்துக் கூறும் இயல்பினை தொல்காப்பியர், 'கனவும் உரித்தால் அவ்விடத்தான' (தொல். 1143) என்று பொருளியியலில் விளக்குவர்.

## கோவூர்கிழார்

இவர் குறுந்தொகையில் ஒரு முல்லைத் திணைப் பாடலையும் (65), நற்றிணையில் குறிஞ்சித் திணைப்பாடலொன்றையும் (393) பாடியுள்ளார்.

தலைவன் வருவதாக உரைத்த கார் பருவம் வந்தும், அவன் வாராமையால் தலைவி மிகவும் ஆற்றாளாயினாள். கார்காலம் தன்னை நோக்கி, தலைவன் வாராமையால், வருந்தி, நொந்து இருந்தீரோ ? எனக் கேட்பது போல் உணர்ந்தாள். தான் இன்புறுதற்குத் துணையாகிய

பெண்மானுடன் வலிய பரல் கற்களினிடையே தேங்கியுள்ள தெளிந்த நீரைக்குடித்த ஆண்மான் மீளவும், தம் இடம் வந்து துள்ளி விளையாடும் இத்தகைய கார்காலத்தில் வராமல், சென்ற இடத்திலேயே தங்கிவிட்டார். இவ்வாறு பருவம் கண்டு அழிந்த தலைமகள் தோழிக்கு உரைக்கிறாள்.

பாடலில், 'தென் அறல் பருகிய இரலை' என்ற தொடர், மழைக்காலம் தொடங்குவதற்கு முன் வருவதாகக் கூறியவர் மழைபெய்து, நீர் நிலைகள் நிரம்பியும் வாராமை குறிப்பதால், கார்காலம் உணர்த்தப்படுவதோடு, இருத்தல் நிமித்தமும் சுட்டப்படுகிறது. ஆகவே இப்பாடல் முல்லைத் திணையாயிற்று. பாடலில் யாரையும் விளித்துக் கூறிய சொல் ஏதும் இல்லை. எனினும் பாடலின் பொருட்கூற்றின் அடிப்படையில் கூற்று நிகழ்துபவள் தலைவி எனத் தெரிகிறது.

## காதல் நாடகம்

தலைவன் தலைவியை மணம் புரிய விரும்பியதை அறிந்த தோழி வரைவு மலிந்தாக நற்றிணைப்பாடலொன்று அமைந்துள்ளது. தோழி! வாழ்க! நீண்ட மூங்கில் உயர்ந்த நிழலமைந்த மலையில் சூலுற்ற பெண் யானை, கன்றையீன்று வருந்தியிருக்கும். மேலும் பால் மடி சுரந்த பசியதாய் அண்மையில் ஈன்றதால் உண்டான பசியுடன் இருக்கும். இவை தீருமாறு, மகிழ்ச்சி கொண்ட ஆண்யானை, திணைக்கதிரைக் கவரும். அதனால் கானவன் விரைந்த செலவினையுடைய எறிகொள்ளியை எறிவான். அது மூங்கில் கரவிய பக்க மலையில் ஒளி வீசும்படி மின்னியும் தன் நிலையிலிருந்து மாறுபட்டு வீழும் தன்மையுடைதாயும் விளங்குகின்ற எரிநட்சத்திரம் போல் தோன்றும். இத்தகைய மலைக்குரிய நாடன் இரவில் வருதலால் நாம் வருந்தும். வருந்தத்தினின்றும் உய்யுமாறு மணம் புரிந்து கொள்வதாய் உரைத்தான் தலைவன். அதற்கு ஏற்ப அவன்

புதியராய் வருவதும், வதுவை அயரத்தலைவன் அவ்வாறு வர, நீ நாணத்தால் கொண்ட ஓடுக்கமும் நமர் காணுங்காலத்தில் நம் சுற்றத்தார் மகட்கொடைக்கு உடன்படுவர் போலும். அங்ஙனம் உடன்பட்டால் நம் காதலுடன் மகிழ்ந்து பேசுவரோ? பேசுவர் என்று தோழி ஆராய்ந்து கூறுகிறாள். பாடலில்,

'இரவின் வரூஉம் இடும்பை நாம் உய
வரைய வந்த வாய்மைக்கு ஏற்ப'

(நற். 393:8-9)

என்றமையால், களவில் தலைவன் இரவுக்குறியில் தலைவியை சந்தித்துப் பின், தோழி வரைவு கடாவியதால் தலைவன் புதியவனாக வரைவு வேண்டி வருகிறான் என அறிய முடிகிறது. இதனால் புணர்தலும், புணர்தல் நிமித்தமும் குறிப்பாக உணர்த்தப்படுகிறது. எனவே பாடலின் திணை குறிஞ்சியாயிற்று.

பிடியானையின் பசியைப் போக்க வேண்டிக் களிறு திணைக் கதிரை அழித்தலை நோக்கிய கானவன் எறிந்த எரிகொள்ளி எங்கும் சுடர் வீசித்தோன்றும் என்றது. தலைவி படும் காம நோயை ஆற்றும் பொருட்டு தோழி தலைவனைப் பழித்துரைக்க, அதனை ஆற்றாத தலைவன் தலைவியைப் பெறுமாறு சுற்றதார்க்கு அளிக்கக் கொணர்ந்த நிதியமும், கலனும் எங்கும் விளங்கித் தோன்றும் என்று உள்ளுறையாகச் சுட்டப்பட்டுள்ளது. பாடலில் வாழி தோழி! என்ற அசை இடம் பெறுவதால் கூறுபவள் தோழி என்றும், கேட்பவள் தலைவி என்றும் புலனாகிறது.

## சல்லியங்குமரனார்

இவர் நற்றிணையில் பாலைத் திணைப் பாடலொன்றைப் (141) பாடியுள்ளார். இப்பாடல் பொருள் கடைகூட்டிய நெஞ்சிற்குத் தலைவன் சொல்லிச் செலவழுங்கியவாறு இடம் பெற்றுள்ளது.

பொருள் தேடுதலில் விருப்புற்று நிற்கும் நெஞ்சிடம், 'உனக்கு வேண்டுமானால் அரிய பாலைவழி எளிதாய் இருக்கலாம். நான் தலைவியின் கூந்தலில் துயிலும் இன்பத்தைக் கைவிட்டேன். ஆகையால் நீ சென்று வருவாயாக! என்று இகழ்ந்து உரைத்ததாக அமைகிறது.

## நெஞ்சில் உறுதி

நெஞ்சமே! பெரிதாயும் செம்மையுடையதாயும் அமைந்த மத்தகத்தையும் வளைந்த கவுளையும் அகன்ற வாயையும் கொண்டு கரிய மேகம் போன்று யானை விளங்கும். இத்தகைய யானையின் விலாப்புறம் உராய்ந்தமையால், பொரிந்தமை போன்று காட்சிதரும் அடிமரத்தையும் உள்ளே துளையமைந்த காய்களையும் கொண்டு கொன்றை மரங்கள் திகழும். இவை குன்றின் கண்ணே தங்கும நெடிய உடையுடனும் அசையாத மேனியுடனும் தவம் புரியும் முனிவர் போலத் திகழும். இத்தகைய கொன்றை மரம் பலவும் வெயில் நிலைத்த இடங்களில் அழகுபெறத் தோன்றும் வண்ணம் அமைந்ததன்றோ கடத்தற்கரிய பாலை நிலவழி. அவ்வழி நினக்கு எளிமையுடையாதாகலாம். ஆதலின் நீ சென்று சேர்வாயாக! கொல்லப்பட்டு வீழும் பிணங்களில் பருந்து வீழுமாறு, பகைவரின் தேர்ப்படையொடு போர் செய்தனவும், பலவாகிய சருச்சரை அமைந்த பெரிய துதிக்கைகள் உடையதும் தந்தங்களை உடையதுமான

யானைப் படையாகக் கொண்டவன் புகழை விரும்பும் கிள்ளி வளவன். அவனுடைய 'அம்பர்' நகரம் புதிதாய் அலங்கரிக்கப்பட்ட உயர்ந்த கொடிகளுடன் திகழும். இவ்வூரைச் சூழ்ந்த அரிசிலாற்றின் தெளிந்த கருமணல் போன்றது இவளுடைய விரிந்தும் தழைத்தும் விளங்கும் கூந்தல். இக்கூந்தலிடத்தில் துயில்வதனைக் கைவிட்டு சிறுபொழுதும் இருக்கமாட்டேன் என்று தலைவன் தன் நெஞ்சிற்கு உரைப்பதாக இடம்பெற்றுள்ளது. பாடலில் பாலைத்திணையில் இயல்பு புனையப்படுவதால் திணை பாலையாயிற்று. "ஆடவர் நெஞ்சை நோக்கிக் கூறுமிடமெல்லாம் அந்நெஞ்சினை ஆண்பாலாகக் கொண்டு கூறப்பெறுவென்பது மரபாதலின் ஈண்டு நெஞ்சினை ஆண்பாலாகக் கூறிக்கொள்க. இது மறுத்துரைப்பதுபோல நெஞ்சோடு புணர்த்துக் கூறியது"(28) என்று துறைவிளக்கம் தருகிறார் பின்னத்தூர் அ. நாராயணசாமி ஐயர்.

## செம்பியனார்

இவர் நற்றிணையில் குறிஞ்சித்திணைப் பாடலொன்றைப் (102) பாடியுள்ளார். இப்பாடல் தலைவி காமம் மிக்க கழிபடர் கிளவி என்னும் கூற்றில் அமைந்துள்ளது.

## காதல் தூது

வளைந்த திணைக் கதிர்களைக் கொய்து விளங்கும் சிவந்த வாயுடைய கிளியே! அஞ்சாதே! நீ கதிர்கைளைக் கொய்கின்ற காரணத்தால் நின்னை விரட்டுவர் என ஐயுறாது நீ விரும்பிய மட்டும் கதிர்களை உணவாகக் கொள். அவ்வாறு உன் தேவையை முடித்தபின்பு

எனக்குற்ற தேவையை நீ நிறைவு செய்தல் வேண்டி, நின்னைத் தொழுது இரக்கின்றேன். பலாமரங்கள் நிறைந்த தலைவரது நாட்டின் கண்ணுள்ள நின் உறவினரை காணச் சென்றால் அங்கு என் தலைவரையும் கண்டு வரவேண்டும். அப்போது இம் மலைக் காட்டினுள்ள திணைப்புனத்தி குறவர் மகள் மீண்டும் வந்து காவல் காத்து நிற்கின்றாள் என்ற செய்தியை மட்டும் சொல்வாயாக! என்று தலைவி கிளியிடம் கூறுகிறாள்.

தலைவன் இரு குறியிடத்தும் வந்து செல்லுதல் தடைப்பட்டது. அவனைக் காணுதல் வேண்டும் என்ற வேட்கை மிகுந்த தலைவி அவனைக் காணுதல் இடையறவு படாதிருக்க மணம் புரிகின்ற கருத்தினளாய் அமைகின்றாள். ஆனால் தலைவன் வந்து வரைந்து கொள்ளாமையால் மீண்டும் திணைப்புனம் காக்க நேர்ந்தது என்னும் குறிப்புத் தோன்றக் கிளியிடம் தன் குறைகூறிக் இரக்கின்றாள். இக்குறிப்பு புணர்தல் நிமித்தத்தை குறிப்பதால் பாடலின் திணை குறிஞ்சியாயிற்று. மேலும் குறிஞ்சித் திணைக்குரிய முதற்பொருளான, மலையும் மலைசார்ந்த இடமும் குறிப்பிடப்படுகின்றன. குறிஞ்சி நிலத் தலைவியை 'கானக்குறவர் மடமகள்' (நற்.102:8) என்ற பாடலடி மெய்ப்பிக்கும்.

தலைவிக்கு கூற்று நிகழும் இடங்களைக் தொல்காப்பியர், களவியலில் பட்டியலிடுகிறர். அதில் ஒன்று, இருவகைக் குறி பிழைப்பாகிய இடத்தும் (தொல்.1053:1) கூற்று நிகழும் என்பதாகும்.

## செல்லூர் கிழார் மகனார் பெரும் பூதங்கொற்றனார்

இவர் அகநானூற்றில் ஒரு பாடலையும் (250), குறுந்தொகையில் ஒரு பாடலையும் (363), நற்றிணையில் ஒரு பாடலையும் (30) பாடியுள்ளார். இப்பாடல்கள் முறையே நெய்தல், பாலை, மருதத்திணையில் அமைந்துள்ளன.

## தூங்காத விழிகள்

களவொழுக்கத்தில் தலைவன் தலைவியைக் கூட்டுவிக்கத் தோழியை வேண்டினான். தலைவனது குறையை நிறைவேற்றுதற்கு உடன்பட்ட தோழியும், தலைவியின் பால் வந்து தலைவன் வேண்டுகோளுக்கு இணங்குமாறு அவள் நயக்கும் வண்ணம் பின்வருமாறு கூறுகிறாள். மணம் கமழும் மென்மையான மணல் மேட்டில், தோழியர் கூட்டத்துடன் காண்பார்க்குக் காட்சியுண்டாக விளையாடினோம். அப்போது மார்பிலும், தலையிலும் மாலைகளைச் சூடியவனாய், இனிய ஏவல் வீரர்களுடன் நீண்ட தேரிலே ஒருவன் வந்து, ஏவலாளரையும் தேரினையும் தொலைவில் நிறுத்தி எம் அருகே வந்து யாம் புனைந்து விளையாடிய சிற்றில்லைப் புகழ்ந்து பேசினான். நம்மிடருந்து யாதொரு மறுமொழியும் கிடைக்கப் பெறாதவனாய் வறிதே மீண்டு சென்றான். அதுநாள் தொடங்கி அவன் நினைத்து வருந்தும் துன்பத்தால் நம் தோள்களும் மெலிந்தன. முன் கையினின்று வளையல்களும் கழன்று வீழ்ந்தன. அழகிய வலைகளையுடைய பரதவரது கடற்கரைச் சோலையில் பொருந்திய சிற்றூரில் வாழும் வெஞ்சொற் கூறும் வாயினையுடைய மகளிர் பலரும் அறியப் பழிச்சொல் கூறினார். அதனைக் கேட்டு உள்ளம் கலங்கி, தலைவனைப் பற்றிய நினைவுத் துன்புறுத்தால் இரவு முழுவதும் உறங்காது விழித்திருந்த நம்முடன் கடந்துறையும் உறங்காது விழிதிருக்கின்றதே! அதற்குரிய காரணம் தான் யாதோ? என வினவுகிறாள். பாடலில் தலைவனைப் பிரிந்து தலைவி இரவு முழுவதும் உறங்காது விழித்திருப்பது நெய்தல் திணையின் உரிப்பொருளான இரங்கலும் இரங்கல் நிமித்தத்தையும் புலப்படுத்துகிறது. மேலும் நெய்தல் நிலமக்களான பரதவரை, ‘அவ்வலைப் பரதவர் கானல் சிறுகுடி’ என்று குறிப்பிடுவதாலும் பாடலின் திணை நெய்தலாயிற்று.

யாம் பெற்ற துன்பமும், பரதவபா் பெண்டிரின் அலரும் ஒரு சேர ஒழியும் பொருட்டு, நீ நம் தலைவனின் குறையினை நயந்து ஏற்றுக் கொள்ளுதல் வேண்டும் என்று தோழி குறிப்பாக குறை நயப்பக் கூறுகிறாா்.

பிரிவு உணா்த்தப்பட தோழி கிழவற்குச் சொல்லியது என்ற கூற்றில் பாலைத் திணைப்பாடலை (363) குறுந்தொகையில் செல்லூா்கிழாா் மகனாற் பெரும்பூதங்கொற்றனாா் பாடியுள்ளாா். அரிய பாலை நிலத்தின் வழியே கடந்து செல்லுதல் நினக்குத் தகுமோ? எனத்தோழி தலைவனை வினவுகிறாள். பாடலில் பாலைத் திணையின் இயல்பினை.

கண்ணி மருப்பின் அண்ணல் நல்ஏறு
செங்காற் பதவின் வாா்குரல் கறிக்கும்
மடக்கண் மரையா நோக்கி, வெய்துற்று
புல்அரை உகாஅய் வரிநிழல் வதியும்
இன்னா அருஞ்சுரம்;......................

(குறுந். 363;1-5)

என்ற பாடலடிகள் மெய்ப்பிக்கும் பெரும! என்ற அசை பாடலில் இடம்பெறுவதால் கேட்போன் தலைவன் என அறிய முடிகிறது. இனிதோ பெரும! இன்துணை பிரிந்தே' என்று குறிப்பிடுவதால் பாலைத் திணையின் உரிபொருளான பிரிதல் உணா்தப்பெறுகிறது. எனவே பாடலின் திணை பாலையாயிற்று.

## பரத்தையரின் இயல்பு

நற்றிணையில் மருதத்திணையில் (30) அமைந்த பாடலை இயற்றியுள்ளார் கொற்றனார். பரத்தையிற் பிரிந்து வந்த தலைவன் 'யாரையும் அறியேன்' என்றாற்குத் தோழி, மகிழ்நனே! நீ எழுந்து வருகின்ற தெருவில் பாணன் கையிடத்ததாகிய பண்பமைந்த சிறிய யாழ் அழகிய வண்டுபோல இம்மென ஒலிசெய்யும் நீ வருதலை எதிர்பார்த்து நின் மார்பை முன்பு தமக்கு உடையராய்ப் பற்றிக் கொண்டிருந்த மாண்புடைய பரத்தையர், பலரும் நீ பிரிந்ததனால் உண்டான கவலை மிகுவர். கண்களிலிருந்து கண்ணீர் வடிப்பர். புயற்காற்று வீசி சுழற்றுதலாலே துன்புற்றபோது கடலிலே தாமும் ஓரசேர மரக்கலம் கவிழ்ந்துவிட்ட நிலையில் கலக்கமுற்றுத் தாமும் வீழ்ந்து அவ்வழி வந்த ஒரு பலகையைப் பற்றிக் கொண்டு அவரவர் நோக்கம் போல இருப்பர். அதுபோல நீ பரத்தையர் நின் கைகளைப் பற்றிக்கொண்டு தத்தம் பக்கம் இழுப்பதை என கண்களால் கண்டேன். கண்டு நின்னை யாது செய்வேன்? ஆகவே நீ யாரையும் அறியேன் என்று எங்ஙனம் கூறுவாய்? என வினவுகிறாள்.

பாடலின் திணை மருதம் பாடலில் தலைவன் தலைவியைப் பிரிந்து பரத்தையிடம் சென்ற குறிப்பு காணப்படுவதால் உரிப்பொருளான 'ஊடல் நிமித்தம்' குறிக்கப்பெறுகிறது. ஈண்டு, மார்புதலைக் கொண்ட மான் இழை மகளிர் என்ற தொடர் பரத்தையரைக் குறிக்கிறது. மகழ்ந! என்ற அசை மருதநிலத்தலைவனை உணர்த்துகிறது. பாடலில் தலைவன் பல பரத்தையரிடம் சிக்குண்டு தவிக்கும் நிலையை விளக்க, நெய்தல் திணைக்குரிய மரக்கலம் (மீன்பிடித் தொழிலுக்குப் பயன்படும்) உவமையாகக் கையாளப்பட்டுள்ளது.

## செல்லூர் கோசிசன் கண்ணனார்

இவர் அகநானூற்றில் மருதத்திணைப் பாடலொன்றை (66) மட்டும் பாடியுள்ளார். பரத்தையிற் பிரிந்த தலைமகற்கு வாயிலாய்ப் புக்க தோழிக்குத் தலைமகள் சொல்லியவாறு இப்பாடல் அமைந்துள்ளது. பரத்தையிற் பிரிந்து வந்த தலைமகளை ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று தோழி அவன் பொருட்டு வாயிலாக வந்தாள். தலைவி வாயில் நேர்ந்த கருத்துடன் பண்டு இயற்கைப் புணர்ச்சிக் காலத்து ஒரு நாள் தலைவன் செய்த நிகழ்வு ஒன்றினைத் தோழிக்கு எடுத்துக் கூறுகிறாள்.

## இல்லறம்

தோழி! பகைவரும் விரும்பும் பிறரால் பழிக்கப்படாத குற்றம் தீர்ந்த அழகினையுடைய புதல்வரைப் பெற்ற தலைமைப் தன்மையுடையோர் இவ்வுலகத்தே புகழொடும் விளங்கி மறுமை உலக வாழ்வையும் குற்றமின்றி எய்துவர். இவ்வாறு சான்றோர் பலரும் கூறிய பழமொழிகள் யாவும் உண்மையாதலை மெய்யாகவே கண்டோம். வரிசையாய்க் கட்டிய மலர் மாலையை அணிந்த மார்பினாகிய நம் தலைவன் நேற்று ஒருத்தியை மணம் செய்து கொள்ள விரும்பி, புதிதாகச் செய்து கொண்ட மணக்கோலத்துடன் இத்தெருவினைக் கடந்து சென்றான். அப்போது அவனது குதிரையின் மணி ஒலித்தது. அதனைக்கேட்டு, வாயிலைக் கடந்து தளர்ந்து ஓடி வந்த பூப்போன்ற கண்களையுடைய தன் புதல்வனைக் கண்டான். கண்டவுடன் 'பாகனே! தேரினை நிறுத்துக! ஏனக் கூறித் தேரினின்றும் இறங்கி, காலம் தாழ்த்தாது புதல்வனது பவளம் போன்ற சிவந்த வாய் தனது மார்பில் பொருந்துமாறு எடுத்துத் தழுவிப் பெரும! இனி நீ வீட்டிற்குச் செல்வாயாக! எனக் கூறினான்.

புதல்வன் அதற்கு உடன்படாது அழுதான். அங்ஙனம் அழுது தடுத்த மகனோடு 'இவன் குபேரனும் ஆவான்' எனக் கூறித் தானே தன் வீட்டிற்குள் புகுந்தான். மகனை இவ்வாறு போக்குவித்த செயலைச் செய்தேன் எனப் பலரும் கருதுவதற்கு இடனாதலை உணர்ந்தேன். அதற்காக நாணினேன். இக்கொடிய மகன் இடையூறு விளைவித்துத் தந்தையை மனம் கலங்குமாறு செய்தான் போலும் எனக் கூறி அடிக்கும் கோலுடன் அவனை அணுகினேன். தலைவனோ என்னிடத்தே நின்ற மகனைத் தன்னிடத்தே எடுத்து அனைத்துக் கொண்டான். மணம் நிகழும் அப்பரத்தையர் வீட்டில் இம்மணம் கருதி ஒலிக்கும் கண்ணினையுடைய குழுவின் இனிய ஓசை தன்னை அழைப்பன போன்று வந்து ஒலித்தும் எம் தலைவன் எம்மைவிட்டு நீங்கவில்லை. அன்றொரு நாள் கழங்கு ஆடும் தோழியர் கூட்டத்தில் வந்து நம்மை அருள் செய்த பழைய அருட்செயலும் வருத்தத்தான் விரும்பியன மணத்தைத் தவிர்த்தான் கூறி என்று வாயில் நேர்கிறாள் தலைவி.

பாடலில் வாயில் நேர்தல் இடம்பெறுவதால் திணை மருதமாயிற்று. பாடலில் தோழி என்ற அசை இடம்பெறுவதால் கூற்று நிகழ்த்துபவள் தலைவி என்றும் கேட்போள் தோழி என்றும் தெளிவாகத் தெரிகிறது. தலைவன் தலைவி இல்வாழ்வில் இடம்பெற்ற நிகழ்வு ஒன்றை நினைகூர்ந்து வாயில் நேர்கிறாள் தொல்காப்பியர் வாயில்களுக்கு உரியோர்களில் தோழியையும் எண்ணுவர். பாடலில்,

'இமிழ்கண் முழவின் இன்சீர் அவர் மனைப்
பயிர்வன போல வந்து இசைப்பவும், தவிரான்'

(அகம். 66;22-23)

என்ற பாடலடிகள் மருதத்திணையில் ஊடல் நிமித்தமான உரிப்பொருளை உணர்த்துகிறது.

## பெருங்கோழி நாய்கண்மகள் நக்கண்ணையார்

தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழிக்குச் சொல்லுவாளாய்த் தலைமகள் சொல்லியவாறு அகநானூற்றில் குறிஞ்சித் திணைப் பாடலொன்று அமைந்துள்ளது. தலைவியை மணந்து கொள்வதில் கருத்தின்றித் தலைவன் களவொழுக்கத்தையே காமுற்று இருந்தான். இரவுக் குறியிடத்து சிறைப்புறம் வந்து நிற்க, தலைவி அவன் வரவினை உணராதவள் போன்று, சிறுகோட்டுப் பெருங்குளங்காவலன் போல அன்னையும் இரவில் கண் துயிலாது என்னைக் காத்து நிற்கின்றாள் என்று அன்னையின் காப்பு மிகுதியை எடுத்துக் கூறித் தன்னை மணந்து செல்லுமாறு தோழிக்குச் சொல்லுவாளாய்த் தலைவன் கேட்பச் சொல்கிறாள். பாடலில் இரவுக் குறியை தலைவி தவிர்க்கும் நோக்கில் பேசுவதால் குறிப்பாக வரைவு உணர்த்தப்படுகிறது. வரைவு உணர்துதல் குறிஞ்சித் திணைக்கு உரியது. பாடலில் தோழி! என்ற அசை இடம்பெறுவதால் கேட்போள் தலைவி என்றும், கூறுபவள் தலைவி என்றும் அறிய முடிகிறது. குறிப்பாக வரைவு உணர்தப்படுவதால் பாடலின் கைகோள் களவு எனத் தெரிகிறது.

நக்கண்ணையார் நற்றிணையில் பாடிய இரண்டு பாடல்களும் (19, 87) நெய்தல் திணையின.

### பிரிவின் விழைவு

முதற்பாடல் புணர்ந்து நீங்கிய தலைவனைத் தோழி வரைவு கடாயது என்னும் கூற்றில் அமைந்துள்ளது. இறாமீனின் புறம்போன்ற கருச்சரை பொருந்திய பெரிய அடியுடைய சுறாமீனின் முகத்தில்

நீண்டுள்ள கொம்பு போன்ற முட்களுடைய இலையையுடைய தாழையானது, பெரிய யானையின் மருப்பு போன்று அரும்பு முதிர்ந்து நல்ல பெண்மான் தலைசாய்த்து நிற்பது போல வேறாகத் தோன்றி விழா எடுக்கும் இடமெல்லாம் நல்ல மணம் வீசும். அவ்வாறு மணம் வீசும் வலிய நீரையுடைய கடற்கரைத் தலைவனே! மிக்க மணிகள் கட்டிய உனது தேரிரைப் பாகன் செலுத்துவதால் உனது ஊருக்கு செல்லும் பொருட்டாகச் செல்கின்றனை; ஆனால் உன்னை பிரிந்த இவள், பிறகு நீ வருவாய் என்று குறிப்பிட்ட சில நாட்கள் கூட உயிர் வாழ்ந்திருக்க மாட்டாள் என்பதை நீ நன்றாக அறிந்து செல்வாயாக! எனக் குறிப்பாக வரைவு வேண்டுகிறாள் தோழி.

நெய்தல் நிலத் தலைவனை உரவுநீர்ச் சேர்ப்ப! என்று விளிப்பதால் பாடலின் திணை நெய்தல் ஆயிற்று. ஆனால் 'வரைவு கடாவுதல் குறிஞ்சித்திணைக்குரியது. ஆனால் இப்பாடல் முதற்பொருளால் நெய்தல் திணையாக அமைகிறது. மேலும் தலைவி தலைவனை பிரிந்து வாழ மாட்டாள் என்று கருத்துப்பட உரைப்பதால், உரிப்பொருளான இரங்கலும், இரங்கல் நிமித்தம் உணர்த்தப்படுகிறது. பாடலில் வரைவு கடாயது குறிப்பால் உணர்த்தப்படுகிறது. முதற்பொருளாலும், உரிப்பொருளாலும் நெய்தல் திணை ஆயிற்று.

வலிமை மிக்கவர் தம்மை அடைந்தவரை கைவிடமாட்டார். நீயும் அத்தன்மையன் ஆக வேண்டும் என்ற கருத்துப்பட 'உரவுநீர்ச் சேர்பன்' என்றனள். பிரிந்தால் தலைவி வாழ மாட்டாள். எனவே வரைந்து பிரியாது உறைய என்ற கருத்து வற்புறுத்தப்பட்டது. 'நெடுந்தேர் பாகன் இயக்க செலியசேறி' என்றது தலைவனின் செல்வ செழிப்பை உணர்த்தியது.

## பகல் கனவு

வரைவிடை வைத்துப் பிரிய ஆற்றாளாய தலைவி கனாக்கண்டு தோழிக்கு உரைக்கும் பாடலில், தோழி! நம் தலைவரது நாட்டில் பெரிய அடிப்பகுதியை உடைய புன்னையின் குளிர்ந்த அரும்புகள் மலரும். அவற்றின் மகரந்தத் தாதுக்கள், கடலின் துறையிடத்து அமைந்த

மணற்பகுதியில் மேயும் சிப்பிகளின் ஈரமான புறப்பகுதியில் விழும். இங்ஙனம் அமைந்த சிறுகுடியைப் பெற்ற பரதவரின் மகிழ்ச்சியையும் பெரிய குளிர்ந்த கடற்கரையில் அமையும் சோலையையும் நான் நினைத்துக் கொண்டேன். ஊரிடத்து அமைந்த மாமரத்தில் வௌவால் உயர்ந்த கிளையில், வெல்லும் போரையுடைய சோழர் குடியில் பிறந்து ஆர்க்காட்டில் வீற்றிருக்கும் அழிசி என்பவனின் காட்டில் உள்ள தனக்கு கிட்டாததுமான நெல்லிக்கனியின் புலிச்சுவையை பெற்றதாக கனவு காணும். அதுபோல பரதவரின் மகிழ்ச்சியையும் கடற்கரையையும் நினைத்த அப்பகற் பொழுதே நானும் நம் தலைவனுடன் கூடி இன்புறுவதாக கனவு கண்டேன். அத்தகைய இன்பமெல்லாம் விழித்தபோது என்னை விட்டு நீங்கியது என்று தலைவி தான் கண்ட பகற்கனவை எடுத்துரைக்கிறாள்.

பாடலில் நெய்தல் நில மக்களான பரதவரை, 'சிறுகுடி பரதவர்' என்று குறிப்பிடுவதால் திணை நெய்தல் ஆயிற்று. நெய்தல் திணைக்குரிய சிறுபொழுது எற்பாடு. சூரியன் மறையும் நேரம் இதனை சாயுங்காலம் என்பர். எல் - சூரியன். பாடு - படுதல். படுதல் என்ற சொல்லுக்கு தோன்றுதல் மறைதல் என்ற இருபொருளும் உண்டு. பாடல் தலைவி, 'பெருந்தண் கானலும். நினைத்த அப்பகலே' என்று கனவு கண்ட நேரத்தை குறிப்பிடுகிறாள். வௌவால் தான் பெறாத சுவையைக் கனவில்

பெற்றதுபோல்த் தலைவி தான் தலைவனுடன் பெறாத முயக்கத்தை கனவிற் பெற்றனள் என்பது உரையிற் கண்ட பொருள். சங்ககாலத்தில் கனவுப் பற்றிய சிந்தனை இடம்பெற்றுள்ளது. பகலிற் காணும் கனவு பலிக்காது என்ற நம்பிக்கையும் இதன் மூலம் அறியமுடிகிறது.

## தாயங்கண்ணனார்

இவர் அகநானூற்றில் ஏழு பாடல்களையும், குறுந்தொகையில் ஒரு பாடலையும், நற்றிணையில் ஒரு பாடலையும், ஆகமொத்தம் ஒன்பது பாடல்களைப் பாடியுள்ளார். இவற்றில் ஆறு பாலைத்திணைப்பாடல்கள் அடங்கும்.

## தாயின் புலம்பல்

செல்வச் செழிப்புடன் வளர்ந்த தன் மகள் வீட்டை மறந்து, தமரை வெறுத்துத் தன் காதலுடன் உடன்போக்கிலே சென்விட்ட செய்தியை அறிந்த நற்றாய் அவர்கள் செல்லும் வழியின் அருமையையும், தலைவியின் மென்மையையும் எடுத்துக் கூறுவதாக பாலைத் திணைப் பாடல் (105) அமைந்துள்ளது. நல்ல மலை நாடனாகிய தலைவன் அகன்ற பாறையிடத்தே முதிர்ந்து அரும்பு மலர்ந்த வேங்கையின் ஒளிபொருந்திய இலை கலந்த மாலையை அணிந்து, மெல்லெனப் பாராட்ட அவன் கூறிய பொய் மொழியினை உண்மையென நம்பி மயங்கினாள். மணிகள் இழைத்துத செய்த பொற்காலத்தில் இனிய பாலொடு தேன் கலந்து, செவித்தாயர் ஊட்டவும் என் மகள் உண்ணவில்லை. நெடிய மாளிகையின் கண் உள்ள எமது பெருஞ்செல்வத்தையும் அவள் கருத்திற் கொள்ளாது, எழினி என்பான் கெடுதல் இல்லாத வலிமைபொருந்தியவன், பல வேற்படையினை உடையவன். அவன் ஏவிவிட்ட தொழிலை முடிக்கும்

பொருட்டு பாறைகளைத் தீய்க்கும் வெப்பம் பரந்த காட்டிலே போர்த்திறம் வல்ல அம்பினை குறிதப்பாது தொடுக்க வல்ல வீரர்கள் பிழிந்த தேனை வார்த்துச் செய்த கள்ளினை உண்டு மகிழ்வர். அம்மகிழ்ச்சியால் பகைவரின் போர்முனைகளை வென்று, காளைகளோடு கூடியிருக்கும் ஆனிரைகளை கவர்ந்து வந்து கொண்டிருக்கும் பாலை நில வழிகளில், மலைக் குகைகள் வெடிக்கும் படியான வேனிற் காலத்தே, அவனுடன் செல்வதற்கு என் மகள் எங்ஙனம் வல்லவள் ஆனாள்? என்று தாய் மகட்போக்கிய வழி வினவி நிற்கிறாள்.

பாடலில் பாலைத் திணைக்கு உரிய வேனிற் பருவம் சுட்டப் பெறுகிறது. பாடல், தலைவனுடன் தலைவி உடன்போக்கு சென்ற வழி நற்றாய் வருந்துவதாக அமைவதால் திணை பாலையாயிற்று. பாடலின் பொருளை இரண்டாகப் பிரித்துக் காணமுடிகிறது. தலைவியின் மென்மை, தலைவி தலைவனுடன் உடன் போக்கிய வழியின் இயல்பு ஆகியவற்றைத் தாய் நன்றாக எடுத்துக் கூறுகிறார். உடன்போக்கு, பாலைத் திணைக்கு உரிய துறை என்பதால் பாடலின் திணை பாலையாயிற்று.

தலைவியை உடன் கூட்டிக்கொண்டு அவள் ஊரை விட்டுப் பிரிதலும், அவ்வாறு உடன் போக்கின்போது பிரிய நேர்ந்தற்காக வருந்துதலும் பாலை உரிப்பொருள் வகையாகப்பாடப்படுவது உண்டு என்பர் தொல்காப்பியர்.

தோழி தலைமகளை இடத்து உய்த்து வந்து, தலைமகனை எதிர்ப்பட்டு நின்று வரைவு கடாயது என்னும் கூற்றில் அமைந்த பாடலில், தலைவன் தலைவியை மணந்து கொள்வதில் கருத்தின்றி நாள்தோறும் அவளைக் கண்டு சென்றதை உணர்ந்த தோழி, தலைவனை நேரடியாக வரைவு வேண்டுகிறாள்.

## நேருக்கு நேர்

திணைப்புனத்தில் கதிர்கள் அறுக்கப்பெற்று விட்டன. இவள் நெற்றியும் காமநோயால் அழகு கெட்டது. இவ்வூர் மக்களும் அலர் செய்யத் தொடங்கி விட்டனர். எனவே கார்காலத் தொடக்கத்தில் பெய்த மலைச் சாரலில், பெரிய மலையையே வேலியாக கொண்டு வாழ்வதற்கு இனிய நும் ஊருக்கு இவள் மணந்துகொண்டு அழைத்துச் செல்வாயாக! என்று தோழி நேரிடையாகவே எதிர்ப்பட்டு, தலைவனை வரைவு வேண்டுகிறாள். பாடலில் குறிஞ்சித்திணை நிலமான மலைசார்ந்த நிலத்தினை,

> 'துளிதலைத் தலைஇய சாரல் நளிசுனைக்
> கூம்புமுகை அவிழ்த்த குறிஞ்சிறைப் பறவை
> வேங்கை விரிஇணர் ஊதி, காந்தள்
> தேனுடைக் குவிகுலைத் துஞ்சி, யானை
> இருங்கவுட் கடாஅம் கனவும்
> பெருங்கல் வேலி, நும் உறைவு இன் ஊர்க்கே'
>
> (அகம். 132;9-14)

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. வரைவு கடாவுதல் துறை குறிஞ்சித்திணைக்கு உரியது. தோழி இப்பாடலில் தலைவனை நேரிடையாகவே எதிர்பட்டு வரைவு வேண்டுதலின் மூலம் தோழியின் திறம் வெளிப்படுகிறது. பாடலில் நுண்பூண் மார்ப! என்ற விழி இடம்பெறுவதால் கேட்பேன். தலைவன் எனவும், கூற்று நிகழ்த்துபவள் தோழி என்றும் உணரமுடிகிறது. பாடலில் புணர்ச்சி நிமித்தம் நேரிடையாக உணர்த்தப்படுவதால் கைகோள் களவு எனத் தெரிகிறது.

## அரிதாயினும் வேண்டேன்

தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லி செலவழுங்கிய பாலைத் திணைப் பாடலொன்றையும் (அகம்.149) தாயங்கண்ணனார் பாடியுள்ளார். அரிய பாலை நிலத்தின் வழியே சென்று பொருள் ஈட்டக கருதிய தலைவன் சுள்ளி என்னும் பெயர்கொண்ட பேரியாறு சேர அரசர்க்கு உரியது. அவ்வழகிய ஆற்றினது வெண்ணிற நுரை சிதறுமாறு, யவனர்கள் கொண்டு வந்த நல்ல மரக்கலம் பொன்னைக் கொண்டு வந்து விலையாக மிளகை ஏற்றிச் செல்லும். அத்தகைய வளம் பொருந்திய முசிறி என்னும் பட்டினத்தை நெடிய நல்ல யானைகளையும் பகைவரை வெல்லும் போர் ஆற்றலையும் உடைய பாண்டியன் ஆரவாரம் உண்டாக வளைத்து, அரிய போரை வென்று அங்குள்ள பொற்பாவையினைக் கவர்ந்து சென்றான், அச்செழியனது கொடிகள் அசைந்தாடும் விதிகளையுடைய கூடல் மாநகரின் மேற்கு திசையில் மயிற்கொடி தோன்ற, இடைவிடாது விழாக்கள் நடைபெறும் முருகனது திருப்பரங்குன்றம் அமைந்துள்ளது. அக்குன்றத்தின்கண் பூத்த குவளை மலர்கள் ஒன்று சேர்ந்து இருந்தமை போன்ற எம் தலைவியின் செவ்வரி படர்ந்த செருக்குடைய கண்கள் நீர்கொள்ள, சுரங்கடந்து அரிதாக ஈட்டத்தக்க சிறந்து பொருளை எளிதாகப் பெற்றாலும் யான் இவளைப் பிரிந்து வாரேன்! என்று தன் நெஞ்சிற்கும் கூறித் தன் பிரிவைத் தவிர்க்கிறான் தலைவன். இப்பாடலில் முசிறி என்னும் பட்டினத்தில் நடைபெற்ற பண்டமாற்று வணிகம் பற்றிய செய்தி வரலாற்றுச் சிறப்பினை உணர்த்துகிறது. முசிறிப் பட்டினத்தைப் பாண்டியன் ஒருவன் முற்றுகை இட்ட செய்தியை அகநானூற்றுப் பாடலின் (அகம்.57;14-15) வழி அறிய முடிகிறது. “படிமம் என்பது முசிறியில் இருந்ததோர் தெய்வ பிம்பம் போலும்; யவனம் கொண்டுவந்த

பாவை ஆகலாம்"(29) என்பர். பாடலின் திணை பாலை பாலைத் திணையின் இயல்பினை,

'சிறுபுண் சிதலை சேண்முயன்று எடுத்த
நெடுஞ்செம் புற்றத்து நடுங்குஇரை முனையின்
புல்அரை இருப்பைத் தொள்ளை வான்பூப்
பெருங்கை எண்கின் இருங்கிளை கவரும்
ஆத்த நீள் இடைபோகி ..................'

(அகம். 146:1-5)

என்ற பாடலடிகள் மெய்ப்பிக்கின்றன. வாரேன் - வாழி, என் நெஞ்சே! என்ற சொற்றொடர் தலைவன் தலைவியைப் பிரியாது செலவழுங்கிய செயலை அறியமுடிகிறது. செலவழுக்குவித்தல் துறை பாலைத் திணைக்குரியது.

சோழ நாட்டைச் சேர்ந்த புலவர், சேரநாட்டு முசிறியையும், பாண்டிய நாட்டுத் திருப்பரங்குன்றத்தையும் சிறப்பித்துப் பாடியிருப்பது அவரின் ஒருலக்காட்சிக்கு சான்றாக அமைகிறது.

## அமிழ்தினும் இனியவள்

பிரிவிடை வேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறீஇய கூற்றில் மற்றொரு பாலைத் திணைப்பாடல் அகநானூற்றில் (213) இடம்பெற்றுள்ளது. தலைவன் பொருள்வயிற் பிரியக் கருதினான். அதனைக் குறிப்பால் அறிந்து அவன் குறித்த காலத்துள் வாராது இருந்துவிடுவானோ என ஐயுற்று மிக வருந்திய தலைவியின் உடல் வேறுபட்டது. அதனைக்

கண்ட தோழி 'அறல் போன்ற கூந்தலையுடைய நின்னோடு பொருந்துதலை மறந்து, தேவரது பெறுதற்கரிய விண்ணுலகை அங்குள்ள அமிழ்தத்துடன் பெறுவபதாயினும்' நம் தலைவர் காலம் தாழ்த்தாது விரைந்து வருவார்: அவர் வருமளவும் நீ ஆற்றியிருத்தல் வேண்டும் என்று தலைவியை வற்புறுத்திக் கூறுகிறாள். தலைவியை பிரியக் கருதிய தலைவனை.

'இலங்குநீர்க் காவிரி இழிபுனல் வரித்த
அறல் என நெறித்த கூந்தல்
உறல் இன் சாயலொடு ஒன்றுதல் மறந்தே'

(அகம். 213;22-24)

என்ற பாடலடிகள் விளக்குகின்றன. தலைவன் பொருள் ஈட்டச் செல்லும் இடம் வடவேங்கடத்திற்கு அப்பால் என்ற குறிப்பு இடம்பெறுகிறது. காவிரியாற்றின் கருமணலுக்கு ஒப்பாக தலைவியின் கூந்தல் கூறப்படுகிறது. இதன்மூலம் அகப்பாடல்களில் புறச் செய்திகளை இடம்பெறச் செய்வதில் தாயங்கண்ணனார் சிறப்பிடம் பெறுகிறார்.

## இன்னே வருவார்

தலைமகன் பிரிவின்கண் வேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறீஇய பாங்கில் மற்றுமொரு பாலைத்திணைப் பாடலும் (237) இடம்பெற்றுள்ளது. தலைவன் தலைவியை பொருள் தேடுதல் காரணமாகப் பிரிகிறான். அவன் குறித்துச் சென்ற பருவமும் வந்தது. ஆனால் பிரிவாற்றாது வருந்துகிறாள் தலைவி. இதனைக் கண்ட தோழி, 'வளஞ்சான்ற உறந்தையைப் பெறினும் நின் வால் எயிறு ஊறிய நீரைப் பருகும் வேட்கை கொண்டு தலைவர் விரைந்து வருவார் என

வற்புறுத்திக் கூறுகிறார். இதனால் பாடலின் திணை பாலையாயிற்று. தலைவனைப் பிரிந்த தலைவியின் துயரை

'குயில்குரல் கற்ற வேனிலும் துயில்துறந்து
இன்னா கழியும் கங்குல் என்று நின்
நல்மா மேனி அணி நலம் புலம்ப'

(அகம். 237;5-7)

என்ற பாடலடிகள் உணாத்துகின்றன. வேனில் காலம் பாலைத் திணைக்கு உரியது. இதனைத் தொல்காப்பியர்,

'நடுவுநிலைத் திணையே நண்பகல் வேனிலொடு
முடிவு நிலை மருங்கின் முன்னிய நெறித்தே'

(தொல். 955)

என்ற நூற்பாவில் குறிப்பிடுகிறார்.

## செலவு அழுங்குவித்தல்

செலவு உணர்த்திய தலைமகற்குத் தோழி செலவு அழுங்கச் சொல்லிய கூற்றில் அமைந்த பாலைத்திணைப் பாடலில், தலைவ! நீலமணிபோன்ற நிறமுடைய வாயினையுடைய காக்கையின் பெருங்கூட்டம் பின்னிய விழுதுகளைக் கொண்ட ஆலமரத்தின் அசைகின்ற கிளைகளில் ஏறியிருந்து வளைந்த வில்லினையுடைய எயினராகிய கொல்லும் தொழிலுடைய வீரர்கள், தம் அரணினின்றும் ஆறலைத்தற்கு ஊக்கத்துடன் எழுந்து வந்து, வில்லினை எய்தமையால், இறந்துபட்ட வழிபோவாரின் பிணங்களை கவர்ந்து உண்ணும் பாழ்பட்ட பாலைநிலத்தினை கடந்து

செல்ல இருக்கின்றீர்! தெய்வமகளோ என்று எண்ணுமாறு வடிவு கொண்ட கண்களையும், அழகிய மெலிந்த இடையினையும், மாந்தளிர் போன்ற நிறத்தினையும் நல்ல மார்பகத்து முகிழ்ந்து எழுந்த அழகிய முலையினையும் வண்டுகள் ஒலிக்கின்ற கூந்தலையும் உடைய தலைவியை விட்டுப்பிரியக் கருதுகின்றீர். நின்னை யாம் பிரிந்து செல்ல இருக்கின்றோம் என்று கூறும் நும் எதிரில் நின்று, நீவிர் பிரியின் யான் ஆற்றியிருப்பேன் எனத் துணிவுடன் கூறும் அறிவுடைமை இல்லாதவள் எமது தலைவி. எனவே நீவிர் பிரிவதைத் தவிர்ப்பிர் எனத் தோழி செலவு அழுங்குவக்கிறாள். செலவு அழுங்குவித்தல் துறை பாலைத்திணைக்கு உரியது. தோழி தலைவன் செல்லும் பாலை நிலத்தின் இயல்பையும் தலைவியின் மென்மையையும் எடுத்துக்கூறி செலவு அழுங்குவிப்பதால் பாடலின் திணை பாலையாயிற்று. பாலைத் திணைக்கு உரிய தொழில் ‘ஆரலைக் கவர்தல்’ இத்தொழிலை இப்பாடல் சிறப்பாக விளக்குகிறது. காக்கை தன் இனத்தை அழைத்து அதனோடுங்கூட உண்ணும் இயல்பினைப் போல ஆரலைக் கள்வர்கள் செயல் அமைகிறது.

கடமை

பொருள் ஈட்டும் பொருட்டுத் தலைவன் தலைவியைப் பிரிந்தான். பிரிந்தவன் குறித்த பருவத்தில் வாராமையின் தலைவி பெரிதும் வருந்தினாள். அதுகண்ட தோழி, தலைவர் நின்பால் பெரிதும் அன்புடையராதலின் விரைவில் மீள்வர். அவர் பெருமளவும் ஆற்றியிருத்தல் நின் கடமையாகும் என வற்புறுத்திக் கூறியதாக இப்பாலைத்திணைப்பாடல் (357) அமைகிறது. தலைவியைப் பிரிந்து சென்ற தலைவன் கடுமையான பாலை நிலத்தினைக் கடந்து சென்றான் என்பதை,

‘கொடுமுள் ஈங்கை சூரலொடு மிடைந்த
வான்முகை இறும்பின் வயவொடு வதிந்த
உண்ணாப் பிணவின் உயக்கம் தீரிய
தடமருப்பு யானை வலம்படத் தொலைச்சி
வியல்அறை சிவப்ப வாங்கி முணங்கு நிமிர்ந்து
புலவுப்பலி புரண்ட புல்சாய் சிறுநெறி
பயில்இருங் கானத்து வழங்கல் செல்லாது
பெருங்களிற்று இனநிரை கைதொடூஉப் பெயரும்
தீம்சுளைப் பலவின் தொழுதி உம்பற்
பெருங்காடு இறந்தனர்.......................’

(அகம். 357;1-10)

என்ற பாடலடிகள் மெய்ப்பிக்கின்றன. முதற்பொருளால் இப்பாடல் பாலைத்திணையாயிற்று.

## எங்ஙனம் ஆற்றுவேன்?

தலைவன் கூறிச்சென்ற கார்பருவம் வந்தது கண்ட தலைவி வேறுபட்டாளாக, நீ ஆற்ற வேண்டும்’ என்று வற்புறுத்திய தோழியை நோக்கி, நான் எங்ஙனம் ஆற்றுவேன்? என் உயிர் நில்லாது போலும் என்று தலைவி வன்புரை கூறிய பாடல் குறுந்தொகையில் (319) இடம்பெற்றுள்ளது. தோழி! கலைமான்கள் தம்முடைய இளைய பெண் மான்களை தழுவிக்கொண்டு மனமயக்கம் மிகுந்து காட்டின் செறிந்த தூறுகளில் மறைந்தன. யானைகளும் தங்கள் பெண் யானைகளுடன் கூடி, மலைகளின் உள் இடத்தை நாடிச் சென்றன. மாரிக்காலத்தில் பெய்யும் கரிய மேகம் மாலைப் பொழுதுடன் பொருந்து வந்தது. பொன்போன்ற உடம்பின் நல்ல அழகினைப் பிரிந்தமையால் சிதைத்த தலைவர், மழை

வந்த பின்னரும் வாரார் ஆயின், நம்முடைய இனிய உயிர் எவ்வாறு நிலை பெற்றிருத்தல் கூடும் என்று தலைவி வருந்துகிறார். இப்பாடலின் திணை முல்லை முல்லைத் திணைக்குரிய பொழுது, காரும் மாலையும்ஸ் பாடலில் 'மாலை வந்தன்று மாரிமழை' என்ற பாடலடி முல்லைத்திணைக்குரிய காலத்தை உணர்த்துகின்றது கார்ப்பருவம் வந்தபின்னரும் யான் எவ்வாறு ஆற்றி இருக்கக் கூடும் என்பதை,

'இன்னும் வாரார் ஆயின்
என்ஆம் தோழி நம் இன் உயர் நிலை'
(குறு. 319;7-8)

என்ற பகுதி இருத்தல் நிமித்தத்தை உணர்த்துகிறது.

## நெய்தல் அறம்

வரைவிடை வைத்துப் பிரிய ஆற்றாளாய தலைமகள் தோழிக்குச் சொல்லியதாகப் நெய்தல் திணையில் அமைந்த பாடலொன்றையும் தாயங்கண்ணனார் பாடியுள்ளார். தோழி! வாழ்வாயாக! என்னுடைய கண்களும், தோள்களும் மென்மையான மணம் வீசும் கூந்தலும் பழைய அழகு கெட்டுப்போயின. மேனி வேறுபட்டுப் பசலை பாய்ந்தது. இதனால் எனது உயிர் இறந்து பருவதாயினும் போகட்டும், புலால் நாற்றம் வீசும் அலைகளை உடைய கடலில் பெரிய மீனைப் பிடிக்கும் இயல்புடைய சிறுகுடியில் தங்கும் பரதவர் இரவில் வரும் மரக்கலங்களுக்குத் தெரியுமாறு ஏற்றி விளக்கு செறிந்த கதிர்களுடன் ஒளிபொருந்திய சுடரொடு விளக்கும். அவ்விளக்கின் ஒளி முதிராத இளங்காலையில் கதிரவன் தன் முன்பு பரபரப்பும கதிரொளிக்கு ஒப்பாக விளங்கும். இங்ஙனம் விளக்கேற்றி

கடற்கரையில் அமைந்த சோலையும் பெரிய கடலின் துறையையுமுடைய நம் காதலன் யான் மகிழுமாறு முன்பு புணர்ந்து சென்றனன். எனவே அவனுடன் ஊடியிருத்தலைச் செய்வேன்' என்று தலைவி கூறுகிறாள்.

பாடலில் தலைவி, தலைவனை ஊடி நிற்பனே. என்று குறிப்பிடுகிறாள். நெய்தல் திணையின் உரிப்பொருள் ஊடலும் ஊடல் நிமித்தமும் ஆகும். எனவே இப்பாடல் நெய்தல் திணையாயிற்று. மேலும் நெய்தல் நிலமக்களான பரதவரின் வாழ்க்கை முறையினையும் நெய்தல் நிலத் தலைவனைச் 'சேர்ப்பன்' என்ற சொல் உணர்த்துகிறது.

தலைவன் தானே வந்து அருள் செய்தான். தற்போதும் அவன்தன்னைக் கருதி வருவான் அங்ஙனம் அருளுடன் தலைவன் வருங்காலத்துப் புலந்து நிற்றல் தகுதியாகுமோ? என்று கருதியவளாய் 'புலவேன்' என்று கூறியாகக் கொள்ளுதலும் பொருந்தும் என்பர்.

## நல்லாவூர் கிழார்

இவர் அகநானூற்றில் மருதத்திணைப் பாடலொன்றையும் (86), நற்றிணையில் குறிஞ்சித்திணைப் பாடலொன்றையும் (345) பாடியுள்ளார்.

வாயில் மறுத்த தோழிக்குத் தலைமகன் சொல்லியது. தலைமகளைக் கூடி இன்புற்றிருந்த தலைவன். பண்டு நிகழ்ந்தது சொற்று இன்புற்றிருந்தூமாம் ஆகிய இருவேறு கூற்றுக்களுக்கு இடனாக இப்பாடல் அமைந்துள்ளது.

## திருமண வாழ்த்து

உழுத்தம் பருப்புடன் கூட்டிச் சமைத்த பொங்கலோடு பெருஞ்சோற்றுத்திரளை உண்பது இடைவிடாது நிகழ்ந்து கொண்டே இருந்தது. வரிசையாக கால்களை நட்டுக் குளிர்ந்த பந்தலினை அமைத்து, அதில் மணலைப்பரப்பினர் மனையின்கண் விளக்கினை ஏற்றி மாலைகளைத் தொங்கவிட்டனர். அந்தநாளோ, தீய கோள்கள் நீங்கப் பெற்ற, வளைந்த வெண்மையான திங்களைத் தீமையற்ற புகழுடைய உரோகிணி வந்து கூடும் நன்னாளாகும். அந்நாளிலே இருள் நீங்கப்பெற்று அழகுபெறப் பொழுதும் புலர்ந்தது. மணம் செய்து வைக்கும் ஆராவாரமுடைய முதிய மங்கள மகளிர் தலையில் நீர் நிறைந்த குடத்தினை சுமந்து கைகளில் புதிய அகன்ற மண்டை என்னும் கலத்தினை ஏந்தியவராய் ஒருங்கு கூடினர். புதல்வரைப் பெற்றமுதுமகளிர் நால்வர் கூடி, கற்பினின்றும் வழுவாது நல்ல பலவற்றினும் உதவியாக இருந்து, நின்னை மனைவியாகப் பெற்ற நின் கணவனைப் பேணிக் காக்கும் பெருவிருப்பத்தை உடையை ஆகுக! என வாழ்த்தினர். வாழ்த்தியவராய், நீரொடு குளிர்ந்த இதழ்களையுடைய மலர்களை நெல்லுடன் கலந்து அவளது கூந்தலில் தூவினர். இவ்வாறாக வதுவை மணமும் முடிந்தது. சுற்றத்தினர் பெருமனை கிழத்தி ஆவாய் எனக் கூறி, ஓர் அறையில் என்னுடன் அவளைக் கூட்ட, நாங்கள் ஒன்று கூடிய புணர்ச்சிக் குரிய முதல் இரவாக அன்றைய இரவு கழிந்தது. அப்போது முதுகினை வளைத்துக் கொண்டு புதுப்புடைக்குள்ளே ஒடுங்கிக் கிடந்தாள். அவளை அணுகி அவள் முதுகினைத் தழுவிக் கொள்ளும் விருப்பத்துடன் முகத்தை மூடியிருந்த ஆடையை விலக்கினேன். அவளோ அஞ்சி பெருமூச்சு விட்டாள். அப்பொழுது மகிழ்ச்சியுடன் கூடிய இருக்கையிடத்து இனிதாக இருந்த பின்னர். நீ என் நெஞ்சத்து நினைத்ததை மறையாது உரைப்பாயாக? எனத் தலைவன் வினவுகிறான். பாடலில் 'ஒடு' ஈர் ஓதி,

மாஅயோளே' என்ற அடி இடம்பெறுவதால் முதலில் கூறிய கூற்றே பொருத்தமாக அமைகிறது. தலைவன் முன்பு நிகழ்ந்த நிகழ்வொன்றைக் கூறுவது வாயில் மறுத்தபோதுதான் இடம்பெறும் வாயில் மறுக்கும் சூழல் மருதத்திணைக்குரியது. ஏனெனில் மருதத்திணைக்குரிய உரிப்பொருள் ஊடலும் ஊடல் நிமித்தமும் ஆகும். உடல் உள்ளபோது மட்டுமே வாயில் தேவைப்படும். எனவே இப்பாடல் மருதத்திணையாயிற்று.

திங்களும், உரோகிணியும் சேரும் நாள் திருமணத்திற்குச் சிறந்த நாள் என்பது இப்பாடலின் மூலம் அறியமுடிகிறது. மேலும் இப்பாடல் வதுவைச்சடங்கு, என்னும் திருமண நிகழ்ச்சியை படம்பிடுத்துக் காட்டுகிறது. இப்பாடலில் முதுபெரும் பெண்டிர் திருமண நிகழ்வை நடத்தி வைப்பதாகக் கூறப்படுகிறது. "சங்க இலக்கியத்திற்கு பின்பு தோன்றி சிலப்பதிகாரத்தில், மாமுது பார்ப்பான் மறைவழி காட்டிய' திருமணம், சுட்டப்படுகிறது. மாமுது பார்ப்பன் மறைவழிகாட்ட நடைப்பெற்ற மணம் காலப்போக்கில் தமிழ்ச் சமுதாய வாழ்வில் வேற்றுப்பண்பாட்டு தாக்கத்தைப் புலப்படுத்துவதாக உள்ளது"[(30)] என்பர் இரா.செயபால்.

வாயில் மறுத்த தோழியிடம் தலைவன் தனக்கும் தலைவிக்கும் நடந்த திருமணத்தில் இடம்பெற்ற சடங்குகள் குறித்து நினைவு படுத்தினான் முதல் இரவில் பள்ளியறையில் நீ நெஞ்சத்து நினைத்ததை ஒளியாது உரைப்பாயா! எனத் தான் வினவிய போது, தலைவியோ நாணி நிலம் நோக்கி முகம் கவிழ்த்து தலைவணங்கி நின்றமையை எடுத்துக் கூறினான். இத்தகைய அன்புடையவளான அவளது கருத்தை அறியாது தோழியே! நீ வாயில் மறுத்தது சரியன்று' எனத் தலைவன் உரைக்கிறான். "பண்டு நிகழ்ந்தது சொல்லி இன்புற்றிருந்தது என்னும்

போது அதற்கேற்றவாறு பாடலின் சொற்களைக் கூட்டிப்பொருள் உரைத்துக் கொள்ளல்வேண்டும்[31] என்பர்.

## இரவுக்குறி

இரவுக்குறி வந்த ஒழுகும் தலைவனை சிறைப்புறமாக வரைவு வேண்டி தோழி, தலைவியே! மழை முழங்கவும், புலிமுழங்கவும் அயர்ந்து தூங்குகின்றாய்! அவ்விரவின் கண் அவர் வாராது இருப்பின் நல்லது வழியை நினைக்கும்போது என் நெஞ்சம் ஆண்டுச் சென்று நின்கின்றது. என்று மற்றொரு நற்றிணைப் பாடலின் வழி வற்புறுத்துகிறாள். தலைவன் இரவுக்குறியில் தலைவியைக் காண வேண்டி வரும் வழியின் இயல்பை,

'கானமும் கம்மென்றன்றே ; வானமும்
வரைகிழிப்பன்ன மைஇருள் பரப்பி,
பல் குரல் எழிலி பாடு ஓவாதே
மஞ்சு தவழ் இறும்பில் களிறு வலம் படுத்த
வெஞ்சின உழுவைப்பேழ் வாய் ஏற்றை
அஞ்சுதக உரறும்.....................'

(நற். 154;1-6)

என்ற பாடலடிகள் புலப்படுத்தும். வரைவு கடாவுதல் துறை குறிஞ்சித்திணைக்கு உரியது. பாடலில் தலைவன் இரவுக்குறியை நாடுவதால், புணர்தல் நிமித்தம குறிப்பால் வெளிப்படுத்தப்படுகிறது. வருகின்ற வழி மழையும் இருளம் பொருந்தியது. புலி அச்சமும் கொண்டது. எனவே இதனைத் தவிர்த்துத் தலைவன் வாராது இருத்தல்

நல்லது. அதற்கு வரைவு வேண்டுதலே முறையாம் எனத் தோழி குறிப்பால் வரைவு வேண்டுகிறாள்.

## நெய்தற் சாய்த்துய்த்த ஆவூர்கிழார்

இவர் அகநானூற்றில் குறிஞ்சித்திணைப் பாடலொன்றை **(112)** பாடியுள்ளார். இப்பாடல் இரவுக்குறி வந்த தலைமகனை எதிர்பட்டு நின்று, தோழி வரைவு வேண்டுவதாக அமைந்துள்ளது. இன்னல் நிறைந்த இரவு நேரத்தில் இரவுக்குறியில் தலைவன் தலைவியை நாள்தோறும் கண்டு மகிழ்ந்து மீண்டான். அவன் வரவுக்கு அஞ்சியும் தலைவன் ஒரு நாள் வாராது போனாலும் நம் தலைவி உயிர் வாழாள் என அவள் பிரிவற்றாமைக்கு அஞ்சியும் தோழி, ஒரு நாள் இரவுக்குறி வந்த தலைவனைத் தனியாக எதிர்பட்டு நின்று தலைவியை மணந்து செல்லுமாறு வேண்டுகிறாள்.

விண்ணைத் தீண்டும் மலைநாட்டுத் தலைவனே! கூனல் முதுகினையும் குறுகக் குறுக அடியிட்டு நடந்து செல்லும் நடையினையும் உடைய கரடிக் கூட்டம், நடுநாள் இரவில் கறையான் எடுத்த சிவந்த நிலைப்புத்தன்மை வாய்ந்த புற்றினது மண்ணாற் கட்டிய நீண்ட உச்சியை உடைத்துப் பெயர்த்துப் புற்றாம் பழஞ்சோறாகிய இரையினைத் தின்று மேலும் தின்ன விரும்பித் திரிந்து கொண்டிருக்கும். குட்டியை ஈன்ற அணிமையை உடைமையால், வாயா வருத்தத்துடன் இருக்கின்ற பெண்புலி பசித்ததென்று வலிமை வாய்ந்த ஆண்புலி ஒளிரும் மேலுயர்ந்த கொம்பினையுடைய ஆண்யானையைக் கொன்று முழக்கமிடும். இத்தகைய குளிர்ச்சி பொருந்திய இருள் செறிந்த சோலையின் கண்ணே யாம் தனிமையில் உள்ளோம் என்று நினையாது ஈங்கு வந்து எமக்கு தீங்கினையே செய்வாய். ஒருநாள் நீ வாராது இடைப்பட்டாலும் என்

தோழியும் உயிர்வாழாள். நீயும் அவள் தோளினைத் தழுவுதலை விரும்புகின்றாய் மிக்க காதலை உடையாராயினும் சான்றோர் பழியோடு படரா இன்பத்தை நாளும் விரும்புவர். உனக்கும் எம் தலைவியை முறையாக மணந்து கொள்வதில் உள்ள துன்பந்தான் யாதோ? என்று கூறி வரைவு கடாவுகிறாள். இதனை,

'தீங்கு செய்தனையே ஈங்கு வந்தாயே
நாள் இடைப்படின் என் தோழி வாழாள்
தோளிடை முயக்கம் நீயுமி வெய்யை
கழியக் காதல் இன்பம் வெஃகார்
வரையின் எவனே? வான் தோய் வெற்ப'

(அகம்.112;8-12)

என்ற பாடலடிகள் விளக்குகின்றன. குறிஞ்சி நிலத் தலைவனை, வான் தோய் வெற்ப! என்று குறிப்பதாலும் பாடலின் திணை குறிஞ்சியாயிற்று. பாடலின் கைகோள் களவு.

## வெள்ளைக்குடி நாகனார்

இவர் நற்றிணையில் இரண்டு பாடல்களை (158, 196) மட்டும் பாடியுள்ளார். இரவுக் குறியிடத்து வந்து தலைவன் சிறைப்புறத் தானாக அவனுக்கு விளங்குமாறு, தானும் தலைவியும் படும் துன்பத்தை விளக்கி, தலைவன் விரைந்து வரைவு கொள்ள வேண்டும் என்பதை வலியுறுத்த, மனநாடன் வரும் வழியை யான் காணவிடினும் அஃது என்னையும் என் கன்னையும் மறைந்து வந்து துன்பம் செய்தது' எனத் தலைவியிடம் கூறுகிறாள். பெரிய மலையின்கண் உள்ள குகையில் பதுங்கியிருந்த கரிய

புலி, யானை வருந்தும்படி தாக்கி அதன் குருதியை வேங்கை மரத்தின் அடியில் துடைக்கும் இயல்புடைய வழியில் தலைவன் தலைவியை காண வருகிறான். எனவே தலைவன் வரைவு கடாவுதல் வேண்டும் என புணர்தல் நிமித்தத்தைக் குறிப்பாகத் தோழி வலியுறுத்துகிறாள். எனவே இப்பாடலின் திணை குறிஞ்சியாயிற்று. குறிஞ்சி நிலத்தலைவனை, 'ஓங்கு மலை நாடன் வரூஉம் ஆறே' (நற்.158;9) என்ற பாடலடி மெய்ப்பிக்கும். வேழம் வருந்துமாறு பொழுது அதனைக் கொன்ற புலி எனக் கூறுவே தினவு மிக்க புலி உலவுங்கானத்து இரவில் வருதலா் பொருந்தாது எனத்தோழி குறிப்பாக வரைவினை உணா்த்தினாள். பாடலில் அம்மவாழி தோழி! என்ற விளி இடம்பெறுவதால் கேட்போள் தலைவி என்றும், கூறுபவள் தோழி எனவும் அறிய முடிகிறது.

பாடலில் புலி யானையின் குருதி பருகி, வேங்கை மரத்தில் துடைக்கும் என்றது ஊராரின் அலா் தலைவியை வருந்தித் தாய் கேட்கவும் என்பதை உள்ளுறையாகப் புலவா் குறிப்பிடுகிறாா்.

தலைமகன் அறத்தொடு நின்ற பின்னரும் வரைந்து கொள்ளாமல் பொருள் ஈட்டுவதற்காகப் பிரிந்து சென்றான். அதனை ஆற்றாளாகிய தலைவி, திங்கள் மேலிட்டுத் தன்னுள்ளே சொல்லியவாறு நெய்தல் திணையில் (196) பாடலொன்றைப் பாடியுள்ளாா்.

## எல்லாம் உணா்ந்தவன்

திங்களே! நீ சான்றாண்மையும், செம்மை குணங்களும் உடையையாகலானும் உனக்குத் தெரியாது உறையும் உலகம் ஒன்றுமில்லையாகலானும், எனக்குத் தெரியாதவாறு மறைந்து ஒழுகும் என்னுடைய காதலா் இருக்கும் இடத்தை எனக்கு நீ காட்டுவாயாக!

இவ்வாறு கேட்டும் நீ ஒன்றும் கூறாயாகலின், திங்களே! நீ அறிந்த அளவில் சாட்சி கூறாது பொய்யை மேற்கொண்டனை! இச்செயல் புரிந்தமையான். நல்ல அழகிழந்த என் தோள் போல நீயும் வாட்டமுற்று நாள்தோறும் குறுகி மறைந்து விடுவாய்! அங்ஙனமாயின் உன்னால் காட்டவும் இயலுமோ? இயலாதன்றோ? என்று தலைவி வினவுகிறாா். பாடலில் தலைவி தலைவனைப் பிரிந்து இரங்கிய நிலையை. நற்கவின் இழந்த என்தோள் (நற்.196;7) என்ற பாடலடி மெய்ப்பிக்கும். மதி வளா்ந்து பின் தேடியும் இயல்பாக நிகழ்வைத் தன் நலத்துடன் ஒப்பிட்டுத் தலைவி கூறுகிறாள். பொழுது சாயுங்காலம் நெய்தல் திணைக்குப் பொருத்தமான சிறுபொழுது. பாடலில் நெய்தல் திணைக்குரிய நிலவு உலாவரும் கலம் குறிப்பிடப்படுகிறது. இதனை,

'பளிங்கு செறிந்தன்ன பல்கதிா் இடைஇடை
பால்முகந்தன்ன பசுவெண் நிலவின்'

(நற். 196;1-2)

என்ற பாடலடிகள் மெய்ப்பிக்கும்.

## மாவளத்தான்

இவா் குறுந்தொகையில் பாலைத் திணைப் பாடலொன்றைப் (348) பாடியுள்ளாா். இப்பாடல் செலவு குறிப்பு அறிந்து வேறுபட்ட கிழத்தியைத் தோழி வற்புறீஇயதாக அமைந்துள்ளது. மாட்சியமைப்பட்ட அணிகலன்களை அணிந்த தலைவியே! நம் தலைவா் நம்மைத் தனியே விடுத்துத் தாம் மட்டும் பிரிந்து செல்லத் துணிவாராயின், காட்டின் கண் மேற்ப்புலத்தை நாடிச் செல்லும் யானையினுடைய கொம்பின் கண் தங்கிய சிறிய மலா்களையுடைய முல்லைக் கொம்பினைப் போல், இமைகளை

கடந்து ஊறுகின்ற கண்ணீர்த்துளிகள், எழுச்சியையுடைய அணிகலன் அணியப்பெற்ற அழகிய முலைகளை நனைத்தலையும் காணாரோ ? என்று தோழி வற்புறுத்துகிறாள்.

## பிரிவின் இயல்பு

பாடலில் பிரிதலும் பிரிதல் நிமித்தமும் உணர்த்தப்பெறுவதால் திணை பாலையாயிற்று, யானையின் கோட்டிடைக் கொண்ட கவளமாகிய முல்லைக்கொடி, அதன் வாயில் தப்பாமல் புகுதல் போல, தலைவன் பிரிவினால் தலைவியின் உயிர் நீங்குதலும் தப்பாது எனக் குறிப்பாக உணர்த்தப்படுகிறது தலைவியின் கண்ணீர் மார்பகத்தை நனைத்தல் கண்டு செலவழுங்குவராயினும், இடைச்சுரத்து அவர் காணும் யானையின் கொம்புகளில் முல்லை உதிர்ந்து கிடக்கும் காட்சி, தலைவியின் நினைவினை உண்டாக்குமாதலால், அவர் பிரிந்தாலும் விரைந்து வருவர் எனத் தோழி குறித்தனள். தலைவன் உடனுறையும்போது ஆற்றாமையால் பிரிவெண்ணிக் கண்ணீர் சிந்தும் தலைவி பிரிந்தால் யாதாகுவாளோ ? ஏன அஞ்சிச் செலவு தவிர்வான் எனத் தோழி கூறி ஆற்றுவித்தனள்.

## ஆய்வு முடிவுகள்

1. சோழநாட்டுப் புலவர்கள் ஐம்பது பேரில், அகப்பாடல்களைப் பாடியவர்களின் எண்ணிக்கை அதிகமாக (38) காணப்படுகிறது.
2. சோழநாட்டுப் புலவர்களின் அகப்பாடல்கள் பத்துப்பாட்டிலும், எட்டுத்தொகை நூல்களிலும் இடம்பெற்றுள்ளன. பத்துப்பாட்டில் முல்லைப்பாட்டும், எட்டுத்தொகையில் நற்றிணை, குறுந்தொகை, கலித்தொகை, அகநானூறு ஆகியவற்றிலும் அமைந்துள்ளன.
3. இவர்கள் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்ற ஐந்து திணைகளையும் பாடியுள்ளனர்.
4. இடைக்காடனார் முல்லைத்திணை பாடுவதிலும், ஆலங்குடி வங்கனார் மருதத்திணை பாடுவதிலும் வல்லமை பெற்றிருந்தனர். குடவாயிற் கீர்த்தனார் ஐந்திணைகளிலும் பாடல்களை இயற்றியுள்ளார்.
5. களவு, கற்பு என்னும் இரண்டு கைகோளையும் பாடியிருப்பினும் களவு பற்றிய பாடல்களே மிகுதியாக இடம்பெற்றுள்ளன.
6. சோழநாட்டுப் புலவர்கள் பாடிய அகப்பாடல்கள் முதல், கரு, உரிப்பொருட்களின் மயக்கத்தை அனுமதிக்கிறது.
7. சோழநாட்டுப் புலவர்களில், உறையூர் முதுகூத்தனார், காரிக்கண்ணனார். குடவாயிற் கீரத்தனார், தாயங்கண்ணனார் ஆகியோர் தம் அகப்பாடல்களில் புறச்செய்திகளைக் குறித்துப் பாடியுள்ளனர்.
8. சோழநாட்டு அரசப் புலவர்களில் கோப்பெருஞ்சோழனும், மாவளத்தனும் அகப்பாடல்கள் பாடியிருப்பது குறிப்பிடத்தக்கது.
9. செம்பியனார் பாடிய அகப்பாடல் (நற்.102) தூது என்னும் இலக்கியவகை தோன்றுவதற்கு அடிப்படையாக அமைந்துள்ளது.

10. தலைவன், தலைவி, தோழி, பரத்தை, கண்டோர், நற்றாய், செவிலித்தாய் ஆகியோர் கூற்று நிகழ்த்துபவர்களாகவும், தலைவி தோழி, தலைவன், தேர்ப்பாகன், தலைவி பாங்காயினோர், பாங்கன், நெஞ்சு, கனவு, கிளி, திங்கள் ஆகியோர் கேட்பவர்களாகவும் இடம்பெறுகின்றனர்.
11. பாலைத் திணைக்குரிய உடன்போக்கையும், பிரிவையும் சோழநாட்டுப் புலவர்கள் பாடியிருக்கின்றனர். இரண்டு வகையாகப் பிரிவை இவர்கள் பாடிப்போந்தனர்.
12. இவர்களது அகப்பாடல்களில் நிமித்தம் பார்த்தல், சிலம்புகழி நோன்பு, வதுவைச் சடங்கு, கனவு பற்றிய நம்பிக்கை முதலிய நிகழ்வுகள் இடம்பெறுகின்றன.

# சான்றெண் விளக்கம்

1. வி. நாகராசன் (உ.ஆ), குறுந்தொகை மூலமும் உரையும், ப. 446.
2. ........................, தொல்காப்பியம் - பொருளதிகாரம் (களவியல், கற்பியல், பொருளியல்) இளம்பூரணர் உரை, ப. 147.
3. எம்.ஏ. சுசிலா, பெண் இலக்கியம் வாசிப்பு, பக். 68, 69.
4. ........................, தொல்காப்பியம், பொருளதிகாரம் (களவியல், கற்பியல், பொருளியல்) இளம்பூரணர் உரை, ப. 206.
5. ........................, தொல்காப்பியம் - பொருளதிகாரம் (களவயில், கற்பியல், பொருளியல்) நச்சினாாக்கினியா் உரை, ப. 129.
6. பின்னத்துார் நாராயணசாமி ஐயர் (உ.ஆ), நற்றிணை நானூறு மூலமும் உரையும், ப. 413.
7. ஔவை சு.துரைச்சாமிப்பிள்ளை (உ.ஆ), நற்றிணை மூலமும் விளக்க உரையும் தொகுதி – 2, ப. 1402.
8. மேலது.
9. ......................., தொல்காப்பியம் - பொருளதிகாரம், (அகத்திணையியல் புறத்திணையியல்) நச்சினைார்க்கினியர் உரை, ப. 43.
10. மேலது, ப. 40.
11. உ. வே. சாமிநாதையர் (ப.ஆ), குறுந்தொகை மூலமும் உரையும், ப. 638; சௌரிப் பெருமாளரங்கன் (உ.ஆ), குறுந்தொகை, ப. 279.
12. கு. சுந்தரமூர்த்தி (ப.ஆ), தொல்காப்பியம் - பொருளதிகாரம் (களவியல், கற்பியல், பொருளியல்) நச்சினார்க்கினியர் உரை, தொகுதி– 2, ப. 169.
13. சௌரிப் பெருமாளரங்கன் (உ.ஆ), குறுந்தொகை, ப. 279.

14. உ. வே. சாமிநாதையர் (ப.ஆ), குறுந்தொகை, ப. 691;

எஸ். வையாபுரிப்பிள்ளை, சங்க இலக்கியம், இரண்டாம் பகுதி, ப. 1270.

15. ........................., தொல்காப்பியம் - பொருளதிகாரம் (அகத்திணையியல், புறத்திணையியல்) நச்சினார்க்கினியர் உரை, ப. 82.

16. மு. சண்முகம்பிள்ளை (ப.ஆ), தொல்காப்பியம் - பொருளதிகாரம் (களவியல், கற்பியல், பொருளியல்) இளம்பூரணர் உரை, ப. 42.

17. எச். வெங்கட்ராமன் (ப.ஆ), நற்றிணை மூலமும் உரையும், ப. 53.

ஔவை, சு. துரைசாமிப்பிள்ளை (உ.ஆ), நற்றிணை மூலமும் விளக்க உரையும், ப. 36.

18. பின்னத்தூர் நாராயணசாமி ஐயர் (உ.ஆ), நற்றிணை நானூறு மூலமும் உரையும், ப. 68.

19. கு. சுந்தரமூர்த்தி (ப.ஆ), தொல்காப்பியம் - பொருளதிகாரம் (களவியல், கற்பியல், பொருளியல்) நச்சினார்க்கினியர் உரை, தொகுதி–2, ப. 179.

20. தொல். 935.

21. உ.வே. சாமிநாதையர் (ப.ஆ), குறுந்தொகை மூலமும் உரையும், ப. 81.

22. சிலப்பதிகாரம், 13; 155.

23. பின்னத்தூர் நாராயணசாமி ஐயர் (உ.ஆ), நற்றிணை நானூறு மூலமும் உரையும், ப. 348.

24. மறைமலை அடிகள், முல்லைப்பாட்டு ஆராய்ச்சி உரை, ப. 33.

25. ப. மருதநாயகம், மேலை நோக்கில் தமிழ்க்கவிதை ப. 63.

26. மேலது. ப. 64.

27. பின்னத்தூர் நாராயணசாமி ஐயர் (உ.ஆ), நற்றிணை நானூறு

மூலமும் உரையும், ப. 36.

28. மேலது ப. 177.

29. இரா.செயபால் (உ.ஆ), அகநானூறு மூலமும் உரையும், முதற்தொகுதி, ப. 456.

30. இரா. செயபால (உ.ஆ), அகநானூறு மூலமும் உரையும், முதற்தொகுதி ப. 260.

31. மேலது. ப. 261.

# இயல் - 4

# புறப்பாடல்திறன்

அகப்பொருளுக்குக் கூற்று அமையுமாறு புறப்பொருளுக்கு அமைவது துறை. இது புறப்பொருளுக்கு மட்டுமே வழங்கும் கலைச்சொல். புறப்பாடல்களில் திணையையும் துறையையும் தெளிவாகக் குறித்திருக்கின்றனர் முன்னையோர். புறப்பொருளில் திணையும் துறையும் வகுத்து வரைந்துள்ளனர். ஆனால் இந்தத் திணை துறை அடிப்படை தொல்காப்பியத்தைப் பின்பற்றி அமைக்கப்படவில்லை. அவை வேறோர் புறப்பொருள் இலக்கண நூலால் வகுக்கப்பட்டிருக்கின்றன. சோழநாட்டுப் புலவர்கள் பாடிய புறப்பாடல்களுக்குரிய திணை, துறைகளின் பொருத்தம் இங்கு ஆராயப்படுகிறது.

## அரிசில்கிழார்

அரிசில்கிழார் புறநானூற்றில் ஏழு பாடல்களைப் பாடியுள்ளார். இவர் தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறையிடம் மதிப்புக்கொண்டு பதிற்றுப்பத்தில் எட்டாம்பத்தினையும் பாடியுள்ளார். இவர் வையாவிக் கோப்பெரும் பேகனைச் சிறப்பித்து ஆறு பாடல்களையும், எழினியை ஒரு பாடலிலும் புகழ்ந்து பாடுகிறார்.

சேரமன்னர் பற்றிய பாடல்களின் தொகுதி பதிற்றுப்பத்தாகும். பத்துப் பத்து அகவற்பாக்களால் அமைந்த பத்துப்பகுதிகளைக் கொண்ட நூல் ஆதலின் பதிற்றுப்பத்து எனப் பெயர் பெற்றது. ஒவ்வொரு சேர மன்னரைக் குறித்துப் பாடப்பெற்றமையால் இந்நூல் பத்துப் பகுதிகளாகக்

கொள்ளத்தக்கது. இதிலுள்ள பத்துப்பத்துக்களும் முதற்பத்து, இரண்டாம் பத்து, என்று எண்ணால் பெயர் பெற்றுள்ளன. இதனைத் தொகுத்தோர், தொகுபித்தோர் பற்றிய குறிப்பு இல்லை. “நூலின் முதற்பத்து, பத்தாம் பத்தும் கிடைக்கவில்லை. அவை கறையானுக்கு இரையாகி விட்டன. பொதுவாகக் கறையான மேலிருந்து கிழ்நோக்கியும், கீழிருந்து மேல் நோக்கியும் அரித்துவரும். அதன் மேலிருந்த முதல் பத்தையும், இறுதியிலிருந்த பத்தாம் பத்தையும் தின்றுவிட்ட கறையான்களும் தமிழ்ச் சுவை அறிந்தன போலும்”(1) என்பார் தமிழண்ணல்.

பதிற்றுப்பத்து, புறநானூறு போல மூவேந்தர்களையும் குறுநில மன்னர்களையும் பொதுவாகப் பாடாமல் சேரமன்னர்களைப் பற்றியே புகழ்ந்து பாடிய தொகை நூலாக விளங்குகிறது. மன்னர்களைத் தனித்தனிப் பாடலாகப் பாடி மகிழ்விக்காமல், பத்துப்பத்தாகப்படும் மரபு தோன்றிய போதே இலக்கிய வகையாக்கம் கிளைக்கத் தொடங்கியதை பதிற்றுப்பத்தின் வழி அறியமுடிகிறது. பதிற்றுப்பத்தின் ஒவ்வொரு பத்தின் இறுதியிலும் அப்பத்தைப் பாடினோர், அப்பத்தின் பாட்டுடைத்தலைவன், அவன் செய்த அரிய செயல்கள், புலவருக்கு அவன் அளித்த பரிசில் முதலிய செய்திகளைக் குறிப்பிடும் பதிகம் இடம் பெற்றுள்ளது. இப்பதிகங்கள் ஆசிரியப்பாவில் தொடங்கி, கட்டுரையாக முடிவு பெறுகின்றன. இவை சாசனங்களில் காணப்பெறும் மெய்க்கீர்த்திகளைப் போன்ற அமைப்பை உடையன. இதற்குப் பழைய உரை ஒன்று உள்ளது. உரையாசிரியர் எழுதியுள்ள தொடர்களையே சுருக்கி, ஒவ்வொருபாட்டின் தொடக்கத்திலும் தலைப்பு இடம்பெற்றுள்ளது. இவை பாடலின் உட்பொருளை அறிய துணை செய்கின்றன. ஒவ்வொரு பாட்டுக்கும் வண்ணம், தூக்கு ஆகியவை குறிப்பிடப்பட்டுள்ளமையால், பதிற்றுப்பத்து இசையோடு பாடப்பெற்ற நூல் என்பதை அறியமுடிகிறது.

அரிசில்கிழார் தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறையை பதிற்றுப்பத்தின் எட்டாவது பத்தில் சிறப்பிக்கிறார். கொங்கு நாட்டின் ஒரு பகுதியாக விளங்கியது அதியமான் எழினியின் நாடாகும். “தற்காலம் தருமபுரி என வழங்கப்படும் நகரமே அந்த நாளில் தகடூர் என வழங்கப்பட்டது”[(2)] என்பர் அறிஞர் சி. பாலசுப்பிரமணியன். பெருஞ்சேரல் இரும்பொறை பொறையர் மரபினன். செல்வக்கடுங்கோ வாழியாதனின் மைந்தனாவான். இவன் தகடூரைக் கைப்பற்றி அதியமானை வென்ற செய்தியினை,

‘வெல்போர் ஆடவர் மறம்புரிந்து காக்கும்
வில்பயில் இறும்பிற் றகடூர் நூறி’

(எட்டாம்பத்து. 8:8-9)

என்ற பகுதி உணர்த்துகின்றது. இப்போரில் எழினி இறந்தான். தகடூர்க் கோட்டைத் தீக்கரையாயிற்று. தகடூர் வெற்றி பெருஞ்சேரல் இரும்பொறைக்குத் ‘தகடூர் எறிந்த’ என்ற அடைமொழியினைப் பெயர்க்கு முன் தருவதாயிற்று.

இவன் பல யாகங்களைச் செய்தான் என்றும் தன்னுடைய புரோகிதனாகிய நரைமூதாளனைத் துறவு மேற்கொள்ளும்படி செய்தான். இதனை,

‘முழுதுணர்ந் தொழுக்கும் நரைமூதாளனை
வண்மையும் மாண்பும், வளனும் எச்சமும்
தெய்வமும் யாவதும் தவமுடை யோர்க்கென
வேறுபடு நனந்தலைப் பெயரக்
கூறினை பெருமநின் படிமையோனே’

(எட்டாம்பத்து : 4 : 24-28)

என்றடிகள் உணர்த்தும். தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை பதினேழு ஆண்டுகள் ஆட்சிபுரிந்தான் என்பதை எட்டாம்பத்தின் வழி அறிய முடிகிறது.

தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறையின் கொடைச்சிறப்பை,

'இரந்தோர் வாழநல்கி இரப்போர்க்கு
ஈதல்தாண்டா மாசிதறு இருக்கை
கண்டனென் செல்வ வந்தெனன்
(எட்டாம்பத்து; 6 : 7-9)

என்றும், வரையாது வாரி வழங்கும் இவன் கைவண்மையினை 'கொடை போற்றலையே இரவலன் நடுவண் (8;9;2) என்று குறிப்பிடுவதன் மூலமும், பதிகம் அரும்பெறல் மரபின் அரசக்கட்டிலையே அரிசில்கிழார்க்கு உவந்தளித்த நெஞ்சினன் இவன் என்று கூறவதனையும் உற்று நோக்கின் பெருஞ்சேரல் இரும்பொறையின் கொடைப் பெருமிதம் குன்றிலிட்ட விளக்கெனத் தெரியும். அரிசில்கிழார் தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறையைப் பாடி ஒன்பது நூறாயிரம் பொற்காசுகளைப் பரிசாகப் பெற்றுள்ளார்.

## வேண்டும் பரிசில்

வையாவிக் கோப்பெரும் பேகன் தன் மனைவி கண்ணகியைப் புறத்து ஒழுகியதை அறிந்த அரிசில் கிழார், அவனைக் காணச் சென்றார். அவனும் இவர்க்குப் பெரும் பரிசில் நல்கினான். அதற்கு அரிசில்கிழார், என்னை நயந்து பரிசில் வழங்குதாயின், யான் வேண்டும் பரிசில் இதுவன்று; நீ அருளாமையால் வருந்தும் அரிவை, உன் பிரிவினால் தன்

கூந்தலை முடித்துப் பூச்சூடுமாறு உன் தேரும் குதிரையும் பூட்டி அவள் மனைக்குச் செல்லுதல் வேண்டும். இதுவே யான் வேண்டும் பரிசில் என்ற கருத்தமைந்த பாடலொன்றைப் (146) பாடுகிறார். இதனை,

'பரிசில் நல்குவை ஆயின், குரிசில் நீ
நல்கா மையின் நைவரச்சால்'
அருந்துயர் உழக்கும் நின்திருந்து இழை அரிவை
................................................
................................................
தண்கமழ் கோதை புனைய
வண்பரி நெடுந்தோர் பூண்க நின் மாவே!

(புறம். 146 ; 5-11)

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. இப்பாடல் பெருந்திணையில் குறுங்கலித் துறையாகும். தொல்காப்பியர் பெருந்திணையைப் புறத்திணையியலில் குறிப்பிடவில்லை. ஐயனாரிதனார் பெருந்திணையைத் தனியாக விளக்கி, அவற்றின் துறைகளுள் ஒன்றாகக் குறுங்கலியையும் குறிப்பிடுகிறார். இதனை,

'நாறிரும் கூந்தல் மகளிரை நயப்ப
வேறுபடு வேட்கை வீயக் கூறின்று'

(புறப். வெ. மா.12:37)

என்று விளக்குவர். இதற்குப் பொ.வே.சோமசுந்தரனார் "தலைவன் தலைவியைக் கைவிட்டு நறுநாற்றங்கமழும் பெரிய கூந்தலையுடைய பிற மகளிரை நயக்கும்படி அவன் நெஞ்சத்தே மாறுபட்டு எழுந்த காமம்

கெடும்படி சொல்லியது"[3] என்று குறுங்கலிக்கு விளக்கம் தருகிறார். பெருந்திணை என்பது அகப்பொருள் சார்ந்தது. பொருந்தாத காமத்தைக் குறிப்பது. இப்புறப்பாட்டு கண்ணகிக்கும் அவள் கணவன் பேகனுக்கும் இடையே வந்த காதல் பூசலை குறிக்கிறது. ஈண்டு தலைவன் தலைவியா் பெயரை வெளிப்படையாகக் கூறியதால் புறத்திணையின் கண் அமைந்த பெருந்திணை ஆயிற்று. கண்ணகியை விடுத்து வேறு பெண்ணை விரும்பிய பேகனை அவன் மனைவியிடத்துச் சேர வேண்டிப் பாடுவதால் குறுங்கலித் துறையாயிற்று. பெருந்திணை பாடிய ஓரே சோழ நாட்டுப்புலவா் இவரே.

வேந்தன் பொருட்டுப் பங்கேற்ற வீரன் ஒருவன் விழுப்புண் பட்டு, இருந்தான். அவனை ஒரு மறக்குடி மங்கை தன் அகதின்னுள்ளே வைத்து அவன் புண்ணை ஆற்றிவந்தாள். இதனைக் கண்ட அரிசில்கிழாா் மறக்குடி மகளிரின் மாண்பை எடுத்துக் காட்டும்படி ஒரு புறப்பாடலை (281) பாடியுள்ளாா்.

## மறக்குடி மகளிா்

கனிகளைத் தரும் இரவ இலையையும், வேப்பிலையையும் மனையில் சொருகுவோம். யாழிசையோடு வாத்தியங்களும் முழங்க, கையை மென்மையாக வைத்துக் கண்ணுக்கு மை தீட்டுவோம். ஆம்பலை ஊதி, வெண்கடுகைச் சிதறும்படி தூவி மணியோசை விளங்கக் காஞ்சிப் பண்பாடி வீடுமுழுமையும் அகிற்புகை சோ்ப்போம். இந்நாட்டு வேந்தன் துயரைத் தீா்த்த தலைவனிவன். இவன் போாில் விழுப்புண் பெற்று உள்ளான். அன்புடைய தோழியே இத்தலைவன் காலன்

கையிற்படாதவாறு மருந்திட்டுக் காப்போம்! என்று மறக்குடி மகளிர் ஒருத்தியின் கூற்றில் வைத்துப் பாடலை இயற்றுகிறார் அரிசில்கிழார்.

இப்பாடல் காஞ்சித் திணையில் தொடாக் காஞ்சித் துறையில் அமைந்துள்ளது. தொல்காப்பியர் தொடாக் காஞ்சியை,

'இன்னகை மனைவிபோய் புண்ணோன்
துன்னுதல் கடிந்த தெடாஅக் காஞ்சியும்'

(தொல். 1025 : 10-11)

என்று குறிப்பிடுவர். அன்புடை மனைவி புண்பட்டோனைப் பேய் நெருங்கவிடாமல் காக்கும் தொடாக்காஞ்சி"[4] என்று விளக்கம் தருவர் ச.வே. சுப்பிரமணியன். ஆனால் வ.த. இராமசுப்பிரமணியம் இப்பாடலுக்கு பேய்க் காஞ்சியைத் துறையாகக் குறிப்பிடுகிறார்.[5].

பாடலில் தலைவனின் மனைவி அவன் புண்னை ஆற்றினாள் என்ற குறிப்புப் பாடலில் இடம்பெறவில்லை. எனினும் ஒரு மறக்குடி மங்கை காலன் நெருங்காதவாறு அவனைக் காத்ததால் துறை தொடாக் காஞ்சியாயிற்று.

தும்பைத் திணை பாடிய சோழநாட்டுப்புலவர்களில் அரிசில்கிழாரும் ஒருவர். மற்றொருவர் ஆவூர் மூலங்கிழார். இப்பாடலில் (300) இடம்பெறும் தலைவனது பெயர் பற்றிய குறிப்பு இல்லை.

வீரனே! நின்னைக் காத்துக் கொள்வதற்குக் கேடயத்தை கொண்டுவருமாறு கூறுகின்றாய். கேடயத்தோடு சிறு கல்லின் பின்னே நீ

மறைந்திருந்தாலும் உயிர் பிழைப்பாயோ? நேற்று நீ போரில் வீழ்த்திய மறவனின் தம்பி அகலின் கண் இட்ட குன்றி மணி போன்று கண்களைச் சுழற்றிக் கொண்டு உன்னைத் தேடிக் கொண்டிருக்கின்றான என்று தும்பைப் பூச்சூடி வீழ்ந்துபட்ட மறவன் தம்பியின் வீரத்தைப் புகழ்ந்து பாடுகிறார். அரிசில்கிழார்.

பாடலில் இடம்பெறும் வீரன் எதிர்த்துப் போர் கொள்ளாது தன்னைக் காத்துக் கொள்ள கேடயத்தைக் கேட்பதால் அவன் நேரிடையாகப் போரிடத் தயாராக இல்லை என்று குறிப்பால் ‘தானைமறம்’ என்ற துறையில் அடக்குவர். எனினும் தானைமறத்திற்குரிய இலக்கணப் பொருளமைதி இப்பாடலுக்கு இல்லை என்பது உண்மை. எனவே இப்பாடலுக்குத் துறை பொருந்தவில்லை.

## மாவீரன்

வேந்தர் இருவர் தும்பைப் பூ சூடிப் போர் செய்தனர். போர் நடைபெறும்போது போர்க்களம் சென்று போர் செய்ய வேண்டிய முறைவரப் பெற்ற தானைத் தலைவன் ஒருவன் அங்குள்ள குதிரைகளுள் விரைந்து செல்லும் வன்மையுடைய குதிரையைத் தேர்ந்து செல்ல அதனை ஆராய்ந்து கொண்டிருந்தான். இதைப் பகைவருடைய ஒற்றன் ஒருவன் அறிந்து சென்று பாசறையில் தங்கியுள்ள தலைவனிடம் சென்று “என் தம்பியை எறிந்தவன் எவனோ? அவனையும் அவன் தம்பியையும் நாளைக் கொல்வது உறுதி என்று உணவு கூட உண்ணாமல் திறனுடைய குதிரைகளை ஆராய்ந்து கொண்டிருக்கிறான் எனத் தெரிவித்தான். இதனைக் கேட்ட பாசறையில் உள்ளோர் அவன் சொல் மாறாது என்று

உறுதிகொண்டவராய் நடுங்கி நின்றனர். இப்பாடலில் குதிரையின் திறனை ஆராயும் தலைவனை,

'வளிதொழில் ஒழிக்கும் வண்பரிப்புரவி
பண்ணற்கு விரைதி நீயே!'

(புறம் . 304:3-4)

என்று சிறப்பித்துப் பாடுவதால் துறை குதிரை மறமாயிற்று.

மகட்பாற்காஞ்சித் துறையில் ஒரு புறப்பாடலை (342) அரிசில்கிழார் இயற்றியுள்ளார். நெடிய வேலை ஏந்திய பெருந்தகையே! அண்டங்காக்கைச் சிறகுகள் போன்று கருமையும், மயில் போன்ற சாயலும் பெரிய தோள்களும் உடைய இவ்விளம்பெண் யாவள் என வினவினை. திருமகளும் விரும்பத்தக்க இனிய பண்புடைய இவள் நலன், படை வீரர்களுக்கு அல்லாது பிறர்க்குக் கிடைப்பது அரிது. இவள் தமையன்மார் மகட்கொடைக்கு இணங்க மாட்டார்கள். இவர்கள் நாள்தோறும் வாள் உழவு செய்யும் மாண்பினர். எனவே இந்நங்கையை நாடி நிற்றல் தக்கதன்று என்ற குறிப்பில் இப்பாடல் அமைந்துள்ளது. பாட்டுடைத் தலைவனின் மகளை,

'திருநயத் தக்க பண்டின் இவள் நலனே
பொருநர்க்கு அல்லது பிறர்க்கு ஆகாதே'

(புறம். 242:4-5)

என்று குறிப்பிடுவதால் துறை மகட்பாற் காஞ்சியாயிற்று. தொல்காப்பியர் மகட்பாற் காஞ்சித் துறையை,

'நிகர்த்துமேல் வந்த வேந்தனொடு முதுகுடி

மகட்பாடு அஞ்சிய மகட்பாலானும்'

(தொல். 1025:14-15)

என்று குறிப்பிடுவார்.

தகடூரைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி புரிந்துதவன் அதியமான் எழினி இவன் வாழ்ந்த காலத்தே, சேரமான் பெருஞ்சேரலிரும் பொறையும் சேரநாட்டை ஆண்டுவந்தான். இவர்கள் இருவருக்கும் போர் மூண்டபோது எழினி மாண்டுபோனான். இருவரிடமும் அன்பு கொண்ட அரிசில்கிழார், எழினியின் இறப்பிற்கும் கையுற்று ஒரு புறநானூற்றுப் பாடலைப் (230) பாடியுள்ளார். இவன் மழவர் குடியைச் சார்ந்தவன[(6)] என்பர் அறிஞர் வ.த. இராமசுப்பிரமணியன்.

## அறன் இல் கூற்றுவன்

பொய்மையில்லாத எழினி போர்க்களத்தில் வீழ்ந்தபோது தாயை இழந்த சிறு குழந்தை போல, நாடு முழுவதும் உள்ள அவன் சுற்றம் மிகுந்த துயர் கொண்டு வறிய பசிப்பிணி கலக்கிய நிலையில் வருந்துகிறது. அறன் இல்லாத கூற்றுவனே! நீயே பெரிதும் இழந்தவன் ஆயினை வித்தினை விதைத்து அதனால் ஏற்படும் பயனை நுகராது, அவ்விதையை உணவாக்க கொள்ளும் உழவனைப் போன்று பகைவர் பலரையும் போர்க்களதத்தில் கொன்று குவித்து நின் பசியாற்றும் அத்தலைவன் உயிரைக் கவர்ந்தனையே! அவனைக் கொன்றதால் நீயும் பேதையே! என்று கூற்றுவனை நோக்கிக் கூறுவதாக இக்கையறு நிலைப்பாடல் அமைந்துள்ளது. இதனை,

'பொய்யா எழினி பொருதுகளம் சேர
ஈன்றோர் நீத்த குழவி போலத்
தன் அமர் சுற்றம் தலைத்தலை இனையக்
கடும்பசி கலக்கிய இடும்பை கூர்நெஞ்சமொடு
நோய் உழந்து வைகிய உலகிலும் மிக நனி
நீ இழந்தனையே! அறன் இல் கூற்றம்'

(புறம். 230:6-11)

என்று பாடுவதால் பாடலின் துறை கையறு நிலையாற்று.

## ஆடுதுறை மாசாத்தனார்

ஆடுதுறை மாசாத்தனார் சங்க நூல்களில் பாடிய ஓரே பாட்டு (227) இப்புறநானூற்றுப் பாட்டு. இப்பாட்டில் சோழன் குளமுற்றத்துத்துஞ்சிய கிள்ளி வளவனைச் சிறப்பித்துப் பாடுகிறார். பாடலில் 'பெரும்பூண் வளவன்' என்ற தொடரே சோழன் குளமுற்றத்துத்துஞ்சிய கிள்ளிவளவனைக் குறிக்கிறது. நன்றியில்லாத கூற்றுவனே! பெரும் பயனைத் தரும் விளைச்சலை உண்டாக்கும் விதையைத் தன் முயற்சியால் வித்திட்டு பெருவிளைச்சலைக் காண்பதை விடுத்து, அதனையே உணவாக உட்கொள்ளும் பேதை போன்று ஆயினை. மேலும் கேள். ஒளிவீசும் வாள் வீரரும் யானையும் குதிரையும் கொண்டு இரத்த வெள்ளம் பெருகும் போர்க்களத்தில் பேராற்றலுடன் எதிர்த்து வருபவர்களையெல்லாம் அழித்து வெற்றிக்கொண்டு, நின்பசியைத் தீர்த்தவன் இச்சோழன் வசையில்லாத வலிய கொலைத் தொழிலில் நின்னை நிகர்த்தவன் அவன். வண்டுகள் ரீங்காரம் செய்யும் மாலை

தரித்த அத்தகையவன் உயிரை நீ எடுத்தும் கொண்டனையே! இனி நின் பசியைத் தீர்ப்பவர் யாரோ ? என்று வருந்திப் பாடுகிறார்.

இது பொதுவியல் திணையில் கையறுநிலை துறையாகும். தொல்காப்பியர் கையறுநிலைத் துறையைக் காஞ்சித் திணையில் வகைப்படுத்துகிறார். திணை அடிப்படையில் இப்பாட்டுப் பொதுவியல். துறையோ தொல்காப்பியர் சுட்டாத துறை. தொல்காப்பிய மரபுக்கு மாறாகப் புறநானூற்றில் திணையும் துறையும் வகுக்கப்பட்டுள்ளன என்பதற்கு இப்பாடல் தக்க சான்றாகும். பிற்காலத்தில் எழுந்த புறப்பொருள் வெண்பா மாலையும் தனியாகக் கரந்தைத் திணையை அமைத்து அதன் துறைகளில் ஒன்றாக கையறு நிலைத் துறையைச் சுட்டும்.

தொல்காப்பியர் பொதுவியல் என்னும் திணையைக் குறிப்பிடவில்லை. ஐயனாரிதனார் பொதுவியல் என்னும் புதிய திணையை அமைத்து அதன் துறைகளையும் வகைப்படுத்துகிறார். எல்லாத் திணைக்கும் பொதுவான செய்திகளைக் கூறும் திணை பொதுவியல் ஆகும். பொதுவியல் திணை, பொதுவியற்பால, சிறப்பிற் பொதுவியற்பால, காஞ்சிப் பொதுவியற்பால, முல்லைப் பொதுவியற்பால என நான்கு வகைப்படும். இவற்றில் சிறப்பிற் பொதுவியற்பாலவாகிய பதினோரு துறைகளில் ஒன்றாகக் கையறு நிலைத் துறையைக் குறிப்பிடுகிறார் ஐயனாரிதனார். மன்னன் இறந்தானாக அவனைச் சேர்ந்தோர் கையற்றுக் கூறுவது கையறுநிலை ஆகும். இப்புறப்பாடலில் புலவர் வளவன் இறந்தமையைக் கூறுவதால் இப்பாடலின் துறை கையறு நிலையாயிற்று.

## ஆலங்குடி வங்கனார்

இவர் பாடிய புறநானூற்றுப் பாடலில் (319) தலைவனின் பெயரைச் சுட்டவில்லை. பாடலில் சீறூர் மன்னன்' என்ற குறிப்பு இடம் பெறுவதால் இவன் ஒரு குறுநில மன்னன் எனத் தெரிகிறது. மேலும் அரசன் ஆணைப்படி போர் தொடுத்துச் சென்ற குறிப்பும் இடம்பெறுகிறது. அறிவின் மிக்கப் பாணனே! செம்மண் நிலத்தில் தோண்டிய கிணற்றில் சிறிய அளவில் ஊறிய நீரை முகந்து வைத்த சாடியின் அடியில் நீர் சிறிது உண்டென்று அறிகிறோம். அது குற்றம் அன்று. படல் கட்டிய சிறிய முற்றத்தில் உலர்ந்த தினையைப் புறாக்களும் இதல் பறவைகளும் உண்ணுமாறு எறிந்து, பின் அப்பறவைகளைப் பிடித்துச் சமைப்பதற்கு இரவு ஆகிவிட்டது. முயல் கறியேயாயினும் தருதும். இங்கு இருப்பாயாக! வளைந்த கொம்புகளையுடைய காட்டுப் பசுவின் கன்றைச் சிறுவர்கள் தம்முடைய சிறுதேர்க்குப் பூட்டி விளையாடும் சிறிய ஊரை உடைய தலைவன், நேற்று அரசன் ஆணைப்படி போர்த்தொழில் மேற்கொண்டு சென்றுள்ளான். அவன் போர் முடித்து நாளை வந்து நின் பாடினி மகிழுமாறு பொன்னாலான வாடாத தாமரை மாலையைச் சூட்டுவான். எனவே இன்று இனிது தங்கி இருப்பாயாக! என்று பாடுகிறார் ஆலங்குடி வங்கனார். பாட்டுடைத் தலைவனின் வீரத்தைப் பாடுவது வாகைத்திணையாகும். பாட்டுடைத் தலைவன், வினைமுடித்து வாகைசூடி வருதல் உறுதி என்று கருத்துத் தோன்ற பாடினி மாலையணிய வாடாத் தாமரை சூட்டுவன் நினக்கே' (319:14-15) என்று குறிப்பாக வீரத்தை - வெற்றியை உணர்த்துவதால் பாடலின் திணை வாகையாயிற்று. தலைவனது சிற்றூரின் இயல்பினைச் சிறப்பித்துப் பாடுவதால் துறை வல்லாண் முல்லையாயிற்று.

## ஆவூர்கிழார்

ஆவூர்கிழார் பாடிய புறநானூற்றுப் பாடலிலும் (322) பாட்டுடைத் தலைவன் பற்றிய குறிப்பு இடம்பெறவில்லை. இப்பாடலில் பாட்டுடைத் தலைவனின் வீரத்தை, கரும்பைப் பிழியும் ஆலையின் ஒலிகேட்டு அதன் அயலே உள்ள பெரிய பிடரியையுடைய மீன்கள் பிறழுவது போல குளிர்ந்த மருத நிலத்தின் ஊர்களை ஆளும் வேந்தர்களுக்கும் அச்சத்தால் உறக்கம் வாராது' என்று சிறப்பிக்கிறார். வன்புலத்து ஊரின் தலைவனைக் கண்டு மருதநில வேந்தனும் அச்சம் கொண்டு உறங்கம் கொள்ளமாட்டான் என்றதனால் பாடலின் திணை வாகையாயிற்று.

உழவு செய்யும் எருதின் வலிமையான கொம்புகளைப் போன்று பிளவினையுடைய முள்ளுடைய கள்ளிச்செடியின் பொரித்த அடிப்பாகத்தில் மறைந்து இருந்து விளைச்சல் கொண்ட புதுவரகுக் கதிர்களை அறியும் வயல் எலிகளைப் பிடிப்பதற்காகச் சிறுவர்கள் வில்லை எடுத்து ஒலிசெய்ய அதனைக் கேட்டவேலிப்புறத்தில் இருக்கும் பெரியகண்களை உடைய சிறிய முயல்கள் கருமையான வெளிப்புறம் கொண்ட மண் பானைகளை உடைத்தவாறு மன்றில் பாய்ந்து ஓடும் இயல்புடையது வன்புலத்தலைவனது ஊர் எனச் சிறப்பிப்பதால் துறை வல்லாண் முல்லையாயிற்று. தலைவனின் ஊர் 'கண்படை ஈயா வேலோன் ஊரே' (322:10) என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

## ஆவூர் மூலங்கிழார்

இவர்தம் புறநானூற்றுப் பாடல்களில் சோழன் குளமுற்றத்துஞ்சிய கிள்ளிவளவன், கௌணியன் விண்ணந்தாயன், மல்லிகிழான் காரியாதி, பாண்டியன் கீரஞ்சாத்தன், பாண்டியன் இலவந்திகை பள்ளித்துஞ்சிய நன்மாறன் ஆகியோரைச் சிறப்பிக்கின்றார்.

ஈகை

சோழன் குளமுற்றத்துத்துஞ்சிய கிள்ளிவளவன் சிறப்பினை இயன்மொழித் துறையில் சிறப்பிக்கிறார். வேந்தனே! நீ சினம் கொண்டு நோக்கினால் அங்கே எரியும் நெருப்பு மேலோங்கும். நீ கருணையோடு நோக்கினால் தண்மை நிலவும். எரிகின்ற சூரியனிடத்தில் குளிர்ந்த நிலவையும் குளிர்ந்த சந்திரனிடத்தில் எரியும் நெருப்புக் கனலையும் உண்டாக்கும் ஆற்றல் உடையவன் நீ! வறியவர்கள் செல்வர்களிடம் பரிசை நாடிச் செல்லுதலும் செல்வர்கள் வறியவர்களுக்குக் கொடுத்தலும் தேவருலகத்தில் இல்லை. எனவே பரிசிலர்கள் தேவருலகத்தை விட நின்னுடைய நாட்டையே சிறப்பாகக் கொண்டு போற்றுவார்கள். அவர்கள் மட்டுமல்லாது பகைவர் நாட்டுப் பரிசிலரும் நின்னுடைய நாட்டினையே நினைத்துக் கொண்டிருப்பர் என இப்பாடலில் 'செல்வத்துப் பயனே ஈதல்' என்னும் கருத்து வலியுறுத்தப்படுகிறது. இதனை,

'உடையோர் ஈதலும், இல்லோர் இரத்தலும்
கடவ தன்மையின் கையறவு உடைத்து என
ஆண்டுச் செய்ய நுகர்ச்சி ஈண்டும் கூடலின்
நின்நாடு உள்ளுவர் பரிசிலர்
ஒன்னார் தேஎத்தும் நின்னுடைத்து எனவே!

(புறம் . 38:14-18)

என்ற அடிகள் உணர்த்துகின்றன. பாடலில் பாட்டுடைத் தலைவனின் சிறப்புகளைப் பிறதிணைகளில் அடக்கமுடியாது பொதுவான செய்திகளை, இயன்மொழியாகக் கூறுவதால் திணை பாடாணாயிற்று. துறை இயன்மொழியாயிற்று. தொல்காப்பிய அடிப்படையில் திணையும் துறையும் வகுக்கப்பட்டுள்ளது.

## எளியோன் ஆகுக!

ஒரு பெண் யானை படியும் இடத்தில் விளைகின்ற பயிர் ஏழு ஆண் யானைகள் உணவாகக் கொள்ளும்படியான வளமுடைய சோழநாட்டின் தலைவனே! உன்னை இழிவாகப் பேசுபவர்களின் கருத்து வணங்கித் தாழவும் போற்றிப் புகழ்ந்து உரைப்பவர்கள் மகிழ்ச்சியுடன் நிமிர்ந்து விளங்கவும் இன்று கண்டோம். இனிவரும் காலங்களில் இவ்வாறு காணவேண்டும். நீ எல்லோருக்கும் இன்சொல் பேசுபவனாகவும் எளிமையுடையவனாகவும் விளங்குவாயாக! என்று கிள்ளிவளவனுக்கு அறிவுரை கூறும் முகமாக ஒரு புறநானூற்றுப்பாடலை (40) இயற்றியுள்ளார் புலவர் காரிக் கண்ணனார்.

இப்பாடலின் திணை பாடாண்திணை துறை செவியறிவுறூஉ. தொல்காப்பிய அடிப்படையில் இப்பாடலுக்கு திணை, துறை செய்யப்பட்டுள்ளது.

## கேள்வி நாயகன்

சோணாட்டுப் பூஞ்சாற்றூர்ப் பார்ப்பான் கௌணியின் விண்ணந்தாயன் என்பவனை ஆவூர் மூலங்கிழார் சிறப்பித்து ஒரு புறநானூற்றுப் பாடலைப் (166) பாடியுள்ளார். கௌணியின் விண்ணந்தாயன் தமிழ்ப் பற்றுடையவனாகத் திகழ்ந்தான். அப்போது ஒரு சிறந்த வேள்வி வாயிலாகப் பெருவிருந்து செய்தான். அவ்வேள்வியில் பாட்டுடைத் தலைவனது மனைவியர் தமக்குரிய ஏவல் கேட்டு நிற்ப, நெய்யை நீரைப் போல் வழங்கி வேள்வி செய்தும் விருந்து செய்தும் ஓம்பினான். இதனைக் கண்டு வியந்த ஆவூர் மூலங்கிழார்,

இவற்றையெல்லாம் பொருளாக நிறுத்திப்பாடி முடிவில் 'நீ இப்போது தந்த பரிசிலைக் கொண்டு காவிரிக் கரையில் உள்ள எம்முடைய ஆவூர் மூலத்தில் நின் புகழ் பாடி உண்டும் தின்றும் ஊர்ந்தும் மகிழ்ந்து ஆடுவோம். நீ இமயம் போல் இந்த உலகில் நிலை பெறுக' என்று வாழ்த்துகிறார்.

இப்பாட்டின் திணை வாகை; துறை பார்பனவாகை. இத்துறையை ஐயனாரிதனார்,

'கேள்வியாற் சிறப்பெய்தி யானை
வேள்வியான் விறல் மிகுந்தன்று'

(புறப். வெமா.8.9)

என்று குறிப்பிடுவார். இதற்கு "மறை கேட்டுச் சிறப்பெய்திய பார்ப்பனனுடைய வெற்றியைக் கூறுவது பார்ப்பன வாகை என்னும் துறையாம்" என்று விளக்கம் தருகிறார். பெ.வே.சோ. பாடலில் தலைவன் நடத்திய வேள்வியை,

'நீர்நாண நெய்வழங்கியும்
எண் நாணப் பல வேட்டும்
மண் நாணப் புகழ் பரப்பியும்
அருங்கடிப் பெருங்காலை
விருந்து உற்ற நின் திருந்து ஏந்துநிலை
என்றும் காண்கதில் அம்ம யாமே'

(புறம். 166; 21-26)

என்று வியந்து போற்றியதால் துறை பார்ப்பன வாகையாயிற்று.

ஆவூர் மூலங்கிழார் மல்லிக்கிழான் காரியாதி என்ற மன்னனையும் சிறப்பித்துப் பாடல் (166, 261) செய்துள்ளார். "காவிதி என்பாவன் மல்லி என்னும் ஊாக்குத் தலைவன். இது சீவில்லிப்புத்தூரில் நாட்டின் கண் உள்ளதோர் ஊர்"(7) என்பர் ஔவை சு.துரைச்சாமிப்பிள்ளை. "இவன் குடநாட்டைச் சேர்ந்த பதியின் தலைவன்"(8) என்பர் வ.த. இராம சுப்பிரமணியம். இம்மன்னனின் கொடைத்தன்மையை,

'வருநர்க்கு வரையாது தருவனர் சொரிய
இரும்பனங் குடையின் மிசையும்
பெரும்புலர் வைகறைச் சீர்சா லாதே!'

(புறம். 177:117)

என்று வருணிக்கிறார். மல்லிக்கிழான் காரியாதியின் கொடையை இயல்பாகப் புனைவதால் துறை இயன்மொழி ஆயிற்று.

மற்றொரு பாடலில் (261) மல்லிக்கிழான் காரியாதி ஆநிரைகளை மீட்கும்போது இறந்து பட்டதை அறிந்து அவனது நடுகல்லைக் கண்டு வருந்திக் கையற்றுப்பாடுகிறார் புலவர் ஆவூர் மூலங்கிழார்.

## சோர்கவென் கண்ணே!

என் தலைவன் திரும்பி வந்த இந்த இல்லமானது வண்டுகள் படியும் நீங்காத பாத்திரம், சோற்றினை இனிது வழங்கும் முற்றம், என யாவும் நீரில்லாத ஆற்றில் காணும் ஓடம் போன்று வறியதாகக் காட்சியளிக்கிறது. இக்காட்சியைக் காணும் என் கண்கள் சோர்வடைக!

அறிவுடையோர் கரந்தைப் பூச்சுட்ட அவன் நடுகல் ஆயினன். அவன் இல்லாத காரணத்தால் கைம்மை நோன்பு மேற்கொண்டு பொலிவு இழந்து வருந்தும் மனைவியைப் போல் அவனது இல்லமும் பொலிவு இழந்து காணப்படுகிறது என்று கையற்றுப் புலம்புகிறார் புலவர்.

இப்பாடலின் துறை கையறுநிலை என்று குறிக்கப்பட்டுள்ளது. எனினும் கணவனை இழந்த மனைவியரின் கைம்மை நோன்பு சுட்டப்பட்டுள்ளது. எனவே இப்பாடலுக்குத் தாபத நிலை என்ற துறையையும் குறிப்பிடலாம். ஆனால் பாடலில் தலைவனை இழந்த மனைவியின் நிலை உவமையாகப் பொழிவு இழந்த இல்லத்திற்குச் சுட்டப்படுவதால் துறை கையறு நிலைத் துறையாயிற்று. கரந்தைப் போரின்போது மாண்ட வீரனுக்கு நடுகல் அமைக்கப்பட்டது என்பதால் திணை கரந்தையாயிற்று.

## காவலன்

ஆவூர் மூலங்கிழார் பாண்டியன் கீரஞ்சாத்தான் என்ற குறுநில மன்னனைச் சிறப்பித்து ஒரு பாடலில், கம்பத்தில் கட்டப்பட்ட யானைகளும், வரிசையில் கட்டப்பட்ட குதிரைகளும் தாம் கட்டப்பட்டதையறிந்து ஆரவாரம் செய்யும். அவன் அரண்மனை முற்றத்தினை அடைந்த சான்றோர் உணவு அருந்துமாறு வேண்டி இரங்கும் அன்புள்ளம் உடையவன் பெரும் புகழ் மேவும் சாத்தன் ஆவன். இரவலர்களுக்கு இனியவன். கள்ளுண்டபோது குடிமயக்கத்தால் வீரம் பேசிப் பின்னர் போரிடையே அதனை மறந்தவராய் அஞ்சி நீங்கும்போதும் அத்தகையோர்க்குத் தானே முன் வந்து பாதுகாப்பாக விளங்குவன்' என்றெல்லாம் புகழ்ந்து கூறிச் சிறப்பிக்கின்றார். தொல்காப்பியர் வாகைத் திணைக்கு,

'தாவில் கொள்கை தந்தும் கூற்றைப்
பாகுபட மிகுதிப்படுத்தல் என்ப'

(தொல். 1020)

என்று இலக்கணம் செய்கிறார். வாகைத் திணையின் துறைகளில் ஒன்றான வல்லாண் முல்லையைப் 'புல்லா வாழ்க்கை வல்லாண் பக்கமும் (1022:9) என்று குறிப்பிடுகிறார். தொல்காப்பியர் 'வல்லாண் முல்லை' என்று குறிப்பிடாமல் வல்லான் பக்கம்' என்று மட்டுமே குறிப்படுகிறார். ஒரு மறவனுடைய குடி, ஊர்பண்பு முதலியவற்றைப் பாராட்டி அவனது ஆண்மையை விதந்து கூறியது வல்லாண்முல்லை என்னும் துயைாம்''[9] என்று விளக்கம் தருவர் பொ.வே.சோமசுந்தரனார். பாண்டியன் கீரஞ்சாத்தனது குடியையும் ஊரின் இயல்பையும் இப்பாடல் எடுத்துக் கூறவதால் துறை வல்லாண் முல்லை ஆயிற்று.

பாண்டியன் இலவந்திகைப் பள்ளித்துஞ்சிய நன்மாறனிடம் பரிசில் வேண்டிப் பாடியதாக ஒரு புறநானூற்றுப் பாடல் (196) காணப்படுகிறது.

பரிசில்கடா நிலை

வேந்தே! இயல்வதனை இயலும் எனச் சொல்லி ஈதலும், இயலாதவனை இயலாதெனச் சொல்லி விடுத்தலும் தாளாண்மையுடையார்க்குரிய நற்செயல்களாகும். இயலாததை இயலும் என்றாலும் இயல்வதனை, இயலாதென்றலும் இரப்போரை ஏமாற்றும் புகழைக் கெடுத்துக் கொள்ளும் செயல்களாகும். இரப்போராகிய எமது வாழ்வில் இக்குறைபடும் செயல்களை இதுவரை கண்டதில்லை. வேந்தே!

உன் வாழ்நாள் சிறக்க உன் புதல்வர் நோயின்றி வாழ்க! பனி என்றும் வெயில் என்றும் பாராது உன்னை நாடிவந்தேன். இன்றோ கற்புடைய என் மனைவியை உள்ளத்தில் நிறுத்திப் பரிசில் பெறாமல் செல்கின்றேன்' என்று தான் பலநாள் தங்கியும் பரிசின்றிச் செல்வதை உணர்த்தித் தன் கருத்தைப் புலப்படுத்துகிறார் புலவர். மன்னன் விரைவாகப் பரிசில் ஏதும் தாராது காலம் நீட்டித்தவழி புலவர் வருந்திப் பாடுவதால் பாடலின் துறை பரிசில் கடா நிலையாயிற்று. இத்துறையினால் மன்னன் மனமாற்றம் அடைந்து பின்னர் பெரும் பரிசிலை நல்கி வழியனுப்பான் என்ற செய்தி குறிப்பால் உணர்த்தப்படுகிறது.

தும்பைத் திணையைப் பாடிய சோழநாட்டுப் புலவர்களுள் ஆவூர் மூலங்கிழாரும் ஒருவர். இவர் பாடிய 301-ஆவது புறநானூற்றுப்பாடல் தும்பைத் திணையில், தானைமறம் துறையில் அமைந்துள்ளது. இப்பாடலில் தலைவன் யாரெனத் தெரியவில்லை.

## போர் அறம் போற்றும் பெரியோன்

பல்சான்றோர்களே! குமரிப் பெண்களின் கூந்தலைப் போன்று அடர்த்தியான முள்வேலியை அமைத்துப் பாசறையில் பாதுகாப்புடன் இருக்கும் சான்றவரே! முரசுடைய உமது அரசனைப் பாதுகாத்துக் கொள்வீராக! உங்களது யானைப் படைகளையும் காத்துக் கொள்ளுங்கள். போர்க்கு முனைந்து வராதவர்களுடன் எங்கள் அரசன் போர் செய்யமாட்டான். மேலும் தனக்கு இணையில்லாதவர்களிடமும் போரிட மாட்டான். நீங்கள் பரவலாகப் பெரிய அளவில் உள்ளதாக எண்ணிக்கொண்டு என் அரசனை இகழ்ந்து பேச வேண்டாம். எனது அரசன் நேற்று இரவு தான் அரண்மனை அடைந்தான். எமது வேந்தன் ஊர்ந்து வரும் யானையை எறிவதற்கு அல்லாது வேறு வகையில் அவன்

வேலை ஏந்தமாட்டான்' என்று பாட்டுடைத் தலைவன் போர் அறத்தை வலியுறுத்துகிறார் ஆலூர் மூலங்கிழார். தொல்காப்பியர் தும்பைத் திணைக்கு,

'மைந்து பொருளாக வந்த வேந்தனை
சென்று தலையழிக்கும் சிறப்பிற்றென்ப'

(தொல். 1016)

என்று இலக்கணம் வரைகிறார். தும்பைத் திணையின் துறைகளில் ஒன்றாகத் தானை மறத்தினையும் குறிப்பிடுகிறர். தானை என்பது காலாற் படையைக் குறிக்கிறது. ஐயனாரிதனார்,

'தாம்படைத் தலைக்கொள்ளாமை
ஓம்படுத்த உயர்வு கூறின்று'

(புறம். வெமா.7.3)

என்ற கொளுவில் விளக்குவர். பொருதற்கெதிர்ந்த படைகள் தம்முள் ஒத்த ஆற்றலுடைய காரணமாகப் போர் செய்து மடியாமல் விலகியது தானை மறம் ஆகும். இப்பாடலில் எதிர்த்து வந்த படைகளைப் போர் கொள்ளாது தவிர்த்தலால் துறை தானை மறமாயிற்று.

## இடைக்காடனார்

இடைக்காடனார் பாடிய புறநானூற்றுச் செய்யுள் (42) ஒன்றே. இப்பாடலில் குளமுற்றத்துத்துஞ்சிய கிள்ளி வளவனைச் சிறப்பித்துப் பாடுகிறார். இவர் கிள்ளி வளவனை நோக்கி, குறைவில்லாது கொடுக்கும் வள்ளல் தன்மையுடையவனே! போரிட்டு வெல்லும் ஆற்றல் உடைய பெருமானே! நின் யானைகள் மலையை விடப் பெரியதாக உள்ளன. நின்

போர்ப்படைகள் கடலை விடப் பரந்து முழக்கம் செய்யும் கூர்மையான வேல்கள் மின்னலைப் போன்று விளங்கும். இத்தன்மையில் உலகில் உள்ள பிற அரசுகள் யாவும் உன்னைக் கண்டு அஞ்சும் நிலையில் இருத்தலால் குற்றம் இல்லாது எல்லா இடங்களிலும் நன்மையே விளங்குகின்றது. இது புதுமையானதல்ல. இது நின் மரபின் வழி வருகின்ற சிறப்பாகும். நீ வாழ்க! எங்கள் துயரைத் தீர்ப்பாயாக! வளவனே! என்று நின் முன்னே வந்து குறையிரந்து நிற்பவரைக் கனவினும் நினையாத படைச் சிறப்பையுடையவன். நீ புலி தன் குட்டிகளைப் பாதுகாப்பது போல அனைவரையும் தவறாது பாதுகாத்து வருகிறாய்! பெருத்த வருவாயை உனக்கு உண்டாக்க வல்ல சிறப்பினை உடையவன். உன் நாட்டில் நெல் அறுப்பவர்கள் கடைமடையில் வாளை மீனை பிடித்து வருவார்கள். உழுபவர்கள் ஏர் முனையில் தடுக்கும் ஆமைகளைப் பிடித்து வருவார்கள். கரும்பு அறுப்பவர்கள் கரும்பிலிருந்து பெற்ற தேனைக் கொண்டு வருவார்கள். இவற்றையெல்லாம் பிற நாட்டிலிருந்து வருகின்ற உறவினர்களுக்கு மகிழ்ச்சியுடன் அளிப்பார்கள். இத்தகைய பல்வளம் மிகுந்த ஊர்களையுடைய வளம்மிக்க வேந்தனே! பலவகையான மலைகளிலிருந்தும் கீழே பாய்ந்து வந்து நிலங்களைக் கடந்து கடல் நோக்கிச் செல்லும் ஆறுகள் போன்று உன்னையே நோக்கி வரும் புலவர்களுக்குக் கணிச்சி என்னும் கூர்மையான படையைக் கொண்டு வலிமையோடு மாறுபட்டு எதிர்க்கும் இருபெரும் வேந்தர்களையும் 'இமயன்' போன்று ஆட்கொண்டு பொருட்களை கவர்ந்து வழங்குகின்றாய் என்று புகழ்ந்து பாடுகிறார். கிள்ளி வளவனின் வீரத்தை, இடைக்காடனார்,

'நீயே, மருந்தில் கணிச்சி வருந்த வட்டித்துக்
கூற்று வெகுண்டன்ன முன்பொடு
மாற்று இருவேந்தர் மண் நோக்கினையே!'

(புறம். 42:22-25)

என்று குறிப்பிடுவதால் பாடலின் திணை வாகையாயிற்று வாகைத் திணையின் 34 துறைகளுள் ஒன்றாக அரசவாகையை அடக்குவர் ஐயாரிதனார். இதனை,

'பகலன்ன வாய்மொழி
இகல்வேந்தன் இயல்புரைத்தன்று'

(புறப். வெ. மா.8.3)

எனக் கூறுவர். இதற்கு "செங்கோன்மையுடைய அசரனது இயல்பினை கூறியது அரசவாகை என்னுந்துறையாம்"[10] என்று கருத்துரைப்பார் பொ.வே.சோமசுந்தரனார். 'புலி தன் குட்டிகளைப் பாதுகாப்பது போல அனைவரையும் செங்கோல் தவறாது பாதுகாத்து வருபவன்' என்று வளவனின் இயல்பினை எடுத்துரைப்பால் துறை அரசவாகையாயிற்று. இப்புறப்பாடல் புறப்பொருள் வெண்பாமாலையின் அடிப்படையில் திணை துறை வகுக்கப்பட்டுள்ளது. இருப்பினும் தொல்காப்பியர் வாகைத் திணையில் கூறுகளில் ஒன்றாக 'ஐவகை மரபின் அரசர் பக்கமும்' என்று குறிப்பிடுகிறார். இதற்கு "ஓதலும் வேட்டலும் ஈதலும் படைவழங்குவதலும் குடியோம்புதலுமாம்"[11] என்று விளக்கம் தருகிறார் இளம்பூரணர். பாடலில் 'ஆனா வீகை' என்ற சொல் இடம்பெறுவதால் பாட்டுடைத் தலைவனின் இயல்புகளில் ஒன்றான ஈகைப் பண்பினை எடுத்துக்காட்டுகிறார் இடைக்காடனார். விருந்து புறந்தரும் அறத்தையும் இப்பாடலில் விளக்குகிறார். மகளிர் விருந்தோம்பும் செய்கையை 'அல்லி லாயினும் விருந்துவரின் உவக்கும் முல்லை சான்ற கற்பின் மெல்லியற் குறுமகள்' (நற்.142) என்ற அகப்பாடலிலும் விளக்குகிறார்.

## இரும்பிடத் தலையார்

இவர் பாடிய புறநானூற்றுப்பாடல் (3) ஒன்றே இப்பாடலில் பாண்டியன் கருங்கை ஒள் வாட்பெரும்பெயர் வழுதியைச் சிறப்பித்துப் பாடுகிறார். இப்பாடல் பாடாண் திணையில் அமைந்துள்ளது. இதன் துறைகள் இரண்டு பாடலின் முதற்பகுதி பாண்டிய மன்னனின் சிறப்பு இயல்புகளையும், பிற்பகுதி, வரியவர்களுக்கு பொருட்களை வாரி வழங்க வேண்டும் என்றும் செவியறிவுறூஉ கூறி வாழ்த்துகிறார். முழுநிலவைப் போன்று ஒளிரும் வெண்கொற்றக் கொடையும், தென்கடலும் மலையும் உடைய நிலத்திற்கு உரியவனாகித் தண்ணிழல் விளங்கும் ஆட்சியும் உடையவனே! பெருமையுடைய முரசு ஒலித்து முழங்கவும் சக்கரம் கொண்டும் அன்புள்ளதின்னாகவும், எத்தன்மையிலும் பாண்டியர் குலத்தில் விளங்குபவனே! குற்றமில்லாத தலைக்கற்பின் மாண்புடைய மங்கையின் கணவனே! ஊழிக்காலத்தில் இப்பூவுலகம் அழிந்தாலும் நின்சொல் மாற்றம் அடையாது நிலைத்து விளங்கும். பொன்னாலாகிய வீரக்கழலை அணிந்த பாதங்களும், நறுமணம் கமழும் சந்தனம் பூசப்பெற்ற வலிமையான அகன்ற மார்பும் உடையவனே! என்றெல்லாம் வாழ்த்திப் பின் நின்னைக் காணும் வகையில் வரும் இரவலர்கள் வழியின் இடையில் ஊர்கள் இல்லாததாலும் தாகத்தின் வருத்தத்தைத் தீர்க்கும் நீர் நிலை இல்லாததாலும் நீண்ட தொலைவும் நடந்து, வழி நெடுகிலும் இவர்கள் யாவர் என்று தம் கடுமையான விழிகளை கூர்மையாக்கி கைகளைத் தலையின் மீது உயர்த்தி உற்றுப்பார்க்கும் ஆடவர்கள் ஆங்காங்கே இருந்தாலும் கொடிய அம்புகளால் தாக்கப்பட்டு வீழ்ந்தவர்கள் இடையில் தென்பட்டாலும், கற்குவியல்களுக்கிடையில் இறந்தவர்களின் உடல்கள் மூடிக்கிடக்க உன்ன மரங்களின் மீது கழுகுகள் அமர்ந்து உணவை நாடி வருந்தியிருக்கும் காட்சியைக் கண்டாலும் அவற்றைப்

பொருட்டாகக் கருதாது, உன்னிடம் வரும் வறியவர்களுக்கு வளமான வள்ளல் தன்மையுடன் நடந்துக் கொள்ள வேண்டும்' என்று அறிவுரைகளும் கூறுகிறார். இரும்பிடத்தலையார் 'செயிர்தீர் கற்பின் சேயிழை கணவ' என்று புகழ்ந்து பாடுவதால் வாழ்த்தியல் துறையாகவும், வலியவர்களின் வறுமையை,

'முன்னம் முகத்தின் உணர்ந்து அவர்
இன்மை தீர்த்தல் வன்மையோனே!

(புறம். 3.35-26)

ஒழிக்க வேண்டும் என்று அறிவுரை கூறுவதால் செவியறிவுறூஉ துறையாகவும் இணைந்து இப்பாடல் அமைகிறது. இப்புறப்பாடல் தொல்காப்பிய அடிப்படையில் பாடாண்திணைக்குரிய துறைகளான வாழ்த்தியல், செவியறிவுறூஉ துறைகளுடன் அமைந்துள்ளது.

## உறையூர் இளம்பொன் வணிகனார்

உறையூர் இளம்பொன் வணிகனார் சங்க நூல்களில் பாடிய ஓரே பாட்டு (264) இப்புறநானூற்றுப் பாட்டு. இப்பாட்டில் மன்னன் பெயரோ பாட்டுடைத் தலைவன் பெயரோ இல்லை. அதுபோலப் பாடப்பட்டவனுடைய இயற்பெயரும் புலனாமாறு சுட்டப்படவில்லை. மன்னன் ஆநிரையை மீட்கும் போரில் மாண்டமையும், அவனுக்கு நடுகல் நடப்பட்டமையும் சொல்லப்பட்டிருக்கின்றன. பாடலில் 'நெடுந்தகை' (264:5) என்ற தொடரே பாட்டுடைத் தலைவனைக் குறிப்பது ஆகும். பாடலுக்குரிய திணை துறைக் குறிப்பிலும் பாடப்பட்டவன் பெயரில்லை.

பாட்டுக் கரந்தைத் திணை என்றும் துறை கையறு நிலை என்றும் வகுக்கப்பட்டிருக்கிறது.

## நிரைகாத்த நெடுந்தகை

தலைவன், பகைவர் கைப்பற்றிச் சென்ற ஆநிரைகளை மீட்டுப் பகைவர்களை ஓட்டினான். அஞ்ஞான்று அவன் போரில் பட்டான். அவன் மாண்ட இடத்துச் சிவந்த மாலைகளையும் மயிற் பீலிகளையும் சூட்டி அவன் பெயரையும் புகழையும் எழுதிக் கல் நட்டனர். நிரை மீட்கும் போர் என்பதால் இப்போர் தொடக்கப்போர் என்றும், கடுமையில்லாத போர் என்றும் அறிய முடிகிறது. ஆநிரை கவர்தல் என்பதனைப் புலவர், ‘கறவை தந்து பகைவர் ஓட்டிய, நெடுந்தகை’ (புறம்.264;5) என்ற அடிகளால் உணர்த்துகிறார். நெடுந்தகை உடற்றிய போரையோ, பகைவரை அழித்த திறத்தையோ புலவர் பாடிலர். போர் முடிந்த போது தான் புலவர் வந்திருக்கிறார். அதனால் மாண்டு போன செய்திறியாது மன்னனைக் காணப் பாணரும் வருவரே! என்று இளம்பொன் வணிகனார் வருத்தப்படுகிறார். இதனால் தலைவன் அண்மையில் போரில் மாண்டான் என்றும் அவனுக்குக் கல்லெடுக்கப்பட்டுள்ளது என்றும் அறிந்து கொள்ள முடிகிறது. புலவர் போரைப் பற்றிப் புனைந்து பாடாது போரால் தலைவன் மாண்டமையையும் அவனுக்கு நினைவுச் சின்னம் எடுத்தமையையும் கூறுகிறார்.

இது கரந்தைத் திணையில் கையறுநிலைக் துறையாகும். தொல்காப்பியர் கரந்தைத் திணையை வெட்சித் திணையில் உள்ளடக்கினார். அவர் கையறு நிலைத் துறையை வெட்சித் திணையில் அமைத்திலர்: மாறாகக் காஞ்சித் திணையில் வகைப்படுத்துகிறார். திணை

அடிப்படையில் இப்பாட்டு வெட்சி; துறையோ தொல்காப்பியர் சுட்டாத துறை; தொல்காப்பிய மரபுக்கு மாறாகப் புறநானூற்றில் திணையும் துறையும் வகுக்கப்பட்டுள்ளன என்பதற்கு இஃதோர் சான்று.

பிற்காலத்தில் எழுந்த புறப்பொருள் வெண்பாமாலையில் தனியாகக் கரந்தைத் திணையை அமைத்து அதன் துறைகளில் ஒன்றாகக் கையறுநிலைத் துறையை நிறுத்துவர்.

'மலைத்தெழுந்தார் மறஞ்சாயத்
தலைக்கொண்ட நிரைபெயர்ந்தன்று'

(புறப். வெ. மா.2.1)

பகைவர் கவர்ந்து சென்ற ஆநிரைகளைத் தலைவன் மீட்டமையைக் 'கன்றொடு கறவை தந்து' (264; 4-5) என்ற அடி உணர்த்துவதால் இது கரந்தையாயிற்று. வெண்பாமாலை கையறு நிலையை,

'வெருவரும் வாளமர் விளிந்தோற் கண்டு
கருவி மாக்கள் கையற வுரைத்தன்று'

(புறப். வெ. மா. கரந்தை.10)

எனச்சுட்டும். "வாட்போரில் பட்ட கரந்தை மறவன் நிலைகண்டு அவனாற் புரக்கப்பட்ட பாணர் தம் கையறவு கூறுவது கையறு நிலை"(12) என உரைப்பர் உரையாசிரியர். இப் புறப்பாடலில் ஆநிரைகளை மீட்ட தலைவனுக்கு நடுகல் நட்டனர். இதனை அறியாத பாணரது சுற்றம் வருமோ? என்று வருந்திப் பாடுவதால் துறை கையறு நிலையாயிற்று. கல் யார் நட்டது என்ற குறிப்புத் தெளிவாகப் பாடப்படவில்லை.

இப்பாடலில் 'நடுகல்' பற்றிய செய்தி இடம்பெறுவது சிறப்புடையது. தொல்காப்பியர் நடுகல் நிகழ்வுகளை,

'காட்சி, கால்கோள், நீர்ப்படை, நடுதல்
சீர்த்தகு சிறப்பின் பெரும்படை வாழ்த்தலென்று'
(தொல். 1006; 19-20)

என்று முறைப்படுத்துகிறார். ஆனால் இப்புறப்பாடல் பெயரும் பீடும் எழுதி, நீர்ப்படுத்திக் கண்ணியும், பீலியும் சூட்டிக் கல்நாட்டுவது வழக்கமாக இருந்தது எனக் குறிப்பிடுகிறது. இதனை நச்சினார்க்கினியர், "அணிமயிற் பீலிசூட்டிப் பெயர் பொறித்தினி நட்டனரே கல்லும் எனக் கன்னாட்டுதல் பெரும்படைக்கும் பின்னர் கற்படுத்துக் கூறிற்றாலெனின் நீர்ப்படுத்த பின்னர்க் கற்படுத்தப் பெயர் பொறித்து நாட்டுதல் காட்டு நாட்டோர் முறைமை என்பது சீர்த்தகு சிறப்பின் என்பதனாற் கொள்க"[13] என விளக்குவர். இதனால் நடுகல் நடும்போது கல் நட்டுப் பெரும்படை செய்யும் மரபும், பெரும் படை செய்த பின்னர் கல்நாட்டும் மரபும் வழகத்தில் இருந்துள்ளமை வெளிப்படும். 'நடுகற்கள் கரந்தை மறவருக்கே எடுக்கப்பட்டதாகப் புறப்பாடல்கள் உணர்த்துகின்றன. இதனை 'வெட்சி மறவன் நிரை கவர்ந்து வரும்போது, நிரை மீட்கப் போர்புரிந்த கரந்தை மறவரைக் கொன்று குவித்தான்' எனப் புறநானூறு 269 ஆம் பாடல் கூறுகிறது. இவ்வாறு கொல்லப்பட்ட கரந்தை மறவருக்கே நடுகற்கள் எடுக்கப்பட்டதாகச் சங்க இலக்கியம் பாடுகிறது. வெட்சித் திணையைப் பற்றிய புறநானூற்றுப் பாடல்களில் (புறம் - 257, 258, 262, 269, 297)

நடுகல் எடுக்கப்பட்ட செய்திகள் இல்லை. ஆனால் கரந்தைத் திணைப் பாடல்களில் (புறம் 260, 261, 263, 265) நிரை மீட்கப்பட்ட வீரர்களுக்கு நடுகல் எடுக்கப்பட்ட செய்தி கூறப்பட்டுள்ளது. அகநானூற்றிலும் கரந்தை மறவருக்கே நடுகல் எடுக்கப்பட்ட செய்தி (அகம்.131;6-13) இடம் பெறுகிறது." (14)

வெட்சி வீரர் ஆக்கள் மீது ஆசை கொண்டு திருடராய் நிரை கவர்கின்றனர். அவர் தம் உயிரிழப்பு, பொருளாசையால் விளைந்தது. கரந்தை வீரர் பசுத்திருடரை வெருட்டி நிரையை மீட்டு அறங்காக்கும் அறவோராதலின் அவர் போரில் மாண்டால் அவர்க்குக் கல் எடுப்பது பெருமையைப் போற்றுவதாகும்; வீரத்தினைச் சிறப்பிப்பதாகும். இப்புறப்பாடலில் நடுகல் நட்ட செய்தியை,

'அணிமயிற் பீலி சூட்டிப் பெயர்பொறித்
தினி நட்டனரே கல்லும் ....................'

(புறம். 264; 3-4)

என்ற அடிகள் உணர்த்தும் இப்பாட்டுத் தொல்காப்பிய மரபுதழுவிப் பாடப்பட்டிருந்தாலும் திணை துறைப் பகுப்பில் வெண்பாமாலையை அடியொற்றியதாகும்.

## உறையூர் ஏணிச்சேரி முடமோசியார்

உறையூர்ப் புலவர்களில் புறநானூற்றில் முதற்கண் தொகுக்கப்பட்டிருக்கும் பாடல், உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் பாடலாகும். இவர் பாடிய சோழவேந்தன் சோழன் முடித்தலைக் கோப்பெருநற்கிள்ளி ஒருவனே. அவனையும் இவர் ஒரு பாடலில் (புறம்.13)

மட்டுமே பாடினார். இவர் உறையூர்ப் புலவராதலின் கிள்ளியை அறிந்திருக்கிறார்.

## பகைவனிடம் வாழ்த்தல்

'இவனியா ரென்குவை' என்று தொடங்கும் (புறம்.13) இப்பாட்டு ஏணிச்சேரி முடமோசியார் சேரநாட்டுக் கருவூரில் இருந்த போது பாடியது; சோழன் முடித்தலைக் கோப்பெருநற்கிள்ளி கருவூரிடஞ் செல்வானைக் கண்டு சேரமான் அந்துவஞ்சேரலிரும்பொறையொடு வேண்மாடத்து மேலிருந்து உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் பாடியது. புலவர் கருவூரிலிருந்து போது சோழன் களிற்றின்மேல் அமர்ந்து வந்ததைக் 'களிறே' (புறம்.13;5) என்ற குறிப்பு உணர்த்துகிறது.

உறையூர் முடமோசியார் சேரமான் அந்துவஞ்சேரல் இரும்பொறையைப் பாடிய பாடலும் ஒன்றே. பாடலின் துறைக் குறிப்பு சோழ சேர வேந்தரைப் பேசுகிறது. இங்கு அகப்பாடல்களைப் போலக் கேட்பவன் சேர வேந்தனே; அவனைப் பற்றிப் புலவர் பாடலில் யாதும் கூறினார். சேர வேந்தன் அருகிருக்கும் மோசியார் தன்னாட்டு மன்னனைப் பற்றி எடுத்துரைக்கிறார். ஆனால் பாடலின் பாடுபொருளாகச் சோழவேந்தன் பண்புகளே இடம்பெறுகின்றன.

சோழனைக் காப்பாற்றும் முகமாக மோசியார் பாடுகிறார். அதனால் இப்பாட்டுக்குரிய ஆண்மகன் சிறப்பைப் பாடல் பேசுகிறது. இவ்வாறு பாடுவது பாடாண்திணை. பாடிய மோசியார் பரிசு வேண்டிப் பாடவில்லை. சோழனைச் சேரப் பகைவனிடமிருந்து காக்கவே பாடினார். சோழ

நாட்டுப்பற்றால் இவ்வாறு பாடினாராதல் வேண்டும். இப்பாட்டில் பரிசில் நோக்கினும் மன்னனைக் காக்கும் பண்பு நோக்கே மேலோங்கியிருக்கிறது.

மோசியார் பாடிய சூழ்நிலை மிக வேறுபட்டது. பகைவன் நாட்டூரிலிருந்த புலவர் தன்னாட்டு மன்னனைக் காப்பாற்ற நேரடியாக வேண்டாது, களிறு கட்டுக் கடங்காது வந்ததென்று விவரித்தார். தன்னுடைய விழைவை 'நோயிலானாகிப் பெயர்கதில் அம்ம' (13;9) என்று புலப்படுத்துகிறார். சோழனை வாழ்த்தியமையால் இது வாழ்த்தியலாயிற்று. புறநானூற்றுப் பழைய உரையாசிரியர் "பெருநற்கிள்ளி களிறு கையிகந்து பகையகத்துப் புகுந்தமையான் அவற்குத் தீங்குறுமென்று அஞ்சி வாழ்த்தினமையால் இது வாழ்த்தியலாயிற்று"(15) என்று விளக்குவர். பாட்டுடைத்தலைவன் சோழன்: பாட்டைக் கேட்பவன் இன்னொருவன்; அவன் சேரன்; இப்பாட்டு, பாட்டுடையான் அறியாமை பாவலன் பாடிய பாட்டு. இதனால் மோசியார் எதற்கும் அஞ்சாது உண்மை பேசும் குணமுடையார் என்பது புலனாம்.

இப்பாட்டின் அடிகளை நச்சினார்க்கினியர் சொல்லதிகாரத்திலும், இளம்பூரணர் மெய்ப்பாட்டியலிலும் மேற்கோள் காட்டுவர். பாடண்டிணை என்பது தொல்காப்பியம் வகுத்தது.

## கடைநிலை

'களங்கனியன்ன கருங்கோட்டுச் சீறியாழ்' எனத் தொடங்கும் புறப்பாடலில் (புறம்.127) ஆயினது கொடைச் சிறப்பினைப் பாடாண்திணையில் கடைநிலைத்துறையில் புனைகிறார் புலவர்.

களாப்பழம் போன்ற கரிய கோட்டை உடைய சீறியாழை மீட்டிய பாணர்கள் பாடி வந்து கொட்டிலில் உள்ள களிறுகள் அனைத்தையும் பெற்றுச் சென்றனர். இதனால் யானையின் கட்டுத் தறிகள் வெற்றிடமாயின. இப்போது காட்டு மயில்கள் தம் இனத்தொடு தங்கியுள்ளன. இந்நிலையில் மகளிரின் கொடுத்தற்கரிய 'இழையணி' மட்டுமே ஆயின் மனைவியின் பால் உள்ளது. இதனால் ஆய் வள்ளலின் அரண்மனை பொலிவிழந்து விட்டது என்பர். ஆனால் முரசங்களையுடைய செல்வர் வீட்டில் தாளித்த உணவை எவருக்கும் கொடுக்காது தாமே உண்ணும் நகரினை விடச் செல்வம் இழந்த ஆயின் கோயில் பொலிவு மிக்கது எனப் புகழ்ந்து பாடுகிறார் ஆசிரியர். செல்வமிக்க இடத்தினும் வறுமை மிக்க ஆய் வள்ளின் கோயில் பொலிவுடையது. இவ்வாறு ஆய் வள்ளலை ஆசிரியர் சிறப்பிக்கிறார்.

இப்புறப்பாடல் ஆயின் கொடைச் சிறப்பைப் புனைவதால் இதன் திணை பாடணாயிற்று. தொல்காப்பியர் பாடாண்திணைத் துறைகளில் ஒன்றான கடைநிலையைக் 'காவலருக் குரைத் கடைநிலையானும்' (தொல்.1036;4) என்று குறிப்பிடுகிறார். இதனை "சேய்மைக் கண்ணின்று வருகின்ற வருத்தம் தீர வாயில் காவலர்க்கு உரைத்த வாயில் நிலையும்"[16] என்று உரை செய்கிறார் இளம்பூரணர். கடைவாயிலில் நின்று ஆய்வள்ளலின் அரண்மனை வளாகத்தின் இயல்பைக் கூறுவதால் பாடலின் துறை கடைநிலையாயிற்று.

இப்பாடலை "இளம்பூரணரும், நச்சினார்க்கினியரும் பாடாண் திணைகளுள் 'கொடுப்போரேத்திக் கொடார்ப் பழித்தற்கு' மேற்கோள் காட்டுவர்"[17] ஆயின் வீரச் சிறப்பினைப் பகரும் முகமாகப்

புறப்பாடலைப் பாடாண்திணையில் வாழ்த்தாக ஏணிச்சேரி முடமோசியார் பாடுகிறார்.

## அரியவன்

ஊர்ப் பொது மன்றத்திலுள்ள பலா மரத்தின் கிளைகளில் வாழும் மந்திகள் அக்கிளைகளில் பரிசிலரால் தூக்கி வைக்கப்பட்ட மத்தளத்தினது புறத்தைப் பலாப்பழமென்று கருதித் தட்டின. இதன் ஒலியைக் கேட்ட அன்னச் சேவல்கள் அஞ்சி அவ்வோசைக்கு மாறாக எழுந்து ஒலிக்கும் தன்மையுடையது ஆய்வள்ளலின் பொதிய மலை. அம்மலை ஆடல் மகளிர்க்கு அணுகுதலின்றிப் பெருமை பொருந்திய மன்னர் அணுகுதல் எளிதன்று. அவன் வீரப் பெருமை,

'கழல்தொடி ஆஅய் மழைதவழ் பொதியில்
ஆடுமகள் குறுகி னல்லது
பீடுகெழு மன்னர் குறுகலோ வரிதே

(புறம். 128; 58)

என்று மோசியாரால் உணர்த்தப்பெறுகிறது. ஆயின் வீரச் சிறப்புக் கூறப்படுவதால் இது பாடாணாயிற்று. அவன் கொடை இயல்பையும் படை இயல்பையும் ஒருங்கு கூறுவதால் பாடலின் துறை இயன்மொழியாயிற்று. இப்பாட்டில் வாழ்த்துக் கூறுவதால் வாழ்த்தியலாயிற்று. தொல்காப்பியர் பாடாண்திணையின் துறைகளில் ஒன்றாக இயன்மொழியைக் குறிப்பிடுகிறார். பாரியைப் பாடுகின்ற கபிலர்,

'ஆடினர் பாடினர் செலினே
நாடுங் குன்று மொருங்கீ யும்மே'

(புறம். 109; 17-18)

என்றும்,

'நீலத் திணைமலர் புரையு முண்கட்
கிணைமகட் கெளிதாற் பாடினள் வரினே'

(புறம். 111; 3-4)

என்றும் பாடிய பகுதிகள் ஏணிச்சேரி முடமோசியார் கருத்தை நினைவுபடுத்துகின்றன.

## விண்மீனும் யானைக் கொடையும்

சிறிய குடிசைகளில் வாழும் குறவர் புளித்த கள்ளினை உண்டு மகிழ்ந்து வேங்கை மரத்தடியில் குரவைக் கூத்து நிகழ்துவர். பலா மரங்களையும் உயரிய மலைகளையும் உடைய ஆய், பகைவரைப் போரில் வெல்லும் ஆற்றலுடையவன்; அவன் பரிசிலர்க்கு அளித்த யானைகளைக் கணக்கிட எண்ணினால் மேகத்தால் மறைக்காத விண்மீன்களின் எண்ணிக்கைக்கு ஒப்பாகாது. வானத்தில் இடைவெளியே தெரியாமல் ஒரே வெள்ளையாக மீன் பூத்திருந்தால் ஒருவேளை அம்மீன்களின் எண்ணிக்கைக்கு ஒப்பாகலாம் என ஆயினது வீரத்தையும் கொடைப் பண்பையும் வியந்து இப்பாடலில் (புறம்.129) பாடுகிறார் ஏணிச்சேரி முடமோசியார்.

ஆயின் வீரச்சிறப்பையும் கொடைச் சிறப்பையும் பாடியதால் பாடலின் திணை பாடாண் திணையாயிற்று. ஆய் என்ற வள்ளலின் இயல்பையும் கொடைச் சிறப்பையும் கூறினமையால் பாடலின் துறை இயன்மொழியாயிற்று. ஆயின் கொடைச் சிறப்பை,

'ஆஅய் அண்டிரன் அடுபோர் அண்ணல்
இரவலர்க்கு ஈத்த யானையின் கரவின்று
வான மீன்பல பூப்பின் ஆனாது
ஒருவழிக் கருவழி இன்றிப்
பெருவெள் என்னில் பிழையாது மன்னே'

(புறம். 129; 5-9)

என்று மோசியார் பாடுகிறார். உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் ஆயின் கொடைச் சிறப்பினைப் புறப்பாடல் (புறம்.130) மூலம் சிறப்பிக்கிறார். இப்பாடலின் திணை பாடாண்; துறை இயன்மொழி.

யானைக் கொடை செய்யுமியல்பு

'மணிகளாலான வளைந்த ஆரத்தை அணிந்த ஆய் அண்டிரனே! உன் நாட்டிலுள்ள பிடி ஒரு சூலில் பத்துக் கன்றுகளை ஈனுமோ? பரிசிலர்க்கு இன்முகம் காட்டி இல்லையென்று கூறாது மனமுவந்து யானைகளைப் பரிசாக அளிக்கிறாய். நீ அளித்த யானைகளின் எண்ணிக்கையைக் கணக்கிட்டால் நீ முன்னொரு நாள் மேற்குக் கடலில் கொங்கர்களோடு போரிட்ட போது எறிந்த வேல்களின் எண்ணிக்கையைக் காட்டிலும் பலவாகும்' எனப் புகழ்கிறார் புலவர். இஃது அவன் வீரத்தையும் யானைக் கொடையையும் உரைக்கிறது.

பாட்டுடைத் தலைவன் கொடைச் சிறப்பும் வீரச்சிறப்பும் பாடியதால் திணை பாடாணாயிற்று. ஆயின் வீரமும் கொடையும் ஒரு சேரப் புனையப்பட்டு அவனியல்பைப் பேசுவதால் இயன்மொழியாயிற்று. பாடாண் திணையில் இயன் மொழித் துறையில் உள்ள இப்புறப்பாடலில் (புறம்.131)

'ஆயினது மலை, மேகங்கள் சூழ்ந்து காணப்படுகிறது; அவன் பூவால் தொடுக்கப்பட்ட தாரினை அணிந்துள்ளான்; அவனது வாள் எதிரிகளைத் தப்பாது தாக்கும் வன்மையுடையன. களிறுகள் நிறைந்த காடுகளே அவனைப் பாடும் இயல்புடையன' என்று புலவர் பாடுகிறார்.

ஆயின் பண்பு நலன் கூறப்படுவதால் பாடலின் திணை பாடாண். யானைக்குப் பிறப்பிடமாய் இருக்கின்ற காட்டைக் காட்டிலும் அவனைப் பாடியவர்கள் பெற்ற யானைகள் மிகுதி என்று குறிப்பாகக் கூறி அவன் கொடைச்சிறப்பைப் புலப்படுத்தி அவன் இயல்பை மொழிவதால் இதன் துறை இயன்மொழியாயிற்று.

## இமயத்தன்ன இயல்பு

உறையூர் ஏணிச்சேரி முடமோசியார், 'ஆய் அண்டிரனை முதற்கண் நினைக்க வேண்டியவனைப் பின்னே நினைத்தேன்; அதனால் என் உள்ளம் அழிந்து போகட்டும்! முதலாவதாகப் பாடவேண்டியவனைப் பின்னால் பாடியதால் என் நா பிளந்து போகட்டும்; அவனையன்றிப் பிறர் புகழைக் கேட்ட என் காது, பாழைய ஊரின்கண்னே உள்ள கிணறுபோலத் தூர்ந்து போகட்டும் வடதிசையின்கண்ணே உள்ள வானளாவிய இமயமலையின் அருகில் குளிர்ந்த நிழல் தரும் தெளிந்த நீரோடைகளும் சுனைகளும் உண்டு. அங்கு 'நரந்தம்' என்னும் மணற்புல்லை மேய்ந்து சுனை நீரைக்குடித்துவிட்டுத் தன் பிணைமானுடன் தங்கும் சிறப்புடைய இமய மலைக்கு ஈடாகத் தென்திசையில் ஆய்குடி அமைந்துள்ளது. ஆய்குடி இல்லையென்றால் இந்த நிலவுலகம் தலைகீழாய்க் கவிழ்ந்துவிடும்' என ஆயை இப்பாடலில் (புறம்.132) சிறப்பிக்கிறார் புலவர் ஏணிச்சேரி முடமோசியார். வடதிசை இமயம் போல்

தென்திசை ஆய்குடி என்பது மோசியார் கருத்து. ஆய்குடிச் சிறப்பைப் புலவர் இவ்வாறு உயர்த்திக் காட்டுகிறார்.

ஆயின் பண்பு நலனைப் பாடுவதால் இதன் திணை பாடாண் எனப்பட்டது. அவன் இயல்பையும் சிறப்பையும் வடதிசைக்குச் சிகரமாய் விளங்கும் இமயமலையோடு இணைத்து மொழிவதால் இஃது இயன்மொழி எனப்பட்டது.

## விறலி போதல்

உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் ஆயினது சிறப்பினை, விறலியாற்றுப்படைத் துறைபடப் பாடாண்திணையளில் வைத்துப் புறப்பாடலைப் (புறம்.133) பாடுகிறார்.

'மெல்லிய இயல்பினை உடைய விறலியே! நீ ஆயினது புகழினைப் காதால் மட்டுமே கேட்டிருப்பாயே ஒழிய கண்ணாற் கண்டதில்லை. நீ அவனைக் காணவேண்டினால் உன் மணம் கமழும் கூந்தலிடையே காற்று வீசப்புறப்படுவாயாக! மழை போன்ற வண்மைமிக்க ஆயினைக் காண மயில் போல நடந்து செல்வாயாக' என்று விறலியை ஆற்றுப்படுத்துகிறார்.

ஆயின் பண்பு நலன் பாடலில் புனையப்படுவதால் திணை பாடாண் திணையாயிற்று, தொல்காப்பியர், பாடாண்திணையின் துறைகளில் ஒன்றான ஆற்றுப்படையை,

'கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும்
ஆற்றிடைக் காட்சி உறழத் தோன்றிப்

பெற்ற பெருவளம் பெறாஅர்க்கு அறிவுறீஇச்
சென்றுபயன் எதிரச் சொன்ன பக்கமும்'

(தொல். 1037; 3-6)

என்று இலக்கணம் செய்கிறார். மழை போன்ற வண்மைமிக்கத் தேரினையுடைய ஆயைக் காணச் செல்வாயாக என ஆயினது சிறப்பினைக் கூறி விறலியை ஆற்றுப்படுத்துவதாகப் பாடல் அமைவதால் துறை விறலியாற்றுப் படையாயிற்று.

இக்கருத்தை வலியுறுத்துமாறு 'இளம்பூரணரும் நச்சினார்க் கினியரும்"(18) விறலியாற்றுப்படைக்கு மேற்கோளாக இதனைக் காட்டுகின்றனர்.

## அறவிலைவாணிகனல்லன்

'இப்பிறவியில் செய்த அறம் அடுத்த பிறவிக்கும் உதவும் என்று கருதிப் பொருளை விலையாகக் கொடுத்து அதற்கு அறம் கொள்ளும் வணிகன் ஆய் அல்லன்; அமைந்தோர் பிறரும் போயவழியென்று உலகத்தார் கருத அந்த நற்செய்கையிலே பட்டது ஆயினது கைவண்ணம் எனப் புகழ்ந்து பாடுவதால் இப்புறநானூற்றுப் பாட்டின் (புறம்.134) திணை பாடாணாகவும், துறை இயன்மொழியாகவும் அமைகிறது.

## பரிசிற்றுறை

'எனக்குப் பின்னே விறலி தளர்ந்த நடையுடன் வர, யான் யாழை இசைத்துக் கொண்டு உன் புகழை நினைத்த வண்ணம் வந்தேன். உன்னை நாடிவந்த பரிசிலர்க்குக் கன்றுடன் பிடியையும் வழங்குவாய்! நான் வேண்டுவது யானையும் குதிரையும், தேரும் அல்ல; உன் பொருளைத் தமது பொருளாக எண்ணிப் பாணரும் கூத்தரும், விறலியரும் கொள்வர். அதனை நீ மீட்க எண்ணாது சுற்றத்துடன் வாழும் உன் அருள் திகழும் உருவைக் காணவே வந்தேன்; பகைவரை வெல்லும் வலிமையும் யாவரும் புகழ்ந்து பாடும் சிறப்புமிக்க மலைநாடனே! நீ பல்லாண்டு வாழ்வாயாக! எனப் புகழ்ந்துரைக்கிறார் ஏணிச்சேரி முடமோசியார். இப்பாட்டு (புறம்.135) பாடாண் திணையில் பரிசிற்றுறையாகும்.

தொல்காப்பியர், பாடாண் திணையில் பரிசில் துறையை வகுக்கவில்லை. ஆனால் புறப்பொருள் வெண்பாமாலை பரிசில் துறையைப் புதிதாக இத்திணையில் குறிப்பிடுகிறது. இதனை,

'மண்ணகங் காவல் மன்னன் முன்னர்
எண்ணிய பரிசில் இதுவென உரைத்தன்று'
(புறப். வெ. மா. 9.5)

என விளக்குவர். இதற்கு, "இரவலன் வேந்தன் முன்னே சென்று தான் பெறக் கருதிய பரிசில் இஃதெனக் கூறியது பரிசில் துறை என்னும் துறையாம்"(19) என்று விளக்குவர் உரையாசிரியர். இப்புறப்பாடலில்

இரவலன் தான் பெறக் கருதிய பரிசில் 'நம்மைக் காணவேண்டியே வந்தேன்' எனக் கூறுகிறார். இதனை,

'அன்ன வாகநின் னூழி நின்னைக்
காண்டல் வேண்டிய வளைவை வேண்டார்'

(புறம்.136;19-20)

என்ற அடிகள் சுட்டும். இவ்வாறு புலவர் கூறியமையான் இப்பாட்டில் துறை பரிசிற்றுறையாயற்று.

## கடவுளொடு ஒப்பிடல்

திண்ணிய தேரை இரவலர்க்கு ஈந்த குளிர்ந்த மாலையையுடைய ஆய் வருகிறானென்று ஒள்ளிய தொடியினையும் வச்சிராயுதத்தையுமுடைய விசாலமாகிய கையையுடைய இந்திரனது கோயிலிலுள்ள முரசு முழங்கத் திண்ணிய தேரை இரவலர்க்கு ஈத்த குளிர்ந்த மாலையையுடைய ஆய் வருகின்றான் என்று பொருள்படும்படி பொதுவியல் திணையில் கையறுநிலை என்னும் துறைபடப் (புறம்.241) புனைகிறார் ஏணிச்சேரி முடமோசியார்.

மன்னன் இறந்தானாக அவனைச் சேர்ந்தோர் கையற்றுக் கூறுவது கையறுநிலை ஆகும். இப்புறப்பாடலில் புலவர் ஆய் அண்டிரன் இறந்தமையைக் கூறுவதால் இப்பாட்டின் துறை கையறுநிலையாயிற்று. 'பொருநர்கள் விடியற்காலத்தே கிணைப்பறையைக் கொட்டி அண்டிரனது குறிஞ்சி மரங்கள் நிறைந்த மலைப்பக்கத்தே பாடுவராயின், உறக்கம் நீங்கிய மான்கள் அவர்தம் இசையைச் செவிசாய்த்துக் கேட்கும்;

மலைவாணர் இப்பொருநர்கட்கு நல்ல விருந்தைச் செய்து, புலித்தோலைப் பரப்பி அதன்மேல் மான்கறியும், சந்தனக் கட்டையும், யானைக் கோடுமாகிய மூன்றையும் குவையாகப் பெய்து நல்கும் இயல்பினை உடைய நாட்டிற்குரியவன் ஆய் அண்டிரன்; அவன் வண்மையை வியந்து ஞாயிற்றை நோக்கி, ஞாயிறே! விசும்பின்கண் வறிதே விளங்குகின்ற நீ அண்டிரன் போலக் கைவண்மை உடையையோ! கூறு' என வினாவுகிறார் புலவர். இப்பாடலின் (புறம். 374) திணை பாடாண். துறை பூவை நிலை ஆகும்.

தொல்காப்பியர் பாடாண் திணையில் பூவை நிலை என்னும் துறையைக் குறிப்பிடவில்லை. ஆனால் வெட்சித் திணையில்

'மாயோன் மேய மன்பெருஞ்சிறப்பின்
தாவா விழுப்புகழ் பூவைநிலையும்'

(தொல். 1006;9-10)

என்று பூவை நிலையைக் குறிப்பிடுகிறார். புறப்பொருள் வெண்பாமாலை பாடாண் திணையின் துறைகளில் ஒன்றாகப் பூவை நிலையைச் சுட்டுகிறது. இதனை,

'கறவை காவலன் நிறனொடு பொரீஇப்
புறவலர் பூவைப் பூப்புகழ்ந் தன்று'

(புறப்.வெ.மா.பாடாண்.4)

என்று குறிப்பிடுகிறார். பூவை நிலை என்பதற்குப் புறப்பொருள் வெண்பாமாலை கூறுவது பொருந்தாது என்பது நச்சினார்க்கினியர் கருத்து.

இப்பொருந்தாமையை உரையாசிரியர்களும் கண்டுள்ளனர். "மாயோன் முதலாகிய தேவர்களோடு உவமித்தல் பூவை நிலையென்ப என்று கூறி, அங்ஙனமாயின் ஒன்றினை முடித்தல், தன்னினை முடித்தல் என்பது பற்றி வேறு கடவுளரை நோக்கி உவமித்து வருபவையெல்லாம் பூவை நிலையாகக் கொள்க" [20] என்பர் இளம்பூரணர். அதனால் ஞாயிற்றோடு உவமித்து வரும் இப்பாடல் பூவைநிலை என்னும் துறைக்குப் பொருத்தமுடையது.

## நீயின்றிப்புரவலரில்லை

'உழவர்களின் இல்லந்தோறும் வீடுவீடாகச் சென்று இரந்து உண்ணும் இரவன்மாக்கள் ஆயினோம்; எம்மைக் காத்தலை அருளோடும் மேற்கொள்ளும் சான்றோர் யார்? தேன் கூடுகள் தொங்கும் புதுவருவாய் மிக்க மலைநாட்டுப் பொருநனே! நின்னை நாடி வந்தோம். பொய்யா ஈகையும் கழல் தொடியும் உடைய நல்ல நாட்டிற்குரிய ஆய்வேளே! கிணையைக் கொட்டிப் பரவுதற்கேற்ப எம்மைப் புரந்து ஆதரிப்போர் வேறு யாரும் இலர். ஆதலின் அங்கு நின்றும் கெடாமல் கடலை நோக்கி மேகங்கள் செல்லுவது போல ஒப்பற்ற நின்னை நாடி வந்தோம். நீ ஒருவனே புலவர்க்குப் புகலிடமாவாய்! நிலவுலகம் உள்ளவரை நீ இன்பமுடன் வாழ்வாயாக! நீ இல்லையென்றால் இவ்வுலகமே புலவராகிய எம்மைப் பொறுத்த வரையில் வறுமையுற்றதாகிவிடும். புலவரும் நீ இல்லாத உலகத்தில் வாழ்வரோ? பெரியதாகப் புகழ்ந்து பாடினும் சிறியவராகி உங்கள் தன்மையை உணராத செல்வம் உடைய மன்னரே நாட்டிற்பெருகியுள்ளனர். அவரை ஒரு பொருட்டாக மதித்து எம்போலும் புலவர் இனிப்பாடார் என்றும் நீ அறிவாயாக' என்று இப்பாடலில்

(புறம்.375) சிறப்பிக்கிறார் ஏணிச்சேரி முடமோசியார். ஆயினது ஆண்மைப் பண்பைப் பாடல் சிறப்பிப்பதால் திணை பாடாணாயிற்று. இவ்வாறு உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் ஆய் என்ற வள்ளலைப் பன்னிரண்டு புறநானூற்றுப் பாடல்களில் பாடியுள்ளார். பதினொருபாக்கள் பாடாண்டிணையைச் சார்ந்தவை; ஒரே ஒரு பாட்டுப் பொதுவியல் திணையினது.

## முடமோசியார் பாடிய புறநானூற்றுத் துறைகள்

| வ.எண் | துறை | பாடலெண் |
|---|---|---|
| 1 | பூவை நிலை | 374 |
| 2. | கடைநிலை | 127 |
| 3. | வாழ்த்து | 128 |
| 4. | வாழ்த்தியல் | 375 |
| 5. | இயன்மொழி | 128, 129, 130, 131, 132, 134, |
| 6. | கையறுநிலை | 241 (பொதுவியல்) |
| 7. | விறலியாற்றுப்படை | 133 |
| 8. | பரிசிற்றுறை | 135 |

இவை அனைத்தும் ஆயின் பண்பையும் புகழையும் வெளிப்படுத்துவதுடன் ஆய்க்கும் மோசியாருக்குமுள்ள நல்லுறவைக் காட்டுமாறும் திணை துறைகள் அமைந்துள்ளன. பாடாண் திணை ஒன்றையே பாடுமாறு ஆய் என்னும் வள்ளல் கொடைவளம் மிக்கவனாக விளங்கியிருக்கின்றான்.

## உறையூர் மருத்துவன் தாமோதரனார்

உறையூர் மருத்துவன் தாமோதரனார் புறநானூற்றில் மூன்று பாடல்களைப் பாடியுள்ளார். இவற்றுள் இரண்டு வாகைத் திணையையும் (புறம். 170, 321), ஒன்று பாடாண் திணையையும் (புறம்.60) சார்ந்தவை. இவர் அகத்தையும் புறத்தையும் பாடிய புலவர்.

## பாடாண் திணை

உறையூர் மருத்துவன் தாமோதரனார் சோழன் குராப்பள்ளித் துஞ்சிய பெருந்திருமாவளவனைப் பாடாண்திணையில் 'குடைமங்கலம்' எனும் துறையில் சிறப்பிக்கிறார். 'கடல் நடுவே தோன்றுகின்ற படகிலுள்ள விளக்குப்போலச் செவ்வாய் மீன்கள் விளங்கும் போது நிலவைக் கண்டு மயில்கள் ஆடும். அதைப் போலக் காட்டினிடையே சிலவாகிய வளைகளையுடைய விறலியும், யானும் தொழுதோம்; கடற்கரையில் விளைந்த உப்பினை ஏற்றிய வண்டியை இழுத்துச் செல்லும் பகட்டினைப் போல, ஆட்சிப் பொறுப்பைத் தாங்கி நடத்திச் செல்பவன் எங்கள் மன்னன் வளவன். வெற்றி முரசினையும் தப்பாத வாளினையும் உடைய அவ்வளவனுக்கு வெயிலை மறைக்க எடுத்த வெண்கொற்றக் குடைபோல் எண்ணி அன்று தொழுதோம்; இன்று அவன் குடையைத் தொழச் சொல்லுதல் வேண்டுமோ? என வெண்கொற்றக் குடையினைப் புகழ்கிறார் புலவர்.

ஆண்மகனது வெற்றியையும் வீரத்தையும் புகழ்வதால் திணை பாடாணாயிற்று. இப்பாடலில் துறை குடைமங்கலம். தொல்காப்பியர்

பாடாண் திணைத் துறைகளில் ஒன்றாகக் குடைமங்கலத்தைக் குறிப்பிடுகிறார். இதனை,

'நடைமிகுந்து ஏத்திய குடைநிழல் மரபும்'

(தொல். 1037;10)

என்ற பகுதி உணர்த்தும். இதற்கு இளம்பூரணர், "ஒழுக்கத்தை மிகுத்து ஏத்தப்பட்ட நிழல் மரபு கூறுதல்"[21] என உரைப்பர். இப்பாடலில் குராப்பள்ளித் துஞ்சிய பெருந்திருமாவளவனின் வெண்கொற்றக் குடையினை மதிக்கு ஒப்புமையாக்கிச் சிறப்பித்ததால் துறை குடைமங்கலமாயிற்று. சோழனது குடையினை,

'வலன்இரங்கு முரசின் வாய்வாள் வளவன்
வெயில்மறை கொண்ட உருகெழு சிறப்பின்
மாலை வெண்குடை ஒக்குமால் எனவே'

(புறம். 60; 10-12)

என்று கூறப்படுகிறது. உறையூர் மருத்துவன் தாமோதரனார் பிட்டங்கொற்றனை வாகைத்திணையில் சிறப்பிக்கிறார். இது வல்லாண் முல்லை, தானைமறம் என்ற இரு துறைகளுக்கும் பொருந்தி வருகிறது.

நெல்லிக் காய்களைத் தின்று மரைமான்கள் கொட்டைகளைப் போட்டிருக்கும். அந்த நெல்லி மரங்கள் உள்ள சிறு முற்றத்தினையுடைய குடிகளையுடைய சீறூரின்கண் பகற்பொழுதெல்லாம் வேட்டையாடித் திரியும் வில்லோர் உழவரிடையே இழிந்த பிறப்பினையுடைய புலையன் துடியை இசைக்கப் புலிகளையுடைய மலையிடையே ஒலிக்கும்.

ஆந்தையோடு கூடி ஒலிக்கும் மலையிடையே பிட்டங் கொற்றனை நெருங்கும் பகைவர்களே! அவன் யானையின் தந்தத்தை விறலியருக்கும், வடிகட்டப்பட்ட கள்ளினைப் பண்ணிசைக்கும் பாணர்களுக்கும் கொடுப்பவன். தன்னை விரும்பி வருவோர்க்கு மெலியவனாகவும் பகைவர்க்குக் கொல்லனிடத்தே உள்ள உலைக்கல் போன்ற வலிமையும் உடையவன் எனச் சிறப்பிக்கிறார். தொல்காப்பியர் வாகைத் திணைக்கு,

'தாவில் கொள்கைத் தத்தம் கூற்றைப்
பாகுபட மிகுதிப்படுத்தல் என்ப'

(தொல். 1020)

என இலக்கணம் செய்கிறார். இதற்குக் "கேடில்லாத கோட்பாட்டினையுடைய தத்தமக்குள்ள இயல்பை வேறுபட மிகுதிப்படுத்துதல்"(22) என விளக்கம் தருவர் இளம்பூரணர். வாகைத் திணையின் துறைகளில் ஒன்றான வல்லாண் முல்லையைத் தொல்காப்பியர், 'புல்லா வாழ்க்கை வல்லாண் பக்கமும்' (தொல்.1022;9) என்று குறிப்பிடுகிறார். தொல்காப்பியர் 'வல்லாண் முல்லை' எனக் குறிப்பிடாது 'வல்லாண் பக்கம்' என்றே குறிப்பிடுகிறார். ஆனால் புறப்பொருள் வெண்பாமாலையார் 'வல்லாண் முல்லை' என்று குறிக்கிறார். வல்லாண் முல்லையின் இயல்பை ஐயனாரிதனார்,

'இல்லும் பதியும் இயல்புங்கூறி
நல்லாண் மையை நலமிகுத்தன்று'

(புறப். வெ. மா. வாகை. 23)

எனக் கூறுவர். இங்குப் பிட்டங் கொற்றனின் ஆய்குடி மூதூரையும் அதன் இயல்பையும் தாமோதரனார்,

'மரைபிரிந் துண்ட நெல்லி வேலிப்
பரலுடை முன்றிலங் குடிச் சீறூர்'
(புறம். 170;1-2)

எனப் புனைவதால் துறை வல்லாண் முல்லையாயிற்று. இப்பாடலுக்குத் தானைமறம் என்ற துறையும் பொருந்தும். பிட்டங்கொற்றனின் படைச்சிறப்பை மிகுத்துப் பேசலால் இது தானைமறம் ஆகும்.

உறையூர் மருத்துவன் தாமோதரனார் வாகைத் திணையில் வல்லாண் முல்லைத் துறைபட மற்றொரு புறப்பாடலை (புறம்.321) இயற்றியுள்ளார். முற்றத்திலே வணங்கும் பொருட்டாக உள்ள வெள்ளெள்ளினை குறும்பூழ்ப் பறவை உண்டு, வளைந்த காதுகளையுடைய கோட்டெலிகளை மருட்ட, அவை வரகின் தோகையிடத்தே சென்று மறைந்தன. இத்தகைய நாட்டினையுடைய சென்னி போரிட்டுப் போரிட்டு, வாள் பட்டு வடுக்களுடன் திகழ்கிறான். இவ்வாறு காத்து நிற்கும் ஊரினை உடைய தலைவன் என, விழுப்புண் பெற்ற மன்னனது புகழைப் பேசிய பாணரிடையே பதில் கூறுவது போல் இப்புறப்பாடல் அமைந்திருக்கிறது. இப்பாடலில் தலைவனின் இயற்பெயர் தெளிவாகச் சுட்டப்படவில்லை. இவன் 'சென்னி' என்றே குறிக்கப்படுகிறான். இப்பாடலின் அடிகள் சிதைந்துள்ளன. பாடலின் தலைவன் பல முறை விழுப்புண்களைப் பெற்றவன். பாட்டு அவன் வெற்றியினைக் குறிப்பிடுவதால் அதன் திணை வாகையாயிற்று. பாட்டுடைத் தலைவன் ஊரின் இயல்பையும், இல்லத்தையும் குறிப்பிட்டு அவனது வல்லாண்மையை உணர்த்துவதால் புறப்பொருள் வெண்பாமாலையின் அடிப்படையில் துறை வல்லாண் முல்லையாயிற்று. இதனை,

'வாள்வடு விளங்கிய சென்னிச்
செருவெங் குரிசி லோம்பும் ஊரே'
(புறம். 321;10-11)

என்ற அடிகள் காட்டும். இவர் இரண்டு பாடல்களில் வாகைத்திணையைப் பாடுகிறார்.

## உறையூர் முதுகண்ணன் சாத்தனார்

இவரும் அகம், புறம் இரண்டையும் பாடியுள்ளார். இவர் புறநானூற்றில் ஐந்து பாடல்களை இயற்றியிருக்கிறார். இவர் பொதுவியல், வாகை, பாடாண் ஆகிய திணைகளில் பாடல்களைப் பாடியவர்.

## அறமுணர்த்தும் துறை

சேற்றில் மலர்ந்த செந்தாமரையின் கண்ணேயுள்ள நூறு இதழ்கள் தம்முள் வேற்றுமைக் குணமின்றி இருப்பது போல வேற்றுமையில்லாத நல்ல குடியின்கண்ணே பிறந்து வாழ்ந்தவராயினும் அவருள்ளும் புகழப்பெற்றுப் பாட்டாகப் பாடப்பட்டோர் சிலரே. தாமரை இதழ் போன்று மாய்ந்தவர்கள் பலர். புலவர் புகழ்ந்து பாடும் அரசர், தானே இயக்கி வான்வெளியே ஊர்தியில் செல்லும் உயர்வு பெறுவர். தாம் செயற்கரிய வினைகள் அனைத்தும் முடித்தவர்கள் இப்பேற்றினை அடைவர் எனச் சான்றோர் கூறக் கேட்டுள்ளேன். சேட் சென்னி நலங்கிள்ளியே! இறைவ! வானில் திங்கள் தோன்றி மறைவதும், பின் தோன்றுவதும் உடைய செயல் இவ்வுலகத்தில் பிறந்தவர் இறத்தலும், இறந்தவர் பிறத்தலும் உண்டு என்ற உண்மையைக் காட்டுகின்றது. இதனை அறியாதவர் சிலர்

உள்ளனர். எனவே உன்னை நாடி வருவோரது தகுதியையும் தகுதியின்மையையும் நோக்கி அளிக்காது வருவார் தம் வாடிய வயிறு ஒன்றையே கருதி எல்லார்க்கும் வழங்க வல்லானாகுக! அருளும் ஆண்மையுமற்ற உன் பகைவர்க்கு நின்னை வெல்லும் வன்மை இல்லாது விடினும் வருந்தி வருபவர்க்கு வழங்குதலாகிய வண் குணம் நின்று நிலைபெறுவதாகுக' என நலங்கிள்ளிக்கு (புறம்.27) அறிவுரை கூறுகின்றான்.

தொல்காப்பியர் 'பொதுவியல்' என்ற திணையை வகுத்திலர். இப்பாட்டு எந்தத் திணையிலும் அடங்காது அனைத்துத் திணைகளுக்கும் பொதுவான செய்திகளைப் பகுத்துப் பேசுவதால் திணை, பொதுவியலாயிற்று; இருப்பினும் புறப்பொருள் வெண்பாமாலையில் பொதுவியல் திணையின் துறைகளில் முதுமொழிக் காஞ்சியைக் காஞ்சிப் பொதுவியற் பால என்னும் பகுப்பில் சுட்டியுள்ளார் ஆசிரியர். இதனை ஐயனாரிதனார்,

'பலர்புகழ் புலவர் பண்ணினர் தெரியும்
உலகியல் பொருள்முடி புணரக் கூறின்று'

(புறப். வெ. மா. 10.30)

எனக் கருத்துரைக்கின்றார். இதற்கு, "அறிவுடைய புலவர் அறம், பொருள் இன்பங்களின் இயல்பினை உணர்த்தியது முதுமொழிக் காஞ்சி என்னுந் துறையாம்"(23) என்பர் பெருமழைப் புலவர் பொ.வே.சோமசுந்தரனார். இப்பாடலில் 'பிறந்தவர் இறத்தலும் இறந்தவர் பிறத்தலும் உண்டு' என்ற அறம் சுட்டப்படுகிறது. இதனை,

'மாய்த லுாண்மையும் பிறத்த லுண்மையும்
அறியா தோரையு மறியக் காட்டி'

(புறம். 27;12-13)

என்ற அடிகள் உணர்த்துகின்றன. மனிதரில் மூதறிஞர் இருப்பது போல அறிவுரை மொழியிலும் முதுமொழி அமைகிறது. காலங்கடந்து என்றும் நின்று நிலைக்கும் மொழி முதுமொழி.

## நல்ல உடல் - நலமே செய்க

மக்கட் பிறவியில் குருடு, வடிவமற்ற தசைத்திரள், கூன், குறள், ஊமை, செவிடு, மா, மருள் என்ற எட்டுவகைக் குறைகளும் உள்ளவர்கள் எந்த வகைப் பயனும் அடைவதிலலை. இக்குறை ஏதும் இல்லாதவன் நீ! அதை யான் உணர்ந்ததால் அது பற்றி ஒன்றும் கூறவில்லை. வட்ட வரிகளையுடைய செம்பொறிச் சேவல் புனங்காப்பரைத் துயில் எழுப்பும் காட்டிலே சென்று உன் பகைவர்கள் மறைந்து விட்டனர். வேலியின் புறத்தே நின்று வேண்டுபவர்களுக்கு உள்ளே இருப்போர் கரும்புகளை எறிய, தாமரைப்பூந்தாதுகள் உதிர்ந்து பொய்கையில் வீழ்ந்தன. இவை அலைகளினால் கூத்தர் ஆடுகளம் போன்று காட்சியளிக்கின்றன. அத்தகைய வளநாட்டின் தலைவன் நீ! எனவே உன்னை வாழ்த்த வேண்டியதில்லை. அறம், பொருள் இன்பம் ஆகிய இம் மூன்றும் செய்பவன் நீ! உன்னைப் போற்றாதவரே உன் செல்வத்தைப் பெறாதவர்களாவர்' எனப் புறப்பாடலில் (புறம்.28) நலங்கிள்ளியைச் சிறப்பிக்கிறார் உறையூர் முதுகண்ணன் சாத்தனார்.

எல்லாத் திணைகளுக்கும் பொதுவான செய்திகளைக் கூறுவதால் இப்பாட்டின் திணை பொதுவியலாயிற்று. தொல்காப்பியர் 'பொதுவியல்' என்னும் திணை ஒன்றைக் குறித்திலர். ஐயனாரிதனார் பொதுவியல் திணையை அமைத்து அதன் துறைகளில் முதுமொழிக் காஞ்கியைக் கூறுகிறார். இன்மொழி என்னும் துறையை இங்குக் கூறவில்லை; திணை சுட்டும்போது பாடாண் திணை என்று சுட்டுகிறார். ஆனால் தொல்காப்பியர் பாடாண் திணையில் இயன்மொழியைக் கூறுகிறார். இப்பாடலில் நலங்கிள்ளியின் வீரத்தின் இயல்பை,

'வட்ட வரிய செம்பொறிச் சேவல்
ஏனல் காப்போ ருணர்த்திய கூஉம்
கானத் தோர் நின் றெவ்வர் நீயே'

(புறம். 28; 8-10)

எனச் சுட்டுவதால் இயன்மொழியெனும் துறை பெறப்படுகிறது. இப்புறப்பாடலில் அறம் பொருள், இன்பத்திணை, அறனும் பொருளும் பின் மூன்றும் ஆற்றும் பெருமநின் செல்வம்' (புறம்.28;15) எனக் குறிப்பிடுவதால் முதுமொழிக் காஞ்சி என்னும் துறையும் பொருந்துகிறது.

உறையூர்ப் புலவர்களின் பாடல்களில் இப்பாட்டு இரண்டு திணையும் இரண்டு துறையும் வகுக்கப்பட்டதாகும். "உறையூர் முதுகண்ணன் சாத்தனார், திணை, துறை நோக்கத்தில் புறப்பாடல் பாடியிருப்பின் ஒரு திணையோ துறையோ தான் அமைய வாய்ப்புண்டு. புலவர்களின் புலமை நலத்தைக் கட்டுப்படுத்த முடியாது அவர்கள் தம் மனக் கருத்திற்கும் எண்ண ஓட்டத்திற்கும் கற்பனைக்கும் தக்கவாறு

பாட்டுப் பாடினர். திணை, துறை வகுத்தோர், பாடலின் பாடு பொருளை நோக்கி இரண்டு திணை இரண்டு துறை எழுதினர்."(24)

## நல்லோர்க்கும் பயன்படும் செல்வம்

'வேந்தே! நின் திருவோலகத்தில் நின் புகழ்பாடும் பாணர் நிறைதல் வேண்டும்; பாணர் இசைகேட்ட பின்பு மகளிர் கூட்டத்தின் இன்பத்தை நுகர்தல் வேண்டும்; கொடியவரை ஒறுப்பதும், நல்லோரை ஏத்தலும் வேண்டும். இவற்றொடு அமையாது நீ சிற்றினம சேர்தல் ஆகாது. நீ வழங்கும் நாடு பெற்றுச் சிறக்கும் படைத்தலைவர் நின்பால் வருநர்க்கும் உதவுமாறு நின் செய்கை முறைப்பட அமைதல் வேண்டும். கூத்தாட்டவைக் குழாம் போலக் கூடுதலும் கழிதலுமுடையது இவ்வுலகம். இதன்கண் நின் சுற்றத்தார் நினக்கு நகைப்புறமாக நின் செல்வம் இசைப்புறமாக விளங்குதல் வேண்டும்! (புறம்.29) என்று நலங்கிள்ளிக்குப் புலவர் அறமுணர்த்துகிறார்.

இப்புறநானூற்றுப் பாட்டு, எல்லாத் திணைகளுக்கும் பொதுவான செய்திகளைக் கூறுவதால் திணை பொதுவியல் ஆயிற்று; சோழன் நலங்கிள்ளியின் கொடையும் பண்பு நலனும் இயல்பாகக் கூறினமையான், இயன்மொழி என்னும் துறையாயிற்று. சோழன் நலங்கிள்ளிக்கு அறிவுரை கூறும் பாங்கிலும் வாழ்க்கைப் பொருளின் சிறப்பினை எடுத்துக் கூறுவதாலும் முதுமொழிக் காஞ்சி என்னும் துறை பொருத்தமாகின்றது.

## நலங்கிள்ளியின் இயல்பு

வேந்தே! செஞ்ஞாயிற்றின் செலவும் அதன் இயக்கமும் மண்டிலமும் திசையும், ஆகாயமும் என இவற்றின் அளவை நேரில் சென்று கண்டவரைப் போலத் தம் அறிவால் ஆராய்ந்து உரைப்போரும் உள்ளார். அவர்களாலும் ஆராய்ந்து அறிய முடியாத அடக்கமுடையவானய்க் கல்லைக் கடவுளில் அடக்கியுள்ள களிறு போல உன் வீரம் முழுவதையும் அடக்கிக் கொண்டு விளங்குகிறாய். கூம்பின் மேற்பாயினையும் களையாது, மேற்பாரமும் அகற்றாது ஆற்றுமுகத்துள் புகுந்த பெருங்கலத்தில் வந்த பொருளைப் பரதவர் இடைப்புலப் பெருவழிக் கண்ணே கொண்டு செல்லுங் காலத்தே பொருளின் செழுமையால் கண்ணே கொண்டு செல்லுங் காலத்தே, பொருளின் செழுமையால் அருமை அறியாது வழி நெடுகச் சொரிந்து கொண்டே கவலையின்றிச் செல்லும் நாட்டினை உடையவன் (புறம்.30) எனச் சோழன் நலங்கிள்ளியைச் சிறப்பிக்கிறார் புலவர்.

சோழன் நலங்கிள்ளியின் புகழையும் வீரத்தையும் செல்வ வளத்தையும் ஒருங்கு கூறுவதால் திணை பாடாண் திணையாயிற்று; நலங்கிள்ளியின் வீரத்தையும் புகழையும் புனைவின்றி இயல்பாகக் கூறினமையால் இயன்மொழியாயிற்று.

## தலைவனூர்

களிறுகள் நீராடிய ஊற்றுக்கு அருகாமையிலுள்ள பூமியிலே பெரும் அடைமழை பெய்து வெறித்தாற்போலக் குழி குழியாக நீர் தேங்கி நிற்க, அதனைப் பசுக்கள் உண்ணும். அதனால் எங்கும் சேறுபடும்.

அச்சேற்றிற்கு அருகிலுள்ள ஊற்று நீரையே முறையாகச் சென்று முகந்து உண்ணும் நாகரிகம் இல்லாத வாழ்க்கையும் முள்ளம் பன்றியை வெல்லும் ஆற்றலுமுடைய வேட்டுவர்கள், தாம் கொன்று வந்த பன்றித் தசையை அறுத்துப் படலைச் சிறு முற்றத்திலே தமக்குள் பங்கு வைத்துத் தின்பதற்காக நெருப்பிலே வாட்டிக் கொண்டிருப்பர். அத்தகைய நிணநாற்றம் தெருவெல்லாம் கமழ்கிறது. அங்கே, மன்றத்து இத்திமர நிழலிலே பெரிய தலைமையிடைய சிறுவர்கள் கணை எய்து விளையாடிக் கொண்டிருப்பர். கடத்தற்கரிய காவற்காடுகள் சூழ்ந்ததும் வெற்றிவேலைக் கொண்டு மூவேந்தரும் தம் பெரும் படைகளுடன் ஒருங்கே வரினும் தாங்கும் ஆற்றலுடையதும் அவ்வூர். அதுவே குன்றாத ஈகை உடையவனான எம் நெடுந்தகையின் பேரூராகும். (புறம். 325) என்கிறார் ஆசிரியர். பாட்டுடைத் தலைவனின் வீரத்தை.

'............................... வென்வேல்
வேந்துதலை வரினும் தாங்கும்'

(புறம். 325;13-14)

எனக் குறிப்பிடுவதால் திணை வாகையாயிற்று. தலைவனது பேரூரின் இயல்பின் சிறப்பினைப் பாடுவதால் துறை வல்லாண் முல்லையாயிற்று.

உறையூர் முதுகூத்தனார்

அகமும், புறமும் பாடிய உறையூர்ப் புலவர்களில் இவரும் ஒருவர். இவர் புறநானூற்றில் (புறம்.331) ஒரு பாடலை வாகைத் திணையில் மூதின்முல்லைத் துறைபட இயற்றியுள்ளார்.

செங்கல்லை அறுத்துக் கட்டிய உட்பு நீர்க் கிணறும், வில்லின் பயனாக அமைந்த வாழ்க்கையும் உடைய சீறூர் அவன் ஊர். மனவலிமையுடைய அவன், பெரிதும் வறுமையுற்றாலும் பனி மிகுந்து நடுக்கம் விளைவிக்கும் காலத்திலே கையுடன் நெருப்பு இல்லது போயினும், தீக்கடைந்து நெருப்பு உண்டாக்கிக் கொள்ளும் இடையரைப் போல, நினைத்தால் இல்லாததைப் படைத்துக் கொள்ளவும் வலிமையுடையவன் ஆவான். அவன் மனைவியும் அவனைப் போலவே அவரவர் தகுதிநோக்கிக் கொடுப்பவள்; வரையாது வழங்குவதற்கேற்ற செல்வ வளம் அவனிடம் மிகுந்தால், காவல் மன்னர் கடைமுகத்திலே கொட்டும் வெண்சோற்றுப் பலியினைப் போல, வருபவர் யாவர்க்கும் வரையாது கொடுக்கும் வல்லவன் அவன் எனச் சிறப்பிக்கிறார் முதுகூத்தனார்.

பாடல் தலைவனின் வலிமையைக் கூறவதால் திணை வாகையாயிற்று. தொல்காப்பியர் வாகைத் திணையில் மூதின்முல்லையைச் சுட்டவில்லை. ஐயனாரிதனார் வாகைத் திணையின் துறைகளில் ஒன்றாக மூதின் முல்லையை,

'அடல்வேல் ஆடவர்க் கன்றியும் அவ்வில்
மடவரல் மகளிர்க்கு மறமிகுந் தன்று'

(புறப். வெ. மா. 8;21)

என்று கூறுவர். "மறக்குடி மகளிரின் மறப்பண்பினைக் கூறியது மூதின் முல்லை என்னும் துறையாம்"(25) என்பர். பொ.வே.சோம.சுந்தரனார்.

இப்பாடலில் பாட்டுடைத் தலைவனின் மனைவியின் கொடைத் தன்மையைக் கூறுவதால் துறை மூதின் முல்லையாயிற்று.

## ஐயூர் முடவனார்

ஐயூர் முடவனார் பாடிய புறநானூற்றுப்பாடல் (22) ஒன்றே. இப்பாட்டில் வேங்கை மார்பனை வெற்றிகொண்ட கானப் பேரெயில் கடந்த உக்கிரப் பெருவழுதியை சிறப்பிக்கிறார் ஐயூர் முடவனார். பாதாளம் வரை தோண்டப்பெற்ற ஆழமான அகழியும், நட்சத்திரங்கள் சூழ்ந்த வானத்தையும், உயர்ந்த அழகிய மதில்களும் சூழ, சூரியனுடைய கதிரும் உள்ளே செல்லமுடியாத பெரிய வலிமையான காவலும் அதற்குரிய வலிமையும் உடைய கானப்பேர் எயில் என்கிற நிலப்பரப்பு கொல்லனின் உலைக்களத்தில் காய்ச்சிய இரும்பு உண்ட நீர் மீளாது ஆவியாதல் போன்று கானப்பேரெயிலை அடைந்த பகைவரின் படைகள் அழிவது இயல்பு. இத்தகைய மார்பன் வருந்தும்படி வெற்றியைப் பெற்றுச் சிறந்த உக்கிரப் பெருவழுதியே! புலவர்கள் பாடுகின்ற வெற்றி மேவும் புறத்துறைகளைச் செயலில் காட்டிய வெற்றிவேந்தே! நின்னை இகழ்ந்தவரும் அவர்தம் புகழும் அழிய நின் பெரும்புகழ் நன்கு விளங்குதாக! நின் கையில் உள்ள வேல் சிறப்பதாக! என்று பாட்டுடைத் தலைவனின் வெற்றிவேலைப் புகழ்ந்து பாடுவதால் பாடலின் திணை வாகையாயிற்று. இலக்கியத்தில் கூறப்பெறும் புறத்துறையின் யாவற்றையும் இவ்வேந்தன் போர் நிலையில் செயல்படுத்தியதை விதந்து கூறுதலால் துறை அரசவாகையாயிற்று.

போர்த் திறத்தால் வெற்றிவாகை சூடிய கானப்பேரெயில் கடந்த உக்கிரப்பெருவழுதி, இலக்கிய உலகிலும் முடி சூடா மன்னனாகத்

திகழ்கிறான். தமிழ்ப் பற்றுடைய இவன், எட்டுத்தொகையில் ஒன்றான அகநானூற்றைத் தொகுத்தவன் என்பது ஈண்டு குறிப்பிடத்தக்கது.

## காவற்பெண்டு

சோழன் போர்வைக் கோப்பெருநற்கிள்ளியின் செவிலித்தாயாக விளங்கிய இவர் பாடிய புறநானூற்றுப் பாடல் (86) ஒன்றே. இவர் சிறந்த மறக்குடியில் பிறந்து வளர்ந்து, மறக்குடியில் வாழ்க்கைப்பட்டவர். இவருக்கு வீரம் மிக்க மகனொருவன் இருந்தான். ஆனால் அவன் பெயரை அறியமுடியவில்லை.

## வீரனின் விழைவிடம் இதுவே!

என்னுடைய சிறிய வீட்டில் உள்ள தூணைப் பற்றி நின்று, நின் மகன் எவ்விடத்தில் உள்ளான்? என்று வினவுகின்றாய். அவன் எவ்விடத்தில் உள்ளான் என்பதை நான் அறிவேன். மலைக் குகையில் புலி பதுங்கிக் கிடந்து பின் வெளியே செல்வதைப் போன்று அவனைப் பெற்ற வயிறு இதுவே! அவன் தோன்றுவது போர்களமே! அங்கு சென்று அவனைக் காண்பாயாக! என்று தன் மகனின் வீரத்தை எடுத்துக் காட்டுவதால் பாடலின் திணை வாகையாயிற்று. மறப்பண்பு மேலும் மேலும் வளருமியல்புடைய மறக்குடியின் ஒழுக்கத்தைக் கூறுவது ஏறாண்முல்லை. ஐயனாரிதனாரும்,

'மாறின்றி மறங்கனலும்
ஏறாண்குடி எடுத்துரைத்தன்று'

(புறப். வெ. மா. 8.22)

என்ற கொளுவின் மூலம் விளக்குவர். பாட்டுடைத் தலைவனின் மறக்குடியை,

> 'புலிசேர்ந்து போகிய கல்அளைபோல
> ஈன்ற வயிறோ இதுவே,
> தோன்றுவன் மாதோ! போர்களத்தானே!'
>
> (புறம். 86 : 5-7)

சிறப்பித்துப் பாடுவதால் துறை ஏறாண் முல்லையாயிற்று. ஏறாண் = ஏறு + ஆண். அதாவது ஆண்மைத் தன்மையை எடுத்துக் கூறுவது.

## காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக் கண்ணனார்

இவர் புறநானூற்றில் பாடிய பாடல்கள் ஐந்து. வஞ்சி, பாடாண், காஞ்சித் திணையில் இப்பாடல்கள் அமைந்துள்ளன. இவர் சோழன் குளமுற்றத்துஞ்சிய கிள்ளிவளவன், பாண்டியன் வெள்ளியம் பலத்துத் துஞ்சிய பெருவழுதி, பிட்டங்கொற்றன் ஆகியோரைச் சிறப்பித்துப் பாடல்களை இயற்றியுள்ளார்.

## போரைத் தவிர்க!

பாண்டியன் இளவந்திகைப் பள்ளித்துஞ்சிய நன்மாறனிடம் காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார் ஒரு புறப்பாடலின் (57) வழியே ஒரு கோரிக்கையை முன் வைக்கிறார். அதாவது 'வலிமையுடையர்களும், அல்லாதோறும் நின்னைப் புகழ்ந்து போற்றுபவர்களுக்கு திருமாலைப்போன்று வாழவைக்கும் சிறப்புடைய பாண்டியன் நன்மாறனே!

நின்னிடம் ஒன்றைக் கூறுகின்றேன. பகைவர் நாட்டின் மீது படையெடுத்துச் செல்லும்போது விளைச்சல் நிலங்களை கொள்ளையிடு; நலம் விளங்கும் பெரிய ஊர்களையும் நெருப்பிட்டு எரியூட்டு; உன் பகைவரை வேலால் அழித்துக் கொன்றுவிடு. ஆனால் அவ்வூரில் உள்ள காவல் மரங்களை மட்டும் அழிக்காதே! அவை இளமையான மரங்கள். உன்னுடைய பெரிய யானைகளுக்கு கட்டுத் தறிகளாக இருக்க அவை தாங்காது என்று கூறி போர் புரிவதைக் கைவிடுமாறு மறைமுகமாக உணர்த்துகிறார் புலவர்.

பாட்டுடைத் தலைவனின் வீரம் புகழ்ந்து பேசுவதால் இப்பாடலின் திணை வஞ்சியாயிற்று. காவல் மரத்தை அழிப்பது வீரத்தின் சிறப்பைக் காட்டுவதாயினும் அதனை மட்டும் தவிர்க்குமாறு புலவர் வேண்டுவதால் துறை துணை வஞ்சியாயிற்று.

சோழன் குராப்பள்ளித்துஞ்சிய பெருந்திருமாவளவனும், பாண்டியன் வெள்ளியம்பலத்துத் துஞ்சிய பெருவழுதியும் ஒருங்கே நட்புக்கொண்டிருந்தனர். இதனைக் கண்ட காரிக்ககண்ணனார் ஒரு புறப்பாடலை (58) உடனிலைத் துறையில் அமைக்கிறார்.

## இன்றே போல்க நும் புணர்ச்சி

பால்போன்ற வெண்மையான பனைக் கொடியுடைய பலராமனும் நீல நிறம் கொண்டு சக்கரப் படையை உடைய திருமாலும் ஆகிய இரு பெரிய கடவுளரைப் போன்று இருவரும் இருக்கின்றீர். மாற்றார் அஞ்சும் வகையில் இருக்கும் நீங்கள் இருவரும் இன்றுபோல் என்றும் நட்புடன் விளங்குவீராக! நீவிர் இருவரும் ஒருவருக்கொருவர் உதவி புரிந்து வாழ்க!

மனம் மாறுபாடு கொண்டு பிரிந்துவிடாது ஒற்றுமையுடன் வாழ வேண்டும். பழந்தமிழர் சென்ற நன்னெறியும் பாதுகாக்கத் தவறாதீர்கள். போர்க்களத்தில் உங்களது வேல் வெற்றி பெறுக! பகைவருடைய நாடுகள் உங்களுக்குக் கிழ்ப்படுவதாக! என்று இருவரையும் இணைத்துப்பாடல் செய்கிறார் புலவர் காரிக் கண்ணார்.

திருமாவளவனையும், பாண்டியன் பெருவழுதியையும் சிறப்பித்துப் பாடுவதால் திணை பாடாண் திணையாயிற்று. இருவரையும் 'இன்றே போல்கநும் புணர்ச்சி! (புறம்.58:28) என்று குறிப்பிடுவதால் துறை உடனிலையாயிற்று.

பிட்டங்கொற்றன் என்பவன் சேரமான் கோதைக்குப் படைத்துணையாக இருந்தான். பேராண்மையும் கைவண்மையும் ஒருங்கே பெற்றவன். இவனைச் சான்றோர் பலரும் பாராட்டும் தகுதி பெற்றவன். இவன் குதிரை மலையைச் சார்ந்த நாட்டையுடைவன். இவனைக் காண விழைந்து காவிரிப் பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார் முயன்றார். ஒவ்வொரு முறையும் அவன் போரில் ஈடுபட்டு படைக் களத்தில் இருந்ததால் காண இயலவில்லை. ஒருமுறை போர்களத்தே செல்லவேண்டிய கடமை இருந்தபோது காணும் வாய்ப்பு கிடைத்தது. அப்போது தாம் பெற கருதிய பரிசிலை வேண்டி ஒரு புறப்பாடலை (169) செய்கிறார் புலவர். இப்பாடல் பாடாண்திணையில் பரிசில் கடா நிலையில் அமைந்துள்ளது.

## இன்னே விடுமதி பரிசில்

பெருமையுடைய பிட்டங் கொற்றனே! நின்னுடைய படை, பகைவரை எதிர்த்துச் செல்லும்போது முன்னே நிற்பாய். மாற்றார் படை

நின்னைநோக்கி வரும்போது அகன்ற ஆற்றின் குறுக்கே அணைபோல் நின்று தடுக்கும் மலைபோன்று பின்னே நிற்பாய். அதனால் நின்னுடைய திருமுகத்தைக் காண்பது அரிதாக உள்ளது. எனது சுற்றமோ வறுமையில் வாடுகின்றனர். ஆதலால் இப்போதே பெருஞ்செல்வத்தைப் பரிசாக நல்கி என்னை அனுப்புக! என்று பரிசில் வேண்டிப் பாடல் செய்கிறார் புலவர் காரிக்கண்ணனார். பாடலில் 'இன்னே விடுமதி பரிசில்! (புறம்.169:8) என்ற சொற்றொடர் இடம்பெறுவதால் துறை பரிசில் கடாநிலையாயிற்று.

மேற்கூறிய பாடலின் தொடர்ச்சியாக மற்றொரு புறப்பாடல் (171) அமைகிறது. பரிசில் கடாநிலையில் அமைந்த பாடலினைத் தொடர்ந்து பிட்டங்கொற்றனின் கொடையைப் புகழ்ந்து காரிக்கண்ணனார்,

'இன்று செலினும் தருமே; சிறுவரை
நின்று செவினும் தருமே; பின்னும்
முன்னே தந்தனென் என்னாது துன்னி
வைகலும் செலினும் பொய்யலன் ஆகி
யாம் வேண்டியாங்கு எம் வறுங்கலம் நிறைப்போன்'

(புறம். 171:1-5)

என்று வெளிப்படுத்துகிறார். இவ்வாறு ஈகை புரியும் என்தலைவன் பாதத்தில் முள்ளும், நோயும் செய்யாது ஒழிக! இரவலர்களை வாழவைக்கும் அவன் தாள் வாழ்க! என்று இயன்மொழியாக வாழ்த்துவதால் துறை இயன்மொழியாயிற்று.

## தொல்குடி மன்னன் மகள்

காரிக்கண்ணார் பாடிய 353 ஆவது புறநானூற்றுப் பாடலின் பாட்டுடைத் தலைவன் யாரெனத் தெரியவில்லை. இப்பாடலின் திணை காஞ்சி; துறை மகட்பாற்காஞ்சி. குற்றமில்லாத பொற்கொல்லன் அழகுடன் புனைந்த பல காசுகளையுடைய பொன்னாலான ஆபரணம் செய்ய அணியப்பெற்ற அல்குல்லும், தலையில் தரித்த பொன் மாலையும் விளங்கப்பெற்று, பெண்களுக்குரிய பண்புகளோடு உடைய இப்பெண்ணைக் கண்டதும், தேரை நிறுத்திய வெல்போர்த் தலைவனே! இப்பெண்மகள் யாரென வினவுதல் செய்தனை. யான் கூறக் கேட்பாயாக! இவள் குன்றுபோல் அகன்ற இடத்தில் குவித்த நெல்லை வலிமையான விற்போர் செய்யும் வீரர்களுக்கு நாள்தோறும் குறைவில்லாது உணவு கொள்ளும் படி வழங்கிய தொன்மையான குடியைச் சேர்ந்த மன்னனின் மகள். முன்நாளில் இவனை விரும்பி வந்த வேந்தனைத் தாக்கி குருதி பெருகுமாறு, வாய் மடித்து வடுபட்ட கூர்மையான வாளுடன் புண்பட்டவராய்ப் புண்பட்ட இடத்தில் பொருந்திய பஞ்சையும் களையாது இவள் தமையன்மார்கள் அச்சம் தரக் கூடியவராக விளங்குகின்றார்கள். எனவே இம்மகளைப் பெறுவது அரிது என்ற குறிப்புடன் இப்பாடலை காரிக்கண்ணனார் அமைகிறார்.

தொல்காப்பியர் மகட்பாற் காஞ்சித் துறையை காஞ்சித் திணையில் அடக்குவர். “ஒத்து மாறுபட்டுத் தன்மேல் வந்த வேந்தனோடு தன் குலத்து மகட்கொடை அஞ்சிய மகடற்பாற்காஞ்சி”(24) என்று விளக்கம் தருகிறார் இளம்பூரணர். தொன்மைக் குடியில் பிறந்த மகளை அடைவது எளிதன்று என்று கூறவதால் பாடலின் திணை மகட்பாற் காஞ்சியாயிற்று.

இப்பாடலின் 13-ஆவது அடி கிடைக்கப்பெறவில்லை. பாடலில் தலைவியின் பெயரோ, அவளது தந்தையின் பெயரையோ அரியமுடியவில்லை. 'தொல்குடி மன்னன் மகளே' (புறம்.353:11) என்ற தொடரே பாடலில் இடம்பெற்றுள்ளது.

## குடவாயிற் கீரத்தனார்

இவர்பாடிய புறநானூற்றுப் பாடல் (242) ஒன்றே இப்பாடலில் ஒல்லையூர் கிழார் மகன் பெருஞ்சாத்தனை சிறப்பிக்கிறார். ஒல்லையூர் நாட்டின் ஆண்மை மிக்க வெற்றி வேலையுடைய சாத்தன் என்பவன் இறந்ததால் இளையவர்கள் மலரினைச் சூடமாட்டார்கள். வளையலை அணிந்த மகளிர் மலர் சூடவிலலை. பாடினியும் மலர் சூடவில்லை. ஆயினும் முல்லையே நீ பூத்து நிற்கின்றாயே! என்று பெருஞ்சாத்தன் இறப்பைக் கூறி கையற்றுப் பாடுகிறார் குடவாயிற் கீரனார்.

இது பொதுவியல் திணையில் கையறுநிலைத் துறையாகும். தொல்காப்பியர் 'பொதுவியல்' என்ற திணையை வகுத்திலர். எந்தத் திணையிலும் அடங்காது அனைத்துத் திணைகளுக்கும் பொதுவான செய்திகைளைப் பகுத்துப் பேசுவதால் திணை பொதுவியலாயிற்று. இருப்பினும் புறப்பொருள் வெண்பாமாலையில் பொதுவியல் துறைகளில் கையறுநிலையைச் சிறப்புப் பொதுவியற்பால என்னும் பகுப்பில் சுட்டியுள்ளார் ஐயனாரிதனார். இதனை,

'செய்கழல் மன்னன் மாய்ந்தெனச் சேர்ந்தோர்
கையுற யுரைத்துக் கைசோர்ந்தன்று'

(புறப். வெ. மாலை. 10.28)

எனக் கருத்துரைக்கிறார். தொல்காப்பியர் கையறுநிலைத் துறையை காஞ்சித் திணையில் வகைப்படுத்துவார். ஐயனாரிதனார் கையறு நிலைத் துறையை கரந்தைத் திணையிலும் குறிப்பிடுகிறார். கரந்தைத் திணையிலமைந்த கையறுநிலை, வாட்போரில் இறந்துபட்ட மறவன் நிலை கண்டு அவனால் புரக்கப்பட்ட தம் கையறு கூறுவது. ஆனால் இப்பாடலில் தலைவன் இறப்பிற்குரிய காரணம் குறிப்படப்படாத காரணத்தால் பொதுவியல் திணையின் கையறுநிலைத் துறையின் தொகுக்கப்பட்டுள்ளது

## கோப்பெருஞ்சோழன்

இவர் புறநானூற்றில் மூன்று பாடல்களைப் பாடியுள்ளார். இவர் பொதுவியல், பாடாண் ஆகிய திணைகளில் பாடல்களைப் பாடியவர். சோழநாட்டு அரசப்புலவர்களில் கோப்பெருஞ்சோழன் குறிப்பிடத் தக்கவர். இவர் உயிர்க்கு உறுதி தருவனவாகிய மெய்பொருளை உணர்த்தும் வகையில் ஒரு பாடலைப் (214) பாடியுள்ளார்.

## பிறவிப் பயன்

நல்வினை நம்மால் செய்ய முடியுமோ என்ற ஐயப்பாடு உடையவர்கள், அதிலிருந்து நீங்காதவர்களாகி அழுக்குப் படிந்த உள்ளத்துடன் தெளிவற்றவர்களாக விளங்குவர். யானை வேட்டையாடச் சென்றவன் அதனை எளிதாகச்செய்வான். சிறிய பறவை இனமான காடையை வேட்டையாடச் சென்றவன் வெறுமனே திரும்புதலும் உண்டு. அதனால் உயர்ந்த நோக்கத்தினையுடைய உயர்ந்தவர்களுக்குத் தாம் செய்த

நல்வினையை நுகர்தல் உண்டாயின் தேவர் உலகத்தின் இன்பத்தை அடைதலும் கூடும். தேவர் உலகத்தின் நுகர்ச்சி இல்லை என்றாலும் மாறி மாறிப் பிறக்கும் பிறவிப் பிணியலிருந்து விடுபட்டு பிறவாப் பேரின்பமும் கூடும் அவர்கள் மீண்டும் பிறவி எடுக்கவில்லை என்றாலும் இமயம் போன்று பெரும்புகழ் கொண்டு விளங்குவார்கள். தம் புகழை உலகத்தில் நிலை நிறுத்திக் குற்றமில்லாத இந்த உடலை விடுவது எத்தன்மையிலும் தலையாயது. அதனால் நல்வினை செய்தல் உயர்வுடையது என்று மெய்ப்பொருளை உணர்த்துகிறார் கோப்பெருஞ்சோழன்.

தனது சொந்த வாழ்வில் பெற்ற அனுபவத்தின் வாயிலாக உயரிய கருத்தினை அவரால் சொல்ல முடிந்தது. இப்பாட்டு அனைத்துத் திணைகளுக்கும் பொதுவான செய்திகளைப் பகுத்துக் கூறுவதால் திணை பொதுவியலாயிற்று.

மக்கள் செயலால் கோப்பெருஞ்சோழன் துறவு பூண்டு, வடக்கிருந்து உயிர்துறந்து புகழ் நிறுவக் கருதியவன். வடக்கிருத்தலாவது, ஊர்ப் புறத்தே தனியிடங்கண்டு, அறமுரைக்கும் சான்றோர் புடைசூழ, புல்லைப் பரப்பி அதன் மீதிலிருந்து உண்ணா நோன்பு மேற்கொண்டு அறம்கூறும் தவம் செய்தலாகும். இத்தவம் செய்து உயிர் துறப்போர் வானோர் உலகம் புகுந்து இன்புறுவர் என்பது சங்ககால மக்களின் நம்பிக்கை. ‘வடக்கிருத்தல்’ செயலைச் செய்யத் தொடங்கிய போது, அருகில் இருந்தோர்க்கு வாழ்க்கையின் உண்மையையும் நிலையாமையையும் எடுத்துக் கூறுவதால் பாடலின் துறை பொருண்மொழிக் காஞ்சியாயிற்று. இப்பாடல் புறப்பொருள் வெண்பாமாலையை அடியொற்றியே அமைந்துள்ளது. எனவே நல்வினை செய்தார் இம்மையிற் புகழும் மறுமையில் இன்பமும் வீடும் பெறுவர்’ என்று குறிப்பாக அறத்தை வலியுறுத்துகிறார் கோப்பெருஞ்சோழன்.

## உயிர் நண்பன்

கோப்பெருஞ்சோழன் வடக்கிருந்தலின்போது பிசிராந்தையார் வாரார் என்ற சான்றோர்க்கு அவர் வருவார் என்று சொல்லியதாக அமைந்த புறநானூற்றுப்பாடல் (215) பாடாண் திணையில் இயன்மொழியாக இடம்பெற்றுள்ளது. கோப்பெருஞ்சோழன் வடக்கிருந்தபோது சான்றோர் பலர் அவனைச் சூழ்ந்து இருந்தனர். வேறு பல நண்பர்களும் அவரை அவ்வப்போது வந்து கண்ட வண்ணம் இருந்தனர். இவ்வாறு நண்பர்கள் பலரும் அருகில் இருந்த போதும் கோப்பெருஞ்சோழனது நெஞ்சம் பாண்டிய நாட்டில் பிசி என்றும் ஊரில் உள்ள பிசிராந்தையாரிடம் சென்றது. ஓருவரையொருவர் நேரில் கூட சந்தித்துப் பழகாத நட்பு கோப்பெருஞ்சோழன் - பிசிராந்தையார் நட்பு சோழன் வடக்கிருக்கும் செய்தி ஒருவேளை பிசிராந்தையார்க்குத் தெரியாது போலும். பிசி என்னும் ஊர் பாண்டியநாட்டில் நெடுந்தொலைவில் உள்ளது. அவருக்கு இச்செய்தி சென்று சேர்தலும் எளிதன்று. செய்தி தெரிந்தாலும் அவர் தவறாது வருவார் என்பதும் ஐயப்பாடற்குரியது' என்று சான்றோர் தம்முட் பேசிக் கொண்டதைக் கேட்ட கோப்பெருஞ்சோழன்,

'தென்னம் பொருப்பன் நன்னாட்டு உள்ளும்
பிசிரோன் என்ப, என் உயிர் ஓம்புநனே
செல்வக் காலை நிற்பினும்
அல்லற் காலை நில்லலன் மன்னே'

(புறம். 215:7-10)

என்று பாடுகிறார். தெற்கில் பொதிய மலைத் தலைவனான பாண்டியனின் நாட்டில் என்னையே நினைத்துக் கொண்டிருப்பவன் பிசிராந்தை. என்

உயிரைத் தன்னுயிராக ஓம்புவன். நான் அரசு புரிந்து செல்வநிலையில் இருக்கும்போது வாராவிடினும் இப்போது என் உயிர் மடிகின்ற வேலையில் வாராது நிற்க மாட்டான் என்று கூறுகிறார்.

பிசிராந்தையாரின் பண்பு நலனைப் பாடுவதால் திணை பாடாண் எனப்பட்டது. அவன் இயல்பையும் சிறப்பையும் என் உயிரை தன் உயிராக ஓம்பும் நட்புடையவன் என்று இணைத்து மொழிவதால் இஃது இயல்மொழியாயிற்று.

## இட ஒதுக்கீடு

மேற்கூரிய பாடற்கருத்தின் தொடர்ச்சியாக புறநானூற்றுப் பாடல் (216) அமைகிறது. பிசிராந்தையார் தங்களைப் பற்றி கேள்விப்பட்டுள்ளாரே தவிர நேரில் கண்டதில்லை. பல ஆண்டுகள் பழகிய நண்பராயினும் நேரில் வந்து வடக்கிருத்தலில் கலந்து கொள்வது அரிது. நட்பு நெறியில் திரியாது ஒழுகுவதும் அரிது என்று சான்றோர் கூறக் கேட்ட கோப்பெருஞ்சோழன், நிறைந்த அறிவுடையவர்களே! காதால் கேட்டல் மாத்திரமே கொண்டு ஒருவரையொருவர் நேரில் காணாது ஆண்டுகள் பல கழியலாயிற்று. அதனால் அவர் இங்கே இந்த நேரத்தில் வருவார் என்று ஐயம் கொள்ள வேண்டாம். அவன் என்னை இகழாத பண்பினன். இனியவன். உள்ளம் கலந்த நண்பன் புகழ்கெட உண்டாகும் பொய்ம்மை வாழ்க்கையை விரும்பாதவன். அவன் என்னையே நினைத்துக் கொண்டிருப்பதால் தன் பெயரையே சோழன் என்று கூறும் அன்பு உடையவன். எல்லாவற்றுக்கும் மேலாக இப்போது வராமல் நிற்கமாட்டான். உடனே வருவான். எனவே அவனுக்கு என்று ஓர் இடத்தை ஒதுக்குங்கள்' என்று கூறுகின்றான். பாடப்பெறும் ஆண்மகனின்

பண்பினை வெளிப்படுத்துவதால் திணை பாடாண் ஆயிற்று. பிசிராந்தையாரின் நட்பினை இயல்பாக எடுத்துக்கூறுதால் துறை இயன்மொழியாயிற்று.

## கோவூர் கிழார்

இவர் பாடிய புறநானூற்றுப் பாடல்கள் பதினைந்து. புறப்பாடல்கள் அதிகம் பாடியவர்களில் இவரும் ஒருவர் இவர் சோழன் நலங்கிள்ளி சோழன், குளமுற்றத்துத்துஞ்சிய கிள்ளிவளவன், சோழன் நெடுங்கிள்ளி, காரியாற்றுத் துஞ்சிய நெடுங்கிள்ளி, ஆகியோர்களைச் சிறப்பித்துப்பாடியுள்ளார். இவர் பாடிய திணைகள் மூன்று அவை.

1. வாகை
2. வஞ்சி
3. பாடாண்

## கோவூர்கிழார் பாடிய துறைகள்

| வ.எண் | துறை | பாடலெண் |
|---|---|---|
| 1 | இயன்மொழி | 32, 400 |
| 2. | அரச வாகை | 31,33,44 |
| 3. | கொற்றவள்ளை | 41 |
| 4. | மூதின்முல்லை | 308 |
| 5. | பாணாற்றுப்படை | 70, 382 |
| 6. | துனைவஞ்சி | 45, 46, 47 |
| 7. | வாழ்த்தியல் | 386 |
| 8. | மழப்புலக்காஞ்சி | 31 |
| 9. | மறக்கள வழி | 373 |

இவற்றில் 31, 32, 33, 68, 382, 400 ஆகிய பாடல்களில் சோழன் நலங்கிள்ளியையும், 41, 44, 46, 70, 373, 386 ஆகிய பாடல்களில் சோழன் குளமுற்றத்துத்துஞ்சிய கிள்ளிவளவனையும் சிறப்பித்துப் பாடியுள்ளார். காரியாற்றுத்துஞ்சிய நெடுங்கிள்ளியை ஒரு பாடலிலும் (47) பாடியுள்ளார்.

'ஆரவாரம் மிக்க வேற்றுநாட்டை வெற்றிகொண்ட விழாவில் கலந்து கொண்டு கிழக்குக் கடலிலிருந்து மேற்குக் கடல் வரை நின்னுடைய குதிரையின் குளம்புகள் மோதுமாறு நீ வலம் வருவாய் என்று எண்ணிய வடமாநிலத்து அரசர்கள் நின்னை நினைத்து எப்போதும் அச்சம் கொண்டு நடுங்கி, உறக்கம் கொள்ளாது அவலம் கொண்டிருப்பர்' என்று சோழன் நலங்கிள்ளியின் போர் ஆற்றலை வியந்து பாடியதால் இப்பாடல் (31) வாகைத் திணையாயிற்று. செங்கோன்மையுடைய அரசனது இயல்பினை கூறுவது அரசவாகை ஆகும். இப்பாடலுக்கு மழப்புல வஞ்சி என்ற மற்றொரு துறையும் குறிக்கப்பெறுகிறது. ஐயனாரிதனார்,

'கூடார்முனை கொள்ளை சாற்றி
வீடறக்கவர்ந்த வினை மொழிந்தன்று'

(புறப். வெ. மா.3.15)

என்று குறிப்பிடுவார். வஞ்சி வேந்தன் தனக்குப் பகைவருடையதாகிய வேற்றுப்புலத்தைக் கொள்ளையூட்டி இல்லங்கள் பாழ்படும்படி ஆண்டுள்ள பொருள்களைக் கைப்பற்றிய செயலைக் கூறுவது மழப்புலக்காஞ்சி"[25] என்று விளக்கம் தருகிறார். பெ.வே.சோ. பாடலில் இக்குறிப்பு இல்லை. எனவே இத்துறை இப்பாடலுக்குப் பொருந்துவதாக இல்லை.

## வரையாது வழங்கும்

சோழன் நலங்கிள்ளியின் வள்ளல் தன்மையைப் பாராட்டி பாடாண்திணையில் இயன்மொழியாக அமைந்த பாடலில், சோழன் நலங்கிள்ளி இரக்கம் மிகுந்தவன். அவனை நாடி ஒருவன் பிச்சைப் பாத்திரம் ஏந்தி யாசித்தால் கருவூர் நகரத்தையே தரும் பண்பினன் இது மட்டுமன்று. ஒளி மிக்க நெற்றியுடைய விறலியர் பூவிலை தருமாறு வேண்டினால் மாடமாளிகைகள் விளங்கும் மதுரை நகரையே தரும் இயல்பினன். எனவே பரிசுப் பொருட்களை விரும்புபவர்களே இம்மன்னனைப் பாட வாருங்கள்' என்று புலவர்களை அழைக்கிறார் கோவூர்கிழார். சோழன் நலங்கிள்ளியின் கொடைத் தன்மையைச் சிறப்பித்துப் பாடுவதால் பாடலின் திணை பாடாணாயிற்று.

பொதிய மலை விளங்கும் பாண்டிய நாட்டிலுள்ள ஏழு கோட்டைக் கதவுகளை அழிந்து வெற்றிகொண்டு புலிச்சின்னத்தை பொறித்த ஆற்றல் உடையவன் சோழன் நலங்கிள்ளி. போர்ப் பாசறையில் புலவர்கள் வெற்றியைப் புகழ்ந்து பாடுகின்றனர். ஊனும் சோறும் கலந்த சுவை மிகுந்த உணவை திரட்சியான உருண்டைகளாக்கி அளிக்க உண்டு மகிழ்ந்த நிகழ்வை எடுத்துக்காட்டுகிறார். இப்புறப்பாடலில் ஏழுகோட்டைகளை வென்று பாசறையில் மகிழ்ந்திருந்த நிகழ்வினைக் கூறுவதால் பாடலின் திணை வாகையாயிற்று.

## பாணாற்றுப் படை

கோவூர்கிழார் சோழன் நலங்கிள்ளியை பாணன் கூற்றில் வைத்து, அவனது கொடைத்திறத்தை எடுத்துக்காட்டி வறுமையில் வாடும் மற்றொரு பாணனை ஆற்றுப்படுத்தும் வகையில் ஒருபுறப்பாடலை (68)

இயற்றியுள்ளார். உறந்தையில் வாழும் அப்பெரு மன்னனிடம் சென்றால் பிறர் வாயின் முன்பு சென்று மீண்டும் கேட்காதபடி பெருஞ்செல்வத்தை வழங்குவான் என்று கூறி வழிப்படுத்துவதால் இப்பாடல் பாணாற்றுப்படை துறையாயிற்று. இதனை,

'உறந்தை யோனே குரிசில்
பிறன்கடை மறப்ப நல்குவன் செலினே'

(புறம். 68:18-19)

என்ற பாடலடிகள் மெய்ப்பிக்கின்றன. தொல்காப்பியர் பாணாற்றுப்படையை பாடாண்திணையில் அடக்குவர். இதனை,

'கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும்
ஆற்றிடைக்காட்சி உறழத்தோன்றிப்
பெற்ற பெருவளம் பெறாஅர்க்கு அறிவுறீஇச்
சென்று பயன் எதிரச் சொன்ன பக்கமும்'

(தொல். 1037:3-6)

என்று விளக்குவர். தொல்காப்பியர் சுட்டிய ஆற்றுப்படை பின்னாட்களில் தனி நூலாகவே வளர்ச்சி பெற்றுத் திகழ்ந்தது.

## பசிப்பிணி மருத்துவன்

பொருநர் தலைவன் தான், சோழநாட்டு மறம்பாடும் பொருநன் என்றும், தானும் தன் சுற்றதாரும் சோழன் நலங்கிள்ளியின் போர்க்களம் பாடும் பொருநர் என்றும் கூறி நாங்கள் பாடினால் சோழன் நலங்கிள்ளியை மட்டுமே பாடுவோம். அவன் முயற்சி வெல்க! என்று

சொல்லி அவன்பாற் செல்லின் நின் பசித்துன்பம் நீங்க அவன் நெய்யிற் பொரித்த ஊனும் பல்வகைச் சோறும் தருவான் என்று ஆற்றுப்படுத்தினா். இதனால் வியப்படைந்த கோவூர்கிழார் நலங்கிள்ளியிடம் சென்று, பெரும! நின் பொருநர் இவ்வாறு கூறுகின்றனர். பாம்பு போல் தீண்டி வரும் வறுமை நீங்க எனக்கும் என் சுற்றத்தார்க்கும் வளம் பல தருவாயாக! அப்போது உன் புகழை கிணையை இசைத்துப் பாடுவேன்' என்று கிணைப்பொருநன் கூற்றில் ஒரு புறப்பாடலை (382) அமைக்கிறார் புலவர் கோவூர்கிழார். இப்பாடலின் துறை கடைநிலையாகும். தொல்காப்பியர் கடைநிலைத் துறையை பரிசில் கடைஇய கடை கூட்டு நிலை என்றும், புறப்பொருள் வெண்பாமாலை யாரால் பரிசினிலை என்றும் சுட்டப்பெறுகிறது. வாயிலிடத்தே நின்று தான் தொடங்கிய கருமத்தினை முடிக்கும் நிலையைக் கூறுவது கடைநிலையாகும். எனினும் இப்படலில் பொருநன் வாயிலில் நின்று தான் பெற கருதிய பொருளை வேண்டியதாகக் குறிப்பு இல்லை எனினும் இப்பாடல் கடைநிலைத் துறையைப் பெறுகிறது. ஈண்டு கடைநிலை என்பது வறுமையின் நிலையைக் குறிக்கிறது. இப்பாடலில் சில தொடர்கள் மாறியுள்ளன.

புறநானூற்றின் இறுதியாக அமைந்த பாடலிலும் சோழன் நலங்கிள்ளியைப் பாடாண்திணையில் இயன்மொழியாகச் சிறப்பிக்கிறா் கோவூர்கிழார். இப்பாடலின் 12, 18 - ஆம் வரிகளில் சில சொற்றொடர்கள் கிடைக்கப் பெறவில்லை. தன்னை வருத்தும் பகைவரைத் தாக்கி ஒடுக்குவதோடு மட்டுமில்லாது தன்னைச் சேர்ந்தோரின் பசிப்பகையையும் போக்குவதிலும் வல்லவன் சோழன் நலங்கிள்ளி மறைகளை நன்கு அறிந்த அந்தணர்கள் வேள்விச் சாலையில் தூண் நிறுத்தி அறச்செயல் புரிந்தவன்' என்று நலங்கிள்ளியின் சிறப்பினை இயல்புடன் எடுத்தோதுவதால் துறை இயன்மொழி ஆயிற்று.

கோவூர்கிழார், சோழவேந்தரிடைய போர் நடைபெற இருந்த போது அதனைத் தடுப்பதும், தவறு செய்யும் போது அவர்களை வழிகாட்டும் முகமாகவும் பாடல்களைப் பாடுவதன் மூலம் சமாதானத் தூதவராகத் புலவராகத் திகழ்கிறார்.

## காலனுக்கு மேலோன்

கொற்றவள்ளை என்னும் துறையில் சோழன் குறமுற்றத்துஞ்சிய கிள்ளிவளவனை சிறப்பிக்கும் பாடலில் அரசனுடைய வெற்றியையும் பகைவரின் நாடு அழிவதையும் பாடுபொருளாகக் கொண்டு அமைகிறது. மன்னின் வெற்றியை,

‘காலனும் காலம் பார்க்கும் பாராது
வேல் ஈண்டு தானை விழுமியோர் தொலைய
வேண்டிடத்து அடுஉம் வெல்போர்வேந்தே’

(புறம். 41:1-3)

என்று குறிப்பிடுவதாலும், மன்னனின் போர் ஆற்றலை நோக்கி அச்சம் கொண்ட பகைவர்கள் மயங்கினவராய் மகளிர் அறியாதவாறு மறைத்து அலமருக்கின்றனர் என்று குறிப்பிடுவதாலும் அறிய முடிகிறது. தொல்காப்பியர் கொற்றவள்ளைத் துறையை ‘குன்றாச் சிறப்பின் கொற்றவள்ளையும்’ (1009:11) என்று குறிப்பிடுவர். இப்புறப்பாடல் தொல்காப்பிய மரபின் வழி திணை, துறை செய்யபட்டுள்ளது.

கிள்ளிவளவன் தன் பகைவரான மலையமான் மக்களைக் கொணர்ந்து கொலைத் தொழிலைச் செய்யும் யானையின் காலில் இட்டுக்

கொள்ள முயன்றதைக் கண்ட கோவூர்கிழார், அதனைத் தடுக்கும் முகமாக ஒரு பாடலைப் (46) பாடியுள்ளார். நீயோ புறாவின் பொருட்டு தன்னை வழங்கிய சோழன் மரபிற் பிறந்துள்ளாய்; இவர்களோ ஏர் உழுது உண்பதற்குரிய உணவுப் பொருளைப் பயிர்செய்து வறுமைநீக்கிப் பகுத்து உண்ணும் இயல்பினர். மிகவும் இளமைத் தன்மை உடையவர்கள்; எதிர்த்து வரும் யானைக் கண்டு அழாமல் சிரிக்கின்றனர். தம்மைச் சுற்றியுள்ளோரை மருட்கையுடன் பார்க்கின்றனர். எனவே நீ இப்போது விரும்பியதைச் செய்வாயாக! என்று புலவர் குறிப்பிடுவதால் பாடலின் திணை வஞ்சியாயிற்று. துறை துணை வஞ்சியாயிற்று.

சோழன் நலங்கிள்ளியிடம் ஆற்றுப்படுத்தியவாறு வறுமையில் வாடிய பாணனை சோழன் குளமுற்றத்துத்துஞ்சிய கிள்ளவளவனிடம் ஆற்றுப்படுத்துகிறார். ஈகையிற் சிறந்த பண்ணனது சிறுகுடிக்கண் மணத்தை நாடும் வண்டு சிறிய வெள்ளாம்பல் மலரை ஊதும். அங்குள்ள பாதிரிமலரின் மணம் கமழும் கூந்தலும், ஒளிமிக்க நெற்றியும் உடைய விறலியுடன் நீ கிள்ளிவளவனிடம் சென்றால், செல்வந்தன் ஆகிவிடுவாய். விறகு வெட்டக் காட்டிற்குச் செல்பவர்கள் எதிர்பாராது பொன் பெற்று மகிழ்தலைப்போல அவன் ஈகை அமையும். எனவே நீ உறுதியாக நம்பிச் செல் என பாணனை ஆற்றுப்படுத்துவதால் இப்புறப்பாடல் (70) பாணாற்றுப்படை என்னும் துறையைப் பெறுகிறது. மன்னனின் பல்வேறு சிறப்பு இயல்புகளை எடுத்துக் கூறவதால் பாடாண் திணையாயிற்று.

## பொருநன் வேட்கை

கோவூர்கிழார், களம்பாடும் இளம்பொருநன் ஒருவன் கூற்றில் வைத்து (373) கிள்ளிவளவனைச் சிறப்பிக்கிறார். வளவன் முரசம் மழையென முழங்க, களிறுகள் முகில்போலதிரள, தேரும் குதிரைகளும்

மழைத்துளிபோற் சிதைந்து வீழ, அம்புகள் காற்றெனச் செல்ல வீரருடனே கூடிக்கொங்கரோடு பொருதி அவர் புறந்தந்தோடச் செய்தவன். இவ்வாறே குடநாட்டு வஞ்சி நகர் முற்றத்திற் போருடற்றி வயக்களாக்கினான். முன்னோராகிய பொருநர் பலர் உயர்ந்த வேந்தருடைய களந்தொறும் சென்று பாடிக் களிராகிய பரிசில் பல பெற்றனர் எனப் பெரியோர் கூறக்கேட்ட இப்பொருநன் தானும் கிள்ளிவளவன்பால் பகைப் புறத்துப் பெற்றவற்றைப் பரிசிலாகப் பெற வேண்டி வந்தாகப் பாடுகிறார்.

வெற்றிவேந்தனின் போர் திறத்தை களத்திலே கண்டு, தான் எதிரிகளிடம் பெற்ற யானைகளைப் பரிசாக வேண்டி நிற்பதால் பாடலின் திணை வாகையாவும், துறை மறக்களவழியாகவும் ஆயிற்று. இப்பாடலில் 9, 13, 14, 18, ஆகிய அடிகளில் சில தொடர்கள் கிடைக்கப்பெறவில்லை வெள்ளி மாறுவதால் நேரும் தீமையும் அதனால் நாட்டில் உண்டாக்கும் வறுமையும் தாக்காதவாறு வளவன் தம் ஈகை குணத்தால் இரவலர்களைக் காப்பவன் என்று பொருள்படும்படி பாடாண்திணையில் வாழ்த்தியலாக ஒரு பாடலை (386) அமைக்கிறார் புலவர் கோவூர்கிழார். சோழன் குளமுற்றத்துத்துஞ்சிய கிள்ளிவளவனின் வள்ளன்மையை,

‘குணதிசை நின்று குடமுதல் செலினும்
குடதிசை நின்று குணமுதல் செலினும்
வடதிசை நின்று தென்வயின் செலினும்
தென்திசை நின்று குறுகாது நீடினும்
யாண்டும் நிற்க வெள்ளியாம்
வேண்டியது உணர்ந்தோன் தாள் வாழியவே!’

(புறம். 386:20-25)

என்று வாழ்த்துவதால் பாடலின் துறை வாழ்த்தியலாயிற்று. இப்பாடல் தொல்காப்பிய அடிப்படையில் அமைந்துள்ளது.

## குலப்பெருமை

சோழன் நலங்கிள்ளிக்கும், நெடுங்கிள்ளிக்கும் இடையே போர் நடைபெறவிருந்த நிலையில் கோவூர்கிழார் அவர்களை சந்துவிக்கும் பொருட்டு ஒரு புறப்பாடலை (45) இயற்றியுள்ளார். சோழன் நலங்கிள்ளியிடம் சென்று, மன்னனே! உன்னை எதிர்த்து போர் செய்பவன் பனம் பூமாலை சூடிய சேரன் அல்லன். வேப்பம் பூ மாலை சூடிய பாண்டிய மன்னனும் அல்லன். நீ சூடியுள்ள பூவம் ஆத்திப்பூவிலானது. உன்னோடு பொருதுபவனும் அத்திப்பூ மாலையையே சூடியுள்ளான். உங்களில் ஒருவர் தோற்பினும் உமது குலம் அல்லவா தோற்றது ஆகும். போரில் இருவரும் வெற்றி பெறுவது என்பது முடியாத ஒன்று. எனவே நீங்கள் செய்யும் இப்போர் உங்கள் குலப்பெருமைக்கு உரியது அல்ல. இச்செயலால் பிற மன்னர்கள் உங்களை ஏளனம் செய்வர். எனவே போரைத் தவிர்க! என்று அறிவுரை கூறிப் போரினைத் தவிர்க்கிறார் கிழார்.

'நும்மோர் அன்ன வேந்தர்க்கு
மெய்ம்மலி உவகை செய்யும் இவ்வுலகே!'

(புறம். 45:8-9)

என்ற பாடலடிகள் மன்னனுக்கு அறிவூட்டுவதாக அமைவதால் பாடலின் துறை துணை வஞ்சியாயிற்று.

## போர் அறம் காக்க!

சோழன் நலங்கிள்ளிக்கும் காரியாற்றுத் துஞ்சிய நெடுங்கிள்ளிக்கும் பகைமை உண்டாயிற்று. அப்போது சோழன் நலங்கிள்ளியிடமிருந்து இளந்தத்தன் என்னும் புலவன் பரிசில் வேண்டி வந்த பொழுது, அவரைச் சோழன் நலங்கிள்ளியின் ஒற்றன் எனத் தவறாகக் கருதி கொலை புரிய முற்பட்டான். அதனை உணர்ந்த கோவூர்கிழார், இவ்வேந்தனுக்குத் தகுவன கூறி அப்புலவனை விடுவித்தார். பின்பு ஆவூரினைப்பெறக் கருதிய சோழன் நலங்கிள்ளி முற்றுகை இட்டான். அப்போது முற்றுகைக்கு அஞ்சி அடைபட்டிருந்த நெடுங்கிள்ளியை நோக்கி, யானைகள் வெய்துயிர்த்து முழங்குகின்றன. குழந்தைகள் பால் இன்றி அலறியழுகின்றன. மகளிர் பூக்களைத் தலையில் சூடாது வெறுந்தலையை முடிகின்றனர். இவையனைத்தையும் அறிந்தும் நீ சிறிதும் பொருட்படுத்தாது கவலையின்றி இருத்தல் கொடியது. முன்னே வந்து முற்றுகையிட்டிருக்கும் வேந்தனைப் (சோழன் நலங்கிள்ளி) பார்த்து ஈயும் அறவுணர்வால் இது உனக்கு வேண்டின் பெற்றுக் கொள்ளெனச் சொல்லி கதவினை திறத்தல் வேண்டும். எதிரூன்றிக் காத்தலே மறம் என்று கருதினால் போர் குறித்து திறந்து விடல் வேண்டும் அவ்வாறு இல்லாது மதிற்கதவைத் திறவாது ஒரு புறத்து ஒடுங்கியருப்பது நாணம் தரும் செயல்' என்று பொருள்படும் படி ஒரு புறப்பாடலின் (44) வழி நெடுங்கிள்ளிக்கு அறிவுரை செய்கிறார் புலவர் கோவூர் கிழார்.

இப்பாடலுக்கு வாகைத்திணையும், அரச வாகைத்துறையும் குறிக்கப்பட்டுள்ளது. இப்பாடலின் பொருளுக்கு ஏற்றதிணை வகுக்கப்பெறவில்லை. திணை, துறை பொருந்தாகப் புறநானூற்றுப்

பாடல்களும் சங்க இலக்கியத்தில் இடம் பெற்றுள்ளது என்பதற்கு இப்பாடல் தக்க சான்றாகும்.

## புலவரின் இயல்பு

புலவர் கோவூர்கிழார், சோழன் நெடுங்கிள்ளி, சோழன் நலங்கிள்ளியிடமிருந்து வந்த இளந்தத்தன் என்னும் புலவரை அவருடைய ஒற்றன் எனக் கருதி கொல்லச் சென்றவனைக் கண்டு, வேந்தே! வரிசை நோக்கி வாழும் புலவரது பரிசில் வாழ்க்கை பிறர்க்குத் தீங்கு செய்வது அன்று; வள்ளளை நாடிச் சென்று அவரைப்பாடி அவர் தரும் பொருள் கொண்டு பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புவது பரிசிலர் செயல். மண்ணாளும் செல்வமுடைய நும்போலும் வேந்தரையொப்பக் கல்வியால் மாறுபட்டோரைத் தம் புலமையால் வென்று தலைமை பெறுவது அவர்களின் இயல்பு' என்று கூறி அப்புலவனை விடுவிக்க வேண்டுகிறார். இதனால் புலவர்களின் நிலை உயரியது என்ற கருத்தில் அவர்களை உய்விக்குமாறு கூறிப் புலவர்களின் சிறப்பியல்பை,

'பெற்றது மகிழ்ந்து சுற்றம் அருத்தி
ஓம்பாது உண்டு, கூம்பாது வீசி,
வரிசைக்கு வருந்தும் இப்பரிசில் வாழ்க்கை'

(புறம். 47:4-6)

என்ற பாடலடிகள் வெளிப்படுத்துகின்றன. இப்பாடலின் வழி புலவர்கள் எத்தகைய அச்சத்திற்கும் ஆட்படாது தமது நாவன்மையால் வெற்றி பெறும் சிறப்புடையவர்கள் என்ற கருத்தை வலியுறுத்துகிறார்.

## சீறூர் மன்னன்

கோவூர்கிழார் சோழன் நலங்கிள்ளி, சோழன் நெடுங்கிள்ளி சோழன் குளமுற்றத்துத்துஞ்சிய கிள்ளிவளவன் ஆகிய மன்னர்களை சிறப்பித்துப் படியதோடு ஒரு குறுநில மன்னன் வீரத்தையும் பாடத் தவறிவல்லை. அக்குறுநில மன்னனின் பெயர் பாடலில் வெளிப்படவில்லை. பாடலில் 'சீறூர் மன்னன்' என்ற சொற்றொடர் மட்டும் இடம்பெறுவதால் பாட்டுடைத்தலைவன் ஒரு குறுநிலமன்னன் என்பது புலனாகிறது. இப்புறப்பாடலில் (308) அக்குறுநில மன்னனின் போர்த்திறத்தை வியந்து பாடுகிறார் புலவர் கோவூர்கிழார்.

சீறூர் மன்னன் போர்புரிதலில் பேராண்மை உடையவன். பெருவேந்தன் ஒருவனிடம் போர் செய்ய விரும்பிய சீறூர் மன்னன் நிலத்தில் நின்று போரிட்டான். பெருவேந்தன் குன்றுபோல் உயர்ந்த களிற்றின் மேல் நின்று போரிட்டான். பெருவேந்தன் வீசிய வேல் சிறூர் மன்னன் மார்பில் பாய அதனைப் பிடுங்கிய சீறூர் மன்னன் களிற்றின் நெற்றியில் எறிய, அவ்யானைகள் அஞ்சிப் புறங்கொடுத்து ஓடின' என்று சீறூர் மன்னன் போர்த்திறத்தைப் பாணனின் மனைவி கூற்றில் வைத்துப்பாடுகிறார். இப்பாடலில் பாட்டுடைத்தலைவன் போர்த்திறத்தை வியந்து பாடுவதால் திணை வாகையாயிற்று. தொல்காப்பியர் வாகைத்திணையில் துறைகளில் ஒன்றாக மூதின் முல்லையை.

'அடல்வால் ஆடவர்க்கு அன்றியும் அவ்வில்
மடல்வரல் மகளிர்க்கு மறமிகுந்தன்று'

(புறப். வெ. மா. வாகை.21)

என்று குறிப்பர். “மறக்குடி மகளிரின் மறப்பண்பினைக் கூறியது மூதின் முல்லை என்னும் துறையாம்”[27] என்பர். பொ.வே.சோமசுந்தரனார். இப்பாடலில் பாட்டுடைத் தலைவனின் மனைவியோ, அல்லது வேறு எந்த மகளிரைப் பற்றியும் குறிப்பு இடம்பெறவில்லை எனினும் இப்பாடலின் திணை மூதின்முல்லை என்று குறிக்கப்பட்டுள்ளது. இத்துறை இப்பாடலுக்கு பொருத்தமாக இல்லை என்பது வெள்ளிடை.

## சோனாட்டு முகையலூர்ச் சிறு கருந்தும்பியார்

இவர் பாடிய புறநானூற்றுப் பாடல்கள் (181, 265) இரண்டு. ஒன்று வாகைத் திணையிலும் மற்றொன்று கரந்தைத் திணையிலும் அமைந்துள்ளது. வாகைத் திணைப்பாடலின் தலைவன் வல்லார்கிழான் பண்ணன் என்பவனாவான். இவன் வல்லார் என்னும் ஊர்க்கு உரியவன். வேளாண் மரபைச் சேர்ந்த குறுநிலத் தலைவன். இப்படலில் சிறுகருந்தும்பியார், பாணர்க்குக் கூறும் முறையில் இரவலனே! ஊர் மன்றத்தில் விளாமரத்திலிருந்து பழம் ஒன்று கீழே விழுந்தால் அப்பழத்தை கரிய கண்ணுடைய குறத்தியின் அன்பிற்குரிய மகனோடு கானத்தில் உள்ள யானைக் கன்றும் ஒன்றாக வந்து எடுக்க விளங்கும். அரண் சூழ்ந்த நிலத்தின் கண்ணே அமைந்து புலால் சூழ்ந்த அம்பினையும் காவற் காட்டினையும் உடைய வல்லார் என்னும் ஊர். அதன் தலைவன் வாள் ஏந்திய பண்ணன். உணவு இன்றி வாடும் நின் சுற்றம் உயிர் பிழைக்க வேண்டுமானால் அதன் பகைவர் நாட்டை நோக்கி படையெடுத்துக் செல்வதன் முன்னர் உன் பசிக்கும் பகையாகிய திரண்ட செல்வமாகும் பரிசினைப் பெறுவதற்கு இப்போதே புறப்பட்டுச் செல்வாயாக! என்று வழிப்படுத்துகிறார்.

பாடலில் இரவலனின் பசிப்பிணியை நீக்க பகைப்புலம் சென்று பசிக்கும் பகையாகிய செல்வத்தைத் திரையாகக் கொண்டு வரும் இயல்புடையவன் பண்ணன் என்று அவனது வீரத்தைப் புகழ்வதால் திணை வாகையாயிற்று. புலவர் இரவலனை, வல்லார்கிழார் பண்ணனிடம் வழிப்படுத்துவதாக அமைந்தாலும், பாட்டுடைத்தலைவனின் ஊரினைச் சிறப்பித்துக் கூறுவதால் வல்லாண் முல்லை என்னும் துறையில் தொகுக்கப்பட்டுள்ளது.

கரந்தைத் திணையில் கையறுநிலைத் துறையில் அமைந்த மற்றொரு புறநானூற்றுப் பாடலில் தலைவனின் பெயர் இடம்பெறவில்லை. எனினும் இத்தொகை நூற்கண்ணுள்ள ஊர்நனி பிறந்த பார்முதிர் பறந்தலை (265) என்று தொடங்கும் கையறுநிலைப் பாட்டு இப்பண்ணன் கரந்தைப் போரிட்டு நடுகல்லில் நின்ற நிலையைக் குறிக்கின்றது"[28] என்பர் ஔவை சு.துரைசாமிப் பிள்ளை.

## வெற்றி கொண்டான்

பண்ணன் கரந்தைப் போரில் இரந்து விட்டதை அறிந்த சிறுகருந்தும்பியார் மிகவும் வருத்தமுற்று, 'விரைந்து செல்லும் குதிரைகளையுடைய தலைவனே! இன்று ஊரின் புறத்தே உள்ள புறங்காட்டில் விளங்கும் வேங்கை மலரை ஒளி மேவும் நறுமணம் கமழும் மாலையாகப் பனையோலைகளால் புனைந்து பல ஆநிரைகளையுடைய ஆயர்கள் சூட்டி மகிழ நீ நடுகல்லகிவிட்டாய். நீ இல்லாததால், நின் புகழைப் போற்றி நின் நிழலில் வாழும் பரிசிலர்கள் மட்டுமா செல்வத்தை இழந்தார்கள்! மதயானைகளையுடைய வேந்தர்களின் குறைவற்ற வெற்றியும்

அல்லவா நின்னோடு சென்று விட்டது' என்று கையற்றுப் பாடுவதால் துறை கையறுநிலையாயிற்று.

வல்லார்கிழார் பண்ணனுக்கு நடுகல் நட்டு வழிபட்டமையால் அவன் ஆநிரைகளை மீட்கும் பொழுது மாண்டான் என்ற செய்தியை அறியமுடிகிறது. இப்பாடல் கரந்தைத் திணையில் கையறுநிலைத் துறையாகும். வல்லார்கிழார் பண்ணனை சோனாட்டு முகையலூர் சிறுகருந்தும்பியார் ஒருவரே பாடியுள்ளதால் அவரின் சமகாலப் புலவர்கள் பற்றிய செய்திகளை அறிய முடியவில்லை.

## சோழன் குளமுற்றத்துத்துஞ்சிய கிள்ளிவளவன்

சோழநாட்டு அரசப்புலவர்களுள் இவரும் ஒருவர். இவர் பாடிய புறநானூற்றுப் பாடல் (173) ஒன்றே. இவர் சோழப் பேரரசின் மன்னனாக விளங்கிய போதும் சிறுகுடிகிழான் பண்ணன் என்ற குறுநில மன்னனைச் சிறப்பித்துப் பாடல் ஒன்றை இயற்றியுள்ளது குறிப்பிடத்தக்கது. இக்குறு நிலமன்னன் காவிரிக்கு வடகரையில் சிறு குடி என்னும் ஊரில் இருந்தவன். இவனை மாற்றூர் கிழார் மகனார் கொற்றங்கொற்றனார், கோவூர்க்கிழார், செயலூர் இளம்பொன் சாத்தன் கொற்றனார், முதுரை அளக்கர் ஞாழர் மகனார் மள்ளனார் ஆகிய சான்றோர்களும் சிறப்பித்துப் பாடியுள்ளனர். சோழன், பாணனொருவன் கூற்றில் வைத்துப் பாடியுள்ளான். பண்ணன் பால் பரிசில் பெறக் கருதிய பாணன் ஒருவன், சிறுகுடியை அணுகி, பண்ணன்பால் பரிசு பெற்று வரும் பாணர் சிலரைக் காண்கின்றான். அவர்கள் பண்ணனை வாழ்த்திக் கொண்டு வருகின்றனர். அவர்களிடம் யான் வாழும் நாளும் பண்ணன் வாழ்வானாக! என வாழ்த்தி பரிசில் பெற்ற பாணர்களே! இப்பாணனது சுற்றம் எய்தி வருந்தும் வருத்தத்தைக் காண்மின். பண்ணன் மனையில்

உண்டாகும் ஒலி, பழுமரம் பறவைகளால் சூழப்பட்டு ஆரவார ஒலியைப் போல் கேட்கும் கையில் சோறு பெற்றுக் கொண்டு சிறு பிள்ளைகள் தம் சுற்றத்தின். ரோடு போவதைக் காண்போம். பசியும், வழிநடை வருத்தமும் கண்டு பசிநோய் தீர்க்கும் மருத்துவன் இல்லம் அண்மையில் உள்ளதோ? தொலைவில் உள்ளதோ? என்று எமக்குத் தெளிவாகக் கூறுக! என்று வினவுவதாக அமைந்துள்ளது இப்புறப்பாடல்

பண்ணனின் சிறப்பைப் புலப்படுத்தி தன்னுடைய வாழ்நாளும் சேர்த்து நெடுநாள் வாழவேண்டும் என வாழ்த்துவதால் திணை பாடாண் ஆயிற்று. சிறுகுடிப் பண்ணனின் கொடையின் இயல்பை 'பசிப்பிணி மருத்துவன் இல்லம்' (புறம். 173:11) என்று எடுத்துக் கூறவதால் இயன்மொழியாயிற்று.

## சோழன் நலங்கிள்ளி

சோழநாட்டு அரசப்புலவர்களில் சோழன் நலங்கிள்ளியும் ஒருவன். இவன் புறநானூற்றில் இரண்டு பாடல்களைப் (73, 75) பாடியுள்ளான். இவ்விரு பாடல்களையும் தன் கூற்றில் வைத்தே பாடியுள்ளான். ஒரு பாடல் வஞ்சினம் கொண்டும் மற்றொரு பாடல் பொருண்மொழிக் காஞ்சியாகவும் அமைகிறது.

## துஞ்சு புலி இடறிய சிதடன்

சோழன் நலங்கிள்ளிக்கும் காரியாற்றுத்துஞ்சிய நெடுங்கிள்ளிக்கும் இடையே பகைமை ஏற்பட்டது. நெடுங்கிள்ளி உறையூரில் இருந்து ஆட்சி புரிந்தான். பகைமை அதிகமாக நெடுங்கிள்ளி, நலங்கிள்ளியை இகழ்ந்து பேசி, சினத்தை உண்டாக்கினான். இந்த சூழலில் சோழன் நலங்கிள்ளி

வெகுண்டெழுந்து "என்னிடம் வணங்கி வந்து பணிந்து ஈக என இரந்து வேண்டி நிற்பவர்களானால் அவர்களுக்குச் சிறப்புடைய முரசு முழங்குகின்ற அரசுரிமை மட்டும் அல்லாது, என் இனிய உயிரையும் கொடுப்பேன். இவ்வுலகில் என்னுடைய வீரத்தைப் போற்றி மதிக்காது மனம் நோகுமாறு ஏளனம் செய்பவர்கள் உயிருடன் மீளுதல் அரிது. வலிமையுடைய யானையின் காலடியில் பட்ட மூங்கில் முளை போன்று அங்கு பகைவரின் ஊரைப் போர் தொடுத்து அழிப்பேன். அவ்வாறு நான் செய்யவில்லையானால் அன்பிலா மகளிரைத் தழுவி என் மார்பில் அணிந்துள்ள மாலை துவள்வதாக! என்று வஞ்சினம் உரைக்கிறான். இதனால் அன்பில்லாத மகளிரைத் தழுவுதல் அறமன்று என்னும் கொள்கையுடையவன் எனத் தெரிகிறது. இதனை,

'தீதுஇல் நெஞ்சத்துக் காதல் கொள்ளாப்
பல் இருங்கூந்தல் மகளிர்
ஒல்லா முயக்கிடைக் குழைக என்தாரே!'

(புறம். 73:11-13)

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. தன்னை இகழ்ந்து பேசுவோரை, துஞ்சு புலி இடறிய சிதடன் போல உயிருடன் தப்ப முடியாது என வஞ்சினம் கூறுவதால் பாடலின் துறை வஞ்சினக் காஞ்சியாயிற்று. தொல்காப்பியர் வஞ்சினக் காஞ்சியை காஞ்சித் திணையில் வகைப்படுத்துகிறார். இதனை,

'இன்னது பிழைப்பின் இதுவாகியரெனத்
துன்னருஞ் சிறப்பின் வஞ்சினத்தானும்'

(தொல். 1025:8-9)

என்ற நூற்பா அடிகளில் சுட்டுவர். இதற்கு 'இன்னது செய்தல் தவிர்ததால் இவ்வாறு நடக்கட்டும் எனக் கூறும் ஒப்பற்ற வஞ்சினக் காஞ்சி' என்று உரை விளக்கம் தருகிறார். ச.வே. சுப்பிரமணியன் தொல்காப்பிய விதி அடிப்படையில் இப்பாடல் அமைந்துள்ளது குறிப்பிடத்தக்கது.

## மக்களாட்சி மறவன்

சோழன் நலங்கிள்ளி பாடிய மற்றொரு புறநானூற்றுப் பாடல் (75) பொதுவியல் திணையில் பொருண்மொழிக் காஞ்சித்துறையில் அமைந்துள்ளது. இந்தப்பாடலில் குடிமக்களிடம் வரிகளைப் பெறுவதை விடுத்து, தன் வலிமையால் பொருளை ஈட்டி மக்களைக் காப்பதே சிறப்பானது என்ற கருத்தினை வலியுறுத்துகிறார். அரசு முறை மூத்தோர்க்குப்பின் அவர் வழிவரும் இளையோர்பால் முறைப்படி வரும் தாயமுறையினையுடைத்து. அதனை யெய்தினோன், இவ்வுலகிற் பெருஞ்சிறப்பெய்தி விட்டதாகக் கருதி அளவிறந்த இறையினை விதித்துக் குடிகளை இரந்து பொருள் ஈட்டக் கருதினானாயின் அது சிறப்புடையது அன்று. பகைவரை எதிர்த்துப் போர்க்களத்தில் வலிமையும், வீரத்தையும் காட்டி பெருமையுடைபவனாயின், பொய்கையில் பூங்கொடிகளுடன் பிணைந்து விளங்கும் வெண்கிடைபோன்று மிகவும் மென்மையுடையதாய் இருக்கும். குற்றம் இல்லாது விளங்கும் வெண்கொற்றக் குடையின் கீழ் முரசு முழங்க விளங்கும் அரசாட்சியே வேந்தர்களுக்குச் செல்வம்' என்று குடிமக்களாட்சித் தத்துவத்தை விளக்குகிறார் நலங்கிள்ளி.

இந்தப்பாடலின் திணை பொதுவியல். துறை பொருண்மொழிக் காஞ்சி திணையும் துறையும் தொல்காப்பியர் சுட்டாத கூறுகள். புறப்பொருள் வெண்பாமாலையின் அடிப்படையில் திணையும், துறையும் வகுக்கப்பட்டுள்ளன. இப்பாட்டு எந்தத் திணையிலும் அடங்காது பொதுவான செய்திகளைக் கூறுவதால் திணை பொதுவியலாயிற்று. பொருண்மொழிக் காஞ்சி என்பது அவிர்ந்து திகழும் சடையாகிய முடியினையுடைய துறவியர், விரும்பித் தெளிந்த பொருளைச் சொல்லியது"[29] என்பர் பொ.வே.சோம சுந்தரனார். புலவர் கூறும் அரிய செய்திகளை இம்மன்னன் கூறுவதால் துறை பொருண் மொழிக்காஞ்சியாயிற்று.

## சோழன் நல்லுருத்திரன்

தொல்காப்பியர் சுட்டிய மரபுக்கேற்ப அகப்பாடல்களைப் பாடிய சோழன் நல்லுருத்திரன், புறநானூற்றுப் பாடலொன்றையும் (190) பாடியுள்ளார்.

## நட்பின் தேர்வு

எலிபோலும் மனமும் தாமுடையவற்றை மேலும் மேலும் பெருக்கிக் கொள்ளும் உள்ளம் உடையாருடைய கேண்மை வேண்டா. கொடிய பார்வையுடைய பன்றி தன் இடது பக்கமாக வீழ்ந்து கிடந்த காரணத்தால் அதனை உணவாகக் கொள்ளாது குகையில் வாட்டம் கொண்டு இருந்து பின்னர் வரைந்து எழுந்து பெரிய யானையைத் தாக்கி வலப்பகத்தில் விழுமாறு செய்து உண்டு வாழும் புலியின் தளராத செயலைப்போன்று 'வலிமையும் நல்ல நெறியும் உடையவர்களின் நட்பைக் கொண்டு

எப்போதும் வாழ்க! அதுவே சிறப்புடையது என்று நட்பின் தேர்வினை எடுத்துரைக்கிறார்.

இப்பாடலின் கருத்து எந்தத் திணையிலும் அடங்காது பொதுவான கருத்துக்களைக் கொண்டு விளங்குவதால் பொதுவியல் திணையையும், பொருண்மொழிக்காஞ்சித் துறையையும் பெறுகிறது. அரசப் புலவர்கள் பொருண்மொழிக்காஞ்சி பாடுவது குறிப்பிடத்தக்கது. தாம் பெற்ற அனுபவ அறிவின் வாயிலாக இதுபோன்ற பாடல்களை இயற்ற முடிந்தது போலும். அரசுக்கட்டிலையும் மக்களையும் பேணும் அரசன் இதுபோன்ற கருத்தாங்கங்கள் கையாள்வதில் சிறந்து விளங்கினார் என்பதற்கு இப்பாடலே தக்க சான்றுகளாகும்.

## தாயங்கண்ணனார்

இவர் பாடிய புறநானூற்றுப் பாடல்கள் (356, 397) இரண்டு. ஒன்று காஞ்சித் திணையிலும் மற்றொன்று பாடாண்திணையிலும் அமைந்துள்ளது.

## முற்றுப்புள்ளி

சுடுகாட்டைப் பொருளாகக் கொண்டு உயிர்நிலையாமையின் இயல்பை 'முதுகாடு கூகையும், பேய் மகளிரும் உறைதலால் காண்பார்க்கு அச்சம் தரும் இயல்புடையது. நெஞ்சம் கலந்த அன்புடைய காதலர்கள் அழுதுபெருக்கிய கண்ணீர் இச்சுடுகாட்டில் எரிந்த சாம்பலை அவிக்கவும் விளங்குகிறது. உலகத்தில் உள்ள அனைவர்க்கும் முடிவு காட்டும் இடமாகவும் தன் முதுகு காண்பாரை இதுகாறும் கண்டிராத இடமாகவும் உள்ளது' என உலகின் நிலையாமையை விளக்குகிறார் புலவர் தாயங்கண்ணனார்.

இப்பாட்டு காஞ்சித்திணையில் பெருங்காஞ்சித் துறையில் அமைந்துள்ளது. "துணை இல்லாத சிறப்பினையுடைய வீட்டின்பம் காரணமாக, பல வழிகளிலும் நிலைபேறில்லாத உலக இயற்கையைப் பொருந்திய நல்நெறியினை உடையது காஞ்சித்திணை"(30) என உரைவிளக்கம் செய்வார் சு.வே.சுப்பிரமணியன். தொல்காப்பியர் காஞ்சித் திணையின் துறைகளில் முதலாவதாகப் பெருங்காஞ்சியை 'மாற்றரும் கூற்றம் சாற்றிய பெருமையும்' (தொல்.1025:1) என்று குறிப்பிடுகிறார். இப்பாடலில் மாற்றுதற்கரிய கூற்றம் வருமாறு இடுகாட்டின் இயல்பை எடுத்துக்காட்டுவதால் துறை பெருங்காஞ்சியாயிற்று.

சோழன் குளமுற்றத்துஞ்சிய கிள்ளி வளவனைப் பாடாண் திணையில் சிறப்பித்து மற்றொரு புறப்பாடலைச் (397) செய்துள்ளார் புலவர் தாயங்கண்ணனார். இப்பாடலைக் கிணைப் பொருநன் கூற்றில் வைத்துப்பாடியுள்ளார்.

## பரிசிலர் காவலன்

இனிய காலைப் பொழுதில், கிணையை இசைத்து பலவகையான சித்திரங்கள் அமைந்த மாலையணிந்த மார்பினையுடைய வேந்தே! துயிலிலிருந்து எழுக! என்று கூறி அத்தலைவனின் நெடிய முற்றத்தின்கண் நின்றேன். அவற்றை இனிமையுடன் கேட்ட தலைவன், இவன் தன்னை நாடிவந்த பரிசிலன் என்று உணர்ந்து நெய்யால் தாளிக்கப்பட்ட இறைச்சியும் மாணிக்கத்தால் இழைக்கப்பட்ட கிண்ணத்தில் நிறைந்த கள்ளும், பாம்பு உரித்த தோல் போன்ற பூ வேலை நிறைந்த ஆடையையும், மழைபொழியும் மேகம் போல வழங்கினான். அலைகள்

எறியும் கடல் முடிவு காணும் வழிக்காலம் வந்தாலும் வெம்மையுடை கதிர்களை வீசும் சூரியன் தென்திசையில் தோன்றினாலும் யாம் அஞ்ச மாட்டோம். வெற்றி தரும் வேலைக் கையிலேந்தி அரிய போர்களைச் செய்து வெற்றி காணும் ஆற்றல் மிக்க கிள்ளிவளவனின் வீரக்கழல் அணிந்த வலிமையான தண்ணிடியில் இருப்பதால் எமக்கு ஒரு குறையும இல்லை' என்று கிள்ளிவளனின் சிறப்புக்களைப் பட்டியிலிடுகிறார் புலவர்.

பாட்டுடைத் தலைவனின் (கிள்ளிவளவன்) ஆண்மையையும், வீரத்தையும், கொடைத்தன்மையையும் ஒருங்கே எடுத்துக்காட்டுவதால் திணை பாடாண் திணையாயிற்று. இப்பாடலுக்கு பரிசில் விடை, கடைநிலை விடை என்று இரண்டு துறைகள் வகுக்கப்பட்டுள்ளன. பரிசில் விடை என்பது, பரிசில் பெற வந்தவன் அரசனைப் போற்றுதல்; அரசன் பரிசிலர் மகிழ அளித்து விடைகொடுத்தலாகும். இதனை ஐயனாரிதனார்.

'வேந்தன் உள் மகிழ வெல்புகழ் அறைந்தோர்க்கு
ஈந்து பரிசில் இன்புற விடுத்தன்று'

(புறப். வெ. மா. 9.26)

என்ற கொழுவில் குறிப்பிடுவர். கடையிடத்தே நின்று விடை பெற்றுச் செல்லுதல் கடைநிலை விடையாகும். இப்பாடலில் கிணைப்பொருநன் கிள்ளிவளவனிடம் பரிசில் பெற்று கடைநிலையில் நின்று விடைபெறுவதாக அமைவதால் துறை பரிசில்விடை, கடைநிலை விடையாயிற்று.

## தாயங்கண்ணியார்

இவர் பாடிய புறநானூற்றுப்பாடலில் கைமை நோன்பு குறித்துப் பாடியுள்ளார். இப்பாடல் பொதுவியல் திணையில் தாபத நிலைத் துறையில் அமைந்துள்ளது. சோழநாட்டுப் பெண்பாற் புலவர்களுள் தாயங்கண்ணியாரும் ஒருவர். தலைவனை இழந்த மனையையும் மனைவியையும் இரங்கிப் பாடுவதாக இப்பாடல் அமைகிறது.

## கைம்மை நோன்பு

செல்வம் மிக்க அழகிய நகரே! இனிய பாலை வேண்டிய புதல்வர் இப்போது தனித்துக் காணும் புறங்காட்டை அடைந்தனர். தாளித்த சுவையுடைய உணவும் இரவலரைப் புறம் போக வொட்டாது தடுத்த வாயிலும் தன்னால் பாதுகாகப்படுவோரின் கண்ணீரை மாற்றிய நறுமணம் கமழும் பந்தலும் உடைய மனையிடத்தில் கூந்தலைக் களைந்து வளையலை நீக்கி, அல்லியரிசியாகிய உணவையுடைய தலைவியுடனே இப்போது பொழிவிழந்தனை! என்று கணவனை இழந்து கைமை நோன்பு கொள்ளும் தலைவியின் இயல்பினை இப்பாடல் விளக்குகிறது.

தொல்காப்பியர் காதலனை இழந்த தாபத நிலையைக் காஞ்சித் திணையில் அடக்குவர். ஆனால் ஐயனாரிதனார் பொதுவியல் திணையில் அடக்குவர். பாடலில்,

> 'முனித்தலைப் புதல்வர் தந்தை
> தனித்தலைப் பெருங்காடு முன்னிய பின்னே'
>
> (புறம். 250:8-9)

என்று குறிப்பதால் துறை 'தாபத நிலை' யாயிற்று.

பண்டைக் காலத்தில் கணவனை இழந்த மனைவி கூந்தலைக் களைந்து, வளையல்கள் இன்றி, கையால் குத்தப்பட்ட அரிசியினை உணவாக உட்கொண்டு, கைம்மை நோன்பு கொண்டிருந்தனர் என்ற செய்தியை இப்பாடலின் மூலம் அறிய முடிகிறது.

## வறுமையின் இருப்பிடம்

துறையூர் ஓடைக் கிழார் பாடிய புறப்பாடலில் (136) ஆய் அண்டிரனை பாடாண் திணையில் வைத்து, பரிசில் கடாநிலையை விளக்குகிறார். ஆய் அண்டிரனை காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்க கண்ணனார். ஊறையூர் ஏணிச்சேரி முடமோசியார் ஆகிய இரு சோழநாட்டுப் புலவர்களும் பாடியுள்ளனர். துறையூர் ஓடைக்கிழார் தன் வறுமை நிலையை எடுத்துக் கூறி, பரிசில் வேண்டிப் பாடுவதாக இப்பாடல் அமைந்துள்ளது. வேந்தே! என் உடையிலுள்ள தையலில் சீலைப்பேன் ஒருபால் என்னைப் பகைத்துத் துன்புறத்துகிறது. உணவின்றி வருந்தும் என் சுற்றத்தோடு என்னை வருத்தும் பசிநோய் ஒரு புறம் துன்புறுத்துகின்றது. எவரிடத்தேனும் பரிசில் பெற்று செல்லும்போது, வழியில் ஆறலைக் கள்வரது அச்சம் ஒரு புறம் வருத்தத்தைச் செய்கிறது. இத்துன்பங்கள் அனைத்தும் போக்கி எம்மை அருள் வல்லவன் ஆய் அண்டிரன் என்று கேட்டு அவன் புகழை விரும்பி யாங்கள் நெடுஞ்சுரம் கடந்து வந்துள்ளோம். எமக்கு ஈவதே உண்மையான ஈகையாகும். எமது உண்மை நிலையை நினக்கு நன்கு உரைத்தேன். நின் தகுதிக்கு ஏற்ற வகையில் பரிசில் தந்து எங்களை அனுப்புக! நீ தருகின்ற பெரும் செல்வத்தைக் கொண்டு சென்று, துறையூர்த் துறையில் விளங்கும் நுண் மணலினும் பல்லாண்டு வாழ்க! என்று நின்னை வாழ்த்தி யாமும்

மனமகிழ்வோடு உண்டு வாழ்வோம்' என்று பாணன் பரிசில் வேண்டுவதாகப் பாடல் செய்கிறார்.

பாடலில் ஆய் அண்டிரனின் சிறப்புக்களை எடுத்துரைப்பதால் பாடாண்திணையாயிற்று. ஆய் அண்டிரன் தனக்குப் பரிசில் தந்து உதவ வேண்டும் என்று பரிசில் வேண்டிய நிலையை,

'நல்கினை விடுமதி பரிசில்! அல்கல்லும்
தண்புனல் வாயில் துறையூர் முன்துறை
நுண்பல மணலினும் ஏத்தி,
உண்குவம் பெரும! நீ நல்கிய வளனே'

(புறம். 136:24-27)

என்ற அடிகள் உணர்த்துவதால் துறை பரிசில் கடாநிலையாயிற்று.

## வெள்ளைக்குடி நாகனார்

இவர் பாடிய புறநானூற்றுப்பாடல் (35) ஒன்றே. இப்பாடலில் சோழன் குளமுற்றத்துத்துஞ்சிய கிள்ளிக்கு பாடாண்திணையில் அறிவுரைகள் வழங்கும் செவியறிவுறூஉ துறையில் நாட்டின் வளத்தைப் போற்றி, உழுது பயிர் செய்யும் மாந்தர்களைக் காக்க வேண்டும் என்று வலியுறுத்துகிறார்.

## உழவே தலை

பெரிய கடல் எல்லையாகவும், காற்றிடை விளங்கும் வானம் சூழவும் விளங்குகின்ற இம்மண்ணுலகத்தில் தண்டமிழ்க்கு உரிய வேந்தர்களாக முரசு ஒலிக்கும் படைகளையுடைய சேர, சோழ, பாண்டியர் என மூவர்

விளங்கினாலும் அரசு எனப் பெருமையுடன் திகழ்வது நின்னுடைய அரசே ஆகும். அறம் நிலவும் செங்கோல் ஆட்சி முறையில் ஒருவர் நீதியை நாடும்போது காட்சிக்கு எளியனாக விளங்கி நிற்றல் என்பது, மழை வேண்டும் போது பெய்யும் மழைக்கு நிகரானதாகும். சூரியன் திரிகின்ற வானத்தினைடையே நீ தாங்கும் பெருமையுடைய வெண்கொற்றக் குடை வெயிலை மறைப்பதற்கு அன்று; அது மக்கள் குறைகளைக்களையும் அடையாளமாகத் திகழ வேண்டும்' என்று குளமுற்றத்துத்துஞ்சிய கிள்ளி வளவனுக்கு அறிவுரை கூறுகிறார் வெள்ளைக்குடி நாகனார். இறுதியாக மழைபெய்யத் தவறினாலும் நிலத்தின் விளைச்சல் குறைந்தாலும், செயற்கையாகக் களவு முதலியவற்றால் தீமை உண்டானாலும். இவற்றுக்கெல்லாம் மன்னனே காரணம் என்று உலகம் பழித்துரைக்கும் இப்பரந்த உலகில் அத்தன்மையை நீ அறிந்தனையாயின், யான் உரைப்பதைக் கேட்பாயாக! பிறருடைய சொற்களைப் பொதுமொழியாகக் கொள்ளாது, உழவர் பெருமக்களின் துன்பத்தைப் நோக்கிப் பாதுகாத்து, அதன்வழி ஏனைய குடிமக்களையும் பாதுகாப்பாயாக! அவ்வாறு நீ செய்தால் உனக்கு அடங்காத பகைவரும் உன்னை நாடிவந்து உன்னுடைய பாதங்களை வணங்கிப் பாராட்டுவார்கள் என்று உழவர்களே இவ்வுலகில் தலையானவர்கள் என்று எடுத்துக் கூறுகிறார்.

இப்புறப்பாடல் தொல்காப்பிய மரபுக்கு ஏற்பப் பாடாண்திணையில், செவியறிவுறூஉத் துறையின. செவியறிவுறூஉ என்பது உயர்ந்தோர் மாட்டு அவிந்து ஒழுகுதல் வேண்டும்(31) என்று விளக்கம் தருகிறார் இளம்பூரணர். சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் உழவர்களைக் காக்க வேண்டும் என வெள்ளைக்குடி நாகனார் வேண்டுகிறார். இதனை,

'பகடு புறந் தருநர் பாரம் ஓம்பிக்
குடிபுறம் தருகுவையாயின், நின்
அடிபுறந் தருகுவர் அடங்கா தோரே'

(புறம். 35:32-34)

என்று வலியுறுத்துவதால் பாடலின் துறை செவியறிவுறூஉ ஆயிற்று. பாடலில் பாட்டுடைத் தலைவனான கிள்ளிவளவனின் சிறப்பு இயல்புகளை விதந்து கூறுவதால் திணை பாடாணாயிற்று.

## பெருங்கோழி நாய்கன் மகள் நக்கண்ணையார்

சோழநாட்டுப் பெண்பாற் புலவரான இவர் பாடிய புறநானூற்றுப் பாடல்கள் மூன்று (83, 84, 85) ஆகும். இப்பாடல்கள் அனைத்தும் கைக்கிளை திணையில் பழிச்சுதல் துறையின. நக்கண்ணையார் தித்தனின் மகன் போர்வைக் கோப்பெருநற்கிள்ளியைக் கண்டு காதல் கொண்டவர். ஆயினும் இஃது ஒருதலைக் காதலாயிற்று என்பதால் இவர் பாடிய புறப்பாடல்களில் அவை பிரதிபலிப்பதைக் காணமுடிகிறது. சோழநாட்டுப் பெண் புலவர்கள் ஐவரது பாடல்களும் தம் சொந்த வாழ்வில் ஏற்பட்ட அனுபவங்களைப் பாடுபொருளாகக் கொண்டு பாடப்பட்டவை.

### ஒருதலைக்காதல்

'வீரக்கழலும் கருமையான இளந்தாடியும் உடைய காளையாகிய கோப்பெருநற்கிள்ளியைக் கண்டு என் கை வளையல்கள் காதற் பெருக்கு மேலிட்டதால் கழல்கின்றன. நான் என் தாய்க்கு அஞ்சுகின்றேன். பகைவரை வெற்றி கொண்ட தலைவன் தோளைத் தழுவ விரும்பினாலும்

அவையோரைக் கண்டு நாணம் கொள்கிறேன். இந்த ஊர் என் பக்கமும் சாராது என் தாயின் பக்கமும் நில்லாது இரண்டு பக்கத்திலும் மாறி மாறி நின்று என்னை மயக்குகின்றது. நான் என்ன செய்வேன்' என்று கைக்கிளை காமக்காதல் கொண்டு பாடுகிறார். நக்கண்ணையார் காதலொழுக்கம் மேற்கொண்ட மகளிர் தம் காதலரைப் பிரியனும், தலை கூடப் பெறாவிடினும் பசந்து உடம்பு நனி சுருங்கித் தொடியும் வளையும் கழல் வருந்துவர் என்பதை,

'அடிபுனை தொடு கழல் மையணல் காளைக்கு என்
தொடி கழித்திடுதல் யான்யாய் அஞ்சுவலே!'

(புறம். 83:1-2)

என்றடிகள் உணர்த்துகின்றன. மற்றொரு பாடலில் தலைவனைப் பிரிந்த தலைவி, என்னுடைய தலைவன் எளிமையான கூழ் உண்டாலும், பெருந்தோள் வலிமையுடையவன். நான் அவனுக்கு அருகிலேயே இருந்தும் பசலை நோய் கொண்டு வருந்துதாகப் பாடுகிறார். இதன் மூலம் நக்கண்ணையார் கொண்ட காதல் ஒருதலைக்காதல் என்பது புலனாகிறது.

போர்வை கோபெருநற்கிள்ளி மற்போர் விற்போர் முதலிய போர்களை மேற்கொண்டு தொடக்கத்தில் ஆமூர் மல்லனோடு மற்போர் உடற்றிய காலத்தில் நக்கண்ணையார் அவன் மட்போரில் மல்லனை எதிர்த்து நின்ற காட்சியை நேரிற் கண்டார். அப்போரைக் காணவந்திருந்த மக்கள் ஒருசாரார், கிள்ளியே வெல்வான் என்றும், ஓனருசாரா் கிள்ளிக்கு வெற்றியில்லை என்றும் வாதிட்டனர். இரு கூற்றையும் கேட்டயான் விரைந்து ஓடி அங்கு நின்ற பனைமரத்தின் அடியில் அதனைப் பொருந்தி நின்று மற்போரைக் கண்டேன். அப்போது கிள்ளியாகிய என் தலைவனே

வெற்றி எய்தினான் என்று மற்றொரு புறப்பாடலில் குறிப்பிடுகிறார் நக்கண்ணையார்.

இம்மூன்று புறப்பாடல்களும் ஒரே திணை துறையைச் சார்ந்தவை. ஐயனாரிதனார் கைக்கிளைத் திணையைக் குறிப்பிட்ட பொழுதும், அவற்றின் துறைகளில் ஒன்றாக 'பழிச்சுதல்' என்ற துறையைச் சுட்டவில்லை. கைக்கிளை படலத்தில் ஆண்பாற்கூற்று, பெண்பாற்கூற்று, எனப் பகுத்து துறைகளை எடுத்துரைக்கிறார் எனினும் பெண்பாற் கூற்றுக்குரிய துறைகளாக, காண்டல், நயத்தல், உட்கோள், மெலிதல், மெலிவொடு வைகல், காண்டல் வலிதல் பகல் முனிவுரைத்தல், இரவு நீடுபருவரல், கனவின் அரற்றல், நெஞ்சோடு மெலிதல், ஆகிய பத்து துறைகளைப் பட்டியலிடுகிறார். எனினும் நக்கண்ணையார் பாடிய புறநானூற்றுப்பாடல் சுட்டிய பழிச்சுதல் துறை தொல்காப்பியர், ஐயனாரிதனார் சுட்டாதது. இதனால் தொல்காப்பிய – ஐயனாரிதனார் மரபுக்கு மாறாகப் புறநானூற்றத்துறை வகுக்கப்பட்டுள்ளதற்கு நக்கண்ணையார் பாடல்களே தக்க சான்றாகும்.

தொல்காப்பியர் பாடாண்திணையின் துறைகளில் ஒன்றாகக் கைக்கிளையைக் குறிப்பிடுவார். ஆனால் நக்கண்ணையார் பாடிய மூன்று பாடல்களுக்கும் திணைக் குறிப்பாகக் கைக்கிளையை சுட்டியிருப்பது ஈண்டு நோக்கத்தக்கது. தொல்காப்பியர், பிற புறப்பொருள் இலக்கணநூல்கள் சுட்டாத திணை துறைகளும் புறநானூற்றில் இடம் பெற்றிருப்பதைக் காணமுடிகிறது.

## ஆய்வு முடிவுகள்

1. ஒவ்வொரு பாடலுக்கும் புறநானூற்றில் திணை, துறை குறிக்கப்பட்டிருக்கிறது. அந்த்திணை துறைக் குறிப்புகள் அந்தப்பாடல்களுக்குப் பொருந்துமாறு இப்பகுதியில் ஆராயப்பட்டிருக்கின்றன.
2. சோழநாட்டுப் புலவர்களில் அரிசில்கிழார் தவிர மற்றையோர் புறநானூற்றில் பாடல்களைப் பாடியுள்ளனர். பன்னொடு அமைந்த பதிற்றுப்பத்தின் எட்டாம் பத்தினை அரிசில்கிழார் பாடியிருப்பது குறிப்பிடத்தக்கது.
3. சோழநாட்டுப் புலவர்கள், சோழன் குளமுற்றத்துத்துஞ்சிய கிள்ளிவளவன், சோழன் முடித்தலை கோப்பெருநற்கிள்ளி, சோழன் நலங்கிள்ளி, சோழன் நெடுங்கிள்ளி, சோழன் போர்வை கோப்பெருநற்கிள்ளி ஆகிய சோழ மன்னர்களையும், வையாவிக் கோப்பெரும் பேகன், பாண்டியன் கீரஞ்சாத்தன், பாண்டியன் இளவந்திகைப் பள்ளித்துஞ்சிய நன்மாறன், பாண்டியன் கருங்கை ஒள்வாட் பெரும்பொற்வழுதி, கானப்பேரெயில் கடந்த உக்கிரப் பெருவழுதி, பாண்டியன் வெள்ளியம்பலத்துத்துஞ்சிய பெருவழுதி ஆகிய பாண்டிய மன்னர்களையும், தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை என்ற சேரமன்னனையும் பாடியிருக்கின்றனர்.
4. சோழநாட்டுப்புலவர்களின் பாடல்களால் சோழர் வரலாற்றைப் பற்றிய விரிவான செய்திகளை அறிந்துகொள்ள முடியவில்லை. பாண்டிய மன்னர் பற்றிய முழுமையான செய்திகளையும் பற்றி அறிய முடியவில்லை.

5. சோழநாட்டுப் புலவர்களின் பாடல்களில், மன்னர்களின் கொடை, வீரம் ஆகிய பாடுபொருள்கள் முக்கிய இடத்தைப் பெறுகின்றன.

6. உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் பாடல்கள் கடையெழு வள்ளல்களில் ஒருவனாகிய ஆயைப்பற்றிய முழுமையான பண்போவியம் சொல்லோவியமாக அமைகிறது.

7. சோழநாட்டுப் புலவர்கள், கரந்தை, வஞ்சி, காஞ்சி, தும்பை, வாகை, பாடாண், பொதுவியல், கைக்கிளை, பெருந்திணை ஆகிய ஒன்பது திணைகளில் பாடல்களை பாடியுள்ளனர்.

8. இயன்மொழி, செவியறிவுறூஉ, கையறு நிலை, கடைநிலை, பரிசில் நிலை, பரிசில் கடா நிலை, விறலியாற்றுப்படை, மகட்பாற்காஞ்சி, முதுமொழிக்காஞ்சி, பொருண்மொழிக்காஞ்சி, கொற்றவள்ளை, அரசவாகை, உடனிலை, வல்லாண் முல்லை எனப் பல்வேறு துறைகளைச் சோழநாட்டுப்புலவர்கள் பாடியிருக்கின்றனா. ஒரு சில பாடல்களுக்கு இரண்டு துறைகள் காணப்பெறுகின்றன.

9. உறையூர் முதுகண்ணன் சாத்தனார் பாடலொன்றை உ.வே.சாமிநாதையர் இரண்டு திணை, இரண்டு துறை உள்ளதாகப் பதிப்பித்துள்ளார்.

10. புறப்பாடல்களுக்கு வகுக்கப்பட்டுள்ள திணை, துறைகள் பெரும்பாலும் பொருந்தியே வருகின்றன. ஒரு சில பாடல்கள், தொல்காப்பியா, ஐயனாரிதனார் வகுத்த இலக்கணங்களுக்குள் அடங்காது மாறுபட்டு நிற்பதைக் காணமுடிகிறது.

# சான்றெண் விளக்கம்

1. தமிழண்ணல், புதிய நோக்கில் தமிழ் இலக்கிய வரலாறு, ப. 144.
2. சி. பாலசுப்பிரமணியன், சேரநாட்டுச் செந்தமிழ் இலக்கியங்கள், ப. 65.
3. பொ. வே. சோமசுந்தரனார் (உ.ஆ), புறப்பொருள் வெண்பாமாலை, ப. 318.
4. ச. வே. சுப்பிரமணியன் (உ.ஆ), தொல்காப்பியம் தெளிவுரை, ப. 393.
5. வ. த. இராம சுப்பிரமணியம் (உ.ஆ), புறநானூறு மூலமும் தெளிவுரையும், ப. 461.
6. மேலது ப. 408.
7. ஔவை சு.துரைசாமிப்பிள்ளை (உ.ஆ), புறநானூறு மூலமும் உரையும், முதற்றொகுதி, ப. 385.
8. வ. த. இராமசுப்பிரமணியம் (உ.ஆ), புறநானூறு மூலமும் தெளிவுரையும், ப. 339.
9. பொ. வே. சோமசுந்தரனார் (உ.ஆ), புறப்பொருள் வெண்பா மாலை, ப. 187.
10. மேலது, ப. 164.
11. ............................., தொல்காப்பியம் பொருளதிகாரம் (அகத்திணை இயல் புறத்திணை இயல்,) இளம்பூரணர் உரை, ப. 125.
12. பின்னத்தூர் நாராயணசாமி ஐயர் (உ.ஆ), நற்றிணை நானூறு மூலமும் உரையும், ப. 413.
13. ஔவை சு. துரைசாமிப்பிள்ளை (உ.ஆ), நற்றிணை மூலமும் விளக்க உரையும், தொகுதி – 2, ப. 1402.

14. மேலது.

15. தொல்காப்பியம் - பொருளதிகாரம், (அகத்திணையியல் புறத்திணையியல்) நச்சினைார்க்கினியர் உரை, ப. 43.

16. மேலது, ப. 40.

17. உ.வே. சாமிநாதையர் (ப.ஆ), குறுந்தொகை மூலமும் உரையும் ப. 638; சௌரிப் பெருமாளரங்கன் (உ.ஆ), குறுந்தொகை, ப. 279.

18. கு.சுந்தரமூர்த்தி (ப.ஆ), தொல்காப்பியம் - பொருளதிகாரம் (களவியல், கற்பியல், பொருளியல்) நச்சினார்க்கினியர் உரை, தொகுதி – 2, ப. 169.

19. சௌரிப் பெருமாளரங்கன் (உ.ஆ), குறுந்தொகை, ப. 279.

20. உ.வே. சாமிநாதையர் (ப.ஆ), குறுந்தொகை, ப. 691; எஸ். வையாபுரிப்பிள்ளை, சங்க இலக்கியம், இரண்டாம் பகுதி, ப. 1270.

21. ......................., தொல்காப்பியம் - பொருளதிகாரம் (அகத்திணையியல், புறத்திணையியல்) நச்சினார்க்கினியர் உரை, ப. 82.

22. மு. சண்முகம்பிள்ளை (ப.ஆ), தொல்காப்பியம் - பொருளதிகாரம் (களவியல், கற்பியல், பொருளியல்) இளம்பூரணர் உரை, ப. 42.

23. எச். வெங்கட்ராமன் (ப.ஆ), நற்றிணை மூலமும் உரையும், ப. 53; ஔவை. சு. துரைசாமிப்பிள்ளை (உ.ஆ), நற்றிணை மூலமும் விளக்க உரையும், ப. 36.

24. பின்னத்தூர் நாராயணசாமி ஐயர், (உ.ஆ), நற்றிணை நானூறு மூலமும் உரையும், ப. 68.

25. கு. சுந்தரமூர்த்தி (ப.ஆ), தொல்காப்பியம் - பொருளதிகாரம் (களவியல், கற்பியல், பொருளியல்) நச்சினார்க்கினியர் உரை, தொகுதி–2, ப. 179.

26. பொ. வே. சோமசுந்தரனார் (உ.ஆ), புறப்பொருள் வெண்பாமாலை, ப. 54.

27. மேலது ப. 184.

28. ஔவை சு.துரைசாமிப் பிள்ளை (உ.ஆ), புறநானூறு மூலமும் உரையும், இரண்டாம்தொகுதி, ப. 394.

29. பொ. வே. சோமசுந்தரனார் (உ.ஆ), புறப்பொருள் வெண்பாமாலை, ப. 262.

30. ச. வே. சுப்பிரமணியன் (உ.ஆ), தொல்காப்பியம் தெளிவுரை, ப. 391.

31. ........................, தொல்காப்பியம், பொருளதிகாரம் (அகத்திணை இயல், புறத்திணை இயல்) இளம்பூரணர் உரை, ப. 160.

# இயல் - 5

# சோழநாட்டுப் புலவர்களின் இலக்கியக்கொள்கை

படைப்பாளிகள் படைப்புகளை உருவாக்குவதில் தம்முடைய புலமைத் திறனையும், சிந்தனைத் திறனையும் பயன்படுத்திப் படைப்புகளை உருவாக்குகின்றனர். ஒவ்வொரு படைப்பையும் உருவாக்கும்பொழுது அவரது படைப்புத்திறன் செய்யுள்களில் பாடுதிறனாக மாறுகிறது. சோழநாட்டுப் புலவர்கள் பாடல்களால் புலனாகின்ற இலக்கியக் கொள்கைகளை இவ்வியல் எடுத்துரைக்கிறது. தாம் எண்ணுகிறவற்றை, காண்பனவற்றை எவ்வெவ்வாறு படைப்பாளிகள் தங்கள் படைப்புகளில் வெளிப்படுத்துகின்றனர் என்று காண்பதே அவர்களின் இலக்கியக்கொள்கையாகும். புலவர்களின் பாடுதிறனில் உவமை, உள்ளுறை, இறைச்சி போன்ற இலக்கியக்கொள்கைகளைத் தொல்காப்பியர் வகுத்திருக்கின்றார். உள்ளுறையும், இறைச்சியும் அகப்பொருள் பாடுதிறனுக்கு உரியன. உவமை இருபொருளுக்கும் உரியது. ஆய்வின் எல்லை வரையறை கருதி இவ்வியலில் சோழநாட்டுப் புலவர்களின் குறிப்பிட்ட சில இலக்கியக்கொள்கைகள் மட்டுமே இடம்பெறுகின்றன.

## பாடுதிறனை உருவாக்கிய சூழல்

சங்க காலத்தில் உறையூரில் விளங்கிய சோழர் குடும்பத்திற்கிடையேயான அரசு, போர் அரசாகவும், ஆட்சி விரும்பிகளின் அரசாகவும் திகழ்ந்தது. அமைதியான சூழ்நிலை அங்கு இல்லை. உறையூர் தொடர்பான பாடல்கள் அவண் போர் நிகழ்ந்த போர் நிகழ்ச்சிச் சூழலையே வெளிப்படுத்துகின்றன. உறையூரில் ஒரு சோழன்

கோட்டையை அடைத்துக் கொள்ள, இன்னொரு சோழன் கோட்டைக் கதவைத் திறக்கப் போரிடுகிறான்: மற்றொரு சோழ மன்னன் யானை மீது ஏறியிருக்க யானை மதங்கொண்டு பாகற்குக் கட்டுப்படாது பகைப்புலத்தே நுழைகிறது (புறம்.13). இளஞ்சிறாரை யானைக் காலில் இடச்சோழன் ஆணை பிறப்பிக்கக் கோவூர்கிழார் குழந்தைகளைக் காக்கிறார். தந்தையும், தனயனும் முரண்பட்டிருக்கவும் பின் தந்தை வடக்கிருந்து உயிர்த் துறக்கவும் சோழ மன்னர் குடும்பத்து உறவு சீர்கெட்டு அமைகிறது. இவையெல்லாம் அந்நாட்டில் மக்களின் வாழ்க்கைச் சூழல் அமைதியற்றுப் பரபரப்பாக இருந்தமையைக் காட்டுகின்றன. ஆதலால் தான் உறையூர், கோவூர், காவிரிப்பூம்பட்டினம் போன்ற ஊரில் வாழ்ந்த அக்காலச் சோழ நாட்டுப் புலவர்கள் புறப்பாடலைப் பாடிச் சோழ வேந்தருக்கு அறமுணர்த்தினர். போர்ச்சூழல் மிக்க அம்மண்ணில் போர் வெறி மிக்கிருந்ததால் காதற்காமமாகிய அக உணர்வுப் பாடல்கள் மிகுதியாகத் தோன்றில. காலம், இடம், சூழல் இந்தப் பாடுதிறனை உருவாக்கியிருக்கின்றது. எனினும் சோழநாட்டுப் புலவர்களின் பாடல்களை ஒட்டுமொத்தமாக நோக்கும் பொழுது புறப்பாடல்களை விட அகப்பாடல்களே மிகுதியாகக் காணப்படுகின்றன.

## இரண்டின் இணைவு

ஒரு பாடலின் இரண்டு செய்திகளை இணைத்துப் பாடுவதன் மூலம் ஒரு பாட்டை உருவாக்க முடியும். ஒப்பியப் பாட்டாய்த் திகழும் அப்பாட்டு கருத்தைத் தெளிவாகக் காட்டும். உறையூர்ப் பொன் வணிகனார், யாரோ ஒரு வீரனைப் பாடுகிறார். அவன் யார் என்பது தெரியவில்லை. இப்புறநானூற்றுப் பாட்டின் (264) இரண்டு பகுதிகளில்: முதல் நான்கு அடிகள் ஒருவன் போரில் மாண்டமைக்காகக் கல்

நடப்பட்டமையைக் கூறுகின்றது. கல்லில் மாண்டவனுடைய பெயர் பொறிக்கப்பட்டிருக்கிறது. ஆனால் அவன் பெயரைப் புலவர் பாடலில் சொல்லவில்லை. ‘பரலுடை மருங்கிற் பதுக்கை சேர்த்தி’ (264) என்பதன் மூலம் போரில் மாண்டவனுடைய உடல் புதைக்கப்பட்டமையைக் கூறுகிறார் புலவர். அந்தக் கல்லுக்கு மரலிலிருந்து எடுத்த நாரால் கட்டிய சிவந்த பூவையுடைய கண்ணியுடன் மயில்தோகைப் பீலியைச் சூட்டியுள்ளனர். இது கல்லைப் போற்றி வழிபாடு செய்ததாகும். பெயரும் பீடும் எழுதி நீர்ப்படுத்துக் கண்ணியும், பீலியும் சூட்டிப் பெயர் பொறித்த பின் கல் நடுவதாக உறையூர் இளம்பொன் வணிகனார் பேசுகிறார். இதனைக் காட்டு நாட்டோர் (முல்லைநில மக்கள்) மரபாக நச்சினார்க்கினியர் கருதுகிறார்.

கல்லாயின தலைவன் சிறப்பைக் ‘கன்றொடு கறவை தந்து பகைவ ரோட்டிய நெடுந்தகை’ என்று உறையூர் இளம்பொன் வணிகனார் குறிப்பிடுகிறார். இந்தத் தலைவன் போரில் மாண்டதை அறியாமல் ‘பாணரது சுற்றம் வருமோ’ என்று பாடுகிறார். ஔவை சுதுரைச்சாமிப்பிள்ளை “இது தலைவன் பட்டதைக் கண்டு கையற்றுப் பாடியது”[1] என்பர். தலைவன் மாண்டமை குறித்துப் பாணன் வருந்துவதாகப் பாட்டுப் பாடப்பட்டிருக்கிறது.

அடுத்த பகுதியில், புலவன் தன்னைப் பாணனாக்கிக் கொண்டு பாடுகிறான். அவனுக்குக் கல் நடப்பட்டமையையும் அவனைப் பாணர் தேடி வருதலுமாகிய அவலத்தைப் புலவர் காட்டுகிறார். கரந்தைப் போரில் நிகழும் கைகலப்போ பிறவோ பாடலில் இடம் பெற்றில. நடந்து முடிந்த நிகழ்ச்சியையும் நடக்கப் போகின்ற நிகழ்ச்சியையும் இணைத்துப்

பாடுகின்ற புலவரின் பாடுதிறன் சிறப்பானது. இரண்டனை இணைத்துக் கருத்தைப் பாடுதல் சங்கப்புலவர்களின் நீர்மையாகும்.

சங்க காலத்தில் நிரைகாத்த நெடுந்தகைகளுக்கு மட்டுமே நடுகல் நடப்பட்ட செய்தியை அறிய முடிகிறது. நடுகல் நடும் முறையில் ஒவ்வொரு நாட்டிற்கும் வேறுபாடு இருந்ததை நச்சினார்க்கினியர் எடுத்துக்காட்டுகிறார்.

## நிகழ்ந்தது நினையல்

உறையூர்க் கதுவாயச் சாத்தனார் பழைய நிகழ்ச்சி தலைவனுக்கு நினைவு வருவதாய்ப் பாடுகின்றனர். தலைவன் தலைவியை விடுவித்துப் பிரிந்து போயிருக்கிறான். அவன் எக்காரணத்தால் பிரிந்தான் என்ற குறிப்புப் பாடலில் இல்லை. ஆனால் தலைவி ஊடுகிறாள் என்றால் தலைவன் பரத்தையர்பால் சென்று திரும்ப வந்தபோதே ஆகும். தலைவன் பரத்தையரிடமிருந்து மீண்டான்: ஆனால் தலைவியோ தலைவனைப் புறக்கணிக்கிறாள். இந்நிலையில் அவனுக்கு அவளுடைய அன்பு-நேயம்-நினைவுக்கு வந்தது. தன்னுடைய பாணனிடம் தலைவன் சொல்லுவதாகக் கதுவாய்ச் சாத்தனார் பாடுகிறார். நிகழ்ச்சியை நிகழ்ந்ததாகப் பாடுவது பாடுமுறையில் ஒன்றாகும். ஆனால் இந்நற்றிணைப் பாட்டில் (370) நடந்த நிகழ்ச்சியைப் புதிய சூழ்நிலையில் அமைக்கிறார்.

ஒரு நிகழ்ச்சி நடந்த போது அதனை அவ்வாறே பாடாமல் புலவர் தவிர்க்கிறார். மனைவி கணவனை ஏற்றுக்கொள்ளாமல் புறக்கணிப்பதையும், அதனைத் தொடர்ந்து நடப்பனவற்றையும் கதுவாய்ச் சாத்தனார் பாடிலர் ஏன் ? அவை இல்லறத்தில் தலைவனுடைய தகுதியைக் குறைத்துப் பேசுவதாக அமையும்; அது தலைவனின்

தகுதியைக் குறைத்துப் பேசுவதாக அமையும்: அது தலைவனின் தகுதியை மாசுபடுத்தும். ஆனால் அந்த நிகழ்ச்சியின் போது இதே சூழலில் முன்பு நிகழ்ந்தன அவருக்கு நினைவு வருகின்றன. இது மனித இயற்கை. அதனையே பாட்டாக்கிப் புலவர் நிகழ்காலத்தில் இறந்த காலத்தைக் காட்டி அகப்பாடலைப் பாடியுள்ளார். படைப்பாளி நடந்தனவற்றை, அந்நிகழ்ச்சி நடக்காத சூழலில் பாடுகிறார். இதனால் அவர்தம் பாடுதிறனையும் பண்பாட்டைக் காக்கும் நாகரிகத்தினையும் அறியமுடிகிறது.

நல்லாவூர் கிழார் பாடிய அகப்பாடலில் (86), வாயில் மறுக்கும் தோழிக்குத் தலைமகன், முன்பு திருமணம் நடைபெற்றுத் தலைவியுடன் கூடியிருந்த நிகழ்வினை எடுத்துக்கூறி வாயில் நேர்கிறான். இப்பாடலும் 'நிகழ்ந்தது நினையல்' என்னும் உத்தியைப் பயன்படுத்தி உருவாக்கப்பட்டுள்ளது.

## கொடையறம் காக்கும் போக்கு

சோழன் நலங்கிள்ளியைப் பாடிய புலவர் உறையூர் முதுகண்ணன் சாத்தனார். இக்கிள்ளியை ஆலத்தூர்கிழாரும், கோவூர்கிழாரும் பாடியிருக்கின்றனர். இப்பாட்டில் நலங்கிள்ளியைச் 'சேட்சென்னி நலங்கிள்ளி' (புறம்.27;10) என்ற பெயர் தோன்றக் கூறுவர் சாத்தனார். இப்புலவர்.

'புலவர் பாடும் புகழுடையோர் விசும்பின்
வல்லவன் ஏவா வான வூர்தி
எய்துப என்பதஞ் செய்வினை முடித்தெனக்
கேட்ப லெந்தை சேட்சென்னி நலங்கிள்ளி'

(புறம்.27;7-10)

என்றுரைப்பர். இவ்வாறு பாடிய இப்புலவர், செல்வத்தின் இயல்பைத் திங்கள் தேய்ந்தும், இறந்தும், பிறந்தும், காட்டுகிறது; எனவே வருகின்றவர் புலமையுடையோராயினும், கற்றோராயினும் வருந்தி வந்தவர்களை நோக்கி அவர்களுக்குக் 'கொடை வழங்குக!" என்று பாடுகிறார்.

இவ்வாறு அவர் பாடுவதன் உட்கருத்து என்ன? தமிழ்ப் புலவர்களால் பாடப்பட்டவர்கள் பெருமை பெறுவார்கள் என்பதே இவர் உணர்த்தும் முடிவு. சோழன் நலங்கிள்ளி தன்னை நாடிவந்த தமிழ்ப்புலமையாளர்களான இரவலர்களைப் புரந்து கொடை செய்திலன். அந்நிலையையே அவனுக்குச் செவியறிவுறுத்துமாறு பாடுகிறார். இம்மை செய்தன மறுமைக்கு ஆகும் என்று புலவர் பாடி அவனைக் கொடைஞனாக்குகிறார். 'கொடை செய்க' என்று அறம் மட்டும் உணர்த்தாது அறத்துக்கென்று ஒரு பயனையும் பாடித் திறம்பட உணர்த்துகிறார், சாத்தனார்.

## தமிழுக்கு மதிப்பு

புலவரால் பாடப்படுவது யாருக்கும் கிட்டாத பெரும்பேறு. உலகில் வாழும் எல்லா மக்களையும் புலவர்கள் பாடவில்லை; புலவர் பாடுமாறு செயற்கரிய செய்யவுமில்லை. இவ்வாறு பாடப்பட்டவர்கள் துறக்க இன்பம் அடைகுவர் என்று தமிழர் நம்பிக்கையைப் புலவர் பாடுகிறார். தமிழ்ப் பாட்டுத் துறக்கம் தருவது என்பது, சோழநாட்டு உறையூரில் தமிழுக்கு இருந்த பெருமதிப்பைக் காட்டுகிறது. சோழநாட்டு மக்களும் மன்னரும் தாங்கள் புலவரால் பாடப்படல் வேண்டும் என்று விரும்பியமையையும் புலவர் பாட்டை மக்கள் போற்றியமையையும் இக்குறிப்புணர்த்துகிறது.

## சூழலும் பாட்டும்

மோசியார், பதின்மூன்று புறநானூற்றுப் பாடல்கள் பாடியவர்; அவற்றில் பன்னிரண்டு பாட்டுகள் ஆயைப் பாடியன; அவற்றில் அடங்காத பாட்டு ஒரு பாட்டு; உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் கருவூரில் இருந்தபோது சோழன் முடித்தலைக் கோப்பெருநற்கிள்ளியைப் (புறம்.13) பாடியதாகும். இச்சோழ மன்னனை இப்புலவர் மட்டுமே பாடியிருக்கிறார். அது போலச் சேரமான் அந்துவஞ்சேரல் இரும்பொறையையும் இவர் பாடற் குறிப்பாலேயே அறியமுடிகிறது. இச்சோழனையும் சேரனையும் பற்றி வேறு குறிப்புகள் கிட்டில. இப்பாட்டு, இவருடைய பிற பாட்டுகளின் அமைப்பிலிருந்தும் போக்கிலிருந்தும் வேறுபட்டு நிற்கிறது. சோழனை அறியாத சேரனோடிருந்த புலவர் அவனை யார் என்று அறிவிக்கும் வண்ணம் தான் சொல்ல எடுத்துக் கொண்ட கருத்தைப் பாட்டில் தொடுக்கிறார். சேரன் சோழனைக் கேட்டிலன்: அந்நிலையில் 'இவன் யாரென்குவை யாயின்' (புறம்.131) என்று வினவுவது போலப் பாடலைத் தொடங்குகிறார் புலவர். வினாவைத் தானே எழுப்பித் தானே விடையைக் கூற முற்படுகிறார். ஔவை. சு.துரைசாமிப்பிள்ளை 'சோழனைக் காட்டிச் சேரன் யார் என்று புலவரைக் கேட்டார்' என்றும் இஃது உரையாசிரியர் கருத்து' என்றும் எழுதுவர்.

## புலப்பாட்டு நெறி

கருத்தை வெளிப்படுத்த அறிவுடையார் வெவ்வேறு வகையான நெறிகளை பின்பற்றுவர். ஒருவர் வினாக் கேட்குமாறும் அதற்கு விடை கூறுமாறும் கருத்துக்களை வெளிப்படுத்துவது மிகப் பழைய புலப்பாட்டு

நெறியாகும். இதனை வினாவிடை நெறி என்பது சாலும். உரையாசிரியர்கள் தங்கள் உரையில் தாங்களே வினாவை எழுப்பித் தாங்களே அதற்கு விடையளிப்பதைக் காண முடிகிறது. பிளாட்டோ, சாக்ரடிசு போன்றவர்கள் தங்களுடைய நூல்களை வினா விடையாகவும் உரையாடலாகவும் அமைத்தது கருத்தை வெளிப்படுத்தும் ஓர் இலக்கியக் கொள்கையாகும். அந்த நெறியைப் போன்று உறையூர் ஏணிச்சேரி முடமோசியார், தானே வெளிப்படுத்த வேண்டிய உண்மையைக் கூற முற்படும்போது சேரன் வினாவுவது போலவும் இவர் விடையளிப்பது போலவும் பாடினார். இதனை உணர்ந்த நச்சினார்க்கினியர், "இவன் யார் .......... இவனேயென்னும் பறப்பாட்டினுட் சோழனை முன்னிலையாக்கி முடமோசியார் கூறுகின்ற காலத்து இவனென்பது முன்னிலைப் படர்க்கையாய் நின்றது"[2] என்பர் இவன் என்னும் முன்னிலைச் சுட்டு எங்கோ இருந்த சோழனைச் சுட்டும்போது படர்க்கையாகி விடுகிறது. இவ்வாறு பாடலைத் தொடங்கும் உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் அதனை அடிப்படையாகக் கொண்டு சோழனைப் பற்றியவற்றையெல்லாம் வரிசைப்படுத்தியுரைக்கிறார். சோழனைப் பற்றிச் சேரனிடம் விவரித்துரைக்க 'இவன்' என்ற சுட்டுப்பெயர் பெரிதும் பயன்படுகிறது.

## பாடலின் தொடக்கம்

புறநானூற்றில் சோழ வேந்தனை "இவன்' என்று சுட்டித் தொடங்கும் பாட்டுப் போலப் பாரி மகளிரை இருங்கோ வேளுக்குத் திருமணம் செய்யக் கொண்டு சென்ற கபிலர் அவர்களைச் சுட்டிய பாட்டு 'இவரியா ரென்குவை' (புறம்.201) என்று தொடங்குகிறது. இரண்டு பாடலுக்கும் வேற்றுமை ஒரு பன்மை ஈறு வேறுபட்டிருப்பதேயாகும். இரண்டு பாடலும் முன்பின் அறியாதவர்களை யார் என்று விவரம்

கூறுகின்ற வகையிலேயே பாடப்பட்டுள்ளன. உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் பாட்டினைப் பாடும்போதும், சோழன் அங்கே இல்லை; வேறு எங்கோ உள்ள ஒருவனைத் தங்கள் முன் இருப்பவன் போல் சுட்டிப் பாடுகின்றார். இதனைப் போலத்தான் கபிலரும் இருங்கோ வேளிடம் பாரி மக்களைக் சுட்டிப் பாடுகிறார். அந்தப் பெண்கள் கபிலருடன் இப்பாட்டுப் பாடும்போது இருக்கவில்லை: இந்தச் சுட்டால் இத்தகைய கருத்துக் கிடைக்கிறது. இவை புறநானூற்றில் படைப்பாளியே வினாவை எழுப்பிக் கொண்டு பாட்டுடைத் தலைமையைப் பற்றிப் பேசுகின்ற பாடல்கள்; இவை இரண்டும் பாடாண்டிணையின: துறையே பாடுபொருளுக்குத் தக்கவாறு வேறுபட்டிருக்கிறது. உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் தான் பிறந்த மண்ணின் மன்னன் மீது கொண்டிருந்த பேரன்பையும் மோசியாரின் மனித நேயத்தையும் இந்தப்பாடல் காட்டுகிறது.

காவற்பெண்டு என்னும் பெண்பாற்புலவர் பாடிய புறப்பாடலிலும் வினாவை எழுப்பி விடை கூறுவதாக அமையும் புலப்பாட்டு நெறி இடம்பெறுகிறது. சிறிய இல்லத்தின்கண் உள்ள தூணைப் பற்றியவாறு உன் மகன் எங்கு உள்ளான் என்று வினவுகின்றாய்! அவன் எங்கு உள்ளான் என்று நான் அறிவேன். புலி கிடந்துபோன கன் முழை போல அவனைப் பெற்ற வயிறு இதுவே! எனவே அவனைக் காணவேண்டின் போர்க்களத்தே சென்று காண்பாயாக! என்று வினாவை எழுப்பி விடை கூறுவதாகப் பாடலை அமைக்கிறார் காவற்பெண்டு.

## யானைக் கொடையைப் பாடும் நெறியில் வேற்றுமை

உறையூர் ஏணிச்சேரி முடமோசியார், ஆய் அண்டிரனின் யானைக் கொடையை மூன்று பாடல்களில் புனைகிறார். யானை கொடுத்தமையைக் கூற முயலும் முடமோசியார், அதனை வெவ்வேறு

வகையாகச் சொல்லிப் பாடுகிறார். வானத்தில் சிறிதுமிடமின்றி விண்மீன்கள் பூத்து விளங்கினால் அவற்றின் எண்ணிக்கை, ஆய் அண்டிரன் இரவலர்க்குக் கொடுத்த களிறுகளின் எண்ணிக்கையை விடக் குறைவாம்.

'இரவலர்க்கு ஈத்த யானையிற் கரவின்று
வான மீன்பல பூப்பின் ஆனாது
ஒருவழிக் கருவழி யின்றிப்
பெருவெள் ளென்னிற் பிழையாது மன்னே'

(புறம். 129; 6-9)

என்பது பாடற்பகுதி. ஈண்டு ஆயைப் படர்க்கையில் வைத்துப் புலவர் பாடுகிறார். இஃது இரவலர் யானைக் கொடை பெற்றமையைக் காட்டுகிறது.

'ஆய் அண்டிரனே! நின்னுடைய நாட்டில் இளம்பொன் யானை ஒரு கருவில் பத்துக் குட்டிகளை ஈனுமோ? இன்முகத்தோடு நின்னையும் நின் மலையையும் பாடி வருகின்றவர்களுக்கு இன்முகங்கரவாது உவந்து நீயளித்த யானைகள் கொங்கர் எறிந்த வேல்களை விட மிகுதி (புறம்130) குறைந்த வேல்களைக் கையாண்டு போர் செய்தமையைப் புலவர் ஒப்பிட்டுக் கொடையுடன் வீரத்தையும் புகழுகிறார். இஃது ஆயையும் அவன் மலையையும் பாடி வருகின்றவர்களுக்கு அவன் கொடை செய்தமையைப் பேசுகிறது.

மோசியார் (131), ஆய் வருவோர்க்கெல்லாம் யானையை மிகுதியாக வழங்குகின்ற சிறப்பை மேற்காட்டிய இரண்டு வகையிலிருந்து இன்னொரு பாட்டில் வேறுவகையாகப் பாடுகிறார்.

இப்பாட்டு முடமோசியார் பாடல்களில் குறைந்த அடிகளையுடையது. அவன் மலைநாட்டிலுள்ள காடுகளில் யானை மிகுதி. யானைகள் கானகத்தில் வாழ்வன; ஆய் வள்ளலைப் பாடிக் கானமும் யானைகளை மிகுதியாகப் பெற்றனவோ? என்று முடமோசியார் பாடுகிறார். இயற்கை வளத்தை வள்ளலின் கொடைவளமாகப் புலவர் மாற்றியுரைக்கிறார்.

'மழைக்கணஞ் சேக்கும் மாமலைக்கிழவன்
வழைப்பூங் கண்ணி வாய்வாள் அண்டிரன்
குன்றம் பாடின கொல்லோ
களிறுமிக வுடையவிக் கவின்பெறு காடே'

(புறம். 131)

என்பது புறநானூறு. ஆய்க்குச் சொந்தமான காட்டில் களிறுகள் மிகுதியாக உள்ளன என்பதைக் கூற வந்த மோசியார் ஆயின் குன்றத்தைப் பாடியதால் ஆய் களிறுகளை மிகுதியாகக் கொடுத்து அவை காட்டில் உள்ளனவா? என்று வினவுகிறார். இதனால் ஆய் மலைநாட்டில் நிறைய யானை இருப்பதும் அவன் அவற்றைப் பிறருக்குக் கொடை செய்வதும் உணர்த்தப்பட்டது. இப்புனைவு யானைக் கொடையின் மிகுதியைக் காட்டுவதாகும்.

மூன்று பாட்டிலும் ஆய் மலையில் யானைகள் மிகுதி என்பதும் அவன் அவற்றை அனைவர்க்கும் கொடுத்தான் என்பதும் பெறப்படும். யானைக் கொடையின் பெருமையை விளக்க வான்மீனையும், யானைச் சூலையும், கானகத்தையும் ஆசிரியர் இயம்பினார். மூன்றும் ஒரே திணையில் ஒரே துறையைச் சார்ந்தன. மூன்றையும் ஒரு பாடலாகப்

பாடினும் பாடலமையும்; மூன்று பாட்டும் குறைந்த எண்ணிக்கையில் அடிகளைப் பெற்றவை. ஒரு பாட்டு (புறம். 129) ஆய் தன்னை நாடி வரும் இரவலர்க்குக் கொடுத்தமையும், அடுத்த பாட்டு (130) தன்னைப் பாடிவருகின்ற பரிசிலர்க்குக் கொடுத்தலையும், இன்னொரு பாட்டு (131) எல்லாருக்கும் கொடை வழங்க அடிப்படையாக விளங்குகின்ற காட்டின் யானை வளத்தையும் பேசுகின்றன. ஒவ்வொன்றையும் மோசியார் தனித்தனியே பாடினாரேயன்றி இணைத்துப் பாடிலர். இது படைப்பாளியின் நுண்மாண் புலமைத்திறத்தை நவிலுகிறது.

## உவமைத்திறன்

உவமை என்பது பொருளை விளக்குவதற்குப் படைப்பாளிகள் பயன்படுத்தும் பொருள் விளக்கக் கருவியாகும். கருத்துக்களை அடுக்கிக் கொண்டு படைப்பாளிகள் தங்கள் படைப்புகளை உருவாக்கும் போது அந்தக் கருத்துக்களைப் புலப்படுத்தி உவமைகளைப் பயன்படுத்துகின்றனர். ஆதலின் உவமை என்பது புலப்பாட்டு நெறியில் முதன்மையானதும் தலைமையானதும் குறிப்பிடத்தக்கதுமாகும். சோழநாட்டுப் புலவர்கள் தம் பாடல்களில் உவமையின் மூலம் கருத்துகளை வெளிப்படுத்துவது காட்டப்பெறுகிறது.

“ஒரு பொருளை வேறொன்றினொடு ஒரு வகையில் ஒப்பிட்டுக் கூறுவதுதான் உவமை”(3)என விளக்கம் தருகிறார் எஸ்.வையாபுரிப்பிள்ளை. “உவமை என்பது கவிஞனின் அனுபவப் பொருளாகும். பொருள் என்பது அவன் காணும் புதிய பொருளாகும். அவன் ஏற்கனவே கண்டு வைத்த பொருளைப் புதிதாகக் காணும் பொருளோடு பொருத்தி வைத்து

அப்பொருளின் உயர்வு தாழ்வை அளந்து அறிவிக்கின்றது" [4] என்பர் இரா.சீனிவாசன்.

உறையூர் மருத்துவன் தாமோதரனார், சோழன் குராப்பள்ளித் துஞ்சிய பெருந்திருமாவளவனின் ஆட்சித்திறனை உப்பு ஏற்றப் பெற்ற பாரமிக்க வண்டியை, மலைநாட்டில் காளை இழுத்துச் செல்லுதலைப் போல ஆட்சிச் சுமையினைத் தாங்கி அரசுப் பாரத்தை நடத்துகிறான் என்பர்.

'கழிஉப்பு முகந்து கல்நாடு மடுக்கும்
ஆரைச் சாகாடு ஆழ்ச்சி போக்கும்
ஊரனுடை நோன்பகட்டு அன்ன எங்கோன்'
(புறம்.60; 7-9)

என்பது புறநானூற்றுப் பகுதி. இங்கு நெய்தல் நில உப்பைக் குறிஞ்சி நிலமான மலைக்கு, மருதத்தின் கருப்பொருளான காளை இழுத்துச் செல்வதாகக் குறிக்கப்பெற்றிருப்பது குறிப்பிடத்தக்கது.

## இறைச்சி

இறைச்சி என்பதற்குத் தங்குதல் என்பது பொருள். நேரடியான பொருளுக்குப் புறமாக வேறொரு பொருள் தங்கியிருக்கும். அதுவே இறைச்சி எனப்படும். அதனையே தொல்காப்பியர் 'உடனுறை' எனக் குறிக்கிறார். கவிஞன் தான் உணர்ந்ததை நேரடியாகக் கூற முற்படும்பொழுது அவை விரும்பத்தகாதவாய் முடிகின்றன. எனவே கற்பார் விரும்பும் வண்ணம் இறைச்சிப் பொருளைக் கையாண்டு தன் கருத்தை வெளியிடுகிறான் [5] என்பர் அ. ச. ஞானசம்பந்தன். ஒரு

செய்யுளிடத்துள்ள சொற்கள் அனைத்தும் நேரடியாக வேறொரு பொருளை உணர்த்தின் அது உள்ளுறை என்றும், அச்சொற்களில் சில மட்டும் மற்றொரு பொருளை உணர்த்துமாயின் அது இறைச்சி என்றும் அறியமுடிகிறது.

பிரிவுக்காலத்தில் அன்புறு தகுவனவாம் உயிரினங்களைத் தலைவன் வழியிடைக் காண நேரின், அவள் நினைவு வந்து விரைவில் திரும்புவான் என்று தலைவியைத் தோழி வற்புறுத்தி ஆற்றும் பகுதியில் இறைச்சிப் பொருளை உயர்த்துணர முடியும். தலைவன் பிரிவின்கண் வேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறீஇய பாங்கில் தாயங்கண்ணனாரின் பாலைத்திணைப் பாடலில் (அகம். 237), தலைவன் தலைவியைப் பொருள் தேடுதல் காரணமாகப் பிரிகிறான். அவன் குறித்துச் சென்ற பருவமும் வந்தது. ஆனால் பிரிவாற்றாது வருந்துகிறாள் தலைவி. இதனைக் கண்ட தோழி, பாதிரிப்பூக்கள் புனலிப் பூக்களோடு கருமணலிற் சிதறி அழகு செய்ததும், தென்றல் வீசுதலும், நறிய கிளைகளில் வண்டுகள் ஒலித்தலும், குயில் கூவுதலும் உடைய இளவேனிற் காலத்தைக் குறித்து, தலைவியை வற்புறுத்திக் கூறுகிறாள். காதலரோடு கூடின மகளிர்க்கு பேரின்பம் தரவல்லது இளவேனிற் காலம் என்று குறிப்பாக இறைச்சிப் பொருளை வெளிப்படுத்துகிறார் புலவர் தாயங்கண்ணனார்.

## வாழ்வைப் பாடும்திறன்

சங்க கால ஊர்திகளில் காளை இழுக்கும் சகடே மக்களுக்குப் பெரிதும் துணையாகும். வண்டியில் மிகுதியான உப்புப்பாரத்தை ஏற்றி மலைநாட்டில் காளையை ஓட்டும்போது எவ்வாறு மூக்கு ஊன்றியும் தாள் தவழ்ந்தும் வண்டியை இழுக்குமோ அது போலச் சோழன் அரசை

நடத்துகிறான். உறையூர் மருத்துவன் தாமோதரனார் உலக நடப்பை நோக்கியவராதலின் அதனை உவமையாக இப்பாட்டில் அமைக்கிறார்.

உவமையில் வாழ்க்கையின் மெய்ப்பொருளைப் பாடுவதில் சோழநாட்டுப் புலவர்களுக்குத் தனிச் சிறப்பு உண்டு. உறையூர் முதுகண்ணன் சாத்தனார், சேற்றிலே பிறக்கும் தாமரை இதழ்களும், மொட்டும் வேறுபாடற்று விளங்குவையாயினும் சிறப்பால் தனித்தன்மை எய்துவன. உலகில் பிறப்பவர் அனைவரும் உரையும், பாட்டும் பெற்றுப் புகழால் உயர்வு அடைகின்றனர். தாமரை மொட்டைப் போல் புகழும், பீடும் பெற்று வாழ்வோர் ஒரு சிலரே, தாமரை இதழைப்போல் மறைந்து மாய்வோர் பலராவார். இதனை,

'சேற்றுவார் தாமரை பயந்த ஒண்கேழ்
நூற்றிதழ் அலரின் நிறைகண் டன்ன
வேற்றுமை இல்லா விழுத்திணைப் பிறந்து'

(புறம். 27;1-3)

எனக் குறிக்கும் அடிகள் உலகில் அனைவரும் தெரிந்து தெளிய வேண்டிய உண்மையாகும். தாமரையின் தோற்றமும், வளர்ச்சியும் விளக்கமும், அழிவும் வாழ்க்கையின் விளக்கமாகக் காட்டப்பட்டுள்ளமை கருதற்பாலது. நீர்நிலையில் வளர்ந்திருக்கும் தாமரையையும், தாமரை இலையையும் கண்ட முதுகண்ணன் சாத்தனார், வாழ்க்கைப் பயனை விளக்க அதனைப் பயன்படுத்துகிறார். உலகத்தில் மக்கள் பயன்படுத்தும் ஒவ்வொரு பொருளையும் புலவர்கள் கூர்ந்து நோக்குவதால் இவ்வாறு உவமையாகப் பயன்படுத்த முடிகிறது.

## வெண்மேகமும் பஞ்சும்

உறையூர் மருத்துவன் தாமோதரனார் நூல் நூற்கும் நெசவுத் தொழிலை 'வில்லெறி பஞ்சின் வெண்மழை தவழும்' (அகம்.133; 6) எனக் குறிப்பர். இங்கு வில்லினால் அடிக்கப் பெற்ற பஞ்சு போல மேகங்கள் தவழ்ந்திடும் எனக் கூறவதனால் பஞ்சு அடிக்கும் பஞ்சுத் தொழிலை உவமையின் வாயிலாகச் சுட்டுகிறார். மக்கள் பருத்தியை விளைவித்து ஆடையாக்கல் மிகப்பழமையான தொழில். இத்தொழிலின் அடிப்படை பஞ்சு அடித்தல். இதனைப் புலவர் நீரற்ற வெண்மேகம் திரிதற்கு உவமையாகப் பாடுகிறார்.

இரும்பைத் தமிழர் பயன்படுத்துவதில் வல்லவர்கள். கொல்லுத் தொழில் தமிழகத்தின் தொன்மைத் தொழில். சங்க காலத் தமிழர்களின் தொழிற்கூடமே கொல்லுப்பட்டறை. அப்பட்டறையில் எல்லாப் பொருள்களையும் நெருப்பில் காயவைத்து அடிப்பதற்கு இரும்பு அடைகல் காணப்படும். இதனைப் 'பட்டடை' என்றும் 'அடைகல்' என்றும் வழங்குவர். இந்த அடைகல் எந்தப் பொருளை வைத்து அடித்தாலும் எவ்வளவு சூட்டில் வைத்தாலும் தாங்கியிருக்கும். இதனைத் தாமோதரனார், பிட்டங் கொற்றனின் வல்லமைக்கு உவமையாகக் கூறுகிறார். இதனை,

'இரும்புபயன் படுக்கும் கருங்கைக் கொல்லன்
விசைத்தெறி கூடமொடு பொரூஉம்
உலைக்கல் அன்ன வல்லா ளன்னே'

(புறம்.170;15-17)

என்ற பாடல் பகுதி உணர்த்தும். பஞ்சுத் தொழில், கொல்லுத் தொழில் ஆகியவற்றில் பயன்படும் பொருள்களை அறிந்து இவர் பாடலில் உவமிக்கிறார்.

## வரலாற்றுச் செய்தி

அறியப்படாத செய்தியை அறிவிக்கும் மனங்கொண்டு சொல்ல நினைத்ததை எளிதாகச் சொல்லி வரலாற்று நிகழ்ச்சியினை உவமையாகக் காட்டுதலைச் சங்க இலக்கியத்தில் காணமுடிகிறது. இத்தகைய வரலாற்று உவமைகளை உறையூர்ப் புலவர்கள் தமது பாடல்களில் பயன்படுத்தியுள்ளனர்.

குடவாயிற் கீர்த்தனார், வேந்தன் போர் காரணமாகத் தலைவியைப் பிரிந்த தலைவன் போரில் வென்று, மீண்டு வரும் வழியில் தேர்ப்பாகற்கு உரைப்பதாக அமைந்த அகப்பாடலொன்றில், பல்வேறு வளங்களை உடைய குடவாயில் போன்ற நம் தலைவியின் நல்ல பண்புகளைக் கொண்ட மார்பில் உள்ள துயிலினைப் பெறுதல் வேண்டும். எனவே தேரினை விரைவாகச் செலுத்துக! என்று பொருள்படுமாறு இவ்வகப்பாடல் (46) அமைகிறது. தலைவியின் நலத்திற்குப் பல்வகை வளங்களும் நிறைந்த நகரத்தை உவமைப்படுத்துவது சங்கப் புலவர் இயல்புகளுள் ஒன்று. குடவாயிற் கீர்த்தனார் அகப்பாடல்களில் புறச்செய்திகளை இடம்பெறச் செய்வதில் மிகுந்த ஆர்வம் கொண்டுள்ளதை அவரது பாடல்கள் வழி அறியப்படுகின்றன. அகப்பாடல்களில் புறச் செய்திகளை இடம்பெறச் செய்வது ஒருவகை உத்தி. இது மிகவும் பழமையான புலப்பாட்டு நெறிகளில் ஒன்று.

உறையூர் ஏணிச்சேரி முடமோசியார், ஆய் அண்டிரனது கொடைச் சிறப்பைக் கூறுமிடத்து, கொங்கர்களோடு ஆய் அண்டிரன் போர் புரிந்த போது கொங்கர்கள் மீது பட்ட வேலின் எண்ணிக்கையைவிட ஆயின் யானைக் கொடை மிகுதியானது என்பதை,

'இன்முகம் கரவாது உவந்துநீ அளித்த
அண்ணல் யானை எண்ணின் கொங்கர்க்
குடகடல் ஓட்டிய ஞான்றைத்
தலைப்பெயர்த் திட்ட ன்வேலினும் பலவே'

(புறம்.13;4-7)

என்ற பாலடிகள் மெய்ப்பிக்கும். ஈண்டு ஆய் அண்டிரன் முன்பு கொங்களுடன் போர் புரிந்த வரலாற்றுச் செய்தியை உவமையின் வாயிலாக ஏணிச்சேரியார் புலப்படுத்துகிறார்.

உறையூர் முதுகூத்தனார் தலைவியின் நுதல் பொலிவு இழந்தமைக்கு உறையூரில் பங்குனித் திருவிழா முடிந்தபின்பு அங்குள்ள அடுப்புகளில் நெருப்பு எரியாதிருந்தமையை ஒப்புமைப்படுத்துகிறார்.

'தீயில் அடுப்பின் அரங்கம் போலப்
பெரும்பாழ் கொண்டன்று நுதலே தோளும்'

(அகம்.137;11-12)

என்ற பகுதி உணர்த்தும். இங்கு உறையூரில் பங்குனி உத்திரத் திருவிழா மிகச்சிறப்பாக நடைபெற்றமையையும் அடுப்பு வைத்து மிகுதியாக உணவாக்கியமையையும் உவமையின் வாயிலாகப் புலப்படுத்துகிறார் ஆசிரியர்.

## தன்னுணர்ச்சி

புலவர்கள் புரவலனைப் போற்றிப் பாடும்பொழுது உணர்ச்சிப் பெருக்குடன் பாடும் எழுச்சிப் பாடல்களாகவே பாடுகின்றனர். உறையூர் ஏணிச்சேரி முடமோசியார், ஆய் அண்டிரனைப் பாடிய புறப்பாடலொன்றில் (132),

'முன்னுள்ளு வோனைப் பின்னுள்ளினேனே
ஆழ்கென் னுள்ளம் போழ்கென் னாவே
பாழூர் கிணற்றிற் றூர்கவென செவியே'

(புறம்.132;1-3)

என்று தன் உடல் உறுப்புகள் குறைபடும்படியாக பாடலை அமைக்கிறார். உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் தன் உறுப்பு குறையுடையதால் இவ்வாறு பாடலை அமைக்கிறார் எனக் கருதினால், ஆவூர் மூலங்கிழார் மல்லிக்கிழான் காரியாதி என்னும் குறுநில மன்னன் ஆநிரைகளை மீட்கும்போது இறந்துபட்டதை அறிந்து அவனது நடுகல்லைக் கண்டு வருந்திக் கையற்றுப்பாடும் பாடலில், தலைவனின்றி பொழிவிழந்து கிடக்கும் இல்லத்தை,

'வரையாப் பெருஞ்சோற்று முரிவாய் முற்றம்
வெற்றியாற் றம்பியி னெற்றறாகக்
கண்டனென் மன்ற சோர்கவென் கண்ணே'

(புறம். 261;3-5)

என இக்காட்சியைக் காணும் என் கண்கள் சோர்வடைக! என்று பாடுகிறார். மன்னர்களைப் பாடும் புலவர்கள், தன்னைத் தாழ்த்தி பாடும் மரபைப் பின்பற்றிப் பாடல்களை அமைக்கும் முறையையும் ஒரு வகை உத்தியாகவே கையாண்டுள்ளனர் எனத் தெரிகிறது.

## யாப்புத்திறன்

ஆசிரியப்பாவுக்குரிய குறைந்த எல்லையான நான்கு அடி ஆசிரியப்பாட்டை உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் பாடியுள்ளார். ஆசிரியப்பாவுக்கு இழிபு மூன்றடி. ஆனால் மூன்றடியான் அமைந்த ஆசிரியப்பாட்டேதும் புறநானூற்றில் இல்லை. நான்கடியான் அமைந்த ஆசிரியப்பாட்டே உள்ளது. இப்பாட்டின் ஈற்றயலடி முச்சீர்த்து. தொல்காப்பியர்,

> 'ஈற்றயல் அடியே ஆசிரிய மருங்கின்
> தோற்றம் முச்சீர்த்தாகு மென்ப'
>
> (தொல். 1325)

என்பர். இதனைத் தொல்காப்பியர் ஆசிரியப்பாவின் இலக்கணமாகக் கூறுகிறார். இந்த வகையாக அமைந்த ஆசிரியப்பாவைப் பிற்காலத்தார் நேரிசையாசிரியப்பா என்று வகைப்படுத்துவர்.

சோழநாட்டுப் புலவர்களின் பாடல்கள் அனைத்தும் இறுதிச்சீர் முடிகின்றபோது ஏகார முடிபே பெற்றிருக்கின்றன. ஆசிரியப்பா 'என்' என்று முடியலாம் என்றும் விதி உள்ளது. ஆனால் ஈண்டு ஒரு

பாட்டுக்கூட அவ்வாறு முடிந்திலது. சங்க காலத்தில் ஆசிரியப்பாவில் வகைகள் இல்லை. உறையூர்ப் புலவர்களின் மூன்று பாடல்களில் மட்டும் ஈற்றயலடி முச்சீராய் அமைந்தில. ஆனால் அனைத்துப் பாடல்களிலும் ஈற்றடி ஈற்றுச்சீர் ஏகார ஈறு பெற்றுள்ளது. புறநானூற்றில் 190-ஆவது பாடல் மட்டும் ஓகார முடிபு பெற்று அமைந்துள்ளது. இது சோழன் நல்லுருத்திரன் பாடியது. உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் பாடிய புறப்பாடலில் (புறம். 13) கூன் (களிறே) அமைந்திருக்கிறது. அது போல உறையூர் முதுகண்ணன் சாத்தனார் பாடிய புறப்பாட்டில் (புறம். 28) ‘அதனால்’ என்ற கூன் காணப்படுகிறது. அகப்பாடல்களில் கூன் இல்லை. அகப்பாடல்களும் புறப்பாடல்களும் ஒன்று போல் ஏகார முடிபே பெற்றுள்ளன. ஆசிரியப்பாவின் குறைந்த அடிகளையுடைய மூன்றடிப் பாட்டுகள் எவையும் இல்லை.

## பெண்பாற் புலவர்கள்

சோழநாட்டைச் சேர்ந்த பெண்பாற் புலவர்கள் நால்வர். இவர்தம் பாடல்கள் அணைத்திலும், தன் வாழ்க்கை நிகழ்ச்சிகளை இணைத்தே பாடல்களைப் பாடுகின்றனர். ஆதிமந்தியார், தன் கணவனை இழந்த நிலையில், அவனைத் தேடிப் பாடும் அகப்பாடல் (குறு.31), கைம்மை நோன்பு மேற்கொள்ளும் தாயங்கண்ணியார் (புறம்.250), தான்பெற்ற மகனின் வீரத்தைப் பேசும் காவற்பெண்டு (புறம்.86), போர்வை கோப்பெருநற்கிள்ளியின் மீது ஒருத்தலைக்காதல் கொண்ட பெருங்கோழி நாய்கன் மகள் நக்கண்ணையார் பாடிய புறப்பாடல்கள் (83, 84, 85), என தம் படைப்புகளில் சொந்த வாழ்வில் நடந்த நிகழ்ச்சிகளையே பாடுபொருளாக்கி அகப்புறமரபுகளுக்கேற்ப் பாடல்களைப் பாடுகின்றனர்.

இதன் மூலம் அவர்களது உள்ளக் கிடக்கையை வெளிப்படுத்தும் உணர்வுப்பூர்வமான பாடல்களாகவே அமைகின்றன.

## புறப்பாடல்களில் திணை துறை

சோழநாட்டுப் புலவர்கள் பாடிய புறநானூற்றுப் பாடல்களில் திணை, துறைப் பொருத்தம் சில பாடல்களில் இல்லை. புறநானூற்றைத் தொல்காப்பியர், ஐயனாரிதனார் அடிப்படையிலேயே தொகுத்துள்ளனர் சான்றோர். எனினும் சில புறநானூற்றுப் பாடல்களின் திணையும் துறையும் வேறுபட்டுக் கிடங்கின்றன. சான்றாக புறநானூற்றில் கடைநிலைத் துறையில் அமைந்த பாடல்கள் பதினொன்று. இவற்றில் புறம். 127-ஆவது பாடல் தவிர ஏனைய அனைத்தும் புறநானூற்றின் இறுதியில் (புறம். 382, 383, 391, 392, 393, 394, 395, 396, 398) தொகுக்கப்பட்டிருக்கின்றன. தொல்காப்பியர், காவலர்க்கு உரைத்த கடைநிலையானும்' (தொல். 1036:4) என்று கடைநிலைக்கு இலக்கணம் செய்கிறார். 'தூரத்தே வருவோர் வருத்தம் தீர வாயில் காவலர்க்குத் தன் வரவினைத் தலைவனுக்குக் கூறு என்று கூறம் கடைநிலையானும்' என்று பொருள் விளக்கம் தருவர். ச.வே. சுப்பிரமணியன். எனினும் புறநானூற்றில் அமைந்த கடைநிலைத் துறைப் பாடல்கள் எவற்றிலும் இக்குறிப்பு இல்லை. தொல்காப்பியர் கூறிய கடைநிலைத் துறையின் கருத்து வளர்ச்சி பெற்ற நிலைகளையே புறநானூற்றுப் பாடல்கள் காட்டுகின்றன. கடைநிலைத் துறை நயமும் சுவையும் மிக்க ஒரு துறையாகும். புரவலன் அன்பையும் புலவனின் பெருமித்தினையும் விளக்கும் துறையாகும். ஆதலின் அதனைப் பல்வேறு வகையில் புனைவதற்கு வாய்ப்பு உண்டு. ஆதலால் பன்னிருப்பாட்டியல் கடைநிலையை ஒரு சிற்றிலக்கியமாகக் கொண்டு இலக்கணம் வகுத்து, ஒரு இலக்கிய வகையாக உருவாக்கிவிட்டது.

# ஆய்வு முடிவுகள்

1. புலவர்கள் வாழ்ந்த சூழ்நிலையே அவர்களுடைய படைப்பை உருவாக்கும் காரணிகளாக அமைகிறது என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

2. சங்கப் பாடல்களில் இரண்டு நிகழ்ச்சிகளை இணைத்துப்பாடுகிற போக்கைக் காண முடிகிறது. பட்டினப்பாலை அகச்செய்திகளையும், புறச்செய்திகளையும் இணைத்து நோக்கும் பாங்கும் நோக்கத்தக்கது.

3. சேட்சென்னி நலங்கிள்ளி புரவலரையும், இரவலரையும் போற்றிப் பாராட்டிப் பரிசில் நல்காது இருந்தான். அக்காலை உறையூர் முதுகண்ணன் சாத்தனார், புலவர் போற்றிய பெருமக்கள் 'வலவன் ஏவா வானவூர்தி அடைவர்' என்று சொல்லி அவனைக் கொடை செய்யத் தூண்டுகிறார் தமிழ்ப்புலவர்களை ஆதரிக்க வலியுறுத்துகிறார். இதனால் தமிழுக்கு இருந்த மதிப்புப் புலனாகும்.

4. ஏணிச்சேரி முடமோசியார் ஆயின் களிற்றுக் கொடையை மூன்று வகையாகப் புறப்பாடலில் தம் பாடுதிறனால் காட்டுகிறார்.

5. அகப்பாடல்களில் புறச்செய்திகளை இடம்பெறச் செய்யும் உத்தியை சோழநாட்டுப்புலவர்கள் கையாண்டுள்ளனர்.

6. பெண்பாற் புலவர்கள் தம் பாடல்களில் சொந்த வாழ்வில் நடந்தவற்றையே பதிவு செய்துள்ளனர்.

# சான்றெண் விளக்கம்

1. ஔவை. சு.துரைசாமிப்பிள்ளை (உ.ஆ), புறநானூறு இரண்டாம் தொகுதி, ப. 134.
2. மே.வி. வேணுகோபாலபிள்ளை (ப.ஆ), தொல்காப்பியம் - சொல்லதிகாரம், நச்சினார்க்கினியம், பக். 445-446.
3. எஸ். வையாபுரிப்பிள்ளை, இலக்கியச் சிந்தனை, ப. 85.
4. இரா. சீனிவாசன், சங்க இலக்கியத்தில் உவமை, ப. 2.
5. அ. ச. ஞானசம்பந்தன், இலக்கியக்கலை, ப. 108.

# முடிவுரை

சோழநாட்டுப் புலவர்களின் இலக்கியக்கொள்கை என்னும் இவ்வாய்வு சோழநாட்டைச் சேர்ந்த புலவர்கள் பாடிய பாடல்கள் அனைத்தையும் ஒடுங்கு நோக்கி ஆராய்ந்து அவர்களின் இலக்கியக் கொள்கையை வெளிப்படுத்துகிறது.

சங்கத் தொகை நூல்களுள் சோழநாட்டைச் சேர்ந்த புலவர்களின் எண்ணிக்கை 20 விழுக்காடு ஆகும். சோழ நாட்டைப் பற்றிப் பிற புலவர்களும் பாடியுள்ளனர். எனினும் சோழ மன்னர்களைப் பற்றிய பாடல்களை மிகுதியாகப் பாடவில்லை. சங்க காலத்தில் சோழநாட்டில் சோழ வேந்தர் குடும்பத்தினரிடையே குடும்பச் சண்டை நிலவியிருந்தது. தந்தைக்கும் மகனுக்கும் இடையே போர், அண்ணனுக்கும் தம்பிக்குமிடையே போர் போன்ற நிகழ்ச்சிகள் இந்த உண்மையை உணர்த்துகின்றன. சங்க இலக்கியத்திற்குப் பின் எழுந்த சிலப்பதிகாரமும் இதனைச் சுட்டுகிறது. இதனால் சோழநாடு அமைதியின்றி இருந்தது விளங்கும். இச்சூழலிலும் அங்குத் தமிழ் வளர்ந்து புலவர்கள் மன்னர்க்கு அறிவுறுத்தி நெறிப்படுத்திப் புலவர்களையும் கலைஞர்களையும் புரக்கத் தம்பாடல்களில் எடுத்துரைக்கின்றனர். இதனை உறையூர் முதுகண்ணன் சாத்தனார் பாடல்களால் (புறம். 27, 28, 29) அறிய முடிகிறது.

உறையூர்ப் புலவர்கள் முடிகெழு வேந்தர்களுள் ஒருவராகிய சாலச்சிறந்த சோழவேந்தர் தம் தலைநகர்ச் சார்புடைய புலவர்களாக விளங்குகின்றனர். எனினும் அவர்கள் குறைந்த கண்ணிக்கையிலேயே பாடல்களைப் பாடியுள்ளனர். அவர்களில் ஏணிச்சேரி முடமோசியார் ஒருவரே பதின்மூன்று பாடல்கள் பாடியுள்ளார். மிகச் சிறந்த

படைப்பாளியாகத் திகழும் இவர் தம் திறம்காட்ட இன்னும் பல படைப்புகளைப் படைத்திருக்க வேண்டும். பறம்பு மலையில் வாழ்ந்து பாரியைப் பாடியவர் கபிலர். இப்பெரும் புலவர் மிகுதியான பாடல்களைப் (235) பாடியுள்ளார். இயற்கை வளமும், சூழ்நிலையும், புரவலனும் அவர்க்கு நற்றுணையாய் விளங்கினமையின் தமிழுக்கு மிகுதியான பாடல்களைக் கபிலர் தந்திடுக்கிறார்.

படைப்பாளிகளின் வாழ்க்கைச் சூழலே படைப்புகளின் பெருக்கத்திற்கும், சுருக்கத்திற்கும் அடிப்படையாகிறது. கபிலருக்கு இருந்த வாழ்க்கை. வாழ்க்கை அனுபவங்கள் சோழநாட்டுப் புலவர்களுக்கு இல்லை. இவர்களது வாழ்க்கைச் சூழல் பரப்பரப்புடையதாய் இருந்தமையும் அவர்தம் படைப்புகளை உருவாக்குவதற்குத் தடைக்கல்லாக விளங்கியிருந்திருக்கின்றன. உங்க இலக்கியங்களை ஊர் வாரியாகவும் நாடு அடிப்படையிலும் ஆராய்ந்து தனித்தனித் திறங்களையும், கொள்கைகளையும் காணுதல் வேண்டும். அவற்றின் அடிப்படையில் ஒவ்வொரு நாட்டின் இலக்கியக் கொள்கைகளையும், போக்குகளையும் தொகுத்து நோக்க வேண்டும். இத்தகைய ஆய்வுப் போக்கினால் இலக்கியத் திறனையும் இலக்கியக் கொள்கைகளையும் நாடுவாரியாகச் சங்க இலக்கியங்களின் அடிப்படையில் உருவாக்க வேண்டிய களம் அமைந்து கிடக்கிறது. தமிழ் இலக்கிய ஆராய்ச்சி வரலாற்றில் இலக்கியக் கொள்கை ஆராய்ச்சிப் பற்றிய முயற்சி, உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவதைத் தொடர்ந்து, நாடு, ஊர் வாரியாகச் சங்க இலக்கியங்களை ஆராயும் முயற்சியில் இவ்வாய்வு சோழநாட்டுப் புலவர்களின் இலக்கியக் கொள்கைகளை ஓரளவு தெளிவுபடுத்துகிறது. இத்தகைய ஆராய்ச்சிகள் பலவாகப் பெருகினால் மேலும் தெளிவும், வளமும் பொருந்த சங்க இலக்கிய ஆய்வு முழுமைபெறும். இத்தகைய ஆய்வுகள் தமிழில் பெருக வேண்டும்.

- சோழநாட்டைச் சேர்ந்த புலவர்களின் எண்ணிக்கை ஐம்பது. இவர்கள் தெளிவாக உறுதியான ஆதாரங்களின் அடிப்படையில். தேர்வு செய்யப்பட்டுள்ளனர்.

- இவர்கள் சங்க இலக்கியங்களான பத்துப்பாட்டிலும் எட்டுத்தொகையிலும் பாடல்களை இயற்றியுள்ளனர்.

- இவர்கள் பாடிய அகப்பாடல்கள் தொல்காப்பிய அடிப்படையிலும், புறப்பாடல்கள் தொல்காப்பியம், புறப்பொருள் வெண்பாமாலை அடிப்படையிலும் ஒப்பிட்டு, உறழ்ந்து ஆராயப்பட்டுள்ளன.

- சோழநாட்டுப் புலவர்கள் புறப்பாடல்களை விட அகப்பாடல்களையே மிகுதியாகப் பாடியிருக்கினறனர். எனினும் சோழநாட்டின் தலைநகர்ப் புலவர்கள் (உறையூர்) அகப்பாடல்களை விடப் புறப்பாடல்களையே மிகுதியாகப் பாடியிருக்கின்றனர். இதற்கு அவர்கள் நாட்டிலுள்ள உள்நாட்டுக் குழப்பங்களே காரணம். புலவர்கள் வாழ்ந்த சூழ்நிலைகளே அவர்களுடைய படைப்பை உருவாக்கும் காரணிகளாக அமைகிறது என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

- அகம்பாடிய சோழநாட்டுப் புலவர்களின் எண்ணிக்கை 38; புறம்பாடியர்கள் 27 பேர். அகத்தையும் புறத்தையும் பாடியவர்கள் 12 பேர்.

- சங்கப் பாடல்களில் சோழநாட்டுப் புலவர்களின் அரசப் புலவர்கள் அறுவர்; பெண்பாற் புலவர்கள் ஐவர் ஆவர்.

- நாட்டுப் புலவர்களின் பெயர்கள் அவர்கள் வாழ்ந்த ஊரடனும் தந்தையின் பெயருடனும், கணவர்பெயருடனும், உடல் உறுப்புக்களின் அடிப்படையிலும், செய்த தொழிற் பெயர்களுடனும், பெற்ற பட்டங்களுடனும் இணைத்துப் பெற்றுள்ளனர்.

- தந்தையும் மகனும் புலவர்களாகத் திகழ்ந்துள்ளனர்.

- புலவர்களின் பெயர்கள் பெரும்பான்மையும் கந்தன், சாந்தன், குமரன், தாமோதரன், காயனார் (சிவன்), உருத்திரன் என்று கடவுளர் பெயராக உள்ளன. தெய்வ நம்பிக்கையின் அடிப்படையில் இப்பெயர்கள் காணப்படுகின்றன.

- அரிசில்கிழார், குடவாயிற் கீரத்தனார், கோவூர் கிழார், சோழன் நல்லுருத்திரன் ஆகியோர் எண்ணிக்கையில் அதிகமான பாடல்களைப் பாடியுள்ளனர்.

- ஆவூர் மூலங்கிழார், உறையூர் முதுகூத்தனார், குடவாயிற் கீரத்தனார், துறையூர் ஓடைக்கிழார் ஆகியோர் தாம் பிறந்து வாழ்ந்த ஊர்களைத் தம் பாடல்களின் பதிவு செய்துள்ளனர்.

- இரும்பிடர்த்தலையார், சோணாட்டுமுகையலூர்ச் சிறுகருந்தும்பினார் ஆகியோர் தம் பாடிய பாடல்களில் இடம் பெற்ற தொடர்களினால் பெயர் பெற்றவர்கள்.

- பெண்பாற் புலவர்கள் ஐவரது பாடல்களிலும் சொந்த வாழ்க்கையில் நடைபெற்ற நிகழ்வுகள் பாடுபொருளாக அமைகிறது.

- சோழநாட்டுப் புலவர்கள் அனைவரும் எந்த காலத்தில் வாழ்ந்தனர்; யார் யார் காலத்திற்குப்பின் வாழ்ந்தனர் என்று வரையறை செய்து கூறுதற்குப் போதிய ஆதாரங்கள் இல்லை.

- சோழநாடு பற்றியோ, சோழநாட்டில் உள்ள ஊர்களைப் பற்றியோ தொடர்ச்சியாகத் தெளிவான வரலாற்றை இவர்கள் பாடல்களால் அறிய முடியவில்லை.

